# சௌரி




"அநுத்தமா"

அமுத நிலையம் லிமிடெட்

# கௌரி

"அநுத்தமா"

அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை சென்னை - 18

# சமர்ப்பணம்

அன்புருவுடன் ஆதர்ச மனைவியாகத் திகழ்ந்த
என் அருமை அன்னைக்கு

# முகவுரை

அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்று சொல்வதுண்டு. எவ்வளவு சீரிய குணமாயினும் அதுவும் சில சமயம் அளவுக்கு மீறிவிட்டால் இக்கட்டான நிலைமைகளும் சங்கடங்களும் சேர்ந்துவிடுகின்றன. பெண்மைக்கு அச்சம், சங்கோஜம், சகிப்புத்தன்மை யாவும் அணிகலங்களே. எனினும் சில சமயங்களில் ஓரளவு மனம் விட்டுப் பேசிப் பழகினால் தான் அன்புக்குப் பலம் உண்டாகிறது, அண்மைக்கு மகிமை பிறக்கிறது. அதிகமாகப் பேசுவதனால் எவ்வளவு கெடுதல் நேருகிறதோ, ஏறக்குறைய அதே அளவு ஒன்றும் பேசாமலே இருந்து விடுவதனாலும் உண்டு என்பதை நாம் இவ் விசித்திர உலகில் கண்கூடாகக் காண்கிறோம்.

மண வாழ்க்கையில் எழும் சிக்கல்கள் அநேகம். கல்யாணங்களில் பலவிதம். பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட சம்பிரதாயத் திருமணங்கள், காதலர்கள் தாமாக அமைத்துக் கொண்ட காதல் விவாகங்கள், சவுகரியார்த்தமாக ஏற்பட்டவை, பதவி பேதமான கல்யாணங்கள், உண்மையை ஒளித்து வைத்துச் செய்யப்பட்ட மணங்கள், உள்ளதை உள்ளபடி அறிந்து கொண்டு கண் திறந்து நடத்திய கல்யாணங்கள் என்ற பலரகங்கள் இருக்கின்றன.

கல்யாணம் என்ற வாயிற்படியைத் தாண்டியதும் அப்பால் விரிகிறது மண வாழ்க்கை என்ற பிரதேசம். அது பாலைவனமா, மழை பெய்தால் செழிக்கும் கரிசல் பூமியா, பொன் விளையும் நன்செய் நிலமா, வசந்தம் மாறாத இன்பப் பூங்காவா என்ற பிரச்னை எழுகிறது. வாயிற்படி ஓரளவுதான் வீட்டின்

செழுமையை எடுத்துக் காட்டும். உள்ளே சென்று நோக்கினுல் தான் உண்மை விளங்கும்.

திருமணங்கள் யாவுமே சுவர்க்கத்திலேயே தீர்மானிக்கப் படுகின்றன என்று மேல் நாட்டார் கூறுவர். இதையே நாமும் பிராப்தம் என்கிறோம். அவ்வாறு நிச்சயிக்கப்பட்ட தம்பதி களை, கூட்டி வைக்கத் தெரியாமல் தவிக்கும் மனிதன் உரிய காலம் வந்ததும் எந்த ஒருவருக்கு யார் வாழ்க்கைத் துணை என் பதை எளிதில் கண்டு கொண்டு செயல் ஆற்றுகிறன் என்று சொல்வார்கள். அத்தகைய தெய்வீக அருள் பொருந்திய ஒரு விஷயம் அலையக் குலைய ஆவது ஏன் என்று சிலர் வியப்பதை யும் காண்கிறோம். அதற்குக் காரணம் மனிதனின் குயுக்திதானே?

எப்படி யெல்லாமோ பொருத்தங்கள் பார்த்து ஆலோசித்துச் செய்யப்பட்ட திருமணங்கள் துயரத்தில் முடிய, திடீரென்று வசதியின்மையால் நிர்ப்பந்தப்பட்டு நடத்திய விவாகங்கள் அழியா இன்பக் களஞ்சியமாக விளங்குவது ஒரு புதிராகவே இருந்து வருகிறது.

பணம், காலம், அதிருஷ்டம் என்ற பல காரணங்கள் எதிராக வேலை செய்யினும், வெற்றிகரமான இன்ப மண வாழ் வும் அன்புப் பிணைப்பும் ஏற்படுவதற்குக் கணவனும் மனைவியும் சிறிது முயற்சி செய்து ஒத்துப் போனுல் போதுமென்றே தோன்றுகிறது.

சந்தேகங்கள் அறவே ஒழிந்தால்தான் பரஸ்பரம் பிடிப்புப் பிறக்கும். உண்மையான தோழமை வேண்டுமென்றால், ஆழ மான அன்பு வளரவேண்டுமென்றால் திறந்த இரண்டு உள்ளங்கள் அதற்கு அவசியம். மறைவும், வெளிப்பூச்சும் இருக்கும் இடத்தில் உண்மைக்கு இடம் இல்லை. உண்மையற்ற இடத்தில் அன்புக்கு இடம் இல்லை.

இம்மாதிரி எண்ணங்களிலிருந்துதான் "கௌரி" பிறந்தாள். அவள் இலட்சிய இந்தியப் பெண். நல்ல குடும்பத்தில் உதித்து, நல்ல இடத்தில் புகுந்து, இளமை முதல் அறிந்த ஒரு நல்லவனைக் கைப் பிடித்தும் அவள் சோகத்துக்கு ஆளாகிறாள். அவளைச் சுற்றி அண்ணன், தங்கை, அக்கா, மற்றும் சிநேகிதர்கள் யாவரும் ஏதேதோ குறைபாடுகள் உடையவர்களாக இருந்தும் இன்பவாழ்வு நடத்துகின்றனர்.

ஆனால் கௌரியின் அளவுக்கு மீறிய சங்கோஜமும் சகிப்புத் தன்மையும் சுந்தரின் மனத்தில் அனாவசிய சந்தேகத்தைக் கிளப்பிவிடுகின்றன. சந்தர்ப்பமும் அதை வீசிவிடுகிறது. சுந்தரும் சற்றுப் பொறுமையாக இருந்து தன் சந்தேகத்தை விளக்கிக் கொண்டிருக்கலாம். கணவன் என்று நெருங்கிய உறவும் வந்த பிறகு கௌரியாவது தன் சங்கோஜத்தை விட்டுப் பேசித் தெளிந்து கொண்டிருக்கலாம்.

சகல பொருத்தங்கள் இருந்தும் கஷ்டப்படும் சிலரை நோக்குங்கால் அவர்கள் வாழ்வு கோணலாகப் போவதற்கு இதுபோல் ஏதாவது ஒரு சின்ன விஷயந்தான் காரணமாக இருக்கவேண்டும் என்று எழும் என் அபிப்பிராயத்தை இக் குடும்பக் கதையில் விவரித்துள்ளேன். இது எம்மட்டும் பொருந்தும் என்பதைக் "கௌரி" செல்லும் இடங்கள்தாம் எனக்கு எடுத்துரைக்க வேண்டும்.

நாவல் எழுதும் துறையிலே "கௌரி" என்னுடைய இரண்டாவது அடி. முதல் வைத்த கால் என்னை எங்கே கொண்டு நிறுத்தியிருக்கிறது என்பதை அறியும் முன்பே வைத்த அடி. இதை எழுதுவதற்கு எனக்குப் பெரிதும் ஊக்கமளித்த எங்களது உறவினர் ஸ்ரீ சு. ரா. அவர்களுக்கு நான் முதலில் வந்தனம் செலுத்துகிறேன்.

"வெள்ளி மணி" பத்திரிகையில் தொடர்கதையாக வெளி வந்த "கௌரி"தான் நான் முதல் முதல் அச்சில் பார்த்த நாவல். எனக்கு அந்தப் பாக்கியத்தை அளித்த "வெள்ளி மணி" நிர்வாகிகளுக்கு என் நன்றி.

"கௌரி"க்குப் புனர்ஜன்மம் அளித்து, புத்தக வடிவில் கொண்டு வந்து, மக்களிடையே உலவச் செய்ய முன் வந்திருக்கும் அமுத நிலையத்தாருக்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன்.

கோவில்பட்டி }
6-4-1953 } "அநுத்தமா"

# கௌரி

## 1

## மாசி மணிப் பூணூல்

காலையிலிருந்து எதிர் வீட்டில் நடக்கும் பரபரப்பையே கவனித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் சுந்தரம். ஒரு வார மாகவே எதிர் வீடு மிகவும் வசீகரத்துடன் விளங்கியது போல் இருந்தது அவனுக்கு.

"சுந்தரம், சுந்தரம்!" என்று கூப்பிட்டுக் கொண்டு உப நயன முகூர்த்தம் நடந்து கொண்டிருந்த எதிர் வீட்டிலிருந்து நாலைந்து பேர் தன் வீட்டை நோக்கி வருவதை ஜன்னலின் வழியாகக் கவனித்த சுந்தரம் சிந்தனை லோகத்திலிருந்து மனமில்லாமல் பிரிந்து அவர்களை எதிர்கொண்டு அழைக்கச் சென்றான்.

"என்னடா, நீ வரவில்லையா முகூர்த்தத்துக்கு?" என்று அவர்கள் கேட்க, "இதோ குளித்து விட்டு ஒரே நிமிஷத்தில் வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு அவன் ஸ்நான அறைக்குச் சென்றான்.

அவனுடைய சிநேகிதர்கள் அங்கேயே உட்கார்ந்து அரட் டைக் கச்சேரிக்கு ஆரம்பித்து விட்டார்கள். அப்பொழுது அங்கே வந்த சுந்தரத்தின் தாய் நாகலக்ஷ்மி அம்மாள், "நீங்களெல் லாம் கொஞ்சம் காபி குடிக்கிறீர்களா?" என்று அவர்களை விசாரித்தாள்.

"ஊஹூம், வேண்டாம், மாமி. இப்பொழுதுதான் கல்யாண வீட்டிலே குடித்துவிட்டு வருகிறோம்."

தலையைத் துவட்டியவாறே அப்பொழுது அங்கே வந்த சுந்தரம், "இட்டிலி சாப்பிட வில்லையா?" என்று கேட்டான்.

"நீதான் அழைத்துக் கொண்டு போய்க் கொடேண்டா" என்று அவன் தாய் கூறவும், அவன் என்ன பதில் சொல்லுவது என்று புரியாமல் நின்றான். அதே சமயத்தில் எதிர் வீட்டிலிருந்து அங்கே வந்த ஒரு பன்னிரண்டு வயதுப் பெண், சுந்தரத்தின் தயக்கத்தைக் கவனித்து, "ஓகோ, இதற்குள் மாப்பிள்ளை முறுக்கு வந்து விட்டதா? ஐய!" என்று முகத்தை ஆட்டினாள். "முன்னே, சாரதா அக்கா கல்யாணத்தில் விசாரிக்க வில்லையா என்ன?" என்று கூறிவிட்டு அவள் உள்ளே சென்று விட்டாள்.

"மாமி, பாருங்கள், இன்றைக்கு ஒன்றுவது......" என்று அதே பரபரப்பில் அவள் நாகலக்ஷ்மி அம்மாளிடம் ஏதோ பேசுவது சுந்தரத்தின் காதிலும் அவன் நண்பர்களின் காதிலும் விழுந்தது. அவள் வார்த்தைகளைக் கேட்டு முதலில் வாய்விட்டுச் சிரித்து விட்ட அவர்களுடைய சிரிப்பு முகத்தை விட்டு மாறாமல், அவர்கள் மீண்டும் ஒருவரை ஒருவர் திரும்பிப் பார்த்து இளித்துக் கொண்ட காட்சி, பலவிதப் பற்பொடி விளம்பரங்களைப் போல் இருந்தது.

"யாரடா இந்தக் குட்டி? ராமையர் பெண்ணோ?" என்று கேட்டான் சிவா.

"ஆமாம்" என்று பதிலளித்தான் சுந்தரம். "ஊசிப் பட்டாசு தான் போயேன்! இத்தனை நாள் ஊரில் படித்துக் கொண்டிருந்தாள்; இப்பொழுதுதான் இங்கே வந்திருக்கிறாள்."

"இப்பொழுது பூணூல் நடக்கிறதே, அந்தப் பையனுக்கு மூத்தவளா?"

"ஆமாம், இவளுக்கு அடுத்தவன்தான் பாலு. கடைக்குட்டி."

"அது சரி; என்னடா அந்தப் பெண் உன்னைப் 'புது மாப்பிள்ளை' என்று சொல்லிற்று?" என்று கேட்டான் கேசவ ராவ்.

சுந்தரத்தின் முகத்தில் அசடு தட்டிற்று. நடுநடுவே மின்னும் கண்களிலிருந்து மகிழ்ச்சி ரேகைகள் அவன் முகத்தில் படர்ந்து பிரகாசித்தன. அவன் ஒன்றும் கூறாமல் மௌனமாக இருந்தான்.

சுந்தரத்தின் தாயும் அந்தப் பெண் லலிதாவும் வெளியே வந்து இவர்களைத் தாண்டிச் சென்றார்கள். வாயிற்படியில் இறங்கும்போது, நாகலக்ஷ்மி அம்மாள் சுந்தரத்தைப் பார்த்து, "நீ வரும் போது கதவைத் தாளிட்டுக் கொண்டு வாடா; சமையல் உள்ளே பூனை, கீனை......" என்று முடிக்காமலே போய்விட்டாள்.

"வாங்கடா, நாமும் போகலாம்" என்று எழுந்தான் சுந்தரம். உள்ளே சென்று எல்லாக் கதவுகளையும் மூடி விட்டு வந்து மேல் துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டு, முகூர்த்தத் துக்குப் புறப்பட ஆயத்தமானன். எல்லோரும் எழுந்து அவனைப் பின்பற்றிக் கல்யாண வீட்டை அடைந்தார்கள். கல்யாண சுந்தரம் அவர்களை நேரே பின் கட்டுக்கு அழைத்துச் சென்றுன். அங்கே அவர்களை உட்கார வைத்துவிட்டு, லலிதாவிடம் இட்டிலி, காபி கொண்டு வரும்படிக் கேட்டான்.

"ஏன், கௌரியைக் கேளேன்" என்று துடுக்காகப் பதில் சொல்லிவிட்டு ஓட்டம் பிடித்தாள் அந்தப் பெண்!

"அசடு! தனக்குள் ரொம்ப சமத்து என்று எண்ணம் போலும்" என்ற ஓர் இனிய குரலைத் தொடர்ந்து ஒரு பதினறு வயதுப் பெண் அங்கே தோன்றினள்.

"கௌரி!" என்று கூப்பிட்டான் சுந்தரம். அவள் திரும்பிப் பார்த்தாள். அவன் இலையைச் சுட்டிக் காண்பித்தான். அவளுடைய கண்ணிமைகள் 'சரி' என்று சமிஞ்ஞை செய்தன. அவள் உள்ளே சென்று சமையல்காரனுக்கு உத்தரவிட, அவன் ஓடி வந்து இவர்களை விசாரிக்கத் தொடங்கினன்.

சுந்தரத்தின் நண்பர்கள் மௌனமாக இந்த நாடகத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். சூட்சும புத்தி படைத்த கேசவ ராவ், அவர்களைப் பார்த்து, "அது யார் தெரியுமோ இல்லையோ? சுந்தரத்தின் இருதய கௌரி!" என்றுன், குறும்பாக. சுந்தரமும் சிரித்துக் கொண்டே, "ஆமாம்" என்று ஒப்புக் கொண்டான்.

"அட, எங்களுக்கு ஒன்றும் சொல்லவே இல்லையே? எப் போடா?"

"சித்திரை" என்று ரொம்பச் சுருக்கமாகப் பதில் வந்தது.

"அது இருக்கட்டும்......என்னடா இப்பொழுதே பெயரிட்டுக் கூப்பிட ஆரம்பித்து விட்டாய்?" என்று ஆரம்பித்த சிவாவை 'உஷ்' என்று எல்லோரும் அடக்கினர்கள்.

அதே சமயத்தில் தோளில் அழுக்குத் துண்டும், கழுத்தில் மெல் லிய தங்கச் சங்கிலியும், அதில் ஒரு உருத்திராட்சமும், நெற்றியில் விபூதிப் பட்டையுமாகத் தலைமைச் சமையல்காரர் சாம்பு ஐயர் அங்கு பிரசன்னமாகி அவர்களை விசாரிக்க ஆரம்பித்தார். அப்ப டியே அவர்களுடைய பேச்சிலும் மெதுவாகக் கலந்துகொண்டார்.

"பெயரிட்டுக் கூப்பிடாமல் என்ன? நேற்றையப் பழக்கமா, இன்றையப் பழக்கமா? கௌரி குழந்தையாக இருந்ததிலிருந்து இவர்கள் இரண்டு குடும்பத்துக்கும் நல்ல பரிசயமோ இல்லையோ?" என்று ஒரு போடு போட்டார் அவர்.

சிவா கேசவராவைப் பார்த்து, "பேஷ், அப்படியானால் இது நெடுநாளையக் காதல் விவாகம் என்று சொல்!" என்று கூறிக் கொண்டே, சந்தோஷ மிகுதியால் 'பளார்' என்று கேசவராவின் தொடையில் ஒரு ஷொட்டுக் கொடுத்தான்.

"சீ! கண்டபடி பேசாதே" என்று செல்லமாகத் திட்டினான் சுந்தரம்.

அவர்களது அரட்டை இன்னும் மேலே தொடர்ந்திருக்கும். ஆனால், அந்தச் சமயத்தில் கையில் தட்டுடன் அங்கே வந்த கௌரியைக் கண்டதும் பேச்சு நின்றது. அவள் பின்னாலேயே வந்த அவள் தமையன் கோபு, சுந்தரத்தைப் பார்த்து, "அங்கே ஏன் வரவில்லை? பிரம்மோபதேசம் ஆகப்போகிறது. பந்தலுக்கு வாருங்கள்" என்று கூப்பிட, எல்லோரும் எழுந்து முகூர்த்தம் நடக்குமிடத்திற்குச் சென்றார்கள்.

பந்தலுக்குச் செல்லும் வழியில் பெண்கள் பேசிக் கொண்டிருப்பது காதில் விழுந்தது.

"மாசி மணிப் பூணல் என்று சொல்லுவாளேன்னு இப்பொழுதே போடுகிறது. கல்யாணம் சித்திரையில்தான். மேலும், இப்பொழுது எங்கே பரீட்சையும்......"

சுந்தரத்தின் சிநேகிதர்கள் ஒரே முகமாய் அவனைப் பார்க்கவும், அங்கே கூடியிருந்த பெண்களும் சுந்தரத்தைக் கவனிக்கத் தொடங்கி விட்டார்கள். சுந்தரம் வேகமாகப் புருஷர்கள் உட்கார்ந்திருக்கும் பக்கம் நடந்தான்.

"அவன்தாண்டீ, அதோ, வெள்ளை ஜிப்பா" என்று அவர்கள் ரகசியமாகப் பேசியது 'மைக்' இல்லாமலேயே சுந்தரத்தின் காதில் விழுந்தது.

"முகூர்த்த மேளம், முகூர்த்த மேளம்!" என்று புரோகிதர் இரு கைகளையும் ஆகாயத்தில் தூக்கி ஆள் காட்டி விரல்களால் பந்தல் மேல் அடிக்க, 'டும், டும், டும், டும்......டும்' என்ற மேளச் சத்தம் துரித காலத்தில் தொடர்ந்து கேட்டது. மேளச் சத்தம்

ஆரம்பமானதும் பந்தலில் இருந்தவர்கள் இன்னும் கொஞ்சம் உரத்துப் பேச ஆரம்பித்தார்கள்.

படியில் ஹோமப் புகை. இடுப்பில் வேஷ்டியை இழுத்துக் கட்டிக் கொண்டு கோபு இங்கே புருஷர்களுக்குச் சந்தனம் வழங்குவதும், அங்கே பெண்களுக்கு லலிதா குங்குமம், சந்தனம் கொடுக்க, கௌரியும் அவள் மதனியும் வெற்றிலை பாக்கு வழங்குவதும், ராமையரும் அவர் சம்சாரமும் புதுத் துணியைப் புசு-புசுவென்று அணிந்து வியர்க்க வியர்க்க உட்கார்ந்திருப்பது மங்கலான புகையில் தெரிவதும், எல்லாம் ஒருங்கு சேர்ந்து சுந்தரத்தின் உள்ளத்தில் கிளர்ச்சியை ஏற்படுத்தி விட்டன. ‘இன்னும் இரண்டு மாதத்தில் நாமும் கௌரியும் இந்தப் பந்தலில்......... புகையில்......’ அவனது உள்ளத்து ஆசைகள் சுருதி மீட்ட, கற்பனைகள் தாளம் போட, அவன் சிந்தனைகள் கட்டுக்கு அடங்காமல் ஆனந்த நர்த்தனம் புரிந்தன.

“ஆரத்தி எடுக்கிறது யாரடா?” என்று அவன் நண்பன் கிட்டு கேட்டது கூட அவனுடைய காதில் விழவில்லை.

“டேய், டேய்!” என்று அவனைப் பிடித்துக் குலுக்கினான் குறும்புக்காரக் கிட்டு.

“என்ன?......” என்று தூக்கத்திலிருந்து விழித்தவனைப் போல் கேட்ட சுந்தரம், உடனே வெட்கம் அடைந்தவனாய், “ஓ, அதுவா? சாரதா. ராமையரின் மூத்த பெண்” என்று பதில் சொன்னான்.

“எத்தனை பெண்கள் அவருக்கு?”

“நான்கு பெண்கள், இரண்டு பிள்ளைகள்.”

“ஓகோ? பெரிய குடும்பம்.”

“மற்றப் பெண்கள்தான் உனக்குத் தெரியுமே. அதோ, வெள்ளைப் புடைவை உடுத்தி, தூண்பக்கம் சாய்ந்து நிற்கிறாளே, அவள்தான் உமா. பிள்ளைகள் கோபுவும், பூணூல் பையன் பாலுவும் தான்.”

சாரதா ஆரத்தித் தட்டை எடுத்துக் கொண்டு வாசலுக்குப் போவதற்காக அந்தப் பக்கமாக வந்தாள். சுந்தரம் அவளை நிறுத்தி, “சாரதா, எங்கே மாப்பிள்ளை?” என்று கேட்டான்

அவள் சிரித்துக் கொண்டே, “மாப்பிள்ளையா? நீயும் நானை முதல் மாப்பிள்ளை தானே!” என்று கேலி செய்தாள். பிறகு,

"அவர் மாடியில் இருக்கிறார்" என்று கூறிவிட்டு உள்ளே சென்று விட்டாள்.

"கீழே கல்யாணம் நடக்கும்போது, மாடியில் என்ன வேலை?" என்றான் ஒருவன், அவள் போன பிறகு.

"மாப்பிள்ளையப்பா, சும்மாவா!" என்றான் மற்றொருவன்.

"டேய்! இனிமேல் நம்ம சுந்தரமும் அப்படித்தான், தெரியுமா?"

"இவனுக்கு யாரடா இங்கே 'ரூம்' கொடுக்கிறார்கள். அவன் வீட்டுக்குப் போக வேண்டியதுதான்."

"சீ, அப்படிச் சொல்லாதே. இந்த வேதாளத்திற்கும் ஒரு முருக்க மரம் கொடுப்பார்கள்."

எல்லோருமாகச் சேர்ந்துகொண்டு சுந்தரத்தைக் 'கோட்டா' செய்து கொண்டிருந்தார்கள். அவனுக்கும் அது ஆனந்தமாகத் தான் இருந்தது.

இதற்குள் ஒருவன், "எழுந்திருங்களடா, வீட்டுக்குப் போகலாம்" என்றான். எல்லோரும் ஒரே கும்பலாக எழுந்து, விடை பெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். வீட்டினர், கிரமப்படி, 'இருந்து சாப்பிட்டு விட்டுத்தான் போகவேண்டும்' என்று வற்புறுத்தியும், அவர்கள் வழக்கம் போல் வயிற்றுக் கோளாறு, ஆபீஸ் வேலை, மற்றொரு கல்யாணம் முதலிய பொய்ச் சாக்குகளைச் சொல்லி விட்டுப் புறப்பட்டு விட்டார்கள். தெரு வரையில் அவர்களுடன் சென்று விட்டு, சுந்தரம் மட்டும் திரும்பி விட்டான்.

## 2

## புகார்

"அம்மா, இதோ பாரேன். இந்த சுந்தர் இல்லேம்மா, அவன் தன் சிநேகிதர்கள் எதிரில் எல்லாம் என்னை 'கௌரி' என்று கூப்பிடுகிறான், அம்மா" என்று கௌரி தன் அன்னையிடம் புகார் கூறினாள். சாப்பாடு முடிந்த பிறகு எல்லோரும் வெற்றிலை பாக்கு போட்டுக்கொண்டும், கண்ட இடத்தில் சுண்ணாம்பைத் தீற்றிக் கொண்டும், செம்பு செம்பாகத் தீர்த்தம் வைத்துக் கொண்டும் கூடத்தில் புரண்டு கொண்டிருந்த சமயம்.

"என்னடி அதிசயம்! அவன் உன்னைக் 'கௌரி' என்று இதற்கு முன்னே கூப்பிட்டதே இல்லையா என்ன?" என்றாள் அவள் சித்தி.

"இருந்தாலும், சித்தி, அவாள் எதிரே......" என்று ஆரம்பித்தாள் கௌரி.

"பிரமாதப் படுத்தாதேடி" என்றாள் அவள் தாய். "அது சரி, அவன் எதற்கு உன்னைக் கூப்பிட்டான்?"

"இட்டிலி கேட்பதற்கு."

"பூ, இவ்வளவு தானே? இன்னும் கொஞ்ச நாளில் வழக்க மாகிவிடும், போ" என்று மகளைச் சமாதானப் படுத்தினாள் காமாக்ஷி அம்மாள்.

"போம்மா, நீ."

"சரி, சரி. நீ மாத்திரம் இப்பொழுது, 'சுந்தர் சொன்னான்' என்று அவன் பெயரை, அதுவும் ஏக வசனத்தில், சொல்ல லாமோ?"

"இல்லையடி, கௌரி அக்கா! நீ அப்படித்தான் கூப்பிடு. அது தான் இந்தக் காலத்து 'பாஷன்!" என்றாள் வாயாடி லலிதா.

அனைவரும் கலகலவென்று சிரித்தார்கள்.

"நீங்களெல்லாம் என்னவோ சிரிக்கிறீர்கள் அம்மா" என்று அப்பொழுது அங்கே நுழைந்த சாரதா ஆரம்பித்தாள்.

"இப்பொழுது என்ன வந்து விட்டதாம்?" என்று கேட்டாள் கௌரி.

"உனக்கென்னடி சொல்லாமல்? அவரை ஒருவரும் கவனிக் கவே இல்லையாம். கோபமாக இருக்கிறார்" என்றாள் சாரதா. அவளது முகம் நீண்டு, உதடு தொங்கிற்று.

"அட, அத்திம்பேர் கோபத்தைக் காட்டினும் அதை நீ ரசித்து அநுபவித்துச் சொல்லுகிறாயே, அது......" என்று ஆரம் பித்தாள் லலிதா.

"சித்தி, நீ இந்தப் பெண்ணுக்கு இப்படி இடம் கொடுத்துக் கொடுத்துத்தான் அது குட்டிச் சுவராய்ப் போகிறது" என்று சித்தியினிடம் கொஞ்சம் கோபமாகப் பேசிவிட்டுச் சாரதா உள்ளே சென்று விட்டாள். சிறிது நேரத்திற் கெல்லாம் தோளில் டவலும், கையில் சோப்புமாக அவள் மாடி ஏறுவதை எல்லோரும் பார்த் தார்கள்.

"என்னடி, மாப்பிள்ளை வெளியே போகிருரோ என்னவோ? கொஞ்சம் காபி, டிபன் எடுத்துக் கொண்டு கொடுத்து விடு" என்று காமாக்ஷி அம்மாள் நாட்டுப் பெண் சுசீலாவிடம் சொன்னுள். சுசீலா எழுந்து உள்ளே சென்ருள்.

"இத்தனை பேரும் இங்கே இருக்கும்போது உமா மாத்திரம் எங்கே போய் விட்டாள்?" என்று மெதுவாகக் கேட்டாள் காமாக்ஷி அம்மாள்.

"எல்லாம் இங்கேதான் எங்கேயாவது இருப்பாள். —இதோ வருகிருளே."

"ஏண்டி, உமா! நல்ல புடைவையாகக் கட்டிக் கொள்ள கூடாதோ? நல்ல நாளும் அதுவுமாக இது என்ன மில் புடைவை வேஷம்?"

"நீங்கள் செய்கிற பாவம் போதாதென்று என்னை வேறு கண்டிக்க வந்து விட்டீர்களோ? உலகத்தில் எத்தனையோ கோடி ஜனங்கள் உடுக்கத் துணியில்லாமல், குடிக்கக் கூழில்லாமல், படுக்க நிழலில்லாமல் தவித்துக் கொண்டிருக்கிருர்கள். இங்கே என்னடா என்ருல், மேளம் என்றும், பட்டுப் புடைவை என்றும், ஜரிகை அங்கவஸ்திரம், வெள்ளிப் பாத்திரம் என்றும் ஆடம்பரத்துக்காகப் பணத்தை இறைத்து, அதற்கு மதிப்பே இல்லாமல் செய்து விடுகிறீர்கள்."—பட பட வென்று பேசினுள் உமா. அவளது நீண்ட முகம் இன்னும் கொஞ்சம் நீள, மூக்குக் கண்ணுடி அவளுடைய கூர்மையான மூக்கின் மீது வழுக்கி, வழுக்கி விழுந்து கொண்டிருந்தது.

"போதுமடி, சமத்து!" என்ருள் அவள் சித்தி. "போதும், போதும்! கல்யாணத்திலே மேளம் என்னத்திற்கு? பண்டிகையிலே பட்சணம் எதற்கு? என்று......"

"உங்களுக்குச் சொன்னுலும் தெரியாது, உங்களுக்காகவும் தெரியாது. ஐரோப்பாவிலே மக்கள் இந்த யுத்தத்திலே பட்ட கஷ்டத்துக்கு இன்னும் நான்கு வருஷம் துக்கம் காத்தால் கூட..."

"சமத்து, வாயை மூடு! சுபமாக ஏதோ செய்கிற போது துக்கம் காக்கிருளாம், துக்கம்! பெண் ரொம்ப அழகு தான்!"

"ஆமாம், பின்னே என்னவாம்? இன்றைக்கு இங்கே நடக்கிற கல்யாணத்துக்கு எவ்வளவு செலவு? அதில் யாருக்குத் திருப்தி? சமையல்காரன் வார்ப்பட்ட சாமானையும் கொட்டிச்

செல வழித்து விட்டு, 'சர்க்கரை போதாது, உளுந்து மட்டச் சரக்கு' என்பான். வந்தவர்களைச் சாப்பிடக் கூப்பிட்டால், மிகவும் பிகு பண்ணிக் கொள்ளுவார்கள். ரேஷன் சாமானும், பிளாக் மார்க்கெட்டில் பல்டி போட்டு வாங்கின பொருளும் உங்கள் மனத்தை உருக்க, உங்களுக்கும் அவர்கள் சாப்பிடாததில் குறை......"

"அப்படி யென்றால், பூணூலே வேண்டாம், கல்யாணமே வேண்டாம், சாப்பாடே வேண்டாம், என்கிறாயாக்கும்" என்று கேட்டாள் அவள் மாமி.

"இம்மாதிரிக் காரியங்களை லகுவாக ஒரு மணி நேரத்திலே முடித்து விட்டு, இத்தனை பணத்தையும் அப்படியே பஞ்சத்தில் அடிபட்டவர்களுக்கும், அகதிகளுக்கும், ஏழைகளுக்கும் கொடுத்தால் எவ்வளவு உபயோகமாக இருக்கும்? எத்தனை ஆத்மாக்கள் உன்னைத் திருப்தியுடன் வாழ்த்தும்? அதை விட்டு விட்டு,—சர்க்கரைப் பஞ்சத்தில் வரிசை குறைந்து விட்டது என்று பாட்டிக்குக் கோபம். மரியாதைப் புடைவை முன்னையைவிட ஒரு சிர் ஜரிகை குறைந்து விட்டதே என்று மற்றொருவருக்கு அழுகை......"

"உன்னோடு பேச நான் வரவில்லை அம்மா. இல்லாததையும் பொல்லாததையும் சொல்லாதே. யார் இங்கே புடைவை நன்றாக இல்லை என்று சொன்னார்கள்?". என்று, குற்ற முள்ள நெஞ்சு குறு குறு வென்ன, மாமி முதலைக் கண்ணீர் உகுக்கத் தொடங்கினாள்.

"சரிதான், போடி உமா, மாடிக்கு" என்று தங்கையை அதட்டினாள் கௌரி.

"இல்லாவிட்டால் எனக்கு இங்கே என்ன வேலை? அழுதால் அழட்டுமே. எல்லோரையும் கும்பல் கூட்டி யாருக்கு என்ன திருப்தி? நீதான் சொல்லேன். சுத்த வேஸ்ட்!" தான் பாடிய பல்லவியையே திரும்பப் பாடிக் கொண்டு எழுந்து சென்றாள் உமா.

கௌரி தன் மாமியைப் பார்த்து, "மாமி! அதோடு உனக்கென்ன? பைத்தியம் என்னவோ உளறுகிறது" என்று சமாதானப் படுத்தினாள்.

"ஆமாண்டீ! நீ சொல்லாமல் என்ன? உன் தங்கைக்குப் பரிந்து பேசுகிறாய். சாண் பெண், என்னைப் பார்த்து, 'நீங்க

ளெல்லாம் கும்பல் கூடி என்ன கண்டது?' என்று கேட்கிருளே?"

"அவள் கிடக்கிருள், மாமி. அது அசடென்று உனக்குத் தெரியாதா?" என்று கௌரி மீண்டும் ஆறுதல் கூறினுள். அவள் சித்தியும் உதவிக்கு வந்தாள்.

"விட்டுத் தள்ளடி. அதற்கென்ன செய்வது? 'ஆண்டி பெற்றது ஐந்தும் குரங்கு' என்பார்களே? அக்காவுக்குப் பசங்கள் ஒவ்வொன்றும் திவ்யம்!"

இது வேறு, சாரதா காதிலோ, கோபு காதிலோ பட்டுவிடப் போகிறதே என்று பயந்த கௌரி, வேகமாக எழுந்து, "சித்தி, கொஞ்சம் வாயேன், உக்கிராண அறையை ஒழிக்க வேண்டும்" என்று கூறிக்கொண்டே தன் சித்தியை அழைத்துக் கொண்டு உள்ளே சென்ருள்.

அப்பொழுதும் வலுவில் வந்த சண்டையை விட்டு விட மனம் வராமல் மாமி, மீண்டும் பக்கத்தில் இருந்தவர்களிடம் பேச்சைத் துவக்கினுள்.

"அது என்ன வாய்! ஆனலும் மரியாதையே கிடையாதம்மா. எனக்கென்ன, இவர்கள் வீட்டுப் புடைவை தான பெரிசு? எங்கப்பா இருக்கிறவரையில் எனக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை" என்று சொல்ல ஆரம்பித்தவள், நடந்த விஷயங்களை முற்றும் மறந்து விட்டு, தனது பிறந்தகத்தைப் பற்றிப் புகழ்மாலை தொடுக்க முனைந்து விட்டாள்.

## 3
## சுந்தரத்தின் சந்தேகம்

கல்யாணசுந்தரம் அறையில் படுத்துக்கொண்டான். விருந்துச் சாப்பாடு சாப்பிட்ட மயக்கம். நித்திரை வராமல் கொட்டாவி மேல் கொட்டாவி வர, சோம்பேறித்தனம் மேலிட, விழிப்பும் இல்லாத, தூக்கமும் இல்லாத நிலையில், அவன் ஒரு தனி உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். இப்பொழுது தான் அவனுக்கு ஒரு வேலை கிடைத்து விட்டதே! கௌரியை நினைத்துப் பகற்கனவுகள் காணும் நிமித்தம் கையைக் கண்களின்மேல் மூடி, தயாராகப் படுத்துக்கொண்டு, தனது மனச்சலனப் படத்தைத் தூண்டிவிட்டான்.

கௌரி பிறந்தது முதல் அவனுக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. ஆனால் கொஞ்ச நாளாக, அதாவது மூன்று வருஷங்களாக, அவன் 'ஆனர்ஸ்' படித்துக் கொண்டிருந்ததிலிருந்து, அவனுக்குக் கௌரியிடம் ஓர் அலாதிப் பிரியமும், ஒரு வெட்கமுங் கூடத் தோன்ற ஆரம்பித்தது. 'ஏன், எதனால்?' என்று சொல்லத் தெரியவில்லை. இருபது வருஷங்களாக இரண்டு வீட்டாரும் நெருங்கிப் பழகிய பிறகு இவன் மட்டும் புதிதாக வெட்கப் பட்டால், அது விநோதம் அல்லவா? அவனது தாய் கூட அதை நம்ப மாட்டாளே! இந்த வீடு கட்டிக் குடித்தனம் வரும்போது அவனுக்கு இரண்டு வயது; சாரதா மூன்று மாதக் குழந்தை. கோபுவுக்கு நான்கு வயது. அன்று முதல் மூவரும் விளையாட்டுத் தோழர்கள் ஆகிவிட்டதனால், சுந்தரமும் ராமையர் வீட்டுக் குழந்தைகளில் ஒருவனாக ஆகிவிட்டான். அந்த வீட்டுக் குழந்தைகளும் இவர்கள் வீட்டில் சகஜமாக ரகளை செய்தன. எத்தனையோ நாள் அவன் கௌரியைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சி விளையாட்டுக் காட்டி இருக்கிறான்.

ஆனால், கௌரியைப் பற்றிய இந்தப் புதிய உணர்ச்சி சுந்தரத்திற்கு, அவனும் கௌரியும் ஒரு நாள் பள்ளிக் கூடத்திலிருந்து ஒன்றாகப் பஸ்ஸில் வரும்போது திடீரென்று ஏற்பட்டது. வழி முழுதும் அவளுடன் கேலியாகப் பேசிக் கொண்டு வந்த அவனுக்கு, பஸ்ஸிலிருந்து இறங்கும் போது திடீரென்று அவளிடம் பேச நாவெழவில்லை. அவளோ அதிகமாகப் பேசாதவள். பரம சாது. சாரதாவைப் போல் கலகலவென்று பேசமாட்டாள்.

தனக்குத் தோன்றிய என்றுமில்லாத சங்கோசத்தை மறைக்க, அவன், "கௌரி, என்ன மௌனம்?" என்று கேட்டான்.

"என்ன பேசச் சொல்லுகிறாய், சுந்தர்?" என்று அவனை நிமிர்ந்து நோக்கி அவள் வினவினாள். அவளது வட்ட வடிவமான முகத்தில் அகன்ற கண்கள் தெளிவாக அவனை அமைதியுடன் நோக்கின. குவிந்த செந்நிற அதரங்களில் லேசான புன்சிரிப்புப் படர்ந்திருந்தது.

காலையிலிருந்து சாயங்காலம் வரையில் பள்ளியில் படித்தும் விளையாடியும் களைத்திருந்த அவள் வதனத்தில் ஒரு சாந்தம். அவளது சுருட்டை மயிர் கலைந்து, அகன்ற நெற்றியிலும் கன்

னங்களிலும் படர்ந்திருந்தது. கம்பீரத்துடன் கூடிய புத்திசாலித் தனமான அவளது முகத்திற்கு அது இன்னும் அழகைத் தந்தது.

ஒரு கணம் சுந்தரம் பிரமித்து விட்டான். அன்று அவன் கண்களில் கௌரி என்றுமில்லாத அழகுடன் விளங்கினாள். ஏதோ ஒன்று அவன் தொண்டையை அடைத்தது. அவன் மனம் அவள் எழிலைக் கண்டு மயக்கமுற்றது. அவன் உள்ளம் அவளது சாந்தத்தைக் கண்டு வியந்தது. 'என்ன அமைதி! என்ன அடக்கம்!'

இப்பொழுது அந்த நினைவுத் தாள்களை யெல்லாம் புரட்டும் போது கல்யாணசுந்தரம் தன்னைத்தானே மெச்சிக் கொண்டான். 'அந்தக் கூட்டத்தில் இருக்கும் மாணிக்கத்தை நீ பொறுக்கிக் கொண்டாயடா பயலே!' என்று மனத்திற்குள் கூறிக்கொண்டான் அவன்.

சாரதா விளையாட்டுச் சுபாவம் உடையவளாக இருந்தாலும், முன் கோபக்காரி. உமா, ஹாஸ்யச் சுவையே இல்லாத ஒரு தனிப் பிறவி. லலிதா வாயாடி. கோபு சுயநலப்புலி. கௌரியும் பாலுவுமே சிரேஷ்டர்கள். கௌரி சாந்தமாக, வாயிலிருந்து வார்த்தைகளைக் கொட்டிவிடாமல், எல்லோருக்கும் சமரசமாகப் போகும் குணம் படைத்தவள். அவள் கைக்கீழ் வளர்கிறவன் பாலு.

ஒன்றுதான் சுந்தரத்திற்குக் குறையாக இருந்தது. கௌரியின் ஆழ்ந்த, கடலைப் போன்ற, சுபாவம் அவனுக்குப் பிடிபடாமல் இருந்தது. மூன்று வருஷங்களாகத் தன்னிடம் ஏற்பட்ட மாறுதலை அவள் நன்கு அறிவாள் என்றே அவன் நினைத்திருந்தான். அப்படி அடக்கிப் புட்டியில் போடக்கூடிய உணர்ச்சியல்லவே அவனுடையது! சென்ற வாரம் அவர்களது விவாகம் நிச்சயமானதிலிருந்து, சுந்தரத்திற்குக் கௌரியின் மன நிலையை அறியவேண்டும் என்ற அவா மிருந்தது. அவளுக்கும் தன் பேரில் அன்பு உண்டா, அல்லது நடப்பது நடக்கட்டும் என்று நடு நிலைமை வகிக்கிறாளா அவள்? கௌரி எந்த உணர்ச்சியையும் வெளியிடாமல் தன் மனத்திற்குள்ளேயே அடக்கிக் கொண்டு, சிரித்த முகத்துடன் விளங்கும் சக்தி வாய்ந்தவளாயிற்றே? பிறருக்காக எதை வேண்டுமானாலும் செய்யும் தியாக புத்தியைப் படைத்த வளாயிற்றே? சுந்தரத்திற்குத் தன் மீது காதல் என்றால், தன் ஆசாபாசங்களைப் பொருட்படுத்தாமல் விவாகத்திற்கு உற்சாகத்துடன் ஒத்துக் கொண்டு விடுவாளே? கல்யாணசுந்தரம்

அதை விரும்பவில்லை. வரவர அவனுக்கு இந்தச் சந்தேகம் அதிகரித்துக் கொண்டே வந்தது. தனக்காக ஒரு பெண் தன் வாழ்வையே தியாகம் செய்வதை ஏற்றுக் கொள்ள அவன் மனம் இசைய வில்லை. அது அவனுக்குப் பயமாகக் கூட இருந்தது. அதுவும் அப்பெண் தான் மனமாரக் காதலிப்பவளாகவும் இருக்கும் பொழுது, பரஸ்பரம் அன்புடன் மனம் கலந்து இல்லற வாழ்க்கை நடத்த வேண்டும் என்று இருக்க, அவன் வாழ்க்கை பூராவும் அவளுக்குக் கடமைப் பட்டு இருப்பதாக ஓர் எண்ணம் குறுக்கிட்டால் நிம்மதியுடன் வாழ முடியாது என்று அவனுக்குப் பட்டது. அவன் மனத்தில் அது தாங்க முடியாத பாரமாகிவிடவே, அவளை நேரிடையாகக் கேட்ட பிறகே தன்னுடைய மனம் அமைதியுறும் என்று அவன் தீர்மானித்தான். அவளை எப்படிக் கேட்பது? அவள் தான் கல்யாணம் என்ற பேச்சு வந்தது முதல் இவன் வீட்டுக்கு வருவதையே நிறுத்திக் கொண்டு விட்டாளே? அப்படி வந்தாலும் அவன் ஆபீஸுக்குப் போயிருக்கும் சமயங்களில் தானே வருகிறாள்? போதாக் குறைக்கு, இப்பொழுது அவள் பூணூல் சம்பிரமத்தில் வெகு மும்முரமாக இருந்தாள். சாரதா புக்ககத்தில் இருந்தாள். பூணூலுக்குச் சரியாகத் தான் வந்தாள். கோபுவும் பம்பாயிலிருந்து வந்திருந்தான். ஆதலால் கௌரிதான் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ள வேண்டிய தாயிற்று. அவளது மனத்தை அறிய அவனுக்கு இரண்டே வழிகள் தான் இருந்தன. ஒன்று: அவனே நேரில் கேட்க வேண்டும். அல்லது அவள் தாயின் மூலம் கேட்க வேண்டும்.

"சுந்தர்!" என்ற ஓர் இனிய குரல் அவனது சிந்தனையைக் கலைத்தது. திடுக்கிட்டவனாய் அவன் திரும்பினான்.

தன்னைக் கூப்பிட்டது கௌரிதான் என்று அறிந்ததும், கல்யாணசுந்தரம் அவளை அப்படியே உற்று நோக்கினான். இந்தச் சமயத்தில் அவளை எப்படியாவது கேட்டு விடுவதென்று வார்த்தைகளைத் தேடுவதற்குள் அவள், "சுந்தர்! சாயங்காலம் கச்சேரியாம். வரவேற்புக்குக் கோபு அண்ணாவுக்கு உதவியாக, உன்னைத் தயாராக இருக்கச் சொன்னார், அப்பா" என்று கூறிவிட்டு வேகமாக உள்ளே சென்று விட்டாள்.

"கௌரி!" என்று கூப்பிட்டான் சுந்தரம்.

"என்ன?" என்று ஒய்யாரமாக மேல் உடம்பை மாத்திரம் திருப்பிக் கொண்டு அவனைப் பார்த்தாள் கௌரி.

"என்ன, பேசவே மாட்டேன் என்கிறாயே?" என்று ஏதோ ஆரம்பித்தான் சுந்தர்.

கௌரி அதற்குப் பதிலாகச் சிரித்தாளே ஒழிய ஒன்றும் சொல்லவில்லை.

அதற்குள் நாகலக்ஷ்மி அம்மாள் அங்கு வந்தாள். அவள் சிரித்துக் கொண்டே, "என்னடி சொல்கிறான், அவன்?" என்று கேட்க, சுந்தரம் மேலே மேலே கௌரியைக் கேட்க வேண்டு மென்று நினைத்திருந்த தெல்லாம் தடைப்பட்டு விட்டது. அவன் தனது மதியீனத்தை நினைத்து நொந்து கொண்டான். 'இவ்வளவு பீடிகையில்லாமல் கேட்க வேண்டியதை முதலிலேயே கேட்டு விட்டிருந்தால்?'

"மாமி, இன்றைக்குச் சாயங்காலம் கச்சேரி. உங்களை இப் பொழுதே வரச்சொன்னாள், அம்மா" என்றாள் கௌரி.

"ஆகட்டும், வருகிறேன். உனக்குத் தலை பின்னட்டுமா? தலையும் வேஷமுமாக இப்படி இருக்கிறாயே?"

"வேண்டாம், மாமி. வீட்டிலே எனக்கு அதிக வேலை இருக் கிறது. அங்கேயே வந்து விடுங்களேன். எல்லோரும் பின்னிக் கொள்ளுவார்கள்" என்று சொல்லி விட்டு ஓடி விட்டாள் அவள்.

'இங்கேயே தலைபின்னிக் கொண்டு அங்கே போனால் நன்றாய்த் தான் இருக்கும்! இப்பொழுதே மாமியார் பின்னினால் தான் சரிப் படுமோ என்று எல்லோரும் என் மானத்தை வாங்கி விடுவார் களே? இந்தப் புதிய உறவு எல்லோருக்கும் வழக்கமாவதற்கு வெகு நாளாகும் போலிருக்கிறது. அதற்குள் கல்யாணம் ஆகி விட்டால் இந்த மாதிரி, யார் என்ன நினைப்பார்கள் என்று பயப் பட வேண்டிய அவசியமே இராது. சுந்தர் வீட்டில் இருப்பதால் இப்பொழுதே இத்தனை நேரமாயிற்றே என்று எல்லோரும் தலையை நீட்டிக்கொண்டிருப்பார்கள்' என்று சிந்தித்தவாறே கௌரி தன் வீட்டிற்குள் நுழைந்தாள். அதற்கேற்றாற்போல் அங்கே காத்துக் கொண்டிருந்த சாரதா, சித்தி, முதலியவர்கள், "என்னடி, இப்பொழுதே போய் மாமியார் அகத்தில் உட்கார்ந்து விட்டாயே?" என்று ஆரம்பித்து விட்டார்கள்.

"ஆமாம்! நீங்கள் யாராவது போகிறது தானே?"

"சுந்தரம் இருந்தானா?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் ராமையர்.

"உம்" என்று தலையை ஆட்டினாள் கௌரி.

"அவனிடம் சொன்னாயா?"

"மாமியிடம் சொல்லிவிட்டு வந்து விட்டேன்" என்று ஒரு புளுகு புளுகிவிட்டு, கௌரி அந்த இடத்தை விட்டு அகன்றாள்.

ராமையர் ஒரு தனிப் பிறவி. அவருக்கு இங்கிதம் என்பது கிஞ்சிற்றேனும் தெரியாது. கௌரியும், அவள் தாயும் ஒரு வார மாகச் சுந்தரத்தைப் பற்றிப் புதிய விதமாகப் பேசுவதும், நடந்து கொள்வதும் அவருக்குப் புரியவேயில்லை. 'உலகம் என்ன சொல் லும்?' என்னும் விஷயமே அவரது மனத்திற்கு எட்டியது கிடை யாது. எல்லோரும் தம்மைப் போலவே வெள்ளை மனம் படைத் தவர்களாகத்தான் இருப்பார்கள் என்ற வெகுளிச் சுபாவம் படைத்தவர் அவர்.

இப்பொழுது கல்யாணசுந்தரம் தமக்கு மாப்பிள்ளையாக வரப் போவதால் அவனை வேறு விதமாகப் பாவிக்கவேண்டும் என்றெல்லாம் யாராவது சொல்லிக் கொடுத்தால் கூட அவருக்குத் தெரியாது. அவர் முன் போலவே தோரணையுடன் வெகு சுவாதீன மாக அவனை உத்தரவுகள் இட்டுக் கொண்டிருந்தார்.

4

# வரவேற்பு

சுந்தரம் சாயங்காலம் பாட்டுக் கச்சேரிக்குச் செல்வதை வெகு ஆவலுடன் எதிர்பார்க்கலானான். எப்படியாவது கௌரி யைத் தனியாகச் சந்தித்து, அவளுடைய இருதயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவன் மனம் துடித்தது. அதற்கு என்ன செய்வோம் என்று சிந்தித்துக்கொண்டே, மிகுதி யிருந்த கொஞ்ச நேரத்தையும் அவன் கழித்தான். கௌரி அவளுடைய இஷ்டத்திற்கு மாறாகத்தான் இக்கல்யாணத்திற்குச் சம்மதித் தாளோ என்று அவன் உள்த்தில் ஒரு சந்தேகம் தோன்றியது முதல், அவன் மன நிம்மதி இல்லாமல் அலைந்தான்.

'எப்படியும் மாலை வரவேற்புக்கு ஏற்பாடுகள் செய்ய அவள் முன் வருவாள். கொஞ்ச நேரம் முன்னமேயே நாமும் போய்

அதில் கலந்து கொண்டால், அவளுடன் தனிமையில் பேசக் கொஞ்ச நேரமாயினும் கிடைக்காமலா போய் விடும்?' என்று தனக்குத் தானே அவன் சமாதானம் கூறிக்கொண்டான்.



" நான் நேற்று வரும்போது பாருங்கள், ஒரே கும்பல் ரெயிலிலே. டிக்கட்டே கிடைக்கவில்லை......"

"ஆமாம், ஆமாம். எங்கே சார், கல்யாண நாளோ இல்லையோ? நீங்கள் பேசாமல் இரண்டாம் வகுப்பிலே..."

கை நிறைய மேஜை விரிப்புக்களைத் தூக்கிக்கொண்டு கீழே இறங்கச் சென்ற கௌரி, சற்று நின்று அந்தச் சம்பாஷணையைக் கவனிக்கலானாள். அவள் முகத்தில் லேசாக ஒரு குறு நகை படிந்திருந்தது. அவளுடைய அத்திம்பேரை யாராவது இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்யவில்லை என்று ஜாடையாகச் சொன்னால் கூட அவருக்குக் கோபம் வந்து விடும். 'யாரோ ஒருவர் அவரிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாரே, அத்திம்பேர் என்ன சொல்லப் போகிறாரோ?' என்று ஆவலாகக் கௌரி அந்த அறையின் திக்கை நோக்கிக் கவனித்தாள். மாப்பிள்ளை பஞ்சநதத்தின் குரல் கேட்டது.

"ஸெகண்ட் கிளாஸிலே தான், சார், டிக்கட்டு இல்லை. பேசாமல் பஸ்ட் கிளாஸ் டிக்கட்டு வாங்கிவிட்டேன்" என்றார், அவர். கௌரியின் மனக்கண் முன் எதிரே நின்று பார்ப்பது போல், அத்திம்பேர் பஞ்சநதம் மூக்குக் கண்ணாடியை மூக்கில் சற்றுக் கீழே நழுவ விட்டு விட்டு, மேல் பக்கமாக நோக்கும் காட்சி தெளிவாகத் தென்பட்டது. 'இப்போது மறுபடியும் ஒரு முறை சொல்வார்' என்று அவள் தனக்குள் சொல்லிக்கொண்டே கீழே இறங்கினாள்.

" ஐம்பத்தைந்து ரூபாய் நான்கணா, சார். சௌகரியமாக வர வேண்டுமோ இல்லையோ..." என்ற வரையில் அவள் காதில் விழுந்தது.

'சரி, சாயங்காலம் பேசுவதற்கு அத்திம்பேருக்கு ஒன்று அகப்பட்டது!' என்று நினைத்துக் கொண்டே அவள் கீழே வந்தாள். அவளுக்காக அங்கே ஏக வேலைகள் காத்துக்கொண்டு இருந்தன. 'டீ பார்ட்டி'க்கு எடுத்து வைக்கவும், ராத்திரி

சமையலுக்குச் சாமான்கள் கொடுக்கவும், வேலைக்காரர்களை வீட்டைச் சுத்தம் செய்யச் சொல்லவும், நிமிஷ நேரங்கூட உட்காராமல் அவள் பம்பரம் போல் சுற்றினாள்.

அவளுக்குத்தான் உடம்பில் அலுப்புக் கிடையாதோ? மனந் தான் சலித்துக் கொள்ளாதோ? உடை கலையாமல், புன்சிரிப்பு வாடாமல் எப்பொழுதும் உற்சாகமாக வேலை செய்து வந்தாள் அவள். அவளுடைய அக்கா சாரதா, தன் கணவனையும் குழந்தை யையுமே பார்த்துக் கொள்வதும் தவிர அவர்களை மற்றவர்கள் கவனிக்கவில்லை என்று மூக்கால் அழுவதுமாக இருந்தாள். உமா, இந்தச் சமூகத்திலேயே சேராமல், உலகத்தையே உதாசீனம் செய்து விட்டுத் தன் அறையில் ஏகாந்தம் கொண்டாடினாள். கௌரி மாத்திரம் இவை ஒன்றையும் கவனியாமல் தன் வேலையே கருத்தாகச் சுற்றி வந்தாள். இது மாத்திரமேயன்றி, நடு நடுவில் அவள் தமையன் வந்து, "என்னடி, மன்னி எங்கே? குழந்தையைக் கவனிக்க மாட்டேனென்கிறாளே? என் துணி மணி களைப் பார்த்து வைத்தாளா?" என்று 'என் துணி', 'என் பெட்டி", 'என்,' 'என்' என்று தன்னலத்தையே எண்ணிக் கேட்கும் கேள்விகளுக்குப் பதிலளிப்பதும், அப்பாவுடன் பேசு வதும், லலிதாவை அடக்குவதும், இப்படி கிருகலக்ஷ்மியென விளங்கினாள் கௌரி.

இதை யெல்லாம் ஒன்று விடாமல் கவனித்து வந்த அவள் தாயின் உள்ளத்திலிருந்து ஒரு பெரு மூச்சு வந்தது. 'என் குழந்தையை விட்டு இனி நான் எப்படி இருப்பேன்? சுந்தரம் கொடுத்து வைத்தவன். நாகு அதிருஷ்டசாலி. மற்றதுகளும் இருக்கின்றனவே. சுண்டு விரலாவது ஆட்டுகிறதுகளா?' என் றெல்லாம் தன் குழந்தைகளின் குணாதிசயங்களைச் சீர்தூக்கி அகமகிழ்வதும், அலுத்துக் கொள்வதுமாக, மாறி மாறி விவரிக்க முடியாதபடி மனத்தைக் குழப்பிக் கொண்டாள் காமாக்ஷி அம்மாள். அதிலும், 'என்ன இருந்தாலும் கண்ணெதிரில் தானே இருக்கப் போகிறாள்? நல்ல இடத்தில் அவளைக் கொடுக்கிறோம். அவள் குணத்தைக் கண்டு யார்தாம் ஆசைப்பட மாட்டார்கள்? அவள் புத்திசாலித் தனத்துக்கு வேறு எங்கேயாவது சென்று கஷ்டப் படாமல், ஆசையாக வைத்துக் கொள்ளும் அகமுடை

யாளும், மாமியும் வாய்த்தார்களே?' என்ற ஒரு மனச் சாந்தியும் ஏற்பட்டது அவளுக்கு.

காமாக்ஷி அம்மாளுக்குச் சுந்தரத்தை மாப்பிள்ளையாகக் கொள்ள இஷ்டந் தான். ராமையருக்குக் கல்யாணசுந்தரம் தமது குடும்பத்திலேயே நிரந்தரமான ஒருவனாகி விட்டான் என்று பரம திருப்தி. சுந்தரத்தின் தகப்பனார் மகாலிங்கையர் கௌரி தம் மருமகளாக வருவது முன் ஜன்மத்தில் செய்த புண்ணியம் என்று கருதினார். நாகலக்ஷ்மி அம்மாளுக்கு, கௌரியைத் தானே வளர்த்து விட்டதால், அவளுடைய அடக்கமும், ஒடுக்கமும், அவளுக்குத் தங்கள் மீதுள்ள பாசமும், அவளை வேறிடத்தில் எங்கேயாவது கொடுத்து விட்டால் வீணாகப் போய் விடும் போல் இருந்தது. சுந்தரம் கௌரியை மணக்கச் சம்மதித்ததும் நாகலக்ஷ்மி அம்மாள் கரை காணா ஆனந்தம் கொண்டாள். சுந்தரம் தனக்கு விருப்ப மென்று தானே தகப்பனாரிடம் சொல்லிக் கேட்கச் சொன்னது நாகலக்ஷ்மி அம்மாளுக்குத் தெரியாது. தெரிந்தால் மகிழ்ச்சியே அடைந்திருப்பாள். பெண் இல்லாத குறைக்குத் தனக்கு மாணிக்கம் போன்ற கௌரி கிடைத்து விட்டதை நினைத்து அவள் மனங்களித்தாள்.

உமா, லலிதா முதற்கொண்டு, வீட்டு வேலைக்காரர்கள் வரை, எல்லோரும் கௌரி—சுந்தரம் கல்யாணத்தை வெகு திருப்தியுடனும், ஆசையுடனும் வரவேற்றனர்.

ஆனால் கௌரி என்ன நினைத்தாள்? சுந்தரத்தைப் போலவே அவளும் அவன் மீது அன்பு வைத்து, இவ் விவாகத்தை ஆசையுடன் எதிர் நோக்கினாளா? அல்லது, பெற்றோர் சொல்லைத் தட்டக்கூடாது என்று பேசாமல் இருந்தாளா? ஹிந்துப் பெண்களின் சுபாவமான தன்னலமற்ற புத்தியும், தியாக உணர்ச்சியும், ஆழமான மனமும் பெற்றவளாயிற்றே அவள்? அப்படிப்பட்ட கௌரியின் மனத்தின் ஆழத்தை அறிந்துகொள்ளும் பொருட்டுச் சுந்தரம் படாதபாடு பட்டான்.

மாலையில், விருந்தினர் வந்துகொண்டே இருந்தனர். பாட்டுக் கச்சேரி அமர்க்களமாக நடந்துகொண்டிருந்தது. போகிறவர்கள் *தாம்பூலம் பெற்றுக் கொண்டு போய்க்கொண்டே இருந்தார்கள். பாலுவிடம் பரிசுகள் கொடுத்தவர்கள் சிலர், மகாலிங்கையர், ராமையரிடம் பேசினவர்கள் சிலர்.

மாப்பிள்ளை பஞ்சநதம் ஒரு பக்கத்தில், "நான் நேற்று பஸ்ட் கிளாஸிலே வரச்சே..." என்று பூசைக்குச் சுக்லாம் பரதரம்...' என்று தொடங்குவது போல் புதிதாக வரும் ஒவ்வொருவரிடமும் பேச்சைத் துவக்கி, தன் பேச்சைத் தானே ரசித்து முகமலர்ந்தான். அவனுடைய சரடுகளையும் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் சிலர்! லலிதா தனது நாக்கை அவிழ்த்து விட்டு விட்டு, தங்கு தடை இல்லாமல் பொரிந்துக் கொட்டிக்கொண்டிருந்தாள். உமா, ஒரு மூலையில் உட்கார்ந்து, இவ்வுலகத்தின் முட்டாள் தனத்தை நினைத்து மனம் உருகிய வாறே, சங்கீதத்தை அநுபவித்துக் கொண்டிருந்தாள். சங்கீதம் அவளுக்குச் சற்று மனச் சாந்தி அளித்தது போலும். சாரதா மடிப்புக் கலையாமல் புடைவையை உடுத்திக்கொண்டு, இடுப்பில் பொம்மையைப் போல் அலங்கரித்த குழந்தையைச் சுமந்தவாறு, தன் கணவனுடைய தளராத சம்பாஷணையைக் கேட்டுக் களிப் பதும், அவருக்கு ஒன்றும மனக் குறை வராமல் இருக்க வேண்டுமே என்று பிரார்த்திப்பதுமாக, அவர் இருந்த திக்கையே நோக்கிக் கொண்டு நின்றாள்.

கோபு, சுசீலா, சுந்தரம், கௌரி நால்வரும் சளைக்காமல் உழைத்தார்கள். வந்தவர்களை நன்கு உபசரித்து அனுப்பும் மும்முரத்தில், அவர்களுக்கு வேறு எந்த யோசனையும் குறுக்கிட வழியில்லாமல் அவர்கள் வேலையிலேயே லயித்துப் போயிருந் தனர்.

கச்சேரியும் முடிந்தது. மிகவும் பழக்கமான சில சிநேகிதர் களைத் தவிர, எல்லோரும் விடைபெற்றுச் சென்று விட்டார்கள். கோபு, சந்தனம், பன்னீர் எடுத்துக்கொண்டு பாடகரிடம் சென்றான். சுசீலா தட்டில் மாலைகள் கொண்டு கொடுக்க, சுந்தரம் அவர்களுக்கு ஹாரம் போட்டான். அங்கே கூடியிருந்த கோபு, சுந்தரத்தின் நண்பர்கள் கை தட்டும் வைபவத்தைச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். ஒரு வெள்ளித் தட்டில் பாடகருக்குச் சன் மானம் எடுத்து வந்தாள் கௌரி. அதைக் கையில் வாங்கிக் கொண்டான் சுந்தரம். இதைக் கண்ணுற்ற கேசவராவ் முதலிய பிரகிருதிகள் கை தட்டினார்கள். கோபுவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். எல்லோருமாக 'ஜே' என்று கூச்சலிட்டார்கள். ஒரே ஆரவாரம்!

சுந்தரமும் இக் கேளிக்கையை ரசித்துச் சிரித்தான். ஆயின் அடுத்த கணமே அவன் சந்தேகங்கள் யாவும் மீண்டும் படை திரட்டிக்கொண்டு வந்து தாக்கின. 'கௌரி—சுந்தரம் பிணைப்பு நீடுழி வாழுமா?' என்று கேட்டது அவன் மனம்.

சுந்தரம் காலித் தட்டுகளைத் திருப்பிக் கொடுக்கும் நிமித்தம் உள்ளே சென்றான். கௌரியும் அப்பொழுதுதான் சந்தனக் கிண்ணி, பன்னீர்ச் செம்பு, புஷ்பத் தூக்கு, இன்னும் பல வெள்ளிச் சாமான்களையும் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு உள்ளே சென்று கொண்டிருந்தாள். அவள் பாரத்தைப் பகிர்ந்து கொள்வது போல், கொஞ்சம் பாத்திரங்களைத் தன் கையில் வாங்கிக் கொண்ட சுந்தரம், "கௌரி, உன்னிடம் நான் கொஞ்சம் பேச வேண்டும்" என்று அவள் காதில் மட்டும் படும்படி ரகசியமாகச் சொல்லி முடிப்பதற்குள் சுசீலா அவ்விடம் வந்தாள். கௌரி அவளைப் பார்த்து, "மன்னி, அந்தப் பாத்திரங்களை வாங்கிக் கொள்ளேன். மாடிக்கு எடுத்துப் போக வேண்டும்" என்று கூறினாள். சுந்தரம் வேறு வழியின்றி, தன் கையிலிருந்தவைகளைக் கோபுவின் மனைவியிடம் கொடுத்து விட்டுப் போகும்படி ஆயிற்று.

அம்மட்டும் அவளிடம் கூறியதே அவன் மனத்தை விட்டு ஒரு பாரம் நீங்கியது போலிருந்தது அவனுக்கு. அவள் மறுபடியும் எப்பொழுது வருவாள்? வந்தால் எப்படிச் சுருக்கமாகத் தனக்கு வேண்டியதைக் கேட்பது என்று அவன் தனக்குள் தீர்மானித்துக் கொண்டான். அவளுக்கு இந்த விவாகம் விருப்பந்தான் என்றால் அதை அவளுடைய கண்களில் படித்துவிட முடியும் என்று அவன் உறுதியாக எண்ணினான்.

'அல்லது அவள் எனக்காகச் சம்மதிக்கிறாள் என்றால்?...... ஏன் கெட்டதையே எதிர்பார்த்துக் கொண்டு மனத்தைக் குட்டையாகக் குழப்பிக் கொள்ள வேண்டும்? நான் அவளிடம் கொண்டிருப்பதைப் போலவே அவளும் என்னிடம் அன்பு வைத்திருக்கிறாள் என்று தெரிந்து விட்டால்? ஆம், தெரிந்து விட்டால்?' இந்த நினைப்பிலேயே அவனுடைய ஆனந்த சிந்தனைகள் கட்டுக்குப் பிடிபடாமல் நாலு கால் பாய்ச்சலில் குதித்தன. 'அல்லது?......வேண்டாம், 'அல்லதே' வேண்டாம். நாம் நினைப்பதே நடந்து விடட்டும். எனது ஆத்மாவின் ஆசை பரிபூர்

ணம் அடையட்டும். சுவாமி! என் கௌரி சந்தோஷமாகவன்றி வேறு எப்படியும் இருக்க நான் சகிக்கமாட்டேன். ஈசனே! என்னைச் சோதிக்காதே. நல்லவர்களையே தான் கடவுள் பரீட்சிப்பார் என்பார்களே? என் கௌரியை அத்தகைய சோதனைக்கு உள்ளாக்காதே.'

தானே ஒரு சந்தேகத்தை ஏற்படுத்திக் கொண்டு, அதற்கு ஆட்சேபனை, சமாதானங்கள் கூறிக் கொண்டு, பலவாறு பிரார்த்தித்தான் கல்யாணசுந்தரம்.

## 5

## மணமகளின் மனம்

கௌரியின் காதில் சுந்தரம் சொன்ன வார்த்தைகள் ஒலித்துக் கொண்டே இருந்தன. வெள்ளிப் பாத்திரங்களை உள்ளே வைத்து விட்டு, அதைப் பற்றி யோசனை செய்து கொண்டே அவள் சமையல் கட்டுக்குச் சென்றாள். அங்கே கூடியிருந்த அவள் சித்தி, மாமி யாவரும் அவள் வருவதைப் பார்த்து, "குழந்தைக்குத் திருஷ்டி சுற்றிப் போட வேண்டும். எப்படித்தான் வளைய வந்தது!" என்றார்கள். அதற்கேற்றாற்போல் பாட்டியும் அதே சமயத்தில் ஒரு பிடி உப்பும் மிளகாயும் எடுத்து வந்து சுற்றிப் போட்டாள்.

இதை யெல்லாம் பார்க்கும் போது கௌரிக்கும் திடீரென்று கொஞ்சம் கொஞ்ச வேண்டும் போல் தோன்றி விட்டது. சுந்தரத்தின் மொழிகள் வேறு அவள் சிந்தனையை ஏற்கனவே கிளறி விட்டு விட்டிருந்தன. ஏகாந்தத்தில் உட்கார்ந்து, தன் நினைவுகளைப் புரட்டி, தன் எண்ணங்களை ஆராய்ந்து, உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று தோன்றிற்று அவளுக்கு.

"அம்மா, எனக்குத் தூக்கம் வருகிறது. போய்ப் படுத்துக் கொள்ளட்டுமா?" என்று அவள் கொஞ்சினாள்.

"ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போ."

"வா, நான் போடுகிறேன்."

"படுத்துக் கொள், அம்மா. நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்."

பக்கம் பக்கமாக எல்லோரும் பரிவுடன் அவளை விசாரித்தார்கள். அங்கே உட்கார்ந்திருந்த சாரதாவுக்கு இதெல்லாம் ஏதோ நாடக மேடையில் நடப்பது போலப் பட்டது. முகத்தை ஒருபுறம் திருப்பிக் கொண்டு, "மாப்பிள்ளை ஒரு தம்ளர் தீர்த்தம் கொடு என்றால் ஒருவரும் நகரமாட்டேன் என்கிறீர்கள். இப்பொழுது உங்களுக்கு நீங்களே பரிந்து கொள்ளுகிறதும்......" என்று, வார்த்தையை முடிக்காமலே எழுந்து போய் விட்டாள்.

கௌரியின் மனம் சுருக்கென்றது. 'உண்மைதானே, மரியாதை மனிதர் வந்தால் அவரைக் கவனியாமல் நமது காரியத்தையே பெரிதாக நினைப்பது எவ்வளவு வெட்கக் கேடு! நம் வீட்டிற்கு வந்தும், சாரதாவே அவர் காரியத்தை எல்லாம் பார்க்க வேண்டி வந்தால், அவளுக்கு அவமானமாகத்தானே இருக்கும், பாவம்?' என்று சிந்தித்தவளாய், அவள் தமக்கையின் பின்னாலேயே ஓடினாள்.

"அத்திம்பேருக்கு ஏதாவது வேண்டுமென்றால், என்னிடம் சொல்லக் கூடாதா, சாரதா?" என்று கனிவுடன் விசாரித்தாள்.

தங்கையின் பரிவான வார்த்தைகள் சாரதாவின் மனத்தில் ஆழப் பதிந்தன. "வேண்டாம், கௌரி. உன்னைச் சொல்லவில்லை. மற்றவர்கள் யாராவது செய்யக் கூடாதா? நீ, பாவம், எவ்வளவுதான் செய்வாய்? ஏன், கோபு தான், உமா தான்......?" என்றாள்.

"அதனால் என்ன? அவர்களுக்குத் தெரியாது, அவ்வளவுதான். நான் செய்கிறேன்" என்று கூறிக் கொண்டே, கௌரி வேகமாக மாடிப்படி ஏறிச் சென்றாள்.

அவளைப் பின் தொடர்ந்து சென்ற சாரதா, கௌரி மாடி அறைக்குள் நுழைந்து, "அத்திம்பேர், உங்களுக்கு ரொம்ப 'தாங்க்ஸ்'. வந்தவர்களை வைத்துக் கொண்டு, மௌனக் கெட்டுப் பேசிக் கொண்டே இருந்தீர்களே, பாவம்......! ஆமாம், நீங்கள் சாப்பிட வருகிறீர்களா?" என்று கேட்கும் வரையில் உற்றுக் கேட்டு விட்டு, திருப்தி யடைந்தவளாய் அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

"என்னத்துக்கு, அம்மா, எனக்கு வயிறே சரியாக இல்லை. ராத்திரி சாப்பாடே வேண்டாம் என்று பார்க்கிறேன்" என்று சற்றுப் பிகுப் பண்ணிக் கொண்டான் பஞ்சநதம்.

ஆனால் கௌரி, "பரவாயில்லை, அத்திம்பேர். வெங்காய சாம்பார் என்ன ஜோராக வாசனை வருகிறது, தெரியுமா? வாருங்கள்" என்று அழைத்தாள்.

"வேண்டாம், என்னைத் தொந்தரவு செய்யாதே. காலைச் சாப்பாடே என்னை ரொம்பவும் 'அப்ஸெட்' செய்து விட்டது."

மாலை டீ பார்ட்டியில் அவர் ஐஸ் கிரீமை நன்றாக மூன்று தரம் மொக்கியது கௌரியின் மனக் கண்களின் முன் தோன்றி மறைந்தது.

"த்ஸொ, த்ஸொ. நானாவது கிட்டே யிருந்து போடாமல் போய்விட்டேனே? இப்பொழுதாவது சரியாக நானே பார்த்துப் போட்டால் தான் எனக்குத் திருப்தியாகும். ரசம் சாதம் சாப்பிடுங்கள். நானும் வேண்டுமானால் உங்களுடன் உட்கார்ந்து கொள்ளுகிறேன்" என்று அவள் மீண்டும் கூப்பிட, அரை மனசாக எழுந்த பஞ்சநதம், அவளுக்கு முன்பாகவே சாப்பாட்டு அறையை அடைந்து விட்டான்!

இலையில் உட்காருவதற்கு முன், கௌரி சாரதாவைப் பார்த்து, "நீயும் உட்கார்ந்து விடேன், சாரதா. எல்லோரும் வேடிக்கையாகச் சாப்பிடலாம்" என்றாள். அப்பொழுது அத்திம்பேரின் முகம் மலருவது அவளது கடைக் கண்ணில் உறுத்திற்று.

சாரதாவும், கௌரியும் சந்தோஷமாகச் சாதம் விழுங்குவதற்குத் தவிர வாயைத் திறவாமல் பஞ்சுவின் கதைகளைக் கேட்க, மூவரும் வெகு சந்தோஷமாகச் சாப்பாட்டை முடித்தார்கள்.

அத்துடன் தனது கடமை நிறைவேறியதாகக் கருதிய கௌரி, இன்னும் கொஞ்ச நேரம் அக்கா, அத்திம்பேருடன் தங்கி, அவர்களை வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளும்படி வற்புறுத்திவிட்டு, அத்திம்பேரின் படுக்கையைத் தட்டிப் போடுவதைப் பற்றி, அவர் காதில் படும்படி வேலைக்காரர்களைக் கூப்பிட்டு ஆர்ப்பாட்டம் செய்து விட்டுத் தன் அறைக்குச் சென்றாள்.

ஜன்னலைத் திறந்து விட்டு, சற்று நேரம் அவள் வெளியே நோக்கினாள். எதிர் வீட்டில் கீழே சுந்தரத்தின் அறையில் விளக்கு எரிவது தெரிந்தது. கொஞ்ச நேரம் அவள் அதையே கவனித்துக் கொண்டு நின்றாள். சுந்தரத்தின் அறையிலிருந்து வரும் வெளிச்சங்கூட அவ்வளவு வசீகரம் பொருந்தியதாகப் பட்டது

அவளுக்கு. "சுந்தர், சுந்தர்!" என்று அவளுடைய வாய் முணு முணுத்தது.

"நீ மாத்திரம் அவனை 'சுந்தர்' என்று ஏக வசனத்தில் சொல்லலாமோ?" என்று அன்று தாய் கூறியது அவள் மனத்தில் ஒலித்தது.

'இனிமேல் 'அவர்' என்று சொல்ல வேண்டுமோ?' என்று தனக்குள் கூறிக் கொள்ளும்போதே, அவள் முகம் நாணத்தால் சிவந்து, செந்தாமரையைப்போல் பிரகாசித்தது.

'சுந்தரம்! மிஸ்டர் கல்யாண சுந்தரம், எம். ஏ., நீங்கள் வாருங்கள்! சாப்பிட வருகிறீர்களா? 'அவர்' சொன்னார். 'அவர்' எங்கே?' என்றெல்லாம் பைத்தியம் பிடித்தவள் போல் தனக்குத் தானே சொல்லிச் சொல்லிச் சிரித்துக் கொண்டாள் கௌரி. பிறகு நேரே கண்ணாடியின் முன் சென்று, கண்களை உருட்டி உருட்டி, கழுத்தைத் திருப்பி, தன்னழகைப் பார்த்துக் கொண்டாள்.

"அதெல்லாம் முடியாது. 'சுந்தர்' தான். 'நீ' தான். அப் படித்தான் சொல்வேன்" என்று அவள் கண்டிப்பாகக் கண் ணாடியில் இருக்கும் கௌரியிடம் சொன்னாள். பிறகு, சிந்தனை வெள்ளத்தை அடக்கச் சக்தியற்றவளாய், படுக்கையில் படுத்து வெகுநேரம் வரை புரண்டு கொண்டிருந்தாள்.

'சுந்தர், சுந்தர்!' அவளுக்கு அவன் கூறிய சொற்கள் ஞாபகத்திற்கு வந்தன.

'கௌரி, உன்னுடன் நான் கொஞ்சம் பேச வேண்டு'மாமே! நல்ல பைத்தியம்! என்ன சொல்லப் போகிறான்? ஒரு வாரத் திற்கு முன்னே கூடப் பேசிக் கொண்டிருந்தான். இன்னும் பத்து நாள் போனால் பேசப் போகிறான். அதை விட்டு விட்டு!......... யாராவது என்னவாவது கேலி செய்யப் போகிறார்களே என்று கூடவா தெரியாது! இந்தப் புருஷர்களே இப்படித்தான் போலிருக்கிறது? ஒன்றும் தெரியாத வெகுளிகள்......

'உஸ். ஏய், ஏய், ஆரம்பித்து விட்டாயே பெரிய பாட்டி மாதிரி! அதிலேதான் வந்து விடுகிறது! பெண்களுக்குக் கல் யாணம் ஆகிவிட்டாலே (கொஞ்சம் பொறு, அம்மா. உனக்கு விவாகம் இனி ஆகத்தான் போகிறது. இன்னும் ஆகிவிடவில்லை!) பெரிய மனுஷிகள் என்று அபிப்பிராயம் வந்து விடுகிறது. சரி,

சரி, அது ஒன்றும் வேண்டாம். சுந்தர் தூங்கி விட்டாரா பார்ப்போம்.'

எழுந்து சென்று ஜன்னலருகே போய்ப் பார்த்தாள் கௌரி. கீழே, எதிர் வீட்டில் சுந்தரத்தின் அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கு அணைந்து விட்டது. 'அவன் படுத்துக் கொள்ள மாடிக்கு வந்து விட்டான் போலும்.' திடீரென்று அவளுக்கு அவன் எதிர் மாடியிலிருந்து தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறானே என்று பயம் தோன்றிற்று.

'விளக்கையும் போட்டுக் கொண்டு, அவனது அறையையே பார்த்துக் கொண்டு நிற்கிறேனே, அவன் இதைக் கவனித்தால்?'

கவனித்தால் என்ன நினைப்பான், என்ன சொல்லுவான், எப்படி நடந்து கொள்வான், என்று ஒன்றும் அவளுக்குத் தெளிவாகத் தோன்றவில்லை.

'புதிதாக ஒரு மாப்பிள்ளை வருகிறானென்றால், அவன் எப்படி நடப்பான் என்று பல புத்தகங்கள் விரிவாக விஸ்தரித்தன. நமது விஷயம் அப்படி இல்லையே? முதல் முதலில் சுந்தரை எப்பொழுது காதலிக்கத் தொடங்கினேம்? 'காதலா?' சீ, என்ன வார்த்தை! பின்னே வேறு என்ன சொல்வது?'

வெகு நாளாகவே சுந்தரத்தைப் பார்த்தால் கௌரிக்கு ஒரு மாதிரி லஜ்ஜை இருந்து கொண்டே இருந்தது. 'ஆனால், ஆனால் அன்று......'

கௌரி அந்த 'அன்றை' அந்த ஒரு தினத்தை மீண்டும் மனத்தில் வரவழைத்துக் கொண்டாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. சுந்தரத்தின் வீட்டில் மாமிக்கு உதவியாகக் கௌரி சமையலறையில் சமைத்துக் கொண்டிருந்தாள். சுந்தரத்தின் தாய் நாகலக்ஷ்மியம்மாளுக்கு ஜுரம். படுத்துக் கொள்வதும், எழுந்து வந்து கௌரியைப் பார்ப்பதுமாகத் தவித்துக் கொண்டிருந்தாள்.

"வேண்டாம், மாமி, படுத்துக் கொள்ளுங்கள். நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று கௌரி சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டே அங்கே வந்தான் சுந்தரம்.

"ஏனம்மா, நான் அவளுக்குச் சகாயம் செய்கிறேன், நீ படுத்துக் கொள்ளேன்" என்றான்.

அன்றெல்லாம் சுந்தரம், கௌரி இட்ட ஏவல்களை யெல்லாம் செய்து கொண்டு அவளுக்குச் சகாயமாக இருக்க, கௌரி வெகு உற்சாகத்துடன் காரியங்களைக் கவனிக்கலானாள்.

மாமிக்குக் கஞ்சி எடுத்துக் கொண்டு கிளம்பினாள் கௌரி.

"நான் கொடுத்துவிட்டு வருகிறேன். அதற்குள் நீ நம் இரண்டு பேருக்கும் காபி கலந்து வை" என்று கூறிக் கொண்டே, அவள் கையிலிருந்த கஞ்சியைச் சுந்தரம் வாங்கிக் கொண்டான். அப்போது அகஸ்மாத்தாக, அவனுடைய விரல்கள் அவளுடைய விரல்களுடன் உராய்ந்தன. அந்த க்ஷணம் மின்சார அதிர்ச்சி போல் உடம்பில் ஒரு நூதனப் பரபரப்பு அவளது உடம்பெல்லாம் பரவி, அவளை நிஸ்திராணையாக விட்டு விட்டுப் போய்விட்டது போல் தோன்றிற்று. திடுக்கிட்டவளாய் அவள் சுந்தரத்தைத் திரும்பி நோக்கினாள். அவளையே பார்த்துக் கொண்டிருந்த கண்களைச் சட்டென்று திருப்பிக் கொண்டு, அவன் வேகமாகத் தன் தாயின் அறையை நோக்கி நடந்தான்.

கௌரி கீழ் உதட்டைப் பற்களால் கடித்துக் கொண்டாள். 'என்ன அவமானம்! என் பதற்றத்தைக் கவனித்து விட்டாரோ? என் முகம் எப்படி இருந்ததோ? என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வாரோ?' என்றெல்லாம் தன் மனத்தைப் பிய்த்துக் கொண்டாளாயினும், அவள் உள்ளத்தில் உள்ளூர ஓர் ஆழ்ந்த ஆனந்தமும், அமைதியும் குடிகொண்டன. கொஞ்ச நாளாக அவனைக் காணும்போதெல்லாம் ஏற்படும் நூதனமான வெட்கத்தின் பொருளையும், இப்பொழுது அவனைப் பற்றி நினைக்கும் போதே தனது இருதயத்தில் உண்டாகும் குழப்பத்தின் மர்மத்தையும் அவள் புரிந்து கொண்டு விட்டாள். ஆனால் அவன் தன்னைத் தன் வாழ்க்கைத் துணைவியாகக் கொள்ளும் அளவு நேசிக்கிறான், நேசிப்பான் என்பது என்ன நிச்சயம்?

மேலுந்தி வரும் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அவ்விடத்தினின்றும் அகன்றாள் கௌரி.

அதிலிருந்து அவளுக்குச் சுந்தரத்தின் வீட்டுக்குப் போக ஓர் அடக்க முடியாத துடிதுடிப்பு இருந்து கொண்டே இருந்தது. அதனோடேயே பகுத்தறிவு, 'அடிக்கடி போகாதே. அவன் மனத்தை முதலில் அறிந்து கொண்டு நட' என்று அவளுக்குத் தடை உத்தரவு போட்டுக் கொண்டே வந்தது.

ஆனால், இப்பொழுது தான் அந்தக் கவலையே தீர்ந்து விட்டதே! எத்தனையோ முறை, எத்தனையோ விதமாக, அவள் சுந்தரத்தின் மன விருப்பத்தை அறிந்து கொண்டு விட்டாள். அதன் பயனாக அவள் தன் கல்யாண நாளையே எதிர் பார்த்தாள். அதுவும் நெருங்கிவிட்டது. இனி நிம்மதியாகத் தூங்கலாமே? ஆனால் ஏனோ இப்படித் தூக்கம் வரமாட்டேன் என்கிறதே!

எப்படியாவது ஒரு முறை சுந்தரத்தைத் தனியாகச் சந்தித்து, தனது இருதயத்தை அவனுக்குத் திறந்து காட்டியிருக்க வேண்டும், காட்டிவிட வேண்டும் என்று தோன்றியது அவளுக்கு.

'இது தான் ஆங்கிலப் புத்தகங்களைப் படிப்பதன் விளைவு. இத்தனை நாட்களாக ஒன்றாக வளர்ந்தவர்களுக்கு இவ்வளவு தூரம் ஒருவர் மனத்தை ஒருவர் தெரிந்து கொள்வது மிகவும் கஷ்டமா என்ன? இன்னும் ஒரு மாதம் தானே, பிறகு தானே தெரிகிறது அவனுக்கு. இல்லை—அவருக்கு. அவர். அவருக்கு. அவருக்......'

கௌரியின் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன. அவளுடைய மார்பின் மீது பின்னிக் கொண்டு கிடந்த இரு கரங்கள், அவள் இருதயத்தில் குடிகொண்டிருந்த சுந்தரத்தைக் காவல் காத்தனவோ?

## 6

## கலக்கம்

கல்யாணசுந்தரம் மேல் மாடியில் துண்டை விரித்துப் போட்டுக்கொண்டு தரையில் படுத்தவாறு நட்சத்திரங்கள் நிறைந்த வானத்தைக் கவனித்துக்கொண்டே யோசனையில் ஆழ்ந்திருந்தான். பானுவின் பூணூல் முடிந்து நான்கு நாட்கள் கழிந்து விட்டன. இன்னும் கௌரி அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இந்த நான்கு நாட்களாக அவன் லீவு எடுத்துக்கொண்டு, எங்கும் வெளியே போகாமல் வீட்டிலேயே நின்று அவளுக்காகக் காத்துக்கொண்டிருந்தான். அவள் வரவில்லை. ஏதோ சாக்கை வைத்துக்கொண்டு அவன் அடிக்கடி எதிர் வீட்டிற்குச் சென்றான். இவன் தலையைக் கண்டதும் சாரதா பேச வந்து விடுவாள். பாவம், அவளுக்கென்ன தெரியும், அவன் மனத்தில் வீசிய புயல்! பால்ய சிநேகத்தின் பயனாக அவள்

அவன் வந்த போதெல்லாம் ஆவலுடன் அவனை எதிர்கொண்டு அழைத்தாள். கௌரியிடம் ஒரு விநாடி பேச, ஒரு கேள்வி கேட்கச் சுந்தரம் துடித்துக்கொண்டிருந்தான். ஆயினும் என்ன பயன்? அவள் அவனைப் பார்த்தும், அவன் தன்னுடன் பேச விரும்புகிறான் என்று தெரிந்தும், தூரத்திலிருந்து சிரித்தாளே ஒழிய அவன் இருக்கும் திக்கில் கூடக் கால் வைக்கவில்லை. அவள் பேரில் கோபப் படுவதா, அவளைக் கெஞ்சிக் கேட்பதா, ஒன்றும் புரியவில்லை கல்யாணசுந்தரத்திற்கு. இப்படியே அவன் திரிசங்கு சுவர்க்கத்தில் தவித்துக் கொண்டிருந்தான்.

பனிக்காலம் இன்னும் முடியவில்லை யாகையால் அவன் படுத்திருந்த இடமெல்லாம் சில்லென்றுகி விட்டது. அவன் அந்த இடத்தை விட்டு எழுந்தான். கீழே கௌரியின் குரல் கேட்கவும், துரிதமாக இறங்கலானுன். அவனை விடப் பன் மடங்கு வேகத்துடன் அவனது இருதயம் அவனுக்கு முன்னே ஓடிச் சென்றது.

கௌரி நாகலக்ஷ்மியம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தாள். அவள் வெளியே வரட்டும் என்று மாடிப்படியிலேயே காத்துக்



கொண்டு நின்றான் சுந்தரம். வெகு நேரம் வரை அவள் வரவில்லை. அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. சிறிய வயதில் அவர்கள் விளையாடப் போவதானால், அம்மா உள்ளே இருக்கும் சமயம், அங்கே கூடத்துத் தூணில் மூன்று தடவை ஒரு விதமாகத் தட்டுவது வழக்கம். இவ்வாறு பெரியவர்களுக்குத் தெரியாமல் ஒருவரை யொருவர் கூப்பிட்டுக்கொண்டு ஓடி விடுவதே அவர்களுக்கு ஒரு வேடிக்கை. அவ்வாறு இப்பொழுது செய்து பார்க்கலாமே என்று தோன்றவே, தூண் பக்கம் சென்றான் சுந்தரம்.

"டக், டக், டடக்."

கௌரி மெல்ல வெளியே எட்டிப் பார்த்தாள். சுந்தரம் அவளைப் பார்த்த சந்தோஷத்தில் ஒரு நிமிஷம் ஸ்தம்பித்து நின்று விட்டான். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு, 'இங்கே வா' என்று சமிஞ்ஞை செய்தான். கௌரியின் தலை மறைந்தது. அவ்வளவு தான். வெகு நேரமாகியும், கௌரி வராமலேயே இருந்து விட்டாள்.

சுந்தரம் தோளைக் குலுக்கிவிட்டுப் பேசாமல் இருந்து விட்டான். வேறு என்ன செய்வது? வேண்டுமென்றே வரா விட்டால்? 'என்ன, புதிதா? என்னைத் தெரியாதா? ஏனோ இப்படிச் செய்கிறாள்! ஒரு வேளை...?' சுந்தரத்திற்கு வேறொரு யோசனை தோன்றலாயிற்று. 'ஒரு வேளை கௌரி வாஸ்தவமாகவே எனக்காகத்தான் ஒத்துக் கொண்டாளோ என்னவோ? என்னிடம் தனிமையில் பேசினால் நான் அதை அறிந்துகொண்டு விடுவேன் என்று மறைந்து கொள்கிறாளோ?'

சந்தேகம், சம்சயம் என்னும் விஷவேர்கள் மனத்தில் ஊன்றி விட்டால், அவை ஒருவனை என்ன சித்திர வதை செய்கின்றன! கல்யாணசுந்தரத்தின் மனம் படாத பாடு பட்டது. வேறு ஏதாவது இடமாக இருந்தால், அவன், 'இந்த மாதிரி சந்தேகத்துடன் என்ன கல்யாணம்?' என்று விவாகத்தையே நிறுத்தி விட்டிருப்பான். ஏன், பகிரங்கமாக அந்தப் பெண் வீட்டாரிடம் சென்று, 'உங்கள் பெண்ணுக்கு இஷ்டந் தானா?' என்று கேட்டு விட்டிருப்பான். இது அப்படி இல்லையே? போதுமான ஆதாரம் இல்லாமல் மணத்தை நிறுத்தி விட்டால், மனஸ்தாபங் கூட நேரிடலாம். தன் பெற்றோர்கள் கூடத் தன்னிடத்தில் அதிருப்தி

அடையக் கூடும். தனது மனத்தைப் பற்றியோ, கேட்கவே வேண்டியதில்லை. கௌரி இல்லாத வாழ்க்கை ருசியற்றதாக மாறிவிடும் என்று அவன் திண்ணம் கொண்டான். ஆனால் அவள் தன் பரிபூரணமான மனச் சம்மதத்துடன் தன்னுடன் வாழ வில்லையென்றால், அவனது சந்தோஷம் அதைவிடப் பன் மடங்கு பாதிக்கப்படும். 'நாம் புத்தகங்களில் படிக்கிறோம்: குழந்தைப் பருவத்திலிருந்து இருவர் ஒன்றாகப் பழகி விட்டால், அவர்களுக் குள் சகோதர வாஞ்சையே மிகுந்து நிற்கும்- என்று. அப்படி இருந்தால், கௌரி தன் வாழ்க்கையின் அதி முக்கியமான கட்டத்தில் வாய் விட்டுப் பேசாமல், ஒரு வார்த்தையும் கூறாமல் இருந்து விடுவாளா?'

கௌரி தன்னைப் பார்க்காமல், நேரே வெளியே போகும் காட்சி, சுந்தரத்தின் யோசனைகளைக் கலைத்தது. பெருமூச் செறிந்தவண்ணம் அவன் மாடிப்படி ஏறி, மேலே சென்றான்.

கௌரி தன் வீடு திரும்பும்போது முகத்தை நேரே வைத்துக் கொண்டு, வேகமாகத் தன் அறைக்குச் சென்றாள். அவள் ஆழ்ந்த யோசனையில் மூழ்கி இருக்கும் ஜாடையாக, அவள் முகத்தில் சிறு ரேகைகள் படிந்திருந்தன.

'என்ன, இந்தச் சுந்தருக்குப் பைத்தியமா! வெறுமனே கூப்பிடுகிறானே? என்ன சொல்லப் போகிறான்? அவனுக்கு ஒரு வேலை இஷ்டம் இல்லையோ? சீ, அப்படி இருந்தால் அவனே வந்து கேட்பானா? ஆங்கிலக் காதல் நாவல்கள் படித்து விட்டு அதே போல் நடக்க வேண்டுமென்ற ஆசை போலும்! அசடு!' கௌரி நாக்கைக் கடித்துக்கொண்டாள். 'இனி மேல், இப்படியெல்லாம் 'அசடு, கிசடு' என்று பேசக் கூடாது. 'அவன்' என்றும் சொல்லக் கூடாது' என்று தன்னைத் தானே திருத்திக் கொண் டாள். உடனே இந்த யோசனைகளையெல்லாம் மறந்து விட்டு, வாயில் ஒரு பாட்டு முனக, கால்கள் பூமியில் பாவாமல் மிதந்து நடமாடலானாள். அவளது இருதயத்தில் அர்த்தமில்லாத ஒரு குதூகலம் குடிகொண்டது. அவள் முகம் வசீகரத்துடன் பளபள வென்று ஜாஜ்வலித்தது. கண்கள் மின்னின. இமைகள் நர்த்தன மாடின. சுபாவத்திலேயே அதிகமாகப் பேசாத அவள் இப்பொழுது மௌனியாக விளங்கினாள். அவள் வதனத்தில் எப்பொழுதும் திகழும் புன்சிரிப்பு இப்பொழுது புதிய மெரு

குடன் பிரகாசித்தது. அமைதியான அவள் முகத்தில், ஆழ்ந்த சாந்தம் கம்பீரத்துடன் ஆட்சி புரிந்தது. தான் இனிமேல் நடத்தப் போகும் இல்லற வாழ்க்கையை நினைத்து நினைத்து மனம் பூரித்தாள் கௌரி.

## 7

## பிரயாணம் வருகிறது

வீதியில் விளக்குகள் ஏற்றியாகிவிட்டன. ஆயினும் கிருஷ்ணபட்சத்து இருட்டை அகற்றும் படியான வெளிச்சம் இல்லை. மூன்று ஆத்மாக்கள் சுந்தரத்தின் வரவை எதிர் நோக்கி நின்றன. அவனுடைய பெற்றோர்கள் இருவரும் வாசலில் உட்கார்ந்து கொண்டு, பிள்ளை வருவதற்கு நேரமாகி விட்டதே என்று கவலைப்படுவதும், சமாதானம் கூறிக்கொள்வதுமாக இருந்தனர். எதிர் வீட்டில், இருட்டில் தான் இருப்பது வெளியே தெரியாமல், கௌரியும் அவன் வருவதற்கு நேரமாகிவிட்டதைக் கவனித்து, தெருவின் கோடியில அவனது ஆசை உருவம் வருகிறதா என்று ஆவலே வடிவாக உட்கார்ந்திருந்தாள். அவள் மனத்தில் ஏதோ விவரிக்கத் தெரியாத ஒரு கலவரம் குழும்பியது. அவன் எப்பொழுதும் இப்படி நாழிகை கழித்து வந்தது கிடையாதே?—அவள் உள்ளத்தில் அர்த்தமில்லாத பயங்களெல்லாம் தோன்ற ஆரம்பித்தன.

பஸ்ஸும் டிராமும் மோதுவது போலெல்லாம் அவள் மனம் அசட்டுக் கற்பனை செய்தது சைகிளும், வண்டியும்......கௌரி எதிர் வீட்டுக் கீழ் அறையை ஒரு முறை நோக்கினுள். அதில் விளக்கு எரியாமல் இருப்பது அவளுக்கு என்னவோ போல் ஓர் உணர்ச்சியை உண்டாக்கிற்று. மகாலிங்கையரும் நாகலக்ஷ்மி அம்மாளும் அங்கே உட்கார்ந்து, வேறு யோசனையே இல்லாமல் பிள்ளையின் வரவை எதிர் நோக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தால், அவர்களது வாழ்க்கையின் சந்தோஷமோ துக்கமோ அவன் ஒருவனுல் தான் என்பதை எடுத்துக் காட்டுவதுபோல் இருந்தது. தான் அந்த வாழ்க்கையில் எத்தகைய பொறுப்பு வாய்ந்த ஸ்தானத்தை அடையப் போகிறோம் என்று நினைக்கும்போது, அவள் பெருமையும், பெருமிதமும் கொண்டாள். அதைத் தொடர்ந்து ஓர் அச்சமும் தோன்றிற்று.

'ஈசனே! அவர்களுக்கு ஏற்றவளாக என்னைச் செய். என் சுந்தருக்குப் பெருமையாக இருக்கும்படி நான் நடந்து கொள்ள எனக்குப் புத்தியை அளிப்பாயாக. அப் பெரியோர்களை என்றும் வருந்தாமல் காக்கும் பலத்தை எனக்குக் கொடு' என்றெல்லாம் அவள் தீவிரமாகப் பிரார்த்திக்கத் தொடங்கினாள்.

கீழே செருப்புச் சத்தமும், எதிர் வீட்டின் விளக்கு வெளிச்சமும் அவள் கவனத்தை இழுத்தன. கல்யாணசுந்தரம் வந்து விட்டான். அவள் மனம் அப்பொழுதுதான் நிம்மதியுற்றது. இத்தனை நேரம் பட்ட கவலையும் அநுதாபமும் போய், இப் பொழுது அவன் மீது கோபங் கூட வந்தது! 'இத்தனை நேரமா ஆக்குவது?......' அவன் என்ன சொல்லுவானே, காதில் விழுமோ என்று கௌரி உற்றுக் கவனித்தாள். அவனுடைய பெற்றோர்கள் ஏதோ கேட்க அவன் ஏதோ பதில் கூறினான் என்பது மட்டுந்தான் பக்கத்திலிருந்த செடிகளின் சலசலப்பினிடையே கேட்டது. மூவரும் உடனே உள்ளே செல்வதை அவள் பார்த்தாள். மூடப்பட்ட எதிர் வீட்டுக் கதவு அவளுக்கும் சுந்தரத்திற்கும் இடையே குறுக்கிட்டு, அவளை மேலே ஒன்றும் பார்க்க விடாமல் தடுத்தது.

'இவ்வளவுதானா? இத்தனை நேரம் நான் தவியாய்த் தவித்தேனே? எனக்கு ஒன்றும் அங்கே இடம் கிடையாதா?' என்று அவளது அகந்தை ஒரு புறம் பொரும, எப்பொழுதும் தேட்டையாக நின்ற அவளுடைய அறிவு, 'அடி அசடே! நீதான் அவர்களிடையே நிரந்தரமான இடத்தைச் சம்பாதித்துக் கொண்டு விட்டாயே?' என்று இடித்துக் காட்டிற்று. தனக்குத் தானே சிரித்துக் கொண்டு, கீழே இறங்கப் போன அவள், "கௌரி!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினாள்.

"என்னம்மா, உமா?"

"கௌரி, எனக்கு இந்தக் கணக்குத் தெரியவே இல்லை. கொஞ்சம் சொல்லித் தருகிறாயா?"

"ஓ, அதற்கென்ன, எந்தக் கணக்கு?"

உமாவுடன் உட்கார்ந்து, கணக்கைப் போட்டுக் காண்பித்து விட்டு, அங்கேயே இருந்து தங்கை மற்றக் கணக்குகள் போடுவதைப் பார்த்துக் கொண்டு நின்றாள் கௌரி.

உமா திரும்பி, அக்காவை அன்புடன் பார்த்து, "கௌரி, நீ போய் விட்டால் எனக்கு இந்த வீட்டிலேயே இருக்க முடியாது" என்று கூறும் போதே அவள் கண்களில் நீர் நிரம்பி விட்டது. கண்டம் எழும்பி உருண்டது.

"சீ, அசடு! நான் எங்கே போகப் போகிறேன்? எதிர் வீடு தானே? பெரிய தூரமாக்கும்!" என்று கௌரி தன் தங்கையின் முதுகைச் செல்லமாகத் தட்டி விட்டுச் சிரித்துக் கொண்டே, தன் கண்களில் அரும்பும் நீர் முத்துக்களை உமா கவனித்து விடுவதற்கு முன் வெளியே சென்றாள்.

உமா அதிகமாகப் பேசவே மாட்டாள். ஆனால் தான் கொண்டிருக்கும் லட்சியத்தைப் பற்றியோ, கொள்கைகளைப் பற்றியோ பேச்சு எடுத்து விட்டால் வெறிபிடித்தவள் போல் உக்கிரத்துடன் பேசுவாள். அவளுக்கு வெளிக்காட்டிக் கொள்ளத் தெரியா விட்டாலும், அவள் கௌரியிடம் ஆழ்ந்த அன்பு வைத்திருந்தாள். கௌரியின் தன்னலமற்ற தன்மை, எப்பொழுதும் பிறர் சேவையிலேயே ஈடுபட்டிருக்கும் சுபாவம், உதார புத்தி இவை உமாவின் மதிப்பை எப்பொழுதோ அபகரித்துக்கொண்டு விட்டன. அவள் தன் தமக்கையிடம் ஒரு தனி மரியாதை வைத்திருந்தாள். அவள் தன் வாயை விடக் கண்களையே அதிகமாக உபயோகப் படுத்தியதால், வீட்டில் எல்லோர் குணங்களையும் சீர் தூக்கி மதிப்பிட்டு வைத்திருந்தாள். உமாவிடமிருந்த ஒரு குறைபாடு (குணம் என்று கூடச் சொல்லலாமோ என்னவோ) என்னவென்றால், நகைச் சுவையைக் கடவுள் அவளுக்குக் கொடுக்கவில்லை. ஹாஸ்ய ரசம் என்பது அவளுக்குப் பிடிபடாத ஒரு பொருளாக நின்றது. இதன் காரணமாக, எப்பொழுதும் படபடவென்று வெடித்துக் கொண்டிருக்கும் லலிதாவை அவள் அவ்வளவாகப் பிரீதியுடன் ஏற்றுக் கொள்ள வில்லை. ஆனால், மற்றவர்களிடம் மாத்திரம் உமா கலகலவென்று பேசினாளா என்ன? அது ஒன்றும் இல்லை. அவளுக்கு இந்த உலகமே துக்கத்திற்கும், துன்பத்திற்கும், பட்டினிக்கும், பஞ்சத்திற்கும் இருப்பிடம் என்று அபிப்பிராயம். பல்லாயிரம் மக்கள் சொல்லொணாக் கஷ்டங்களை அநுபவித்துக் கொண்டிருக்க, தான் சிரித்து விளையாடுவது கூடத் தவறு என்று அவள் நினைத்தாள். சிரிப்போரையும் வெறுத்தாள். இவ்வல்லல்களை மறக்க, தன் சுயமான சங்கீத ஞானத்தை உப

யோகப் படுத்திக் கொண்டு, தனது அறையிலேயே ஏகாந்தமாகத் தம்பூராவை மீட்டிக் கொண்டு, மனத்தைச் சாந்தப் படுத்திக் கொள்ளுவாள். பள்ளிக்கூடம் செல்வதை மட்டும், குளிப்பது, சாப்பிடுவது என்பதைப் போன்ற தப்ப முடியாத கடமைகளில் ஒன்று என்றெண்ணி, விருப்பு வெறுப்பின்றி நடத்தி வந்தாள்.

கௌரியின் மனத்தில் தங்கையின் வாத்ஸல்யமான வார்த்தைகள் ஆழமாகப் பதிந்தன.

" இவர்களை விட்டு எப்படி இருப்போம் ! ஆனால் எதிர வீடு தானே ?" என்று தனக்குத் தானே அவள் உரக்கக் கூறிக் கொண்ட மொழிகள் அவளுக்குத் தைரியம் அளித்தன போலும்.

* * *

சுந்தரம் உள்ளே நுழைந்ததும் அவன் தாய், " என்னடா, ஒரு மாதிரி இருக்கிறாய் ? உடம்பு சரியாக இல்லையா என்ன ?" என்று விசாரித்தாள்.

" அது ஒன்றும் இல்லை, அம்மா. நான் பீச்சுக்குப் போனேன். அப்படியே அந்த மணலில் தூங்கி விட்டேன். இப்பொழுதுதான் எழுந்து வந்தேன் " என்றான் சுந்தரம்.

" நன்றாக இருக்கிறது ! இத்தனை நேரம் நாங்கள் அலைந்த அலைச்சல்......"

அதற்குள் அவன் தகப்பனார் குறுக்கிட்டு, " இனிமேல் எல்லாம் இப்படிச் செய்தாயானால், கௌரி கோபித்துக் கொள்வாள். ஞாபகம் இருக்கட்டும்!" என்று வேடிக்கையாகப் பயமுறுத்தினார்.

சுந்தரம் ஒப்புக்குச் சிரித்தானே ஒழிய, அவன் மனத்தை வாட்டிக் கொண்டிருந்த அனல் அவன் முகத்தைச் சுண்ட அடித்துக் கொண்டே இருந்தது. அவன் ஒன்றும் பதில் கூறாமல் உள்ளே சென்று விட்டான். அவர்களும் தெருக் கதவைத் தாளிட்டுக் கொண்டு அவனைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றார்கள்.

கை, கால் கழுவிக் கொண்டு, சந்தியா வந்தனத்தையும் செய்து விட்டு, தகப்பனாருடன் இலையில் வந்து உட்கார்ந்தான் கல்யாணசுந்தரம். அவன் ஆழ்ந்த யோசனையில் மூழ்கி, பேசாமல், சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனது முகத்தையே கவனித்துக் கொண்டிருந்த அவன் பெற்றோருக்கு அவன் மௌனம் சற்றும் பொருத்தமாகத் தோன்றவில்லை போலும்.

"என்னடா யோசனை?" என்று கேட்டார் தகப்பனர்.

"ஊம்?" என்று கேட்ட அவன், அடுத்த கணமே, எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்த தன் மனத்தைத் திருப்பி இழுத்து வந்து, "என்னைக் 'காம்ப்' போகச் சொல்லி உத்தரவு வந்திருக்கிறது. அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றன்.

"எங்கே போக வேண்டுமாம்?"

"மதுரை."

"எப்பொழுது வருவாய்?"

"ஒரு மாதமாகும்."

"அப்படி யென்றால், கல்யாணத்திற்குச் சரியாகத்தான் வருவாய் என்று சொல்."

"ஆமாம். அப்படித்தான் தோன்றுகிறது."

அடுத்த இரண்டொரு நிமிஷங்கள் எல்லோரும் மௌனமாக இருந்தார்கள். பிறகு மதுரையைப் பற்றியும், அங்கு எங்கே தங்குவது, எங்கே சாப்பிடுவது என்பதைப் பற்றியும் பேச்சு ஆரம்பமாயிற்று.

ஆனல், பேச்செல்லாம் முடிந்து சுந்தரம் படுக்கச் செல்லும் போதும், அவன் மனத்தில் அவனை வாட்டும் அந்த ஒரே எண்ணம் தான் மேலோங்கி நின்றது.

'நாளன்றைக்கே புறப்பட வேண்டும். நாளைக்கும் கேட்கா விட்டால் அவ்வளவுதான். எப்படியாவது கேட்டுவிட வேண்டும். ஊருக்குப் போவதும் ஒரு விதத்தில் நல்லதுதான். ஒரு வேளை கௌரியை மறந்துவிட வேண்டி நேரிட்டாலும் பழக்கமாகும். அல்லது, அவள் மனம் என்னை நாடியிருக்குமானல் அதற்கும் கொஞ்ச நாள் ஊருக்குப் போய் விட்டுத் திரும்புவது ஒரு விதத்தில் நல்லதுதான். மேலும், போகுமிடம் மதுரை. மீனாக்ஷியம்மனைத் தரிசனம் செய்து விட்டு, நம் மனோபீஷ்டம் நிறைவேறும்படி அவளைப் பிரார்த்தித்துக் கொள்ளலாம் அல்லவா? கௌரி, கௌரி! என்னை ஏனே இப்படி வாட்டுகிருய்? உன் உள்ளத்தில் என்ன தான் இருக்கிறதென்று எனக்கு ஒரு கணம் திறந்து காட்ட மாட்டாயோ? உன் வாழ் நாள் பூராவும் உன் உணர்ச்சிகளை அடக்கி, அந்தரங்கமான எண்ணங்களை உள்ளேயே பதுக்கி நடப்பாயோ? இப்பொழுது கூடவா அப்படி? ஒரு பார்வை - ஒரு

வார்த்தை சொல்லி விடு. உன்னை மணக்காமல் விட்டு விடுகிறேன். உன் சந்தோஷந்தான் எனக்கு முக்கியம். அல்லது, உன் எண்ணமும் என் எண்ணமும் ஒன்றுதான் என்றால், அதை யாவது வெளிப்படுத்தி விடேன். என் மனம் அளவு கடந்த சந்தோஷம் அடைந்து விடும். ஆனால், அவ்வளவு மகிழ்ச்சி எனக்குத் தகுமா? என் மனோபீஷ்டம் நிறைவேறுமா?'

சுந்தரத்தின் உடல் சோர்வு அவன் புத்தியையும் அடக்கி விட்டது. அவன் தன்னையுமறியாமல் தூங்கத் தொடங்கினான். அவனது நித்திரையில் கௌரி அவனை ஆவலுடன் வரவேற்றிருக்க வேண்டும். அவன் முகத்தில் குறுநகை தவழ்ந்தது.

## 8

## "நாளைக்கேவா?"

லலிதா குதித்துக் கொண்டு மாடிப் படியில் இறங்கி வந்தாள். அவள் கண்கள் துருதுருவென்று நாலா பக்கமும் அலைந்தன. யாரை என்ன கேலி செய்வோம், எங்கே என்ன விஷமம் பண்ணு வோம் என்று அவள் கைகள் துடித்தன. பாலு ஒரு மூலையில் உட் கார்ந்துகொண்டு ஏதோ கணக்குக் கூட்டிக் கொண்டிருந்தான்.

"என்னடா கணக்கு?" என்று அவனை ஓர் அதட்டு அதட்டினாள் லலிதா.

அவன் நிமிராமல் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தான். தான் கேட்டும் அவன் பதில் சொல்லாமலிருப்பதா என்று அவளது மமதை வெகுண்டது. 'ஆ, என்ன அலட்சியம்?' லலிதா பாலுவின் அருகில் சென்று அவன் கணக்கை எட்டிப் பார்த்தாள். பாலு தன் பூணூலுக்கு வாங்கின பால் கணக்கு முதலியவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் வாய்க்குள், "33, 33, 33ம் 4ம்......" என்று எண்ணினான்.

அதைக் கவனித்த போக்கிரி லலிதா, அவனைக் கணக்கிட விடாமல், "33, 17, 52, 45......" என்றுகுறுக்கிட்டாள்.

பாலு விடாமல் தன் கணக்கையே கவனித்தான்.

லலிதாவும் விட்டுக் கொடுக்காமல், "4, 8, 5, 1, 6,..." என்றாள்.

பாலுவால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. "சற்று இரேன், லலிதா!" என்று கூறி விட்டு, மீண்டும் கணக்கின் மீது கவனத்தைச் செலுத்திய அவன், முன் தொடர்பை முற்றும் மறந்து விட்டிருப்பதைக் கண்டு, மறுபடியும் ஆதியிலிருந்து ஆரம்பிக்கலானான்.

லலிதா கலகலவென்று சிரித்து விட்டு, அவ்விடத்தை விட்ட கன்றாள். அவ்வளவு தான்—அதற்கு மேல் அங்கே அவளுக்குப் பொருந்த வில்லை.

சுற்று முற்றும் பார்த்து விட்டு அவள், அந்த வீட்டில் ஒன்றும் தன் மனத்தைக் கவரவில்லை என்று எண்ணியவள் போல், எதிர் வீட்டை நோக்கி நடந்தாள்.

வாசலில் சுந்தரத்தின் தகப்பனார் மகாலிங்கையர் நின்று கொண்டிருந்தார். அவள் உள்ளே நுழையும்போதே அவர் அவளைப் பார்த்து, "ஏன், லலிதா, உனக்கு எப்பொழுது கல்யாணம் ?" என்று கேட்டார்.

"ஆமாம் ! உங்களுக்கு என்ன வேலை !"

"ஏன் ? நல்ல சாப்பாடு கிடைக்குமே என்று தான். ஆமாம்—உனக்கேன் இவ்வளவு வெறுப்பு ? அப்பாவிடம் சொல்லட்டுமா ?"

"எந்தக் கிழமாவது காத்துக் கொண்டிருக்கிறதா என்ன?"

மகாலிங்கையர் 'ஓ' வென்று சிரித்து விட்டு, "ஏன் உனக்குக் கிழவன் தான் பிடிக்குமோ ?" என்று கேட்டார்.

"பின்னே என்னவாம் !"

"நீயும் கையோடே ஒரு கல்யாணம் பண்ணிக் கொள்ளேன் என்று சொன்னேன். உன் அத்தான் கிட்டு......"

"ஆ...மாம். அந்தக் கரிக்கிட்டுவுக்குக் கல்யாணம் ஒன்று தான் குறைச்சலாகக் கிடக்கிறதாக்கும்!" தன் முகத்தைத் தோளில் இடித்துக் கொண்டாள் லலிதா.

"இல்லா விட்டால், அந்தச் சோமு வந்தான் பார்..." என்று அவள் வாயை மேலும் கிளறினார் மகாலிங்கையர்.

"ஏன், மாமா ? உங்களுக்குக் கல்யாணத்தில் அவ்வளவு அக்கறை இருந்தால் நீங்களே ஒரு பெண்ணைப் பார்த்துப் பண்ணிக் கொள்ளுங்களேன்!"

இந்த ராம பாணத்தை வெடுக்கென்று வீசி விட்டு, "மாமி, மாமி!" என்று கூப்பிட்டுக் கொண்டே லலிதா உள்ளே ஓடி

விட்டாள். லலிதாவின் சுறுசுறுப்பும், கபடமற்ற வாயாடித்தன மும் மகாலிங்கையரின் மனத்தைக் கவர்ந்து விட்டன. குழந்தையிலி ருந்தே அவளை அவர் மிகவும் பட்சமாகப் பார்ப்பார். அவள் மூன்று வயதிலிருந்து, அவளது சித்தியிடம் வளர ஆரம்பித்ததிலி ருந்து, அவர் அவள் வீவுக்கு வரும் சமயத்தையே ஆவலுடன் எதிர் நோக்கி நிற்பார்.

சுந்தரம் லலிதாவைப் பார்த்து விட்டு, எழுந்து மாடிக்குச் செல்ல எத்தனித்தான். அவனது மனம் அப்போது இருந்த நிலை மையில் வேடிக்கையை நாடவில்லை. ஆனால், லலிதாவா விடுபவள்!

"என்ன, என்ன, சுந்தர் அண்ணா, ஐ மீன், அத்திம்பேர், எங்கே ஓடுகிறாய்?" என்று கேலி செய்து கொண்டே அவள் அவ னிடம் ஓடி வந்தாள்.

சுந்தரம் பதில் ஒன்றும் கூறவில்லை. அவனது மனத்தை அழுத்திய பாரம் அவனது சுயமான சிரித்த தன்மையை மறைத் தது. லலிதாவுக்கு இந்த நூதன சுந்தரத்தைத் தெரியவில்லை. எப் பொழுதும் தன்னை ஆவலுடன் எதிர் கொண்டு, வேடிக்கையாக விளையாடும் சுந்தரமா இது? குழந்தை, அவள் என்ன அறிவாள்? இந்தப் புதிரை நிதானமாக நின்று ஆராயாமல், "ஐய! பேச வேண்டாமே! மாப்பிள்ளையாகும் பெருமை போலிருக்கிறது!" என்று முணுமுணுத்தவாறு நாகலக்ஷ்மியம்மாளைத் தேடிச் சென்றாள்.

"ஏன் மாமி, நீங்கள் கூட, சம்பந்தியாகப் போகிறோமே என்று......" என்று அவள் தன் தாயிடம் ஏதோ சொல்வது சுந்தரத்தின் காதில் விழுந்தது.

களைத்த அவனது முகத்திலும் லேசான புன்சிரிப்புத் தோன் றியது. அவன் ஒன்றும் தோன்றாமல் மாடிக்குப் போய் உட்கார்ந் தான். தன்னையறியாமலேயே அவனுடைய பார்வை எதிர் வீட்டை நாடிற்று. நெருங்கி வரவர, என்ன செய்வது என்று தெரியாமல், அவனுக்குக் குழப்பம் அதிகரித்துக் கொண்டே வந் தது. அத்தருணம் அவனது உள்ளம் நமது சமூகத்தையும், பழக்க வழக்கங்களையும் சபித்தது. மேல் நாடாக இருந்தால் கௌரியைத் தனியாக அழைத்துக் கொண்டு வெளியே செல்லலாம், பேசலாம். 'நம் வழக்கங்களே மோசம், நம் வழிகளே தவறு' என்று அவன் உறுமினான். 'எத்தனையோ வீட்டில் பேசுகிறார்கள். அதுவும்

நமது வீட்டில் பழக்கம் இல்லே, நம் வீட்டுப் பழக்கம், நம் ஊர்ப் பழக்கம், நம் தேசத்துப் பழக்கம்......' என்றெல்லாம் ஏதேதோ அவன் மனம் முணுமுணுத்துக் கொண்டிருந்தது. கடைசியாக ஒரு தீர்மானத்திற்கு வந்தவனுய், சுந்தரம் எழுந்து எதிர் வீட்டிற்குச் சென்ருன்.

வீட்டிற்குள் நுழையும்போது அவனுக்கு ஏதோ வெறிச் சென்று தோன்றியது. அவன் நேரே பின்புறம் சென்ருன். அங்கே கௌரியின் தாய் காமாக்ஷியம்மாள் காய்கறி நறுக்கிக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, அவன் அவளிடம்



சென்று உட்கார்ந்தான். அவன் சிறுவயதில் அவ்வாறு வந்து உட்காரும் வழக்கத்தைக் கவனப் படுத்திக் கொண்டு, காமாக்ஷியம்மாள் இரண்டு முள்ளங்கித் துண்டங்களே எடுத்து அவனிடம் கொடுத்தாள். அவனும் அவைகளே வாங்கி வாயில் போட்டு மென்று கொண்டே மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

வழக்கமில்லாத அவனது முகவாட்டத்தைக் கண்டு அதிசயித்தவளாய், காமாக்ஷியம்மாள், "என்னடாப்பா, உடம்பு சரியாக இல்லேயா என்ன ?" என்று கேட்டாள்.

"எல்லோரும் எங்கே?"

"மேல் மாடியில் இருப்பார்கள். நீ போகவில்லையா அங்கே?"

"இல்லை."

காமாக்ஷியம்மாளுக்கு அவனை மேலும் மேலும் கேள்விகள் கேட்கத் தெரியவில்லை. சுந்தரத்திற்கும் தான் நினைத்த கேள்வியை எப்படி வெளியிடுவது என்று புரியவில்லை. இந்த யோசனையி லேயே மௌனமாகச் சற்று நேரம் கழிந்தது. பிறகு சுந்தரம், இன்னும் கொஞ்சநேரமாகி விட்டால் யாராவது இறங்கி வந்து விடப் போகிறார்களே என்று எண்ணியவனாய், அவசரமாக, "மாமி, உங்களை நான் ஒன்று கேட்க வேண்டும்" என்று ஆரம் பித்தான்.

காமாக்ஷியம்மாள், 'என்ன?' என்னும் பாவனையில் நிமிர்ந்து நோக்கினதும், அவன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண் டான்.

"இந்தக் கல்யாணத்தில் கௌரிக்கு இஷ்டந்தானா?"

"இது என்ன கேள்வி, சுந்தரம்! அவளுக்கு இஷ்டமில்லாமல் என்ன வந்து விட்டது இப்பொழுது? உன்னைக் காட்டிலும் அவ ளுக்கு......"

"அதற்குச் சொல்லவில்லை, மாமி. அவளுக்கே இஷ்டந்தானா, அல்லது, நமக்காக, எனக்காக, ஒத்துக் கொண்டு விட்டாளா? அவள் என்ன நினைக்கிறாள் என்றே தெரியமாட்டேனென்கிறதே?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. என்ன, உன்னைக் காட்டி லும்..."

இதற்குள், தடதட வென்று மாடிப்படியில் பல கால்கள் இறங்கும் ஓசையைக் கேட்டு, சுந்தரம் எழுந்து விட்டான். அவ னையே பார்த்துக் கொண்டிருந்த காமாக்ஷியம்மாள், "ஐயோ பிள்ளையே!" என்று பிரியத்துடன் முணு முணுத்துக் கொண்டாள்.

எதிர்பாராத விதமாகக் கல்யாணசுந்தரம் படியடியில் நிற்ப தைக் கண்டு ஆச்சரியப் பட்டார்கள் கோபு, சாரதா பிரகிருதிகள்.

"எங்கே போயிருந்தாய், சுந்தரம்? நாங்கள் கொஞ்ச நேரத் துக்கு முன் உன்னைக் கூப்பிட வந்தோமே?" என்றார்கள்.

"மாடியில் தான் இருந்தேன்."

"மேல் மாடியிலா? நாங்கள் இங்கிருந்தே பார்த்துக் கூப்பிட் டிருப்போமே?"

"இல்லை, என் அறையில் உட்கார்ந்திருந்தேன்."

"வருகிறாயா, பீச்சுக்குப் போய் வரலாம்?"

"ஆகட்டும்."

படியில் வரிசையாக எல்லோரும் நின்று கொண்டிருந்தனர். முதல் படியில் கோபு, அவன் பின்னால் சாரதா. பிறகு சுசீலா, கௌரி, உமா. கௌரியின் கண்கள் சுந்தரத்தின் முகத்தையே பரிசோதித்துக் கொண்டிருந்தன. அதில், அவை என்ன கண்டனவோ, என்ன அர்த்தம் புரிந்து கொண்டனவோ? கௌரியே ஒரு பிடிபடாத புதிர் ஆயிற்றே? உமாவின் கண்களும் மாறிமாறி, சுந்தரத்தையும் கௌரியையும் நோக்கின. அவளுக்கு என்ன தோன்றிற்றோ? அவளது நெற்றியில் மூன்று மெல்லிய கோடுகள் பிரசன்னமாயின.

எல்லோரும் வெளிக் கிளம்பினார்கள்.

வழி முழுவதும் அனைவரும் ஏதோ பேசிச் சிரித்துக் கொண்டு நடந்தார்கள். சுந்தரத்தின் மனம் சுவர் மேல் பூனை போல் ஊசலாடிக் கொண்டிருந்தது. காமாக்ஷி மாமியின் சொற்கள் அவனுக்கு ஒரு பக்கம் ஆறுதல் அளித்தனவாயினும், அவளுடைய "'உன்னைக் காட்டிலும் வேறு......' என்ற பல்லவி, மற்றொரு புறம் உறுத்திற்று. அந்த அவளது மனோபாவத்தை அவன் கேட்கவில்லை. கௌரிக்கு மனப்பூர்வமாக இஷ்டந்தானா என்பதுதான் அவன் அறிய ஆவல் கொண்டது. அதற்குத் தக்க பதில் கிடைக்கவில்லை. இவ்வாறு உள்ளுக்குள்ளே யோசனைகள் மோத, வெளிக்கு அவன் சிரித்த முகத்துடன் காணப்பட்டான்.

லலிதா அவனைப் பார்த்து, "அத்திம்... சுந்தர் அண்ணா, மதுரையிலிருந்து எனக்கு என்ன வாங்கிக் கொண்டு வரப் போகிறாய்?" என்று கேட்டாள். அப்பொழுதுதான் சுந்தரம் வெளியூருக்குப் போகப் போகிறான் என்று எல்லோருக்கும் தெரிந்தது போலும்.

"என்ன, சுந்தரம், என்னிடம் சொல்லவே இல்லையே?" என்றாள் சாரதா.

"எனக்கு என்ன வாங்கி வரப் போகிறாய்?" என்று கேட்டான் பாலு.

"அட, அப்படியானால் கல்யாணத்திற்குப் புது மாப்பிள்ளையாக வருவாய் என்று சொல்" என்றான் கோபு.

"ஆமாம், இங்கேயே இருந்தால் எப்படி? அப்பொழு தென்றால் நீ வந்து கிரமப்படி ரெயிலிலிருந்து அழைத்து வருவா யல்லவா?" என்று பதிலுரைத்தான் சுந்தரம். அவனுக்கும் இந்தச் சமூகத்தில் பழைய குஷி வெளிவரும் சாயல் காட்டிற்று. அவன் பதிலைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள்.

இந்தச் சமயத்தில் கௌரி சற்றுப் பின் தங்குவதைக் கண்டு, சுந்தரம் திரும்பினான்.

"எப்பொழுது போக வேண்டும்?" என்று அவள் மெல்ல விசாரித்தாள்.

"நாளைக்கு."

"நாளைக்கேவா?"

சுந்தரத்தின் இருதயம் ஓடி முன்னே நடந்தது. கௌரியின் குரலில், அவனுக்கு ஏக்கத்தின் சின்னம் தென்பட்டது. இத்தனை பேருக்கும் இல்லாத கவலை அவளுக்கு ஏன்? ஆம்—ஏன்? அவனுடைய உள்ளம் சந்தோஷ மிகுதியினால் வெடித்து விடும் போலாயிற்று. திரும்பி அவன் கௌரியின் முகத்தை உற்று நோக்கினான். ஆனால் அங்கே அவன் என்ன கண்டு விட்டான்? கௌரி தனது சுபாவமான, நிர்மலமான, புன்சிரிப்புடன் கூடிய, முகமூடியைப் போர்த்துக் கொண்டு விட்டாள். சுந்தரம் சப்பிட்ட மனத்துடன் திரும்பினான்.

"எத்தனை நாளாகும்?" என்று கேட்டான் கோபு.

"ஏன் இப்பொழுது ஓத்துக் கொண்டாய்?" என்றாள் சாரதா.

"என்ன செய்வது, போய்த்தானே ஆகவேண்டும்? ஒரு மாதமாகும்" என்று பதிலளித்தான் சுந்தரம்.

"அதாவது, அண்ணா சுந்தரம் ஊருக்குப் போனால், புது அத்திம்பேர்தான் திரும்புவார் என்று சொல்லு!" என்றாள் உமாகூட.

## 9

## மதுரை மீனாக்ஷி துணை

ரெயில் 'கட, கட' வென்று போய்க் கொண்டேயிருந்தது. அதில் பிரயாணம் செய்து கொண்டிருந்த கல்யாணசுந்தரத்தின் மனமும், அவன் கண்களில் தோய்ந்து நிற்கும் தூக்கமும் கலந்து

அந்தத் தாளத்திற்கு ஏற்ப, ஏதோ கற்பனை செய்தன. அவன் தன்னைத் தானே ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தான்.

காமாக்ஷியம்மாள் கூறிய வார்த்தையும் கௌரியின் புன் சிரிப்பும் சேர்ந்து ஓர் இன்பக் கனவுத் தொடராகத் தோன்றி அவனை எங்கோ மாயாலோகத்திற்கு அழைத்துச் சென்றன. அங்கே ஆனந்த அமிருதத்தை அருந்தி மயக்க முற்றான் அவன். 'ஆகா, நாம் நினைப்பது சரியானல், என்னைப் போன்ற பாக்கிய சாலியும் இவ்வுலகில் உண்டோ? ஆனல், கௌரி மற்றவர்களைப் போலவே நம்முடன் குழந்தையிலிருந்து பழகியவள். சர்வ சாதாரணமாகக் கூட அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கக் கூடும். அதில் ஏக்கத்தையும், உணர்ச்சியையும் உண்டு பண்ணியது நமது மனப் பிராந்தி தானே!

பிராந்தியோ என்னவோ,— அதைக் கிளற அவன் இப் பொழுது தயாராக இல்லை. 'அவள் அந்தக் கேள்வியைக் கேட் டாள். அது ஒன்று போதும்' என்ற நிம்மதியுடன் அவன் தூங்கத் தீர்மானித்தான்.

சிலு சிலுப்புடன் கூடிய ராத்திரிக் காற்றும், 'கடக், கடக்' என்ற ரெயில் சத்தமும் சேர்ந்து அவனை அயர்ந்து தூங்கச் செய்து விட்டன.

* * *

மதுரை மீனுக்ஷியம்மன் ஆலயத்தில் தீபாராதனை மணி 'டாங், டாங்' என்று அடித்துக் கொண்டிருந்தது. சந்நிதியில் நின்று கொண்டு அம்மனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தான் கல்யாணசுந்தரம். பூஜை செய்யும் குருக்கள் யாத்திரீகர் களுக்குச் சொல்லும் முறையில் ஏதேதோ சொல்லிக் கொண் டிருந்த தெல்லாம் வேறெங்கிருந்தோ கேட்பது போலிருந்தது அவனுக்கு. அவன் மனம் ஓரிடம் சென்றிருந்தது, கண் ஒரு பக்கம் பார்த்தது, வாய் ஒரு புறம் என்னவோ முணு முணுத்தது.

'இது தான் மதுரை மீனுக்ஷி. அங்கையற்கண்ணி— திக் விஜயம் செய்து ஆண்ட அம்பிகை' என்று நினைக்கும் போது அவன் உடல் சிலிர்த்தது. ஒரு நூதன பரவசம் அவன் தேகத்தில் குடி கொண்டது.

"மீனுக்ஷி கல்யாணம். சித்திரம் என்ன அழகு, பார்!" என்று யாரோ சொல்வது அவன் காதில் விழுந்தது.

"மீனாக்ஷி கல்யாணம். எனக்குந்தான் கல்யாணம்!" என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான் சுந்தரம். வெளியே வந்து, அந்தப் பிரம்மாண்டமான பிராகாரத்தைப் பிரதட்சணம் செய்யும் போது, அங்கே ஓங்கி நிற்கும் கல் தூண்களைக் காட்டிலும், தங்கத் துவஜஸ்தம்பத்தைக் காட்டிலும், மேலே மேலே பறந்து சென்று ஆனந்த பரவசம் அடைந்தது அவன் உள்ளம்.

கடைசியாக அவன் வெளியே வந்தான். கோவில் பிராகாரங்களுக்குள்ளிருந்த கடைகளில், கண்ணாடிகளும், வளையல்களும், பட்டுக்குச்சு, பொம்மைகள், குங்குமக் குவியல்களும் பளபளவென மின்னி, அவன் மனத்தைக் குழப்பமடையச் செய்தன.

'கௌரிக்கு வளையல் வாங்கிப் போக வேண்டும். அம்மாவுக்குப் படம். குங்குமம் அழகாக இருக்கிறதே, காமாக்ஷி மாமிக்கும், அம்மாவுக்கும்......'

தன்னையுமறியாது அவன் முகம் மந்தஹாஸத்தால் விரிந்தது. 'ஏ, ஏ, மெள்ள, மெள்ள!' என்று தன் சிந்தனைக் குதிரைகளை அடக்கினான்.

"ஐய, கௌரிக்குத்தான் வளையல்களாம், நம்மை அசலே மறந்து போய் விட்டார் புது அத்திம்பேர். இங்கே நமக்கென்ன வேலை!" என்று அப்பொழுது, அந்த இடத்தில், தன் காதருகில் லலிதா கூறுவது போல் அவனுக்குப் பிரமை தட்டியது. அதை நினைக்கும் போது அவனுக்குச் சிரிப்பே வந்து விட்டது.

'ஐயோ, அவளுக்கும் வாங்கிக் கொண்டு போக வேண்டும். இல்லாவிட்டால் என் மானம் ஆகாயத்தில்தான்!' என்று நினைத்துக் கொண்டான். 'சாரதாவுக்கு, உமாவுக்கு......'

ஒரு கணம் அவன் மனம், 'நாம் இவ்வளவு சந்தோஷப்படுகிறோமே?' என்று அச்சமுற்றது. ஆனால் அவன் அந்தப் பயத்தைத் தலையெடுக்க வொட்டாமல் அடித்து, "தாயே, மீனாக்ஷி, நீயே துணை" என்று கோவிலை நோக்கிக் கைகூப்பிக் கும்பிட்டான்.

அன்று தான் அடைந்த ஆனந்தம் எல்லையற்று, அதி வசீகரத்துடன் தன்னைக் கவர்ந்து, ஜன நெருக்கடியான மதுரை வீதிகளையும் கடந்து, தன்னை இன்ப உலகத்திற்குச் செலுத்தியதை ஓட்டல் அறைக்குச் சென்றபின் தான் சுந்தரம் அறிந்தான்.

அவன் படுக்கையின் மீது தொப்பென்று சாய்ந்தான். மறு கணம் துள்ளி எழுந்தான். கோவிலிலிருந்து கொண்டு வந்த

தேங்காய் மூடியை உடைத்து, தேங்காய்த் துண்டங்களை வாயில் போட்டுச் சுவைத்தவாறே மீண்டும் படுக்கையில் விழுந்தான். தேனினும் இன்சுவை கொண்ட அந்த இளந் தேங்காயைவிட ருசியாக இருந்தன அவன் கண்ட இன்பக் கனவுகள்.

## 10

## தாயும் மகளும்

"உமா, அடீ, உமா!" என்று உரக்கக் கூவினாள் அவள் தாய் காமாக்ஷியம்மாள்.

"என்னம்மா?"

"கொஞ்சம் நீயுந் தான் கூட மாட ஏதாவது செய்யக் கூடாதா? அந்தப் பெண்ணே எல்லாம் செய்து கொள்கிறதே?"

"ஏம்மா, கௌரிக்கு எல்லாம் தெரிகிறது; செய்கிறாள். என்னால் இந்தக் காரியங்களெல்லாம் செய்ய முடியாது. அதோடு, இப்போது ரேடியோவில் ஒரு நல்ல 'டாக்' இருக்கிறது, நான் கேட்க வேண்டும்" என்று கூறிவிட்டு மாடிக்குப் போய் விட்டாள் உமா.

"காமு, போதுமே உன் பெண் லட்சணம். இன்னும் போனால் அசட்டுப் பிசட்டென்று ஏதாவது சொல்லும். வரிசை அப்பளாம் இடும்போது அபசகுனம்போல் ஏதாவது உளறி வைக்கும். அதை எதற்கும் கூப்பிடாதே" என்றாள் கௌரியின் சித்தி.

"ஆமாண்டி, அதைப் பார்த்தால்? அவளுக்கும் கல்யாணத்திற்கு வயதாகவில்லையா என்ன?"

"ஆமாம், அதுதான் நானும் சொல்ல வேண்டுமென்று இருந்தேன். அவளுக்கும் இப்பொழுதே கையோடு நடத்திவிடக் கூடாதோ?"

காமாக்ஷியம்மாள் பதில் கூறுவதற்குள், கௌரி, தான் இட்ட அப்பளங்களை எண்ணிக் கொண்டிருந்ததை நிறுத்தி விட்டு, "அவள் எதிரிலே கல்யாணப் பேச்சு ஒன்றும் எடுக்காதீர்கள். பிறகு 'அவள் அது சொன்னாள், இது சொன்னாள்' என்று எதற்கு......" என்று கூற ஆரம்பித்தாள்.

அதற்குள் சித்தி, "ஆமாம், அதற்காக ஒன்றும் பேசாமல் இருக்க முடியுமா என்ன? நன்றாகத்தான் இருக்கிறது! கல்யாணமே பண்ணிக் கொள்ளப் போகிறதில்லையா என்ன?" என்றாள்.

" அவளுக்கு இப்பொழுது பதினாலு வயது தானே ஆகிறது? அதற்குள் என்னவாம் ?"

"அழகுதான், போடி! அவள் வயசுக்கு எனக்குக் கோபு கூடப் பிறந்து விட்டான்" என்றாள் காமாக்ஷியம்மாள்.

கௌரிக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. அவள் ஏதோ யோசித்துக் கொண்டே இருந்தாள். 'ஆமாம், உமாவுக்கும் கல்யாணமாக வயதாகி விட்டதே? அவளுக்கு எந்த மாதிரி அகமுடையான் வருவானோ? புதிதாக ஒருவன் வருவான். 'பெண் பார்ப்பது' என்றெல்லாம் நடக்குமோ? முன் பின் தெரியாத ஒருவன் வந்து பார்ப்பதென்றால் எப்படி இருக்கும்? திடீரென்று பார்க்க வருபவர்கள் அந்த ஒரு நாளில் என்ன தெரிந்து கொண்டு விடுவார்கள்? கண்ணுக்கு நன்றாக இருக்கிறாளா என்று வேண்டுமானால் பார்த்துக் கொள்ளலாம்; மற்றபடி குணத்தைப் பற்றி என்ன தெரியும்?'

கௌரி ஏதோ கவனமாக இருப்பதைக் கவனித்த காமாக்ஷியம்மாள், அவளைப் பார்த்து, "தூக்கம் வந்தால் கொஞ்ச நாழிகை போய்ப் படுத்துக் கொள், கௌரி" என்றாள்.

கௌரி தன் தாயை நிமிர்ந்து நோக்கினாள். அன்னையின் கண்களில் புது மணப் பெண்ணுக்குரிய குறு நகை ஒளி வீசிற்று. கௌரி தனது தாய் என்ன நினைக்கிறாள் என்று ஊகித்துக் கொண்டாள். அவள் முகம் செந்தாமரை நிறமாக மாறிற்று. 'ஆம், அம்மா கூறுவதும் சரிதான். தூங்கச் செல்லும் சாக்காக எழுந்து போய் விடலாம்' என்று எண்ணியவாறு அவள் எழுந்து மாடிக்குச் சென்றாள். வழி முழுவதும் அவளுக்குத் தன் அன்னையின் முகமே கண்முன் நின்றது. அம்மா, தனக்குக் கல்யாணம் நடந்த போது இருந்ததை நினைக்கிறாள் என்று அவளுக்கு நன்கு புலப்பட்டது. அந்த அறிவு அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'அம்மாவுக்குத்தான் என்ன திருஷ்டி! ஞானக் கண்ணால் பார்ப்பது போல் நம் மனத்தை அறிந்து விடுகிறாளே!'

இவ்வாறு வியந்தவாறே, கௌரி தன் அறைக்குச் சென்று படுக்கையில் படுத்துக்கொண்டாள். கண்களை மூடினாளோ இல்லையோ, சுந்தரத்தின் சுந்தர வதனம் முன்னே வந்து கண்களைத் திறக்க விடாமல் நிறைந்து நின்றது. கௌரியின் மனக் கண்கள் அதைக் கண்டு அளவிலா ஆனந்தம் கொண்டன.

" சுந்தர், சுந்தர் !" என்று அவளது நாவு மெல்ல உச்சரித்தது. அந்த ஓசையில் தான் என்ன இசை, அந்தப் பெயரில் தான் எத்தனை இன்பம் !

' என்ன பேச வேண்டுமென்றாய்? இப்பொழுது சொல்லேன் என்று அவள் தன் இருதய சுந்தரத்தைப் பார்த்துக் கேட்டாள். அவன் ஒன்றும் பதில் கூறாமல், அவளையே விழுங்கி விடுபவன் போல் பார்த்துக் கொண்டு நின்றான். மானச கௌரியும் தைரியமாகத் திரும்பிப் பார்த்தாள்.

' சுந்தர், உன் கண்ணுக்குத் தான் என்ன சக்தி! உன்னை நேரே பார்க்கும் பொழுது என்னை என்னவோ செய்கிறதே?' என்று மேலும் கூறிக் கொண்டாள்.

' இப்பொழுது சுந்தர் என்ன செய்து கொண்டிருப்பான்? என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பானோ? என்ன நினைப்பான்? அன்று அவனுடன் பேசி இருக்கலாம். யார் என்ன நினைப்பார்களோ என்று இருந்து விட்டேனே? அவனுடன் உரையாடியிருந்தால் அம்மொழிகளை அப்படியே ஞாபகம் வைத்துக் கொண்டு, இப்பொழுது மீண்டும் நினைத்துப் பார்த்து அநுபவிக்கலாமே?......சுந்தரிடம் இதற்கு முன் பேசியதில்லையா? அதையெல்லாம் ஞாபகம் வைத்துக் கொள்ளக் கூடாதா?...... ஆனாலும், அதெல்லாம் இப்பொழுது பேசுவது போல் இருக்குமா?'

கௌரியின் மனத்தில் சிந்தனைகள், தென்றலினால் மெள்ளத் தழுவப்பட்ட நீர்த் தேக்கத்தைப் போல் அசைந்து, புரண்டு, அழகாகச் சஞ்சலமாடின.

## 11

## தந்தியும் தபாலும்

" ஸார், தாபால் " என்ற குரலைக் கேட்டுத் துள்ளி எழுந்த கௌரி, ஜன்னலருகில் சென்று வெளியே பார்த்தாள். தபால்காரன் ஒரு கடிதத்தை எடுத்து எதிர் வீட்டு நாகலக்ஷ்மியம்மாளிடம் கொடுப்பதைக் கண்டாள். அதைப் பார்த்ததும் ஒரு சமயம் சுந்தரம் கடிதம் போட்டிருக்கிறானோ என்ற ஆசை அவளுக்குத் தோன்றவும், அவள் மாடிப்படிகளை இரண்டு இரண்டாகத் தாண்டித் தாவி இறங்கிக் கீழே சென்றாள்.

"எங்கேடீ இவ்வளவு அவசரம்?" என்று சித்தி அவளைக் கேட்டதும், அவளுக்குச் சட்டென்று அசடு தட்டி விட்டது.

"இல்லை, சித்தி,......உம்......அ..." என்று ஏதோ குளறிக் கொட்டி விட்டு அவள் பின்புறம் சென்று விட்டாள். கொஞ்ச நேரம் அங்கே தங்கிவிட்டு, பிறகு ஒருவரும் பார்க்காமல் இருக்கும் போது மெதுவாக எதிர் வீட்டை நோக்கி நடந்தாள். அமைதி குலையாமல், நிதானம் தவறாமல், என்றும் கம்பீரத்துடன் விளங்கும் கௌரியா இப்படிச் சிறு மானைப்போல் துள்ளிக் குதித்து ஓடுகிறாள்? முகமெல்லாம் மாலை நேரத்து வானத்தைப் போல் இந்திர ஜாலம் ஆட, தாவிக் குதிக்கும் இந்தக் குழந்தையா, இந்த அசட்டுப் பெண்ணா கௌரி!

படபடக்கும் மார்பைக் கையால் அழுத்தி அமர்த்திக் கொண்டு வாசற் படிக்கட்டு ஏறியவள், சட்டென்று வெட்கத்தால் பீடிக்கப் பட்டு உள்ளே செல்வதா, வேண்டாமா என்று ஆலோசித்த வளாய்ச் சற்றுத் தாமதித்தாள். 'மாமி, 'என்ன வேண்டும்?' என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? சுந்தர் என்ன எழுதி யிருக்கப் போகிறான்? என்னைப் பற்றி ஏதாவது எழுதியிருப் பானோ? என்ன நமது அசடு வழியும் காரியம்!' என்று பலவாறு யோசித்துக் கொண்டு நின்றாள்.

கௌரி வாசற்படியண்டை நிற்பதை அப்பொழுது தான் கவனித்த மகாலிங்கையர், "கௌரி, என்னம்மா, இங்கே வா" என்று அன்புடன் அழைத்தார்.

திருடிய மனம் போல் துடித்துக் கொண்டிருந்த அவள் உள்ளே சென்றாள். "ஏன் மாமா?" என்று கேட்டாள்.

"என்ன வேண்டும், அம்மா?" என்று திரும்பக் கேட்டார் மகாலிங்கையர்.

அந்த அறையில் தன் தகப்பனாரும் உட்கார்ந்திருப் பதைப் பார்த்த கௌரிக்குப் பளிச்சென்று ஒரு சாக்குத் தோன்றி விட்டது. "ஒன்றுமில்லை,—அப்பா இங்கே இருக்கிறாரா என்று பார்த்து விட்டுப் போகத்தான் வந்தேன்" என்று ஒரு போடு போட்டாள். வெற்றிகரமாகவும், அமைதியாகவும் குடித்தனம் நடத்துவதற்கு முக்கிய ஆயுதங்களில் ஒன்றாகிய சமயோசிதப் பொய் ஒன்றை இன்றே கையாள ஆரம்பித்து விட்டாள் கௌரி!

வெகு சகஜமாக வீட்டிற்குத் திரும்புவது போல் புறப்பட்ட கௌரியை மகாலிங்கையர் கூப்பிட்டார். "இந்தக் கடிதத்தை மாமியிடம் கொண்டு கொடு" என்று கூறி, அவளிடம் ஒரு கவரைக் கொடுத்தார்.

கடிதத்தை வாங்கிக் கொண்டாள் கௌரி. மாமா என்ன அவளுக்குப் புதிதா? கௌரியின் விரல்கள் நடுங்கின. ஊசலாடும் உள்ளத்தைச் சாந்தப் படுத்த அவளது கடைக்கண் அந்தக் கவரின் மீது இருந்த கையெழுத்தை ஆராய்ந்தது. ஆம், அவனுடைய எழுத்துத்தான். கௌரியின் திருஷ்டியில் சுந்தரத்தின் கிறுக்குக் கையெழுத்தும் முத்து முத்தாகப் பிரகாசித்தது!

"வா, வா, கௌரி. எங்கே வந்தாய்?" என்ற நாகலக்ஷ்மியம்மாளின் வரவேற்பு கௌரியின் சிந்தனையைக் கலைத்தது.

"ஒன்றும் இல்லை, மாமி. மாமா இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார்" என்று கடிதத்தை நீட்டினாள்.

"தபாலா? யார் எழுதியிருக்கிறார்கள்? நீதான் படியேன்."

கௌரிக்குத் தர்மசங்கடமாகி விட்டது. பெரிய சபைக்கு எதிரே கச்சேரி செய்பவள் போல் தொண்டையைக் கனைத்துக் கொண்டாள். இத்தனைக்கும் அது சுந்தரம் கௌரிக்கு எழுதிய காதற் கடிதமல்ல! மெதுவாகக் கவரிலிருந்த கடிதத்தை எடுத்து வேகமாகத் தன் கண்ணோட்டத்தைச் செலுத்தினாள். "நாளைக்கு வருகிறேன் என்று எழுதியிருக்கிறது" என்று விளக்கினாள்.

"நாளைக்கா? எப்பொழுது ரெயில்?"

"அதெல்லாம் ஒன்றும் எழுதவில்லை. 'நாளைக்கு நான் வருகிறேன். வந்த பிறகு 'டிரெஸ்' விஷயம் பார்க்கலாம்' என்றுதான் இருக்கிறது" என்றாள் கௌரி.

அவளுக்கு, 'சுந்தரம் எழுதி யிருக்கிறான்' என்று மாமியிடம் எப்படிச் சொல்வது என்ற யோசனை வந்து விட்டது. அல்லது, புதிதாக, 'எழுதி யிருக்கிறார்' என்று சொல்லவும் வெட்கமாக இருந்தது. ஆதலின், அவள், 'கடிதத்தில் அப்படி இருக்கிறது, இப்படி இருக்கிறது' என்று மெல்ல அஃறிணையில் சொல்லி விட்டு, வீட்டுக்கு நழுவப் பார்த்துக் கொண்டிருக்கையில், நாகலக்ஷ்மியம்மாள் மேலும் மேலும் கேள்விகள் கேட்டு, அவளைத் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தினாள்.

அப்பொழுது சமய சஞ்சீவியாக லலிதா அங்கே ஓடி

வந்தாள். "கௌரி! கோபு அண்ணா நாளைக்கு வருகிறானாம், தந்தி வந்திருக்கிறது" என்றாள்.

மாமி லலிதாவை ஏதோ கேள்விகள் கேட்க ஆரம்பித்துவிட்டாள். வாயாடி லலிதாவும் குஷியாகப் பதில் கூறிக் கொண்டிருந்தாள். பேச்சு கல்யாணத்தைப் பற்றித் திரும்புவதைக் கவனித்த கௌரி, அவ்விடத்தை விட்டு மெதுவாக வெளியேறினாள்.

அவள் முன்புறம் வந்தபோது எதிர் வீட்டு வாசல் ரேழியில் மகாலிங்கையரும் ராமையரும் கையில் தந்தியை வைத்துக் கொண்டு பேசிக் கொண்டிருப்பதைக் கண்டாள். அவளுக்கு என்னவோ சுந்தரத்தின் வாசற் பக்கத்து அறையைப் பார்க்க வேண்டும் போல் ஓர் எண்ணம் உதித்தது. உடனே தான் சுந்தரத்தின் வெகு அருகே இருப்பதுபோல் ஓர் உணர்ச்சி அவளுக்குத் தோன்றி மயிர் சிலிர்க்கச் செய்தது. ஆயினும் உடம்பிற்கு மிகவும் இதமாக இருப்பது போல், கண்களை மூடிக் கொண்டு அவள் அதை அநுபவித்தாள். மீண்டும் கண்ணைத் திறந்து ஒவ்வொரு சாமானைக் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டே வந்தாள். மேஜையிடம் வரும்போது, அதன் மீது இருந்த சுந்தரத்தின் புகைப் படம் அவள் கவனத்தைக் கவர்ந்தது. சுந்தரத்தின் முகம் அவளைச் சொக்குப் பொடி போட்டு மயக்கியது. அப்பொழுது அவளுக்குத் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றிற்று. 'அந்தப் படத்தை எடுத்துக்கொண்டு போய் விட்டால்?' அவள் மறு முறை யோசனை செய்யவில்லை. புடைவைத் தலைப்புக்கு அடியில் அதை மறைத்துக் கொண்டு, திரும்பிப் பாராமல் ஓட்டம் பிடித்தவள், தன் வீட்டு வாசலில் நின்று தன் திருட்டை யாராவது கவனித்து விட்டார்களா என்று சுற்றும் முற்றும் பார்த்து விட்டு, நேரே வேகமாகத் தன் அறையை நாடினாள்.

தன் நினைவே இல்லாமல் வேகமாகச் செல்லும் கௌரிக்கு, யாரும் கண்ணில் தென்படவில்லை. மின்னல் வேகத்தில் தாவிச் சென்று கொண்டிருந்த அவள் மனத்திற்கு, மாடிப் படிகள் மடிந்து, மடிந்து உருண்டு, அவள் மேல் விழுவது போல் பிரமை தட்டிற்று. ஆனால் அவள் நிற்கவில்லை. தன் அறைக்குச் சென்று அங்கே உட்புறம் கதவைத் தாளிட்டு விட்டு, சுந்தரத்தின் படத்தைக் கையில் எடுத்து புடைவைத் தலைப்பால் அதைத் துடைப்பதிலும், பார்ப்பதிலும் பித்துப் பிடித்தவள் போல் காலங் கழித்தாள்.

# 12

# மாப்பிள்ளை வருகிறார்

தாம்பரம் வந்ததுமே விழித்துக் கொண்டான் கல்யாண சுந்தரம். அங்கே கிறிஸ்துவக் கல்லூரியையும் கட்டடங்களையும் பார்த்ததுமே அவனுக்கு வீடு நெருங்கி விட்ட உணர்ச்சி ஏற்பட்டது. வண்டியில் இருப்போரை அவன் ஒரு முறை சுற்றிப் பார்த்தான். குழந்தையும், குட்டியும், மூட்டையும், முடிச்சுமாக அங்கே கூடி யிருந்தவர்களில் பெரும்பாலாரும் கல்யாணங்களுக்குப் போகிறவர்களாகவே தென்பட்டனர்.

இரண்டு குழந்தைகள் அவன் அருகில் வந்து நின்றனர். அவர்களில் சிறியவனான பையன் சுந்தரத்தைப் பார்த்து, "மாமா, எங்களுக்கு அந்த ஓரம் விடுங்களேன், நாங்கள் வேடிக்கை பார்க்க வேண்டும்" என்றான்.

"வா" என்றான் சுந்தரம், சிரித்த முகத்துடன். அவன் சற்று நகர்ந்து கொள்ள, அவர்கள் இருவரும் அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

"இதுவே பட்டணந் தானே, மாமா?"

"ஆமாம். இந்த இடத்துக்குத் 'தாம்பரம்' என்று பெயர். நீ எங்கே போகப் போகிறாய்?"

"மயிலாப்பூருக்கு. நீங்கள்?"

"கோபாலபுரம்."

"கல்யாணத்திற்கா போகிறீர்கள்? நாங்களும் எங்கள் அக்காவுக்குக் கல்யாணம் என்று போகிறோம். மாட வீதியில்."

"எங்கள் அண்ணாவுக்குந் தான் கல்யாணம்" என்றாள், அவனுடன் கூட வந்த சிறுமி.

"உங்கள் அண்ணா இங்கே வந்திருக்கிறாரோ?" என்று ஏனோ சுந்தரம் கேட்டு வைத்தான். அந்தக் குழந்தையும் கபடமற்று, சற்று தூரத்தில் உட்கார்ந்திருந்த ஒரு முப்பது வயது வாலிபரைச் சுட்டிக் காட்டினாள். சுந்தரம் அவரைப் பார்க்கவும், அந்த மனிதரின் கண்களும், அவன் கண்களும் சந்தித்தன. சுந்தரம் தன் திருஷ்டியை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

'அவருக்கும் கல்யாணமாம். அவர் முகம் எப்படி இருக்கிறது? என்றைக்கோ அந்த முகூர்த்தம்? அவருக்கு வரப்போகும்'

பெண் முன்பே அவருக்குப் பரிசயமானவளாக இருப்பாளோ? என்ன இருந்தாலும் நம் கௌரியைப் போல் அழகாக இருக்க மாட்டாள் என்பது திண்ணம். இப்பொழுது கௌரி என்ன செய்து கொண்டிருப்பாள்? கோபு வந்து விட்டிருப்பானோ?'

வண்டி மீனம்பாக்கம் வருவதற்குள்ளாகவே சுந்தரத்தின் மனம் விமானமேறி விட்டது!

"ஏன் மாமா, இங்கே தானே...?" என்ற அந்தக் குழந்தைகளின் குரலைக் கேட்டு அது மீண்டும் பூமிக்கு இறங்கிற்று.

"என்னம்மா?...ஆமாம், இங்கே தான் 'ஏரோப்ளேன்' எல்லாம் இருக்கிறது."

"நாம் எந்த ஸ்டேஷனில் இறங்க வேண்டும், மாமா?"

"எழும்பூரில்."

"நீங்களும் கல்யாணத்துக்கா போகிறீர்கள்?"

"ஆமாம்......உனக்கு எப்பொழுது கல்யாணம்? நான் வரட்டுமா?"

"போ, மாமா...உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ?"

"போடா, மாமாவுக்கு ஒன்றும் கல்யாணம் ஆகவில்லை. ஆகி யிருந்தால் மாமி எங்கேயாம்?" என்று அவனை அடக்கினாள் அந்தச் சின்னஞ் சிறுமி.

சுந்தரம் வாய்விட்டுச் சிரித்து விட்டான். குழந்தைகளின் களங்கமற்ற சரளப் பேச்சு அவன் உள்ளத்தில் ஆழ்ந்தது.

"உம். சூ...அடே மணி, லக்ஷ்மி, இங்கே வாருங்கள்" என்று ஒரு ஸ்திரீ அவர்களை அதட்டிக் கூப்பிட, அவர்கள் மன மில்லாமல் அவ்விடத்தை விட்டு அகன்றனர்.

போகுமுன் அந்தப் பெண் மாத்திரம், "ஏன் மாமா, உங்களுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே?" என்று கேட்டுவிட்டுத்தான் நகர்ந்தாள்.

"இல்லை, இன்னும் இல்லை" என்றான் சுந்தரம், சிரிப்புக் கிடையே.

அவன் அவ்வாறு கூறினானோ இல்லையோ, அவன் பின் புறத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர் முடுக்கி விட்ட இயந்திரம் போல் முன்னெச்சரிக்கையின்றி அவன் முன் தோன்றினார்.

"உங்களைப் பார்த்தால் எங்கேயோ பார்த்தது போல் இருக்கிறதே?" என்று பேச்சை ஆரம்பித்தார்.

இந்தப் பழக்கமான கேள்விக்குப் பதிலாகக் கல்யாண சுந்தரம், "எங்கே பார்த்திருக்க முடியும்?" என்று ஓர் எதிர்க் கேள்வியைக் கேட்டு வைத்தான்.

"இல்லை...முகம் அறிமுகமான..." என்று இழுத்தார் அவர்.

சுந்தரம் ஒன்றும் பேசாமல் இருந்தான். அதைக் கண்ட அவர் வேறொரு முனையிலிருந்து தாக்கினார்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

"கோபாலபுரம்."

"அங்கே யார் இருக்கிறார்கள்?"

"அப்பா, அம்மா" என்றான் சுந்தரம். 'இதென்னடா, இது இவர் விட மாட்டார் போலிருக்கிறதே!' என்று நினைத்துக் கொண்டான்.

"சரிதான்...நீங்கள் என்ன 'லயோலா' வா?"

"இல்லை, 'பிரெஸிடென்ஸி' காலேஜ். ஏன் யாராவது இருக்கிறார்களா?" என்று கேட்டான் சுந்தரம்.

"இல்லை, என் பெண் அங்கே படிக்கிறாள்."

"என்ன, 'லயோலா'விலா?" சுந்தரத்தின் முகம் குறும்பு நகையுடன் சுருங்கி மடங்கி நர்த்தனம் புரிந்தது.

"ஹா ஹா" என்று அந்தப் பெரியவரும் சிரித்தார், முகத்தின் அசடு வழிய. "பி. ஏ. வா?" என்று கேட்டார்.

"ஆனர்ஸ்."

"என்ன, மதுரையிலே வேலையாக்கும்?"

"ஆமாம்."

சுந்தரத்திற்கு அவர் கேள்விகள் என்ன போக்கில் போகின்றன என்று ஊகிக்க வெகு நேரம் பிடிக்கவில்லை. மெல்லத் திரும்பித் தன் பின்புறம் பெரியவர் முன்பு உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கினான். அங்கே தனக்குச் சம வயதில் ஒரு பெண் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் நாக்கு உருண்டையாக மடிந்து தாடையில் அடைக்கலம் புகுந்தது. மீண்டும் அவன் அப் பெரியவரை நோக்கினான். அவர் முகம் தாங்க மாட்டாத சந்தோஷச் சிரிப்பினால் மடிப்பு மடிப்பாகக் காட்சி அளித்தது.

"அவள் தான் என் 'டாடர்.' பி. எஸ். ஸி. நீங்கள் எந்த ஊரோ?"

"திருவண்ணுமலை. நீங்கள் ?"

"திருக்கோயிலூர் தான்."

சுந்தரம் மேலே ஒன்றும் சொல்லவில்லை. ஜன்னல் பக்கம் திரும்பினன்.

"உனக்கு என்ன சம்பளம்?" என்று மீண்டும் பேச்சைத் துவக்கினர் பெரியவர்.

"ஏதோ வேண்டியது வருகிறது. நீங்கள் கல்யாணத்திற்குப் போகிறீர்களா ?"

"ஆமாம், என் அம்மாஞ்சியின் பெண்ணுக்குக் கல்யாணம். கோபாலபுரத்தில். நான் இத்தனை நாள் எங்கேயோ, ரங்கூனில் இருந்தேன். இந்தப் பெண் கல்யாணத்திற்குத் தான் போகிறேன்."

"கோபாலபுரத்தில் யார்?"

"எம். ராமையரைத் தெரியுமா ?"

"ஓ, தெரியுமே. எங்கள் எதிர் வீடு. அப்படியானல் அந்தக் கல்யாணத்தில் உங்களைப் பார்க்கலாம்" என்ருன் சுந்தரம்.

"ரொம்ப சந்தோஷம்."

இதற்குள் எழும்பூர் ஸ்டேஷன் வந்துவிட்டது. சுந்தரம் தலையை வெளியே நீட்டி நோக்கினன். பிளாட்பாரத்தில் அவன் நண்பன் கேசவராவ் நின்றுகொண்டிருந்தான். சுந்தரம் கைக் குட்டையை வீச, அவன் அதைப் பார்த்துவிட்டு இவன் இருக்கும் வண்டியை நோக்கி ஓடி வந்தான்.

எல்லோரும் படிப்படியாகக் கீழே இறங்கினர்கள். கேசவ ராவ் சுந்தரத்தைப் பார்த்து, வேடிக்கையாக, "என்னடா, புது மாப்......" என்று ஆரம்பித்தான். சுந்தரம் அவனை வெடுக் கென்று கிள்ளி, மேலே பேச விடாமல் தடுத்தான்.

'என்னடா இது ?' என்ற பாவனையில் அவனை முறைத்துப் பார்த்த நண்பனைக் கவனியாதது போல் சுந்தரம், "இதோ, பாரடா, இந்த மாமாவும் ராமையர் வீட்டுக் கல்யாணத்திற்கு வருகிருராம்" என்று அந்த மனிதரைக் கேசவராவுக்கு அறி முகப் படுத்தினன்.

அவருடன் கூட இறங்கும் பெண்ணையும், சுந்தரத்தின் முகத்தில் தோன்றிய குறும்புப் புன்னகையையும் கவனித்த கேசவராவ், விஷயத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்டு, "உங்க ளுக்கு வழி தெரியுமோ இல்லையோ?" என்று அவரைக் கேட்டான்.

"ஆகா" என்று தலையை ஆட்டினார் அவர்.

கேசவராவும் சுந்தரமும் அவ்விடத்தை விட்டு மறையுமுன் அந்த மனிதர் தம் பெண்ணிடம், "அந்தப் பையனைப் பார்த்தாயா?" என்று கேட்பது அவர்கள் இருவர் காதிலும் விழுந்து விட்டது.

ஸ்டேஷனைத் தாண்டுவதற்குள் சுந்தரம் சுருக்கமாகக் கேசவ ராவுக்கு விஷயத்தை விளக்கினான். கேசவ ராவ் சிரித்துக் கொண்டே, "போடா, என்ன இருந்தாலும் இது ரொம்ப மோசம். நாளைக்கு அவர் என்ன நினைப்பார்?" என்றான்.

அவர்கள் சிரித்துக் கொண்டே பஸ்ஸைப் பிடிக்க ஓடி விட்டார்கள்.

☆

"நான் இதற்குத் தான் சொல்லுகிறேன். ரெயில் பிரயாணமே மிகவும் கஷ்டம். இனிமேல் ஏதாவது 'ஏரில்' வந்தால் ஒழிய ரொம்ப மோசமாகத்தான் இருக்கும். சே...சே..." என்று எல்லோருக்கும் கேட்கும்படியாக முணுமுணுத்துக் கொண்டே மாப்பிள்ளை பஞ்சநதம் மெதுவாக டாக்ஸியிலிருந்து இறங்கினார். பாலு ஓடிச் சென்று சாரதாவின் குழந்தை மீனுவை வாங்கிக் கொண்டான். சாரதா இறங்கி உள்ளே சென்றாள்.

ராமையர் வந்து, "வாருங்கள், மாப்பிள்ளை" என்று, உள்ளே காமாக்ஷியம்மாளும் கௌரியும் சொல்லி அனுப்பியதை அப்படியே ஒப்புவித்து விட்டு விலகி நின்றார்.

குழந்தையை அம்மாவிடம் கொடுத்து விட்டுத் திரும்பிய பாலு, "நீங்கள் உள்ளே போங்கள், அத்திம்பேர், நான் எல்லாவற்றையும் உள்ளே எடுத்து வைக்கிறேன்" என்றான்.

"உம், ஜாக்கிரதை. அந்த 'லெதர் கேஸ்' எங்கேயும் கிடைக்காது. நான் ஸ்பெஷலாக ஆர்டர் கொடுத்துச் செய்யச் சொன்னது" என்று கம்பீரமாகக் கூறிவிட்டு, உள்ளே போனான் பஞ்சநதம்.

அறைக்குள் நுழைவதற்கு முன்னாலேயே கௌரியின் கணீரென்ற குரல் அவனை வரவேற்றது. "வாருங்கள், அத்திம்பேர். ரொம்பக் களைத்திருக்கிறீர்களே? உங்களுக்கென்று பிரத்தியேகமாக நல்ல காபி போட்டிருக்கிறேன். முதலில் அதைக் குடியுங்கள். சொக்காயைக்கூடப் பிறகு கழற்றிக் கொள்ளலாம்" என்றாள்.

இதைக் கேட்டதும் சாரதாவின் முகம் மலர்ந்தது. அதற்குப் பிறகுதான் அங்கே முன்னடியே வந்திருந்த சித்தி, மாமி, மற்ற உறவினர்கள் அவள் கண்ணுக்குப் புலப்பட்டார்கள். அவள் அவர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தயாரானாள்.

சற்று நேரத்திற் கெல்லாம் ஒரு ஜட்கா வந்து நின்றது. அதிலிருந்து கோபுவும் சுசிலாவும் இறங்கினார்கள்.

"இந்தச் சாமானை யாராவது வாங்கிக் கொள்ளக் கூடாதா? ரெயிலுக்குத்தான் யாராவது வரக் கூடாதா?" குறை மாரி பொழிந்து கொண்டே வீட்டுக்குள்ளே நுழைந்தான் மூத்த மகன்.

"யார் இருக்கிறார்கள் இங்கே, போக? சுந்தரத்திற்கே யாரும் போகவில்லையாம்."

"ஆமாம், அவன் என்னைப் போல்தான் பெண்களையும் குழந்தையையும் கூட்டிக் கொண்டு, இரண்டு நாள் தூக்கமில்லாமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டு வந்தானாக்கும்?"

"இல்லை, எல்லோரும் சௌக்கியமாகத்தான் வந்தார்கள். நீ மட்டுந்தான் ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டாய், போயேன்."

மேலே பேச்சு வளர்வதற்குள் கௌரி கையில் சுடச் சுடக் காபியுடன் அங்கே வந்து, உமாவை அடக்கி, அண்ணனைச் சமாதானப்படுத்தி, காபி அருந்தச் செய்து உள்ளே அழைத்துச் சென்றாள்.

"சை, என்ன வேண்டியிருக்கிறது! தன்னலத்திற்கும் ஓர் அளவில்லையா?" என்று முகத்தைச் சுளுக்கிக் கொண்டு, தன் அறைக்குச் சென்றாள் உமா. வழியில் பஞ்சநதம் கண்ணில் பட்டது அவள் அருவருப்பை அதிகரித்தது.

ஆயின் சற்று நேரத்திற்கெல்லாம் அவள் அறையிலிருந்து வெளிவந்த தம்பூராவின் நாதம், அவளைச் சூழ்ந்து, கீழே நடக்கும் கல்யாணத் தடபுடல்கள் ஒன்றும் அவளை எட்டாமல் பாதுகாத்து, அவளுக்கு ஆத்ம சாந்தியையும் அளித்தது போலும்.

## 13

## விவாக முஸ்தீப்புக்கள்

அன்று சுமங்கலிப் பிரார்த்தனை. பெண்டுகள் இலையில் உட்கார்ந்து விட்டனர்.

"எல்லோரும் திருப்தியாகச் சாப்பிட்டு, 'எல்லோரும் நன்றாக இருக்க வேண்டும், எல்லாம் தடையில்லாமல் நடக்க வேண்டும்' என்று வாழ்த்துங்கள்" என்ற வழக்கமான உபசார வார்த்தைகளைச் சொல்லி விட்டு நிமிர்ந்தாள் காமாக்ஷியம்மாள்.

ராமையரும் மகாலிங்கையரும் மெல்ல எட்டிப் பார்த்தார்கள். அதைக் கண்ட லலிதா, "என்னப்பா எட்டிப் பார்க்கிறீர்கள்? ஒன்றும் நடக்காது. இன்று நாங்கள் தான் முக்கியம். போதாக் குறைக்கு அம்மா வேறு திருப்தியாகச் சாப்பிடச் சொல்லி இருக்கிறாள். வயிறு கொள்ளா விட்டாலும் உங்களுக்கெல்லாம் ஒன்றும் மிகுத்தாமல் சாப்பிட்டால்தான் எனக்குத் திருப்தியாகும். அதனால்......"

மகாலிங்கையர் அவளை இடைமறித்து, "லலி, மாமாவை மறந்து விட்டாய், பார்த்தாயா? எனக்கு ஒரு புடைவை இரவல் கொடுத்திருந்தால்......" என்றார்.

"என்னிடம் பாவாடை தானே இருக்கிறது, மாமா?"

"அதைத்தான் கொடுக்கிறது தானேடி, அவர் பொய்க்கால் குதிரை ஆடுவார்" என்று நாகலக்ஷ்மியம்மாளும் இந்த ஹாஸ்யத்தில் கலந்து கொண்டாள்.

அதைக் கேட்டு லலிதாவின் சித்தி முதலியவர்கள் வாய் விட்டுச் சிரித்தனர். சிலர் புன்னகை பூத்தனர். மற்றும் சிலர், புருஷர்கள் எதிரே நிற்கிறார்களே என்று சாப்பிடச் சங்கோஜப் பட்டுக் கொண்டு தலை குனிந்து தவித்தனர். அதுவும், மாங்காய்ப் பச்சடி ரொம்பவும் ருசியாக இருந்தது... 'இந்தப் பிராம்மணன் வேறு பக்கம் போக மாட்டாரோ!'

இப்படியே, எல்லோரும் சிரிப்பதும் பேசுவதுமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்க, காமாக்ஷியம்மாளின் கண் பார்வையில் எல்லாம் விதரணையாகப் பரிமாறப் பட்டன.

"இன்னும் கொஞ்சம் போட்டுக் கொள்."

"வேண்டாம்."

"பரவாயில்லை..."

சிலர், இலையின் மேலேயே படுத்துக் கொண்டு விட்டார்கள்!

"இலையில் மிகுத்தி விட்டு எழுந்தால் தான் திருப்தி என்று அர்த்தம் என்பார்கள் இல்லையா?" என்றாள் ஒரு பெண்மணி.

"அது அந்தக் காலத்தில். இப்பொழுது இலையை மிஞ்ச விட்டால் போதாதா!" என்றாள் இன்னொருத்தி.

எல்லோரும் கொல்லென்று சிரித்தனர்.

"ஆமாம் என்றால்...சாமான்கள் கிடைக்காத காலத்திலே..."

"ஏன், காமு மாமி, நீங்கள் சர்க்கரை எங்கே வாங்கினீர்கள்?"

"எங்கேயம்மா? ஒரு சாமானாவது முழுக்க வந்து சேர்ந்த பாடில்லை" என்று, இப்படியும் இல்லாமல் அப்படியும் இல்லாமல் பதில் கூறினாள் காமாக்ஷியம்மாள். 'இந்தக் காலத்தில் பேச்சு எப்படிப் போய் முடியுமோ? அவரவர்கள் எனக்குக் கால் படி, எனக்கு அரை வீசை என்று வாய் கூசாமல் கேட்க வந்து விடுவார்களே!' என்ற யோசனை போலும் அவளுக்கு.

"பருப்பு அகப்படுவது தான் குதிரைக் கொம்பாக இருக்கிறதே, நீங்கள் எப்படித்தான் சமாளிக்கிறீர்களோ? எங்கே ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?"

'ஆகா, இந்த அம்மாள் பருப்புக்கு அடி போடுகிறாளா!' என்று நினைத்துக் கொண்டாள் கௌரி. ஆனால் அவள் ஒன்றும் சொல்லவில்லை. காமாக்ஷியம்மாளும் காது கேட்காததுபோல் உள்ளே சென்றுவிட்டாள். 'கருப்பு மார்க்கெட்' பூதம் அவர்களை அப்படி விரட்டிற்று!

"சாரதா, விறகுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் வேறொரு மாமி.

"அது தான்..." என்று தனக்குத் தெரிந்ததைச் சொல்லப் போன சாரதாவைப் பேசவிடாமல் குறுக்கிட்டாள் கௌரி. "புழக்கடையில் இருக்கும் சவுக்கு மரத்தையும், வேப்ப மரத்துக் கிளைகளையும் தான் வெட்ட வேண்டும்" என்றாள்.

"அது போதுமோ?"

அதற்குள் நாகலக்ஷ்மி அம்மாள் சமயத்திற்கு உதவிக்கு வந்தாள். "இதென்ன பேச்சு? நாலு பேர்கள் கூடினால் ஏதோ புடைவை, ரவிக்கை, நகை, நட்டு என்ற பேச்செல்லாம் போய், விறகும், கெரஸனையிலும், சர்க்கரைப் பஞ்சமும், பருப்பு இல்லாமையும்......"

"நீங்கள் சொல்லுவதும் வாஸ்தவந்தான்" என்று ஒருத்தி ஆமோதிக்க, பேச்சு புடைவையையும் நகையையும் பற்றித் திரும்பியது.

"நாகு மாமி, நீங்கள் வாங்கியிருக்கும் கூறைப் புடைவை மிகவும் அழகாக இருக்கிறது."

"நன்ருக இருக்கிறதா? போகட்டும்."

"எத்தனை புடைவைகள்?"

"நான்கு பட்டுப் புடைவைகள்."

"ஒன்பது கஜம் எத்தனை?"

"ஒன்று தான். மீதியெல்லாம் ஆறு கஜம் தான்."

"அது தான் இப்பொழுது வழக்கமாகிவிட்டதே?"

"என்ன செய்வது?......கூட இரண்டு நூல் புடைவையுந் தான் வைக்க நேரிடுகிறது."

"அதைப் பார்த்தால்?"

"கௌரி! ரவிக்கை தைத்துக் கொண்டாயா?"

'ஆகா' என்று தலையை ஆட்டிஞள் கௌரி.

"'சோலி' தைத்துக் கொண்டு இருக்கிருயோ?"

"அநேகமாக எல்லாமே 'சோலி' தான்."

"அது தான் உடம்புடன் ஒத்துக் கொண்டு நன்ருக இருக்கிறது."

"அதென்னடி, 'சோலி'?" என்று கேட்டாள், வயது முதிர்ந்த ஓர் அம்மாள்.

"அது தான் நீங்கள் போட்டுக் கொண்டிருக்கிறீர்களே அது."

"போதும் கேலி. நான் இட்டுக்கொண்டிருக்கிற ரவிக்கை ரொம்பவும் 'பாஷன்' தான் போயேன். நீங்களெல்லாம் என்னவெல்லாமோ பூரியாட்டமா உப்பின கையெல்லாம் வைத்துத் தைத்துக் கொள்ளுகிறீர்களே?"

"இல்லை, அத்தை. உங்கள் 'கூர்'வைத்த ரவிக்கைதான் இப்பொழுது நாகரிகம்."

"இது ஏதடீ, அம்மா!" என்று வியந்தாள் அத்தை.

அதற்குள் லலிதா, "பார்த்தீர்களா? நீங்கள் தான் நாகரிகமாகப் போய்விட்டீர்கள், நாங்கள் பின் தங்கிவிட்டோம்" என்று கூறிச் சிரித்தாள்.

எல்லோரும் சிரித்தார்கள்.



தையல்காரன் சுந்தரத்தை இப்படியும் அப்படியும் திருப்பித் திருப்பி அளவு எடுத்துக் கொண்டிருந்தான்.

"ஸார், இவ்வளவு உசத்தி 'ட்வீட்' எங்கே வாங்கினீர்கள்?" என்று கேட்டான்.

"பெங்களூரில்!"

கோபு அங்கே வந்து சுந்தரத்தின் கையில் கடிகாரத்தை அமைத்துப் பார்த்தான். தங்கச் சங்கிலி நீளம் அதிகமாக இருக்கவே, அதைச் சரிப்படுத்தத் தட்டானிடம் தூக்கிக் கொண்டு ஓடினான்.

"இந்த அங்கவஸ்திரம் கரை பிடித்திருக்கிறதா பார்."

"நான் சொல்லுவதைக் கேள். 'சுந்தரம், பி. ஏ. ஆனர்ஸ்' என்று சரிகையிலே நெய்து போட்டுக் கொள்" என்று அபிப்பிராயம் கூறினாள் லலிதா.

"ஆமாம், ஆமாம். 'விஸிடிங் கார்ட்'டுக்குப் பதிலாக உபயோகப் படுத்திக்கொள்ளலாம். கௌரிக்கும் அதே போல் ஒரு புடைவை வாங்கிக் கொடு. 'கௌரி, எப். ஏ' என்று பார்டரில் போட்டு, அவள் கட்டிக்கொள்ளட்டும்" என்று சிரித்துக் கொண்டே பதிலளித்தான் சுந்தரம்.

"உனக்கென்ன பெருமை அதில்? 'மிஸ்ஸஸ் சுந்தரம்' என்று போட்டாலும் உண்டு."

"சரி, அப்படித்தான் போடச் சொல்லேன்."

"அப்புறம் சொல்லியே விடுவேன், ஜாக்கிரதை!" என்று பயமுறுத்தினாள் லலிதா.

"சொல்லேன், உன் கல்யாணத்தில் நான் எல்லாவற்றையும் திருப்பி விடுகிறேன்" என்று பதிலுக்கு மிரட்டினான் சுந்தரம்.

"வெவ் வெவ்வே!......நான் கல்யாணம் செய்து கொண்டால் தானே?......" என்று ஆரம்பித்த லலிதா, சிவா அங்கே வந்ததைக் கண்டு ஓட்டம் பிடித்தாள்.



சுந்தரத்தின் நண்பர்கள் வேறு அவனைச் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அவன் எங்கே போனாலும் அவன் கூடச் செல்வதும், அவனைக் 'கோட்டா' செய்வதுமே அவர்களுக்குத் தொழிலாகப் போய்விட்டது.

" முகூர்த்த வேஷ்டி எப்படி இருக்கிறது? நல்ல கார்ட் கரையில் இரண்டு விரற்கடை ருத்திராட்சப் பேட் போட்டு வாங்கிக் கொள்" என்றான் கிட்டு.

" ஏது, ஏது, புடைவை மாதிரிகள் அழகாகச் சொல்லுகிறானே பையன் !" என்றான் சிவா.

" உனக்குத் தெரியாதா ? இனிமேல் ஜவுளி வியாபாரந்தான் செய்யப் போகிறானாம்" என்று வியாக்கியானம் செய்தான் கேசவராவ்.

"எனக்குத் தெரியும் அப்பா. அவன் ஸ்ரீமதி கிட்டுவுடன் கடை கடையாகப் போனதன் பலன் அது. அப்படித்தானே, கிட்டு?"

" உனக்குத்தான் அந்த விஷயம் புரிகிறது பார்த்தாயா? அதன் மர்மம் என்னவோ !" என்று அவனையே திருப்பினான் கிட்டு. எல்லோரும் சுந்தரத்தின் தோல்வியைக் கண்டு சிரித்தனர்.

" ஏண்டா, தலைப்பாகை ஒன்று வாங்கிக் கொள்ள மாட்டாய் ?" என்று கேட்டான் ஒருவன்.

" நல்ல தடியாக ஒன்று பொறுக்கி எடு" என்றான் இன்னொருவன்.

" எதற்கு ?"

"இது தெரியாதா, இனிமேல் அடிவாங்க வேண்டியது தானே? ஸ்ரீமதி கௌரியின் திருக் கரத்தால் தடியாராதனை......" என்று ஆரம்பித்தான் கிட்டு.

" சொந்த அநுபவமோ ?" என்றான், வெகு நேரமாக அவனைப் பழி தீர்க்கக் காத்துக்கொண்டிருந்த சுந்தரம்.

மறுபடியும் எல்லோரும் சிரிப்பு.

★

" எல்லாம் எழுதியாகி விட்டதா ?" என்று கேட்டான் கோபு.

" இல்லை அண்ணா, சரியாகவே ஞாபகம் வரமாட்டேனென்கிறது" என்றாள் விவாகப் பத்திரிகைகளுக்கு விலாசம் எழுதிக் கொண்டிருந்த உமா.

" கௌரி, ஒரு ஜாபிதா தயார் பண்ணக் கூடாதோ? சாரதா கல்யாணத்திலே செய்தது எங்கே?" என்று வினவினான் கோபு.

" இப்படித்தான், அண்ணா, ஒவ்வொரு தரமும் தயார் செய்தாலும் எத்தனையோ பேர் விட்டுப் போய் விடுகிறது."

லலிதாவுக்கு இங்கு கூட அவளது கவனத்தைக் கவரும் விஷயங்கள் அகப்பட்டன. "உமா, தூர இருக்கிறவர்களுக்கு விடாமல் போடு, கிட்டே இருப்பவர்களுக்கு விட்டுப் போனாலும் பரவாயில்லை" என்றாள்.

"உன் வேடிக்கை எனக்குப் புரியவில்லை". என்றாள் உமா, கடுமையாக.

"உனக்கு ஏன் புரிகிறது?" என்று வாய்க்குள் முணுமுணுத்தவாறே லலிதா தன் வேடிக்கையைச் சொல்ல வேறு மனிதர்களைத் தேடிச் சென்றாள்.

விதரணையாக ஒருவரையும் விடாமல் கூப்பிட வேண்டும் என்பது தான் ஒவ்வொருவர் மனத்தில் இருப்பதும். ஆயினும் ரேஷன் காலத்தின் பயனாக அதை வேடிக்கையாகப் பேசுவது எல்லோர் வீட்டிலும் சகஜமாகி விட்டது.

## 14

# ரேஷன் நாடகம்

கௌரி பல காகிதங்களைத் தன் தந்தையின் முன் நீட்டினாள். "அப்பா, இதிலெல்லாம் கையெழுத்துப் போடு" என்றாள்.

ராமையர் மறு பேச்சின்றி மகள் காட்டிய இடத்திலெல்லாம் கையெழுத்துப் போட்டு வந்தார். தம்மை வேறு எந்த வேலைக்கும் இழுக்காமல் இருக்கிறார்களே என்பது அவர் எண்ணம் போலும்.

"கௌரி அக்கா, எல்லாவற்றுடனும் ஒரு பத்திரிகை வைத்து அனுப்பு. வேண்டுமானால் நீயும் சுந்தரமும் சேர்ந்து கடிதம் ஒன்றும் எழுதி வையுங்கள்" என்றாள் வாயாடி லலிதா.



"அதை அங்கே வைக்காதே, இந்த டப்பாவில் கொட்டி மறைவாக வை" என்று காமாக்ஷி அம்மாள் உத்தரவு கொடுத்துக் கொண்டிருந்தாள்.

போகாத இடங்களுக் கெல்லாம் போய், கேட்காதவர்களையெல்லாம் கேட்டு, நியாயமாகவும், நியாயம் தவறியும் சாமான்களைச் சேகரிப்பது ஒரு பங்கு; அவைகளை எடுத்து

வைத்துக் காப்பது அதைக் காட்டிலும் சிரமம். வேலைக்காரனுக்கு இடம் தெரிந்து விட்டால் இந்தப் பஞ்சக் காலத்தில் அவன் எதை எடுத்துப் போய் எங்கே விற்று விடுவானோ? உறவினர்கள் கண்ணில் பட்டால், யார் எதைக் கேட்டு விடுவார்களோ? இப்படியாக, வெள்ளி, தங்கம், பட்டு வைக்கும் பெட்டிகளை யெல்லாம் காலி செய்து விட்டு, இந்தச் சாமான்களை எடுத்து வைக்க வேண்டி வருகிறது.

காமாக்ஷி அம்மாள் இங்கும் அங்கும் கௌரியுடன் சுற்றிச் சுற்றி வந்தாள். இவர்கள் இருவருமாகவே எல்லாவற்றையும் கவனித்து வந்தார்கள். வெள்ளியையும் பொன்னையும் கொடுத்து விட்டு நம்பலாம்; இந்தக் காரியம் உடன் பிறந்தோரைக் கூட நம்ப முடியாத விஷயம் அல்லவா? காலத்தின் கோலம். அரிசி மூட்டைகளை ஐந்து இடத்தில் ஒளித்து வைத்து விட்டு, "பருப்பா, அது பறந்தே போய்விட்டதே!" என்று புளுகி, எல்லாவற்றையும் எடுத்து வைக்கச் சாமர்த்தியம் வேண்டாமா? தாயும் மகளும் மும்முரமாக வேலை செய்து கொண்டிருக்க, சமையற்கார சாம்பு ஐயர் வேறு அங்கு வந்துவிட்டார்.

"என்ன, முப்பது படிக்குக் குறையாது பருப்பு வேண்டும்......" என்று ஆரம்பித்த அவரைக் காமாக்ஷி அம்மாள் இடை மறுத்து, "நீங்கள் 'வேண்டும்' என்று அழுத்திய காலமெல்லாம் என்றோ பறந்து விட்டது. கொடுக்கிற சாமானை வைத்துக் கொண்டு சரிப்படுத்த வேண்டும்" என்று அடக்கினாள்.

"சரி அம்மா, நீங்களே சொல்லுங்கள். என்ன என்ன பட்சணங்கள் செய்ய வேண்டும்?"

"எல்லாம் சொல்லுகிறேன், நிதானமாகக் கேளுங்கள்."

"அப்புறம், பொட்டுக் கடலை மாவைக் கொடுத்து மைசூர்ப் பாகு செய் என்றால் என்னால் முடியாது."

"அதிலேதான் உங்கள் சாமர்த்தியம இருக்கிறது. எப்படியானாலும் நெய்யும் சர்க்கரையும் போட்டால் எதுவும் நன்றாகத் தான் இருக்கும். கடைசியில் அது எப்படி வருகிறதோ, கெட்டியாக வந்தால் 'பாகு', 'டால்' என்று பெயர் வைப்பது. தளர இருந்தால் 'ஹல்வா!' பொடியாகி விட்டால் வேறு ஏதாவது பொருத்தமாகப் பெயர் வைக்கத் தெரிய வேண்டும்" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தாள் காமாக்ஷி அம்மாள்.

"எவ்வளவு வாயில் புரிபடாமல் இருக்கிறதோ, அவ்வளவு நல்லது" என்றான், அப்பொழுது அங்கே வந்த கோபு.

"அம்மா, தீப்பெட்டி கிடைக்கவில்லை" என்று திரும்பி வந்தான் ஒரு வேலைக்காரன்.

"தீப்பெட்டி இல்லாமல் என்ன செய்வது? என்ன விலையானா லும் வாங்கிக் கொண்டு வாடா. என் அப்பாவாயிற்றே" என்றாள் காமாக்ஷி அம்மாள்.

அதற்குள் பாலு, "அம்மா, தீப்பெட்டி வேண்டுமானால் இரண்டு சிகரெட் வாங்க வேண்டும்" என்று அறிவித்தான்.

"பேஷ், அது தான் பாக்கி! ஒழியட்டும், வாங்கிக் கொண்டு வா."

"கௌரி அக்கா, இந்த ரேஷன் காலத்திலே நீ கல்யாணம் செய்து கொள்ளுகிறாயே, அதற்கு மிகவும் 'தாங்க்ஸ்'. இல்லாவிட் டால் இவ்வளவு வேடிக்கையாக இருக்குமா?" என்றாள் லலிதா. சிரித்துச் சிரித்து அவள் முகம் சிவந்து விட்டது.

அவள் சொல்லுவதும் ஒரு விதத்தில் உண்மைதானே?

"அக்கா, நெய்க்குப் பதிலாக வனஸ்பதி உபயோகப் படு கிறதே, ஹோமத்திற்கு என்ன செய்வார்கள்?" என்று கேட்டாள் அவள்.

"அக்கினி பகவானும் வயிற்றைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டியது தான்" என்றான் பாலு.



"நன்றாகத்தான் இருக்கிறது, ஆனால் சாப்பிடுகிற தட்டு இன்னும் ஒரு சுற்றுப் பெரிதாக இருக்கலாமோ?"

"அளவு சரிதான். எடை கொஞ்சம்......"

"இந்தப் புடைவைக்குப் பச்சைக் கரை இருந்தால் இன்னும் எடுத்துக் காட்டும்."

ஒவ்வொருவரும் சீர் வரிசைகளைப் பார்த்துவிட்டு வக்கணை சொல்லிக் கொண்டிருந்தார்கள். கௌரி கூறுவதுபோல் வெள் ளிப் பாத்திரங்களையும், நகைகளையும் மேலோடு பார்த்தார்களே ஒழிய, பித்தளைப் பாத்திரங்களைக் கண்டவுடனே அங்கேயே நின்று விட்டனர்!

"குடம் கிடைத்திருக்கிறதே, என்ன ஆச்சரியம்! குத்து விளக் குக்கூட அகப்பட்டதா?" என்று கேட்கும்போது அவர்கள் மூர்ச்சையே போட்டு விடுவார்கள் போலிருந்தது. அதேபோல், பட்டுத் துணிகளையும், ஸில்குகளையும் அசட்டையாகப் பார்வை யிட்டுவிட்டு, நூல் துணிகளையும், சீட்டியையும் நோக்கும்போது ஆச்சரியத்தின் உச்சத்தையே அடைந்தனர்.

"இந்த மெல்லிசு 'வாயில்' எங்கே கிடைத்தது? எங்கே தேடினு லும் எங்களுக்குக் கிடைக்க மாட்டேனென்கிறதே?"

"வெள்ளை மல் எப்படியோ பிடித்து விட்டீர்களே?"

"இந்த மாதிரி கனமான சீட்டி எங்கேதான் உங்களுக்குக் கிடைக்கிறதோ?"

ரக ரகமான கல் புதைத்த வளையல் அணிந்திருப்பவர்களை ஏறிட்டு நோக்கியவர்கள் கிடையாது. கண்ணாடி வளையல்களும் அரக்கு வளையல்களும் போட்டுக் கொண்டிருந்தவர்கள், கேட்ப வர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சொல்லித் திணறும் போது, இனி வளையல்களே அணிவதில்லை என்று பிரதிக்ஞை செய்து கொண்டார்கள் என்றாலும் நம்ப வேண்டியதுதான்.

"வரன் தேடி அலைந்து, புதிதாக வந்த சம்பந்திகளை முகம் கோணுது விசாரித்து அனுப்ப வேண்டிய கவலை இல்லா விட்டா லும், கௌரியின் கல்யாணத்தில் அந்தச் சிரமமெல்லாம் 'ரேஷன் கார்டைச் செலவழிப்பதா வேண்டாமா, அரிசியில் கல் போயிற்ரு, துவரம் பருப்புடன் பயத்தம் பருப்புக் கலந்தால் என்னவாகும்?' என்பன போன்ற பிரச்னைகளில் அடிபட்டு விடுகிறது" என்ருள் காமாக்ஷி அம்மாள், மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க.

மொத்தத்தில் கௌரியின் விவாகம் ஒரு ரேஷன் நாடகமாகத் திகழ்ந்தது.

★

"அம்மா, ஒரு கல்யாணக் கடிதாசு வந்திருக்கிறது" என்று கூவிக் கொண்டே ஓடி வந்தான் பாலு.

"படி, பார்ப்போம். யாருக்கு? என்றைக்கு? இந்த ஊரிலேயே என்ருல் ஒரு வேளையாவது தலைகாட்டலாம். அதுவும், நம்ம வீட்டுக் கல்யாணத்தன்றைக்கே என்ருல் கஷ்டம்" என்று அடுக் கிக் கொண்டே போனுள் காமாக்ஷி அம்மாள்.

"தள்ளிக் கொள்ளடா, நான் படிக்கிறேன்" என்று கூறிய வாறு பாலுவிடமிருந்து கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டாள் லலிதா. "அம்மா, யாருக்குத் தெரியுமா கல்யாணம்?"

"அதைத் தான் கேட்கிறேனே?"

"ம்...ம்...ஞாயிற்றுக்கிழமை ஹஸ்த நக்ஷத்திரம்,.....கூடிய சுபதினத்தில், எனது புத்திரன் சிரஞ்சீவி கல்யாணசுந்தரத்திற்கு, மகா–ா–ா–ஸ்ரீ ம. ராமையர் குமாரத்தி சௌபாக்கியவதி கௌரியைப் பாணிக்கிரகணம்..." என்று லலிதா படிப்பதற்குள் எல்லோரும் சிரிப்பதும், அவள் கையிலிருந்த பத்திரிகையைப் பிடுங்குவதுமாகக் குதித்தனர்.

"தபால்காரன் கொண்டு வந்து கொடுத்தானே !" என்று அதிசயித்தாள் சாரதா. "மாமாவுக்குத்தான் என்ன கொழுப்பு பாரேன்!"

எல்லோரும் சிரித்து ஓய்ந்த பிறகு, பத்திரிகையின் காகிதத்தையும், மேலே போட்டிருக்கும் சித்திரத்தையும் கவனித்து, அதன் நிறத்தைப் பற்றியும் பேச ஆரம்பித்தார்கள்

வழவழப்பான 'ஆர்ட்' தாள். கனமான காகிதத்தில் முன் புறத்தில் கடிதம் சேர வேண்டியவரின் விலாசம் எழுத இடம் விட்டிருக்க, வலது புறத்து மேல் பக்கத்து மூலையில் "விவாகம்" என்று அச்சிடப்பட்டிருந்தது. கீழ் மூலையில் ஒரு குத்து விளக்கு. அதன் பாதத்தில் ஒரு தட்டில் புஷ்பம். இடது கை ஓரத்தில் இரண்டு சிறிய கைகள் வரையப் பட்டிருந்தன. ஒரு கை வளையல் அணிந்து குங்குமம் நீட்டிற்று. மற்றொன்று ரிஸ்ட் வாட்சுடன் சந்தனம் காட்டிற்று.

உள்ளே புத்தகம் போல் இரண்டு தாள்களும், அதில் ஒன்றில் தமிழிலும், மற்றொன்றில் ஆங்கிலத்திலும் அழைப்பு அச்சிடப்பட்டிருந்தது. கூட ஒரு சிறிய அட்டையில், "தேநீர்—5 மணி" என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டு, ஒரு குண்டூசியால் அழைப்புத் தாளுடன் இணைக்கப்பட்டிருந்தது.

"'டீ' கூட இருக்கிறதாம், நாம் போவோமே" என்றாள் கௌரி.

"குடும்பத்துடனேயே போனால் போகிறது!"

# 15

## "கௌரி கல்யாணமே......"

மாடியில் தன் அறையின் ஜன்னலிலிருந்து கீழே பார்க்க எத்தனித்துக் கொண்டிருந்தாள் கௌரி. பந்தல் பிடிவாதமாகப் பக்கத்தில் கூடத் தெரிய விடாமல் மறைத்தது அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. கீழே யிருந்து வரும் குரல்களும், சப்தங்களும் வேறு அவளது ஆவலைத் தூண்டி விட்டன.

"கார் வந்து விட்டது."

"பூமாலை போடுங்கள்."

"வாத்தியம் எங்கே?"

"லைட், லைட்."

இவ்வாறு அவள் காதுக்கு எட்டிய அநேக குரல்களும், அவசரக் கூப்பாடுகளும் பெண்களின் சிரிப்புடன் கலந்து அவளை நின்ற இடத்தில் நிற்க விடாமல் துளைத்தன. சுந்தரம் மணமகளை மாலை அணிவதற்கு முன், அவன் ஜானவாசத்திற்குக் காரில் புறப்படுவதையே பார்க்க வேண்டும் என்று அவள் மனத்தில் எழுந்த அவா, நாழிகை ஆக ஆக, அவளைச் சொல்லத் தெரியாது இங்கும் அங்கும் குதிக்கச் செய்தது. கடைசியில், எப்படியாவது கீழே தான் போய்ப் பார்ப்போமே என்ற ஆசையால் தூண்டப்பட்டவளாய் உமாவின் உதவியை நாடி அவள் அறைக்குச் சென்றாள்.

கதவு தாளிட்டிருப்பதைப் பார்த்து, அதி வேகமாகத் தட்டினாள் கௌரி. விறுவிறென்று ரௌத்திராகாரத்துடன் வந்து கதவைத் திறந்த உமா, கௌரியைக் கண்டவுடன் திகைப்பும் வியப்பும் கலந்த பார்வையுடன் நோக்கினாள்.

அதற்குள் தன் படபடப்பு அடங்கி விட்ட கௌரி, "தனியாக இருந்தது, இங்கே வந்தேன்" என்று தயக்கத்துடன் கூறினாள்.

தன் கையில் பிரித்து வைத்துக் கொண்டிருந்த புத்தகத்தை மூடிக் கொண்டே உமா, "வா, வா, கௌரி" என்று அழைத்து விட்டு மீண்டும் நாற்காலியில் போய் அமர்ந்தாள்.

கீழே நடக்கும் பரபரப்பு ஏதும் கிஞ்சிற்றேனும் உமாவைப் பாதித்ததாகத் தெரியவில்லை. கல்யாணத்திற்காக அவள் யாதொரு அலங்காரமும் செய்து கொள்ளவுமில்லை. நிம்மதியாக அவள் புத்தகம் படித்துக் கொண்டிருப்பது கௌரிக்கே அள

யில்லாத ஆச்சரியத்தை அளித்தது. தங்கையின் தோள் மீது கை வைத்துச் சற்று நேரம் அவள் மௌனமாக நின்றாள். அவள் நரம்புகள் தந்தியடித்தன.

"கௌரி, என்ன உனக்கு? கை உதறுகிறதே?" என்று சாவதானமாக விசாரித்தாள் உமா.

கௌரி பதிலுக்குச் சிரித்து விட்டு, " உமா, கீழே வருகிறாயா? ஜானவாசம் கிளம்பும் பொழுது பார்க்கலாம் " என்று லஜ்ஜையுடன் கேட்டாள். அவள் முகம் இளம் ரோஜா நிறமாக மாறியது.

உமா உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கிக் கொண்டாள். ' இப்படி உணர்ச்சி வசப்படும்படி என்ன நடக்கிறது !' என்பது போலிருந்தது அவள் பார்வை. " நான் வரவில்லை, நீ போயேன் " என்றாள் அவள்.

"சரி, வேண்டாம்" என்று கௌரி அளித்த பதிலில் ஏமாற்றம் தேட்டையாக நிற்பது உமாவுக்குத் தெரிந்தது.

" இல்லை, வருகிறேன்" என்று கூறிக்கொண்டே, புத்தகத்தை மூடிவிட்டு எழுந்தாள் அவள்.

" வேண்டாம், உமா. சுந்தர் கல்யாணமாயிற்றே, நீ பார்க்க ஆசைப்படுவாயோ என்று நினைத்தேன். வேறு யாராவது புது மாப்பிள்ளையானால் நானே உன்னிடம் சொல்லியிருக்கமாட்டேன்."

" என்ன, கௌரி, இப்படிச் சொல்கிறாய்? கோபமா? நான் என்னவோ ஞாபகத்தில் சொல்லி விட்டேன். நீ சொல்லுகிறாற் போல் இது உன் கல்யாணம் மட்டும் அல்லாமல் சுந்தரின் கல்யாணமும் ஆயிற்றே. நான் கட்டாயம் பார்க்கத் தான் வேண்டும். வா, போகலாம் " என்று கூறிக்கொண்டே எழுந்து கிளம்பினாள் உமா.

இரு சகோதரிகளும் கீழே இறங்குவதற்கும், ஜானவாசம் கிளம்புவதற்கும் சரியாக இருந்தது. இருவரும் ஹாலில் நின்றபடியே வாசற் பக்கம் எட்டிப் பார்த்தார்கள். சுந்தரம் வந்து காரில் ஏறிக்கொண்டான். மெல்லிய ஸில்க் ஷர்ட்டுக்கு மேல், சரிகை அங்கவஸ்திரத்தை மூடிக்கொண்டு, உத்தரீயத்தைப் பிடிக்கும் பாவனையாக அவன் ஒரு கையை மார்பின்மீது வைத்தபடி காரில் ஏறும்போது, அவன் முகம் வசீகரமான புன்னகையுடன் பிரகாசித்தது. அவன் கண்களிலிருந்து வழிந்து ஓடிய ஆர்வம்

அவன் உள்ளத்திலிருந்து எழும்பிய சந்தோஷத்தையும், சந்தோசத்தையும் பளிச்சென்று எடுத்துக் காட்டிற்று.



கோவிலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த ஊர்வலத்தை உமாவும் கௌரியும் மேல்மாடியிலிருந்து கவனித்துக் கொண்டிருந்தனர். இரு புறமும் 'காஸ்லைட்'டுக்கள் பிரகாசிக்க நடுவே பளபளப்பான கறுப்புக் காரில் சுந்தரம் ரோஜா மாலை அணிந்து மலர்ந்த முகத்துடன் கம்பீரமாக வீற்றிருப்பதைக் காணும் போது வெகு அழகாகத்தான் இருந்தது. கௌரியின் மனம் குதூகலத்தால் பொங்கியது. முன்னே பாண்டு வாத்தியக்காரர்கள் விசித்திர ஆடைகள் அணிந்து சென்றனர். பின்னே நாகஸ்வரக்காரர்கள் மேல்துணியைக் கழுத்துஆபரணங்கள் தெரியுமாறு போட்டுக்கொண்டு ஊதினார்கள். பின்னால் ஸ்திரீகள் பட்டுப் புடைவைகள் சரிகை மின்ன உடுத்திக் கொண்டு, நகைகள் குலுங்கப் பேசிச் சிரித்துக்கொண்டு, கைகளில் வெள்ளிப் பாத்திரமும், பித்தளைத் தாம்பாளமும், ஜப்பான் தட்டும் ஏந்திச் சென்றனர். ஆடவர்கள் சரிகை வேஷ்டியும், மல் ஜுப்பாவும், விசிறி மடிப்பு அங்க வஸ்திரமும் காற்றில் அலைசந்து ஆட, முன்னே நடந்து சென்றனர். இவையனைத்தும் கண்ணுக்கு வெகு ரம்மியமான வர்ணச் சித்திரமாகக் காட்சி யளித்தன.

மெதுவாக ஊர்ந்து செல்லும் ஊர்வலத்தை ஆங்காங்கே நிறுத்தி, ஒவ்வொரு வீட்டினரும் ஆலத்தி சுற்றுவதும், விவாக வீட்டினர் ஓடி ஓடி அவர்களுக்கு வெற்றிலை பாக்கு வழங்குவதும் விவாகங்களில் ஏற்படும் பொதுவான உற்சாகத்தையும், குதூகலத்தையும் எடுத்துக் காட்டின.

இதிலெல்லாம் சற்றும் விருப்பமில்லாத உமாகூட இதையெல்லாம் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றாள்.

சற்று நேரத்திற் கெல்லாம் ஊர்வலம் கல்யாண வீட்டை அடைந்தது. ஆலத்தி சுற்றிக் கொட்டியவுடன், சுந்தரம் வீட்டிற்குள்ளே சென்றான். கௌரியும் உமாவும் மேல் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தார்கள். "கௌரி, கௌரி" என்று கூப்பிட்டுக் கொண்டே, மாலையும் கையுமாகக் கோபு எதிரே வந்தான். அந்த

மாலையை வாங்கி, அதை ஆசையுடன் தானே தமக்கைக்குப் போட்டு, அவளை மணப் பந்தலுக்கு அழைத்துச் சென்றாள் உமா.



அருகே உட்கார்ந்திருந்த சுந்தரத்தைக் கடைக் கண்ணால் நோக்கினாள் கௌரி. அவள் உடம்பில் விவரிக்க இயலாத புதிய புதிய உணர்ச்சிகள் தோன்றிப் பரவின. அவள் தன் எதிரே நிமிர்ந்து நோக்கினாள். மகாலிங்கையரும் கோபுவும் அவளைப் பார்த்தவாறு ஏதோ சொல்லிக்கொண்டிருந்தனர். கௌரி தங்களைப் பார்ப்பதைக் கண்டு அவர்கள் இருவரும் புன்முறுவல் பூக்க, அவள் வெட்கத்துடன் மீண்டும் தலை குனிந்தாள்.

புதிய புடைவையை உடுத்திக்கொண்டு வந்த கௌரியை அட்சதை ஆசீர்வாதத்திற்காகச் சுந்தரத்தின் மேல் வேஷ்டியின் மற்றொரு பக்கத்தைப் பிடித்து நிற்கச் சொன்னபோது, அவள் தன் பதற்றத்தை அடக்கிக்கொள்ள முடியாமல் தவித்தாள். சுந்தரம் வேறு அவளைப் பார்த்து லேசாகச் சிரித்தான். அவளால் பதிலுக்குச் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆயின் நாணம் இன்னும் அதிகரிக்க, அவள் தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.



சுந்தரம் பரதேசியாகத் தெருவில் மைதீட்டி நிற்கும் சடங்குகள் தீர்ந்து உள்ளே வரும் காட்சியை ஆவலுடன் பருகிக் கொண்டிருந்தாள் லலிதா.

கௌரியை மாலையுடன் எதிரே கொண்டு நிறுத்தினார்கள். நாகஸ்வர வாத்தியம் அந்தச் சமயத்திற்கேற்ப மங்கள மேளம் முழங்க, மாலை மாற்றும் வைபவம் நடந்தேறியது. அவனுக்கு மாலையைப் போட வரும்போது ஒரு கணம் அவள் கண்கள் அவனுடைய நயனங்களுடன் கலந்து அகன்றன. அப்போது அவள் உடலில் மின்சாரம் போல் ஓர் உணர்ச்சி தோன்றி மறைந்தது.

உணர்ச்சியால் உதறும் அவளது கரத்தைக் கெட்டியாகப் பற்றினான் சுந்தரம். அவன் உள்ளத்தில் சந்தோஷம் அலைமேல் அலையாக மோதி விளையாடிற்று.

பெண்கள் ஊஞ்சல் பாட்டுப் பாடி முடிந்ததும், சுபமுகூர்த்தத்தில் உள்ளே சென்று மணப் பந்தலில் அமர்ந்தனர் கௌரியும் சுந்தரமும்.

மந்திர கோஷம், மேள வாத்தியம், பெண்கள் பாட்டு, ஆண்கள் பேச்சு இவற்றுக்கிடையே சுந்தரம் கௌரியின் கழுத்தில் மூன்று முடிகள் போட்டான்.

மேள வாத்தியம் ஜாம், ஜாம் என்று முழங்க, எல்லோரும் கதம்பப் பொடியைத் தம்பதிகள் மீது தாராளமாகத் தூவினார்கள். மகாலிங்கையர் எதிரே உட்கார்ந்து கௌரியைப் பார்த்துப் புன்னகை பூத்தார். அவள் நாணத்துடன் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். "கௌரி கல்யாணமே வைபோகமே..." என்று பெண்கள் பாடினார்கள்.

லலிதா எங்கிருந்தோ ஓடோடியும் வந்து சுந்தரத்தைப் பார்த்து, "இதோ பார், அவர்கள் என்ன பாடுகிறார்கள் கேட்டாயா?—கௌரி கல்யாணமாம். இது கௌரியின் கல்யாணமா, அல்லது கௌரிக்கும் கல்யாணசுந்தரத்துக்கும் கல்யாணமா, அல்லது உன் கௌரியின் கல்யாணமா? எதைப் பற்றிப் பாடுகிறார்கள் அவர்கள்? சொல்லேன்" என்று கேட்டாள், அடக்கமாட்டாத சிரிப்புக்கிடையில்.

"நீ எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்" என்று பதிலளித்துச் சிரித்தான் சுந்தரம். மறு கணம் இந்த ஹாஸ்யத்தை வேறு யாருக்கோ சொல்ல ஓடிவிட்டாள் லலிதா.

"பலே பெண்ணடா அப்பா!" என்றான், அவளையே பார்த்துக்கொண்டிருந்த சிவா.

"ஊம்...ஊம்...!" என்று கூறியவாறு அவன் முகத்தைத் திருப்பினான் கேசவராவ்.

"அடே, உன் பெயரென்ன, ஊரென்ன, வேலை..." என்று கேசவராவ் ஆரம்பிக்க, சுந்தரத்திற்குச் சட்டென்று ரெயிலில் சந்தித்த 'மாமா'வின் ஞாபகம் வந்தது. பந்தலில் அவர் ராமையர் அருகில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, அவன் கௌரியுடன் சென்று அவரை நமஸ்கரித்தான். சிரித்த முகத்துடன் அவன் அவரை நிமிர்ந்து பார்க்க, அவர் முகம் பலவிதமாக மாறி, அவர் திரும்பிச் சுந்தரத்தைப் பார்த்துச் சிரித்தபோது அவர் முகம் பரிதாபமாக இருந்தது.

"ஒரு காமரா இல்லாமல் போய்விட்டதே!" என்றான் கேசவராவ்.

சிவா, "என்னடா அது?" என்று கேட்க, கேசவராவ் அவனுக்கு எல்லாம் விவரமாகக் கூறிச் சிரித்தான்.

★

சிரிப்பிற்கும் கொம்மாளத்திற்கும் இடையே நலங்கு நடந்து கொண்டிருந்தது. ஒரு பக்கம் சுந்தரத்தின் நண்பர்கள் அவனைச் சுற்றி உட்கார்ந்திருக்க, எதிர்ப் பக்கத்தில் கௌரியைச் சூழ்ந்து கொண்டு அவளுடைய தோழிகள் இருந்தார்கள்.

நலங்கு என்பது சுந்தரத்திற்கும் கௌரிக்கும் இடையே நடக்கும் வேடிக்கையா, அல்லது அவளுடைய சிநேகிதிகளுக்கும் அவனுடைய தோழர்களுக்கும் இடையே நடக்கும் சம்பாஷணையா என்று கூடப் புரியாமல் அவ்வளவு கூச்சலும் ஆர்ப்பாட்டமுமாக இருந்தது.

"இரு அப்பா, இரு அப்பா" என்றான் கிட்டு. "இரு அப்பா, பிள்ளை பெண்ணைப் பார்க்கிறார்."

"ஆமாம், புதிதோ இல்லையோ!" என்றாள் கௌரியின் தோழி ஜமுனா.

"நன்றாகப் பார்க்கட்டும், டார்ச் போடட்டுமா?"

"வேண்டாம், வேண்டாம்" என்றான் சிவா. "அவனுக்கு ஒரு 'கூலிங் கிளாஸ்' கொடுங்கள். பெண்ணைக் குளிரப் பார்க்கட்டும்."

இவ்வாறு இவர்கள் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்க, கோபு அவ்விடம் வந்து, "'ரிஸெப்ஷ'னுக்கு நாழிகையாகிறது. சீக்கிரம் ஆகட்டும்" என்று துரிதப்படுத்திவிட்டுச் சென்றான்.

★

வரவேற்புக்குச் சுந்தரத்தின் நண்பர்கள் எத்தனையோ பேர் வந்தார்கள். ஒவ்வொருவரும் சிற்றுண்டி அருந்திவிட்டு அவனைப் பார்க்க வந்தனர். பெண்கள் பக்கத்திலிருந்து எல்லோரும் அவர்களையே பார்க்க, அவர்களில் சிலர் சங்கோசப் பட்டுக்கொண்டு, முன்னுக்கும் வராமல், பின்னுக்கும் போகாமல் தவித்தனர். சிலர் நேரே வந்து சுந்தரத்தினிடம் பேசிவிட்டு, அவன் கௌரிக்கு அவர்களை அறிமுகப்படுத்த, அவளுக்குக் கை

கூப்பிவிட்டுச் சென்றனர். சிலர் அவனிடம் பேசிவிட்டு, கடைக் கண்ணால் கௌரியைப் பார்த்துவிட்டு, தயங்கித் தயங்கிப் பின் நடந்தனர். மற்றும் சிலர் அருகில் வர பயப்படுபவர் போல் தூரத்திலிருந்தே கையை ஆட்டிவிட்டு ஓடிவிட்டனர். இன்னும் சிலர், சுந்தரத்துடன் பேசும்போது அருகே கௌரி இருப்ப தாகவே தெரியாதது போல் திரும்பி, அவனையே உற்றுப் பார்த்து அவனுடனேயே பேசிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் சென்றார்கள். ஏனையோர் அவளுடனும் வேடிக்கையாகப் பேசிவிட்டுப் போனார்கள்.

கௌரியின் சிநேகிதிகள் வேறு விசித்திர நாடகமாடினார்கள். இரண்டு, மூன்று பேராக வந்து இருவருடனும் பேசிவிட்டுச் சென்றனர் சிலர். சிலர் அவளுடன் மாத்திரம் பேசும்போது அவன் காதிலும் விழும்படி உரையாடினார்கள். நாணிக் கோணி 'ஹி, ஹி, ஹி' என்று இளித்தவர் சிலர். அவளுடன் மாத்திரம் சாவதானமாகப் பேசிவிட்டுப் போனவர்கள் கொஞ்சம் பேர்.

இதையெல்லாம் நினைத்து நினைத்து, கௌரி, சுந்தரம், சாரதா, லலிதா யாவரும் வெகு நாள் சிரித்துக்கொண்டிருந்தனர். இத்துடன், மாப்பிள்ளை பஞ்சநதம் வேறு தன்னுடைய விசேஷ நிகழ்ச்சியை நடத்திக்கொண்டு வந்தான்.

நிச்சயதார்த்தம், முகூர்த்த சமயங்களிலெல்லாம் திரும்பிப் பார்த்தால் அவன் இருக்கமாட்டான். உடனே பாலு ஓடிப் போய், " அத்திம்பேர், கீழே உங்களைக் கூப்பிடுகிறார்கள் " என்று அழைத்தால், " நடக்கட்டும், நடக்கட்டும். கீழே காற்றே இல்லை " என்று பிகுவு பண்ணிக்கொள்ளுவான். பிறகு கோபு, சாரதா ஒவ்வொருவராக வந்து அழைத்த பிறகு, இறங்கி வருவான். கௌரி பந்தலில் உட்கார வேண்டி இருக்கவே, அவனைக் கவனிப்பது பெரும்பாடாகி விட்டது. ஆனால், அவனைக் கொண்டு உட்கார வைத்துவிட்டால், பிறகு அவன் பேசுவதற்குக் கேட்பானேன்? நிறுத்துவது தான் சிரமம்!

" இதோ பார்த்தீர்களா, இந்தக் கடிகாரம் அறுநூறு ரூபாய். இங்கே அகப்படாது. கல்கத்தாவில் நான் வேண்டுமென்று சொல்லி ஸ்விட்ஸர்லண்டிலிருந்து... " என்று அளக்க ஆரம்பித்து விடுவான்.

★

"வலது கால், வலது கால்" என்று அனைவரும் எச்சரிக்க, கௌரி தன் வலது காலை முன்னே வைத்துத் தன் புக்ககத்தில் நுழைந்தாள். முதல் நாள் இரவு தூக்கமில்லாததும் காலை புகையில் இருந்ததும் சேர்ந்து, மணமக்கள் இருவரையும் கனவோ, நினைவோ எனும்படி மயக்கமுறச் செய்தது. இதனிடையே சுந்தரத்தின் சிற்றப்பா பெண், அத்தை பெண் வகையருக்களின் வேடிக்கையும் எகத்தாளமும் அவ்விருவர் காதிலும் பல மணிகளின் இனிய ஓசையைப் போல் ஒலித்துக்கொண்டிருந்தன.

## 16

## "...அவல் வேறு அகப்பட்டால்..."

"கௌரி, அந்தப் பாலை வாங்கிக் கொள்ளம்மா" என்று நாகலக்ஷ்மி அம்மாள் கூற, கௌரி பாத்திரத்துடன் முன் பக்கம் வந்தாள். வழியில் சுந்தரம் இருப்பதைப் பார்த்து அவள் முகம் மலர்ந்து, முத்து முத்தான பல் வரிசை அழகான புன்சிரிப்பில் ஜ்வலித்தது. சுந்தரம் அந்தப் புன்சிரிப்பின் அழகில் லயித்துவிட்டான்.

கௌரி பாலை உள்ளே வைத்து விட்டு, கையில் தீபம் ஏற்றிக் கொண்டு வந்து, கூடத்தில் சுவாமி படத்தின் எதிரே வைத்து நமஸ்கரித்தாள்.

"வாசல் விளக்கைப் போடு" என்றான் சுந்தரம்.

கௌரி வாசல் விளக்கின் ஸ்விட்சைப் போட்டு விட்டுத் திரும்பும்போது நாகலக்ஷ்மி அம்மாள் வெளியே வந்து, "நான் கோவிலுக்குப் போகப் போகிறேன்; நீ வீட்டில் இருக்கிறாயா, அல்லது பூட்டிக் கொண்டு போகட்டுமா?" என்று தன் மகனைக் கேட்டாள்.

"அப்பா வரமாட்டாரோ?"

"மாட்டார். வந்தாலும் கௌரியிடம் சாவி இருந்தால் வந்து திறக்கிறாள்."

"சரி, நான் இருக்கிறேன்."

"சரி, வாடி போகலாம்."

"கௌரியும் கோவிலுக்குப் போகப் போகிறாளா?"

"இல்லை, அந்தாத்துக்குப் போகிறாள்."

"அம்மா, கௌரி இங்கேயே வீட்டைப் பார்த்துக் கொள்ளட்டுமே."

"தனியாக அவள் எப்படி......?"

"இல்லை அம்மா, நான் துணை இருக்கிறேன்" என்றான் பிள்ளை!

நாகலக்ஷ்மி அம்மாள் ஒரு கணம் யோசித்தாள். பிறகு சிரித்துக் கொண்டே, "இரு, இரு" என்று கூறிவிட்டு, கோவிலுக்குக் கிளம்பிவிட்டாள்.

அவள் தலை மறைந்ததும், கௌரி சுந்தரத்தைப் பார்த்து, "என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்களே, மாமி என்ன நினைத்துக் கொள்ளமாட்டார்கள்?" என்று கேட்டாள்.

"உம்......? என்ன சொன்னாய்?"

"நீங்கள் அப்படிச் சொல்லி யிருக்கக் கூடாது."

"'நீங்கள்'!.........எப்படி......? 'நீங்கள்' என்ன ஒன்று புதிதாக?"

"இல்லாவிட்டால் 'நீ' என்று சொல்லுவார்களாக்கும்!"

"இல்லை, இல்லை. முன் பின் தெரியாதவன். அவனை 'நீ' என்பார்களா என்ன? 'நீங்கள்' என்றுதான் சொல்லவேண்டும்."

"நான் அதைச் சொல்லவில்லை."

"நீ எதையும் சொல்ல வேண்டாம். என்னைச் 'சுந்தர்' என்று வழக்கம்போல் கூப்பிடு, அது போதும்."

"நான் மாட்டேன்."

"ஏன் மாட்டாயாம்?"

"ஏனோ, மாட்டேன். வாய் என்னவோ கூசுகிறது."

"மாங்காய் தின்றிருப்பாய்."

"நான் ஒன்றும் உன்னுடன் பேசவில்லை, போ."

"அது தேவலை!"

கௌரி தன் வாய் தவறி வந்த 'நீ'க்கு நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

"கௌரி!" என்றான் சுந்தரம், அவளது தோளைப் பற்றிக் கொண்டு.

தலை நிமிர்ந்து நோக்கினாள் கௌரி. "என்ன?" என்று கேட்டாள் மிகவும் மெதுவாக.

"என்னைச் 'சுந்தர்' என்று கூப்பிடேன்."

"சுந்தர்!" என்றாள் கௌரி, வெகு ரகசியமாக. அவள் கண்ணிமைகள் கீழே நோக்கின.

சுந்தரம் அவள் முகவாய்க் கட்டையை நிமிர்த்தி, "கௌரி, என்னைப் பார்" என்றான்.

அவள் கண்களைத் திறந்து ஒரு கணம் நோக்கினாள். அவன் தன்னை நோக்கிக் குனிவதைக் கண்டு, அவள் மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள். அவனது ஆலிங்கனத்திலிருந்து அவள் திமிரவுமில்லை, நகரவுமில்லை. அப்படியே கொடிபோல் அவனது மார்புடன் ஒட்டிக் கொண்டாள். சுந்தரத்தின் இருதயம் மகிழ்ச்சி மிகத் துள்ளிற்று. அதன் சப்தம் தேவ கானமாக இருந்தது கௌரிக்கு.

அந்த நிசப்த நேரத்தில் அவ்விருவர் உள்ளமும் ஒன்று சேர்ந்து லயித்ததை ஆமோதிப்பதுபோல் கடிகாரம் கணகண வென்று ஏழு மணி அடித்தது.

தன் விழிப்படைந்தாள் கௌரி. "மாமா வந்து விடுவார், நான் அந்த வீட்டுக்குப் போய் விடுகிறேன்" என்றாள்.

"அப்பா வந்தால் உன்னை என்ன சொல்லிவிடப் போகிறார்? பேசாமல் இரு" என்றான் சுந்தரம்.

"இல்லை" என்று சொல்லிவிட்டு, சிட்டுக் குருவியாக எதிர் வீட்டை நோக்கி ஓடிவிட்டாள் கௌரி.

"அட பைத்தியமே!" என்றான் சுந்தரம், அவள் முதுகைப் பார்த்து.

அவள் வீட்டிற்குள் மறையும் வரை அவளையே கவனித்து நின்றுவிட்டு, பிறகு தெருக் கதவைத் தாளிட்டு விட்டுத் தன் அறைக்குச் சென்றான் சுந்தரம். 'அழகும் குணமும் இப்படி இசைந்து இருப்பது என்ன அபூர்வம்!' இயற்கை அழகையே ஆபரணமாகக் கொண்டிருக்கும் கௌரியின் எழில், வாய் திறவாது பார்வையினாலேயே பேசும் அவளது சாந்தமான வதனம், இவை சுந்தரத்தின் உள்ளத்தையும் உடலையும் இன்ப வேதனைக்கு ஆளாக்கின.



கௌரி உள்ளே நுழைந்தாளோ இல்லையோ, அவள் தந்தை அவளைப் பார்த்து, "எங்கே அம்மா போயிருந்தாய்?" என்று கேட்டார்.

அவருடன் இருவர் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவர் அவருக்கு அத்தான் முறை; மற்றொருவர், ஸ்திரீ — அத்தானின் மனைவி காவேரி.

அவர்களுடன் பேசிக் கொண்டிருந்த காமாக்ஷி அம்மாள், சட்டென்று, "எங்கே, மாடிமேல் இருந்திருப்பாள்" என்று மழுப்பினாள்.

அப்பாவி ராமையர் விடாமல், "இல்லையே, எல்லா இடங்களிலும் தேடி விட்டேனே, எதிர் வீட்டுக்குப் போயிருந்தாளோ என்னவோ?" என்று சொல்லிவிட்டு, அத்தான் பக்கம் திரும்பி, "சரி, நீங்கள் குற்றாலம் போகிறதானால்........." என்று முன் பேச்சை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தார்.

ஊர் வம்பே ஆகாரமெனப் போஷித்து ஜீவித்து வரும் காவேரி, "எதிராத்திலா இருந்தாய்? நாகுவைக் கூடக் கோவிலில் பார்த்தேனே? சுந்தரம் வீட்டு வாசலில் இருந்தான், பார்த்தேன்......" என்று ஆரம்பித்தாள்.

காமாக்ஷி அம்மாள், "அவள் மாமனார் ஏதாவது சொல்லி இருப்பார்..." என்று கூறுவதற்குள், எங்கேயோ கவனமாக இருந்த ராமையர், அவள் தம்மைத்தான் ஏதோ கேட்பதாக எண்ணி, "ஆ! மகாலிங்கமா? கோடம்பாக்கம் போயிருக்கிறான். ராத்திரிதான் வருவான்" என்றார். காவேரி கௌரியை ஒரு தினுசாகப் பார்க்க, கௌரிக்குச் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது. அவள் வேகமாக உள்ளே சென்று விட்டாள்.

"நல்ல வேடிக்கை! யார் எங்கே இருந்தால் இவளுக்கு என்ன?" என்று முணுமுணுத்தது அவள் வாய்.

அவள் பின்னாலேயே காவேரியும் காமாக்ஷி அம்மாளும் உள்ளே வர, ஏதோ வேலை செய்பவள் போல் பின் புறம் சென்றாள் கௌரி. இருந்தாலும் அவர்கள் பேச்சைக் கேட்க வேண்டுமென்ற அவா தோன்றியதால் அவள் ரேழியில் மறைவாக நின்று கேட்கலானாள்.

"அவள் புக்ககத்தில் தான் இருக்கிறாளா?" என்று கேட்டாள் காவேரி.

"புக்ககம் என்ன, தூரமா புதிதா? முன்னே எப்படி இங்கேயும் அங்கேயுமாக ஓடினாளோ அப்படித்தான் இப்பொழுதும் ஓடுகிறாள்."

"அதற்குச் சொல்லவில்லை. இப்பொழுது அநேகமாக அங்கேயேதான் இருக்கிறாள் என்று உங்கள் அடுத்தாத்து வனஜா சொன்னாளே ?"

"புத்தி தெரிந்த பெண். கையும் வெறுமனே இருக்காது. இங்கு ஒழிந்த நேரத்தில் அங்கே சென்று மாமியாருக்கு ஏதாவது செய்வாள்."

"தேவலையே! நாகு இப்பொழுதே மாமியார் ஸ்தானத்தை வகிக்க ஆரம்பித்து விட்டாள் போலிருக்கிறது."

"நாகு அப்படிப்பட்டவள் அல்ல. அத்துடன் இல்லாமல், இதற்கு முன்னேயும் இவர்களெல்லாம் அங்கே போய்ச் செய்வது சகஜந்தானே? ஆனால், உமாவும் லலிதாவும் ஒன்றும் செய்யமாட்டார்கள். சாரதா ஊரில் இல்லை......"

"என்னவோ மழுப்புகிறாயே? எல்லாம் எனக்குச் சமாசாரம் எட்டி விட்டது. எல்லாம் தெரிந்துதான் கௌரி அங்கேயே இருக்கிறாள்."

காமாக்ஷி அம்மாளுக்குப் பேச்சு ரசிக்கவில்லை. கொஞ்சம் கோபங்கூட வந்துவிட்டது. "எப்படியானால் என்னம்மா? அவள் இனிமேல் அவர்கள் சொத்துத் தானே?"

"அதற்குச் சொல்லவில்லை, மன்னி. அவாத்துப் பக்கத்து வீட்டுச் செல்லம்மா ஏதோ சொன்னாள். ஆனால் அதெல்லாம் என்னத்திற்கு? இப்பொழுது நீங்கள் சொன்னதுபோல்......"

சிறு குழந்தைக்கு மைசூர்ப் பாகைக் காட்டிவிட்டு மறைத்து வைப்பதுபோல், காமாக்ஷி அம்மாளின் ஆவலைக் கிண்டிவிட்டு வேடிக்கை பார்த்தாள் காவேரி.

"என்ன சொன்னாள் செல்லா?" என்று சகஜமாகக் கேட்பது போல் கேட்டாள் காமாக்ஷி அம்மாள்.

"ஒன்றும் இல்லை... அப்புறம் நான் ஏதாவது சொல்லிக் கொடுத்தேன் என்று நினைத்துக் கொள்ளப் போகிறாள்."

"ஆமாம்,... இதைப் போய் அவளிடம் நான் சொல்லப் போகிறேனாக்கும்!"

"ஒன்றும் இல்லை ...என்னவோ பேசிக் கொண்டிருந்தபோது அவள், 'ஏன் காமு மாமி இப்படிச் செய்யணும்? அந்தப் பெண்ணைப் புக்ககத்துக்கு அனுப்பிவிடக் கூடாதோ?' என்று சொன்னாள்" என்று ஒருவாறாக முடித்தாள் காவேரி.

"அவளுக்கு என்னவாம்?"

"அது இல்லை, மன்னி. அவள் கண்ணிலே, காதிலே..."

காவேரியின் தெவிட்டாத வம்பு ருசி கௌரிக்கு ஆச்சரியமாக இருந்தது. அதற்குமேல் ஒன்றும் கேட்காமல், அவ்விடத்தை விட்டு நகரலானாள். எதிரே வேகமாக உமா வருவதைக் கண்டு, "எங்கே, உமா, இவ்வளவு அவசரம்?" என்று கேட்டாள்.

"நான் புதிதாக ஒரு சேவா சங்கத்தில் சேர்ந்திருக்கிறேன். இன்றைக்கு மீட்டிங். ரொம்ப லேட்டாகி விட்டது" என்று கூறி விட்டு, கைக் கடிகாரத்தைக் கட்டிக் கொண்டே ஓடினாள் உமா.

அவளையே பார்த்துக் கொண்டு சற்று நேரம் நின்றாள் கௌரி.

'ஐயோ, பெண்ணே! மீட்டிங் என்றால் கந்தல் புடைவைதானா கட்டிக்கொள்ள வேண்டும்? வங்காளத்தில் இருப்பதைக் காட்டிலும் அதிகப் பஞ்ச வேஷம் போடுகிறதே. உடம்பில் நகை இல்லை, இடுப்பில் நூல் புடைவை, பழைய ரவிக்கை - என்ன கோலம்! இவளுக்கு என்ன வயதாகி விட்டது, பதினைந்து தானே? என்னைவிடச் சிறியவள். எதிலும் பற்றில்லாமல் எப்படி இருக்கிறாள்? இவ்வளவு வைராக்கியம் எப்பொழுதாவது எனக்கு வருமா? ஊஹூம். நான் உலகத்துடன் மிகவும் ஆழ்ந்து விடுகிறேன். என்ன இருந்தாலும் இவர்களுக்கு என்ன தைரியம்! நமக்குக் கல்யாணமாகியும் சுந்தருடன் பேசுவது என்றால் யார் என்ன நினைப்பார்களோ என்று அச்சமாக இருக்கிறது. அப்படியிருக்கும்போதே காவேரி போன்றவர்களின் வாயுரலில் அரைபடுகிறோம். இவர்களோ என்றால், மீட்டிங் என்று உமா போகிறாள்; சினிமா என்கிறார்கள் லலிதாவும் பாலுவும். நான் தான் பயந்தாங்குள்ளிபோல இருக்கிறது!' என்று தனக்குத் தானே வியந்து கொண்டாள் கௌரி.

## 17

## புக்ககத்தில்

நாகலக்ஷ்மி அம்மாள் நாட்டுப் பெண்ணின் தலைப் பின்னலைத் தொட்டுத் திருப்பி, இழுத்து அழகு பார்த்தாள். தலையில் புஷ்பத்தைச் சூட்டி விட்டு, "இங்கேயே குளித்து விடேன், கௌரி" என்று கூறினாள்.

'சரி' என்று தலையை ஆட்டிவிட்டு, கௌரி மாடிக்குச் சென்று, புடைவையை எடுத்துக் கொள்ளத் தன் மாமியாரின்

பீரோவைத் திறந்தாள். அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. எப்படியோ அவளுடைய துணிமணிகள் பாதிக்குமேல் இங்கு வந்துவிட்டன. ஒவ்வொன்றாக, ஒவ்வொரு நாளாகக் கொண்டு சேர்த்துவிட்டாள். இந்த வீட்டில் குளிப்பதும், அந்த வீட்டிற்குப் போய்ச் சாப்பிடுவதும் அவளுக்குச் சகஜமாகி விட்டன.

அநேகமாகக் காலை வேளைகளில் அவள் புக்ககத்திற்கு வந்து மாமியாருக்குச் சகாயம் செய்வது தினசரி வழக்கமாகி விட்டது. முன்பும் தான் அவள் வருவதும் போவதுமாக இருந்தாள். ஆனால், இப்பொழுது எவ்வளவு வித்தியாசம்! தூண் முதல் துடைப்பம் வரை, கடிகாரம் முதல் கரண்டி வரை அவளுடன் புதிய உறவு கொண்டாடின. 'கௌரி, நான் உனக்குச் சொந்தம்' என்பதுபோல் தாமாகவே சிநேகம் பாராட்டின.

"கௌரி...!"

கௌரி திரும்பிப் பார்த்தாள். அங்கே சுந்தரம் வாயிற் படியில் சாய்ந்து கொண்டு, அவளையே பார்த்துக் கொண்டு நின்றான். மேலே துண்டுகூட இல்லாமல் அவன் தேகமும், புஜமும் தெரிய, விஜயனைப்போல் நின்று கொண்டிருப்பதைப் பார்க்கும்போது கௌரிக்கு மூச்சுத் திணறிற்று. அதை மறைக்க அவள், "எவ்வளவு சுண்ணும்பு உடம்பில்" என்றாள்.

"துடைத்து விடு" என்றான் சுந்தரம்.

அவன் அருகில் செல்வதற்குமுன் அவள் கண்கள் ஒருமுறை அடுத்த வீட்டு மாடிப் பக்கம் பார்த்தன. அங்கே அவள் எதிர் பார்த்தபடியே செல்லம்மா அவளையே கண் வாங்காது கவனிப் பது தெரிந்தது. அவள் மறு பேச்சின்றிக் கீழே இறங்கிச் சென்று விட்டாள்.

சுந்தரம் ஒரு விநாடி நின்றான். பிறகு அவனும் அடுத்த வீட்டைப் பார்த்துவிட்டு, புன்சிரிப்புடன் தன் மனைவியைப் பின் தொடர்ந்தான்.

கௌரி துணி துவைத்துக் கொண்டிருந்தாள். சுந்தரம் அங்கே வந்து அவளிடம் ஏதோ பேச்சுக் கொடுத்துக் கொண்டே இருந் தான். கௌரியும் தன்னை மறந்து அவனுடன் பேசிக் கொண் டிருந்தாள். துணியை அலசுவதற்காக நிமிர்ந்தபோது அவளுடைய கண்கள் அகஸ்மாத்தாகச் சமையலறைச் சாளரம் வழியாகப் பார்க்கும் நாகலக்ஷ்மி அம்மாளின் முகத்தைக் கண்டு விட்டன.

உடனே அவள் சீக்கிரமாகத் துணிகளைப் பிழிந்து எடுத்துக் கொண்டு, குளிக்கச் சென்று விட்டாள்.

இரண்டு மூன்று கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் இருந்து விட்டதைக் கண்டதும் சுந்தரமும் அவ்விடத்தை விட்டு அகன்றான். 'திடீரென்று ஏன் பேசாமல் இருந்து விட்டாள்? வெளிக்கு ரசிப்பதுபோல் காட்டிக் கொள்ளுவது பாசாங்குதானே? என்னுடன் பேச அவளுக்கு உண்மையில் ஆவல் இல்லை போலும்? தனது அதிருப்தியைச் சிறிது நேரத்திற்குப் பிறகு மறைக்க முடியவில்லை போலும்...' என்ன என்னவோ சந்தேகங்களுடன் தாறுமாறாக ஓடிற்று அவன் மனம். 'ஒருசமயம் நான் முன் சந்தேகித்தது சரிதானோ? எனக்காகவே ஒத்துக் கொண்ட இந்த விவாகத்தில் அவளுக்கு இப்பொழுதே சலிப்பு வந்து விட்டதோ?'

அவன் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது. ஒன்றும் தோன்றாமல் கூடத்திற்குச் சென்று ஒரு பத்திரிகையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். கௌரி குளித்துவிட்டு, ஈரப் புடைவையை உலர்த்த அங்கே வந்தாள். அவன் அவளை உற்றுப் பார்க்க, அவளது முகம் கபடமற்ற மோகனப் புன்னகையில் மலர்ந்தது. சுந்தரத்தின் மனம் சுருக்கென்றது. 'பாவம், அநியாயமாக அவள் மீது பழி சுமத்தினேமே' என்று தோன்றிற்று அவனுக்கு.

"கௌரி!"

அவள் திரும்பிப் பார்த்தாள். 'என்ன?' என்று கேட்டன அவள் கண்கள்.

"கொஞ்சம் தீர்த்தம் கொண்டு வா."

அவள் உள்ளே சென்று தீர்த்தம் கொண்டு வருவதற்குள் சுந்தரம் தன் அறைக்குச் சென்று உட்கார்ந்து கொண்டான். அவள் அங்கே வந்ததும், தம்ளர் ஏந்திய கையை அவன் பற்ற, அவள் தலை குனிந்தாள்.

"கௌரி, நீ எப்பொழுது இந்த வீட்டுக்கு வரப் போகிறாய்?" என்று கேட்டான் சுந்தரம்.

ரத்தம் குப்பென்று முகத்தில் ஏற, கௌரியின் முகம் ரோஜா வர்ணமாக மாறியது. "நான் இப்பொழுது எங்கே இருக்கிறேனாம்!" என்றாள்.

பிறந்தகத்தில் அவர்களெல்லாம் கூறுவது அவனுக்கு ஞாபகம் வந்தது.

" ஏண்டி, இப்பொழுதே போய்ப் புக்ககத்தில் ஐக்கியம் ஆகி விட்டாயே?" என்றாள் அவள் தாய்.

அதற்குள் உமா, " கௌரி, இன்னும் கொஞ்ச நாள் தானே எங்களுடன் இருப்பது, அதற்குள் என்ன உனக்கு அவசரம்?" என்றாள்.

பாலு ஒன்றும் சொல்லாமல் கௌரி பக்கத்திலேயே அவள் கையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க, " இல்லை, உமா, சுந்தரமும் பஞ்சு அத்திம்பேரைப் பார்த்து, அதே போல் இருக்கப் பார்க்கிறான் போலிருக்கிறது" என்று கூறிச் சிரித்தான்.

இந்த நினைவுகளில் ஆழ்ந்திருந்த கௌரி, பேசாமல் இருந்தாள்.

உதடு அசையாமல் அவள் கூறிய வார்த்தைகளின் இனிமையை அப்படியே பருகினான் சுந்தரம்.

" அதைச் சொல்லவில்லை, கௌரி. எப்பொழுது இங்கேயே நிரந்தரமாக வருவாய் என்று கேட்டேன். அப்பொழுது இப்படி ஓடி ஓடிப் போக மாட்டாய் அல்லவா? அப்பா எல்லோரும் என்ன சொல்லுகிறார்கள்?"

" என்னைக் கேட்டால்?"

சுந்தரம் மௌனமாக இருந்தான். இன்று அவன் மேலே கொடியைப் பார்த்த போது, அவன் வேஷ்டிக்கு அடுத்தபடி அம்மா புடைவையுடன் அவள் புடைவையும் உலர்த்தி இருப்பதும், பின் புறத்தில் அவள் சகஜமாக வேலை செய்வதும், வீட்டில் நடமாடுவதும், அவள் தனக்கு எவ்வளவு நெருங்கி விட்டாள் என்பதை நினைவூட்டி அகமகிழச் செய்தன. அவள் எதிர் வீட்டிற்குச் சென்று விட்ட ஒவ்வொரு விநாடியும் அவனைப் பொறுமைப்படச் செய்தது. அவள் தன் எதிரிலேயே, தன் வீட்டிலேயே எப்பொழுதும் இருக்க வேண்டும் என்று அவன் கருதினான். கௌரி ஏதோ சொல்லும் குரல் கேட்டுத் தன் யோசனைகளினின்றும் வெளி வந்து நிமிர்ந்தான் சுந்தரம்.

" இப்பொழுதே எல்லோரும் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? நான் இங்கேயேதான் இருக்கிறேனாம். எப்பொழுதோ

தான் அங்கே போகிறேனும். அவர்கள் எல்லோரும் என்னைக் கேலி செய்கிறார்கள்'' என்றாள் கௌரி.

''கேலி என்ன? நீ இங்கேயே தானே இருக்க வேண்டும்?'' என்றான் சுந்தரம். அவனது நாக்குத் தழதழத்துக் கொஞ்சிற்று. அதற்கேற்ப அவளுடைய கண்களும் குலாவின.

இதற்குள், "கௌரி!" என்ற நாகலக்ஷ்மி அம்மாளின் குரல் கேட்டது.

"அதோ மாமி கூப்பிடுகிறாள்" என்று சொல்லிக்கொண்டே ஓடிவிட்டாள் கௌரி. கூடத்தில் நின்று கொண்டிருந்த மகாலிங்கையர், அவள் சுந்தரத்தின் அறையிலிருந்து வெளியே வருவதைப் பார்த்து, அவளை நோக்கி ஒரு குறு நகை நகைக்க, அவள் மிகவும் வெட்கப் பட்டுக்கொண்டு சமையலறைப் பக்கம் சென்றாள். சுந்தரத்தின் மொழிகள் வண்டு போல் அவளது மூளையில் திரும்பத் திரும்ப ரீங்காரம் செய்தன.

"எங்கே போயிருந்தாய் கௌரி? இந்தப் பச்சடி உன் அப்பாவுக்கு ரொம்பப் பிடிக்கும். அந்தாத்துக்குக் கொண்டு போய்க் கொடேன்" என்று நாகலக்ஷ்மி அம்மாள் கூறியதும், கௌரி ஒன்றும் புரியாமல் கொஞ்ச நேரம் விழித்தாள். நாகலக்ஷ்மி அம்மாள் அவளை உற்று நோக்கிவிட்டு, "என்னடி சொன்னான் அவன்? நீ பேசாமல் அந்தாத்துக்குப் போ, சொல்லுகிறேன். சுற்றிச் சுற்றி வந்து கொண்டு—அவனுக்கு வேலை என்ன?" என்றாள்.

கௌரிக்கு வெட்கம் தாங்க முடியவில்லை, மேலும் மாமியின் வார்த்தைகள் அவளுக்கு வேறு யோசனைகளைக் கிளப்பிவிட்டன. மாமியார் கொடுத்த பாத்திரத்தை எடுத்துக் கொண்டு கிளம்பி, அவள் சரசரவென்று தன் பிறந்த வீட்டிற்குச் சென்று விட்டாள்.

"அம்மா, அப்பா சாப்பிட உட்கார்ந்து விட்டாரா?"

"ஆமாம், என்ன வேண்டும்?"

"இந்தப் பச்சடி கொண்டு வந்தேன்: மாமி கொடுத்தாள்" என்று கூறிக்கொண்டே கௌரி கூடத்திற்குச் சென்றாள்.

ராமையர் தம் பெண்ணைப் பார்த்து, "நீயும் சாப்பிட உட்காரேன், கௌரி" என்றார்.

கௌரி உட்காரவும், உமா, லலிதா, பாலு எல்லோரும் உட்கார்ந்து கொண்டு, சிரித்துப் பேசிக் கொண்டே சாப்பிடத் தொடங்கினார்கள்.

"சுந்தரம் சாப்பிட்டு விட்டானா?"

"இல்லை இன்னும்."

"அப்படியானால் கொஞ்சம் வாழைக்காய்க் கறி கொண்டு போய்க் கொடேன்."

"சரியாகப் போயிற்று. எனக்கு இது தான் வேலையா என்ன? அங்கிருந்து ஒன்று கொண்டு வர, இங்கிருந்து ஒன்று கொண்டு போக...... ?"

"ஏன், கொண்டு கொடுத்தால் என்னவாம்?"

கௌரிக்குத் தன் மாமியாரின் பேச்சு அதற்குள் மறந்துவிட வில்லை. ஆதலால் அவள், "நான் போகவில்லை, அம்மா" என்றாள்.

உமா அவளை ஏறிட்டு நோக்கினாள். அவளுக்குப் புரியாத புதிர்களில் இதுவும் ஒன்று. அதற்குள் பாலு, "நான் போகி றேன், அம்மா" என்றான். அதற்குள், "நான் தான் போவேன்" என்று போட்டி யிட்டாள் லலிதா. லலிதா சென்றால், கவனமாக மாமியிடமும், சுந்தரத்தினிடமும் தான் அங்கே வர மறுத்ததைச் சொல்லிச் சிரித்து விட்டுத்தான் வருவாள் என்று கௌரிக்குத் தெரியும். அதனால் அவள், "பாலுவே போகட்டும், அம்மா" என்றாள்.

"ஐய! நான் அங்கேயே இருந்து ஏதாவது சாப்பிட்டுவிடப் போகிறேனே என்ற பயம் போலே இருக்கிறது" என்று கேலி செய்தாள் லலிதா. பாலுவைப் பார்த்து நாக்கை நீட்டி அழகு காண்பித்து விட்டுத் தான் திருப்தி அடைந்தாள் அவள்.

கௌரி 'ஓ'வென்று சிரித்தாள். "லலி, மாமி டிபனுக்கு உருளைக் கிழங்கு போண்டா போடுகிறாளாம்" என்றாள்.

"எனக்கு ஒன்றும் உங்கள் வீட்டு போண்டா வேண்டாம் போ. அம்மா, நம்மாத்திலேயும் செய்யச் சொல்லம்மா."

"வேண்டா விட்டால் போயேன். மாமி, பாவம், உனக்காகத் தான் செய்கிறாளாம்."

லலிதா காது கேட்காதது போல் இருந்தாள். பிறகு, கொஞ்ச நேரம் கழித்து, ஏதோ புதிதாக ஒரு விஷயத்தைச் சொல்வது போல், "அப்பவே மாமி என்னை எதற்கோ கூப்பிட்டாள். மறந்து விட்டேனே" என்று கூறியவாறு வெளிக் கிளம்பினாள்.

"ஏ, போண்டா!" என்று எல்லோரும் சேர்ந்து அவளை ஒரே முகமாக அழைக்க, அவள் சிரித்துக்கொண்டே எதிர் வீட்டிற்கு ஓடிவிட்டாள்.

"வாய், வாய்!" என்றாள் காமாக்ஷி அம்மாள் பெருமையாக.

## 18
## கௌரியின் ஆச்சரியம்

கௌரி தன் அறையின் ஜன்னலில் உட்கார்ந்தவாறு பூத் தொடுத்துக் கொண்டிருந்தாள். லலிதா அங்கு ஓடி வந்து, "அக்கா, கோவிலுக்கு வருகிறாயா?" என்று கேட்டாள். "நாகு மாமி, பாலு, சுந்தரம், நான் எல்லோரும் போகப் போகிறோம்."

"இல்லை, நான் வரவில்லை. இந்தா, இந்த மாலையைக் கொண்டு போய்ப் போடு."

"ஏன் அக்கா, சுந்தரம் தான் கேட்கச் சொன்னான்."

"சரிதான், போடி."

லலிதா ஓடிவிட்டாள். அதற்குப் பின்னாலேயே உமா அங்கே வந்தாள்.

"கௌரி, உன்னைப் பார்ப்பதே அரிதாகப் போய்விட்டதே?",

'ஏதடா, உமாவுக்கும் இவ்வளவு குஷி பிறந்துவிட்டதே' என்று யோசித்த கௌரி, அவளை நோக்கிச் சாவதானமாக, "உன்னைப் பார்ப்பதா, என்னையா! நான் எங்கே போகிறேன்?" என்றாள்.

"கௌரி, இதைக் கேளேன். எங்கள் சங்கத்தில் என்ன வெல்லாம் செய்கிறோம் தெரியுமா? ஏழைகளுக்குச் சேவை செய்வதுடன் மட்டு மல்லாமல் 'நர்ஸிங்' கூட ஆரம்பித்திருக்கிறோம். நானும் அதில் சேரப் போகிறேன். எனக்கு......"

உமா பரபரப்புடன் கூறிக்கொண்டே வந்ததை நிதானமாகக் கேட்டாள் கௌரி.

இறுதியில் அவன், "உமா, உன் எஸ். எஸ். எல். ஸி. ரிஸல்ட் எப்பொழுது வரும்?" என்று கேட்டான்.

"இன்னும் ஒரு வாரத்தில் வரும். அதற்கென்ன?"

"இல்லை, காலேஜில் சேரப் போகிறாயா?"

"சேரலாம். உன் காலேஜிலே இடம் கிடைக்குமா?"

"கிடைக்கலாம். அப்ளிகேஷன் போடவேண்டும்."

"நீ என்ன செய்யப் போகிறாய், கௌரி? பி. ஏ. படிக்கப் போகிறாயா?"

"நான் என்ன செய்வேன், எதிர் வீட்டைக் காவல் காக்கப் போகிறேன்" என்றாள் கௌரி, சிரித்துக் கொண்டே.

"உனக்குத் தான் அதிலேயே திருப்தி இருக்கிறதே!"

முகத்தில் குறுநகை தவழ, கௌரி தங்கையை மௌனமாக நோக்கினாள்.

உமா அந்த அறையை விட்டு அகன்றாள். சற்று நேரத்திற் கெல்லாம் அவள் விரைவாகத் தெருக் கோடியில் மறைவது கௌரிக்குத் தென்பட்டது. அங்கேயே உட்கார்ந்தபடியே அவள் தெருவில் போவோர் வருவோரை நோக்கியவாறு இருந்தாள். எதிர் வீட்டிலிருந்து லலிதா, நாகலக்ஷ்மி அம்மாள் ஆகியவர்கள் கோவில் பக்கம் நடந்தார்கள். எதிர் வீட்டு வாசலில் மகாலிங்கையர் ராமையருடனும் இன்னும் சிலருடனும் பேசிக்கொண்டிருந்தார். கௌரியின் கண்கள் தாமாகவே சுந்தரத்தின் அறையை நாடின. அங்கே அவனது உருவம் தெரிந்தது.

'கோவிலுக்குப் போகவில்லையா, என்ன?' என்று நினைத்துக் கொண்ட கௌரிக்கு, அவனுடன் போய்ப் பேச வேண்டும் என்று தோன்றிற்று. ஆயின் வழியில் நிற்கும் பெரியோரைத் தாண்டி எப்படிச் செல்வது? அவனுடன் பேசுவதில் தனக்கு என்ன தான் மோகமோ அவளுக்கே புரியவில்லை. இதற்கு முன் யாருக்குத்தான் புரிந்திருக்கிறது!

இப்பொழுது அவள் நடத்தும் வாழ்க்கையே விசித்திரமாக இருந்தது. அந்த வீட்டிலும் இல்லாமல், இந்த வீட்டிலும் இல்லாமல், நடுத்தெருவில் இருப்பதைப் போலப் பட்டது அவளுக்கு. சுந்தரம் அன்று காலையில், "நீ எப்பொழுது இங்கே வரப்போகிறாய்?" என்று கேட்ட கேள்வி, அவள் மனத்தில் ஆழ

மாகப் பதிந்தது. சுந்தரம் ஜாடையாகச் சொல்லியும் சொல்லாம லும் விரும்பியபடி, அவன் ஆபீசுக்குப் போகும் வரையில் கௌரி அந்த வீட்டில் இருப்பதும், மறுபடியும் அவன் மாலை வீடு திரும்பும் போது அங்கு ஆஜராகி விடுவதும் அவளுக்குச் சகஜமாகி விட்டன. இதைக் கவனித்த காமாக்ஷி அம்மாள், "என்ன இருந்தாலும் நாகு கெட்டிக்காரி. சொல்லாமலேயே மெள்ள நாட்டுப் பெண்ணை அங்கேயே வைத்துக்கொண்டு விடுகிறாளே" என்று சொல்ல ஆரம்பித்து விட்டாள். இப்பொழுதே கௌரியைவிட்டுப் பிரிந்து விட்டாற் போல் அவளுக்கு எண்ணம்.

"என்ன, அம்மா, நீ கூடவா இப்படிப் பேசுவது? மாமியார் என்னை அங்கு வரச் சொன்னாள்? நானாகத்தானே அவள் தனிமை யாக வேலை செய்கிறாளே என்று ஒத்தாசைக்குப் போகிறேன்?" என்று கௌரி மாமியாரைத் தாங்கிப் பேச வேண்டியதாயிற்று. எல்லோரையும் சந்தோஷப் படுத்த வேண்டும் என்று முயற்சி செய்யும் கௌரியின் பாடு பரம சங்கடமாக இருந்தது. 'கௌரி இங்கேயே இருப்பதில்லை' என்பது சுந்தரத்தின் குறை. 'இங்கே வருவதே இல்லையே' என்று அம்மாவின் முறையீடு. அதுவும் ஒரு விதத்தில் உண்மைதான். இத்தனை நாள் எல்லாவற்றையும் கவனித்து வந்த கௌரி புக்ககம் போன பிறகு, தானே எல்லாம் பார்ப்பது என்றால் காமாக்ஷி அம்மாளுக்குக் கஷ்டந் தானே? அவளுக்குக் கை உடைந்தாற் போல் இருந்தது. மேலும் கௌரி தன் சுபாவத்தினாலேயே வீட்டிற்கு இன்றியமையாதவளாக ஆகி விட்டாள். அந்த விசித்திரக் குடும்பத்தைச் சரிவர நடத்தும் பொறுப்பைத் தன்னிடம் பகிர்ந்து கொண்டிருந்த கௌரி, இப்பொழுது இல்லாமற் போவது அவளுடைய தாய்க்கு மிகவும் சிரமமாக இருந்தது.

'அவர்களுக்கே தெரியாதா? நான் என்னவோ திடீரென்று மாமியார் அட்டகாசம் பண்ண ஆரம்பித்து விட்டேன் என்று காமு நினைத்துக் கொள்ளப் போகிறாளே?" என்பது நாகலக்ஷ்மி அம்மாளின் பயம்.

சுந்தரமோ, பெற்றோர்கள் பேசாமலிருக்க, நாம் என்ன செய்வது என்றிருந்தான். ராஜமையரோ இவ்வெண்ணங்கள்

ஒன்றும் தம்மைப் பாதிக்காமல், நிம்மதியாக வேதாந்த புத்தகமும் கையுமாக இருந்தார்.

கௌரி ஆச்சரியம் மிகுந்தாள். 'நான் என்ன செய்வது? சாரதா, லலிதா, உமா என் ஸ்தானத்தில் எப்படி நடந்து கொள்ளுவார்கள்? தங்கள் காரியங்களை எப்படியோ சாதித்துக் கொண்டு விடுகிறார்களே! அம்மாவைத் தான் கேட்கலாம். ஆனால், இந்த விஷயத்தில் அவளும் என்ன நினைத்துக் கொண்டு விடுவாளோ?'

பிறர் மனத்தைப் பற்றியே எண்ணி, அதற்கேற்ப வெற்றிகரமாக நடந்து வரும் கௌரி, இவ்வாறு சிந்தித்த வண்ணம், தன் மனத்துக் கிசைந்ததை நிறைவேற்றிக் கொள்ளச் சக்தி யற்றவளாய்த் திகைத்து நின்றாள்.

## 19

## "இங்கேயே வந்துவிட்டேன்."

"சினிமாவுக்கு அவர்கள் எல்லோரும் வருகிறார்களா?" என்று கேட்டாள் கௌரி, சுந்தரத்தைப் பார்த்து.

"எவர்கள்?"

"உமா, லலிதா......"

"இல்லை; அப்படி யென்றால் நீ வரப் போவதில்லையா?"

"இல்லை... அவர்கள் என்ன......"

"நினைப்பார்களோ? அது தானே?" என்று முடித்தான் சுந்தரம். அவன் முகம் கடுமையாக மாறிற்று. "இது தானே உனக்கு? 'அவர்கள் என்ன நினைப்பார்களோ?', 'இவர்கள் என்ன சொல்லுவார்களோ?' என்று. 'அம்மா எப்படிப் பார்ப்பாளோ?', 'அப்பா என்ன சொன்னார்?' இது தானே!"

"அப்படி யென்றால் அம்மா, அப்பா மனம் போல் கூடாதா......?"

"போதும். அவர்கள் என்ன நினைப்பார்களோ என்பது தானே உன் கவலை? நான் என்ன அபிப்பிராயப்படுகிறேன், என்ன நினைக்கிறேன், என்ன சொல்கிறேன் என்று உனக்கு ஒன்றும் இல்லையாக்கும். அவர்கள் மீது இருக்கும் கரிசனத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கு என் வார்த்தையில் மதிப்பு இருந்தால்

நன்றாக இருக்கும். வேண்டாம், வரவேண்டாம். 'உன்னுடன் வர இஷ்டம் இல்லை' என்று சொல்லேன்" என்று இரைந்துவிட்டு, கோட்டை மாட்டிக்கொண்டு ஆபீசுக்குக் கிளம்பினான் சுந்தரம்.

கௌரிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவள் வியப்புடன் தன் கணவனின் முகத்தை உற்று நோக்கினாள். இத்தனை நாட்களாக அவனுடன் பழகியும் அவனுக்கு இப்படிக் கோபம் வரும் என்று அவள் இது வரையில் அறிந்ததில்லை. வெளி வராத கண்ணீர் முள்ளென விழியைத் தைக்க, பேசாமல் கிளம்பி விடுவிடென்று எதிர் வீட்டிற்குப் போய்த் தன் அறையில் உட்கார்ந்து கொண்டாள் கௌரி.

'நாம் என்ன சொன்னோம்? அவருக்கு ஏன் அப்படிக் கோபம்? கேலி செய்வார்களோ என்று பயந்துதானே நான் கேட்டேன்? கூப்பிட்டால் போக வேண்டியது தானே? சாரதா, அத்திம்பேர் சொல்வதையெல்லாம் மறு பேச்சில்லாமல் கேட்க வில்லையா? மன்னி, கோபு அண்ணா ஆடும் ஆட்டத்திற்கெல்லாம் ஆளாகவில்லையா? என்ன அசட்டுத் தனம்! மேலும் என் மனத்திற்கு இஷ்டமான காரியத்தைச் செய்யப் பிகு வேறு? நான் எப்படி இனி சுந்தரிடம் சகஜமாகப் பேசுவேன்? மாமிக்குத் தெரிந்து விடுமோ? அவ்வளவு கோபமாக இருந்தாரே—மாமி என்னைப் பற்றி என்ன இழிவான அபிப்பிராயம் கொள்ளுவாள்?' ஆயிரத்தெட்டுக் கேள்விகளும் சந்தேகங்களும் கௌரியின் மனத்தை அழுத்தின.

★

வேகமாக நடந்து சென்ற சுந்தரத்திற்குப் பஸ்ஸில் ஏறும் வரை கோபம் சற்றும் தணியவில்லை. அவன் இருதயம் புரிபடாத, புலப்படாத குழப்பக் குவியலாக இருந்தது.

'ஏன் இப்படி அசட்டுத்தனம் செய்து விட்டோம்? அவளை ஏன் முன்பே கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் போனோம்? என்ன தான் இருந்தாலும், பெரிய மனுஷி போல், 'யார் என்ன சொல்லு வார்களோ?' என்று எனக்குப் போதிக்கிறாளே? அசட்டுப் பஞ்சுவை எப்படி ஆதரிக்கிறாள் சாரதா! கோபுவின் மனைவி மறு பேச்சுப் பேசுகிறாளா? அவர்கள் எல்லோரையும் விட அதிகப் புத்தி சாலி என்று கௌரியைப் பற்றி மனப்பால் குடித்தோமே

அவளுக்கே இஷ்டம் இல்லை என்றால் சொல்லி என்ன பயன்? இன்று எப்படியும் அவளைக் கேட்டு விடுகிறேன்.'

ஆபீசுக்குப் போயும் அவனுக்கு வேலை ஓடவில்லை. மாலை வீட்டிற்குத் திரும்பும் போதும் அவன் மனம் அலை பாய்ந்து கொண்டிருந்தது. அதற்கேற்றாற் போல் அவன் உள்ளே நுழைந்ததும் கௌரி அவனை எதிர்கொண்டு அழைக்க வரவில்லை.

தாய் கொடுத்த காபியை வேண்டா வெறுப்பாகக் குடித்து விட்டு, மாடிக்குச் சென்றான் சுந்தரம். அங்கே மொட்டை மாடியில் தனியாக நின்று கொண்டிருந்தாள் கௌரி. கைபிடிச் சுவரின் மேல் சாய்ந்தவாறு ஏதோ யோசனையில் ஆழ்ந்தவளாய் அவன் வந்ததைக் கூடக் கவனியாமல், பக்கத்து வீட்டை நோக்கிக் கொண்டிருந்தாள் அவள். அவளைப் பார்த்ததும் ஒரு கணம் அங்கேயே நின்று அவளைக் கவனித்தான் சுந்தரம். அவள் அசையவே இல்லை. அவள் முகத்திலும் ஒரு பாவமும் தெரியவில்லை. பிறகு அவன் கனைக்கவும், கௌரி திடுக்கிட்டுத் திரும்பினாள். ஆவலே வடிவாக அவள் கண்கள் நர்த்தனம் புரிந்தன. சுந்தரத்தின் கைகள் அகல விரிந்து அவளை வரவேற்க, அவள் ஓடி வந்து தன்னுடைய முகத்தை அவன் மார்பில் புதைத்துக் கொண்டாள்,

"கௌரி, என்னை நீ மன்னிப்பாயா?"

"எதற்கு?"

"காலையில்......"

"நீங்கள் தான் என்னை மன்னிக்க வேண்டும்" என்று குழறினாள் கௌரி.

சிறிது நேரம் சென்ற பிறகு, கௌரி மெதுவாக, "சுந்தர், நான் இன்று முதல் இங்கேயே வந்துவிட்டேன்" என்றாள்.

"நிஜமாகவா?" என்று ஆச்சரியத்துடன் கேட்ட சுந்தரம், கௌரியை விழுங்கி விடுபவன் போல் உற்றுப் பார்த்தான்.

## 20

## கடற்கரையில்

சமுத்திர அலைகள் கம்பீர கோஷம் செய்து கொண்டு கடித்து விடும் போல் மிரட்டிக் கொண்டு வருவதும், ஆனால்

கடிக்காமல் சும்மா மிரட்டி விட்டுக் கடைசியில் அவர்கள் காலைத் தொட்டுவிட்டுச் செல்லுவதுமான விந்தையையே பார்த்துக் கொண்டிருந்தாள் கௌரி.

"இதோ பாருங்களேன், எத்தனையோ சிங்கங்கள் வந்து பாய்வது போல் இல்லை?" என்று திரும்பித் தன் கணவனைக் கேட்டாள் அவள்.

சுந்தரம் சிரித்தான். முன்பு ஒரு நாள் அவள் காலேஜிலிருந்து வரும்போது தான் கண்ட காட்சியை அவள் முகத்தில் அவன் இப்பொழுது மீண்டும் கண்டான். கௌரியின் முகத்தை மயிர்ச் சுருள்கள் தழுவ, அவள் அவன் கண்களுக்கு வெகு அழகாகத் தோன்றினாள். பீச்சுக்கு வந்த ஒரு மணி நேரமாக அவன் தன் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்த கேள்வியைக் கேட்டுவிட வேண்டுமென்று எத்தனித்தும், சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. கௌரியாவது கலகலவென்று பேசிக் கொண்டிருந்தாலும், அவளுடன் பேசிக் கொண்டிருந்து, இடையே இந்தச் சந்தேகத்தையும் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் அவளோ சமுத்திரத்தின் ஓசையையும், சுந்தரத்தின் அண்மையையும், கடற் காற்றையும் ஒருங்கே அநுபவித்து, தன்னை மறந்திருந்தாள். அவள் நிலையை அவன் அப்பொழுது அறிந்து ரசிக்கும் நிலைமையில் இல்லை. நாழிகை ஆகிக் கொண்டே இருந்தது. இருட்டி விட்டது.

சுந்தரம் சற்று கிட்டே நெருங்கினான். "கௌரி, உன்னிடம் நான் ஒன்று கேட்க வேண்டும்" என்று ஒரு பூர்வ பீடிகையைப் போட்டான். அவள் மௌனமாக அவனை நிமிர்ந்து நோக்கவும், அவன், "கௌரி, என்னை மணந்து கொண்டதில் உனக்குப் பரிபூர்ணமாக இஷ்டந் தானா? உண்மையைச் சொல்" என்றான்.

முகத்தில் சிரிப்பின்றித் தன் பதிலை ஆவலுடன் எதிர் நோக்கும் சுந்தரத்தின் அப்பொழுதையத் தோற்றம் கௌரிக்கு வேடிக்கையாகத்தான் இருந்தது. அந்த மனத்திற்குள் வீசிக் கொண்டிருந்த புயலை அந்தப் பேதை எவ்வாறு அறிவாள்?

"இது என்ன அசட்டுக் கேள்வி, சுந்...? எனக்குப் பிடிக்காமல் என் வாழ்வையே உங்களுக்குத் தியாகம் செய்துவிட நான் என்ன ஒரு பெரிய ஞானியா, அல்லது நாயகியின்

காலத்தில் பிறந்த ஒரு பெண்மணியா? ரொம்ப அழகு தான்!" என்றாள் அவள்.

"நிஜமாகவா?"

"இல்லே, பொய்ய்ய்யா......" கௌரிக்குச் சிரிப்பு சிரிப்பாக வந்தது. "உங்களுக்குப் பைத்தியம் தான். அது இருக்கட்டும்......" என்று அவள் பேச்சை மாற்றிவிட்டாள்.

இருவரும் சிரித்துக் கொண்டே ஏதேதோ பேசியவாறு வீடு திரும்பினார்கள்.

"மாமி!" என்று ஆசையுடன் கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்த கௌரியை, நாகலக்ஷ்மி அம்மாள் சிரித்த முகத்துடன் எதிர் கொண்டாள்.

"மாமி, நீங்கள் வராமல் இருந்துவிட்டீர்களே, எப்படி இருந்தது தெரியுமா பீச்சில்!" என்றாள் கௌரி.

அவள் மாமியார் அவளைப் பார்த்த பார்வை, சுந்தரத்தை 'ஓ' வென்று சிரிக்கச் செய்தது மல்லாமல், கௌரியையும் வேகமாகச் சமையலறைக்குத் தள்ளிற்று.

"எத்தனை நேரமடா?" என்று போலிக் கோபத்துடன் சுந்தரத்தைக் கடிந்து கொண்டார் அவன் தகப்பனார். சிரித்த முகத்துடன் அவன் கௌரியை நோக்கினான். அவள் அங்கே இருந்தால் தானே!

இதை யெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது, சுந்தரத்தின் உள்ளம் நிம்மதி அடைந்து, மகிழ்வெய்தி, சந்தோஷமாக நாட்டியமாடுவதற்குப் பதிலாக, கண்டபடி யோசிக்க ஆரம்பித்தது. 'இவ்வளவு நன்றாக இருக்கிறதே நம் குடும்பம், இது எவ்வளவு அழகானது? இந்த அழகெல்லாம் வெறும் மேல் வேஷமே அல்லவோ? நாம் கேட்ட கேள்விக்கு, கௌரி சிரிக்கத்தானே செய்தாள்? நேராக மறு மொழி கூறினாளா? 'இதென்ன கேள்வி?' என்று பதில் கேள்விதானே கேட்டாள்?

''சுந்தர், உன்னை நான் எவ்வளவு நேசிக்கிறேன் என்று எப்படி என்றால் கூற இயலும்?' என்று சொல்லவோ, அல்லது என் சம்சயத்தைப் புரிந்து கொண்டு, அதைத் தெளிவிக்கவோ ஏன் முயலவில்லை? பேச்சை மாற்றினாள், புன்னகை பூத்தாள். முக்கியமான ஒரு சமயத்தில் அது தானே சரியான மனோபாவம்?'

சுந்தரத்தின் யோசனைகள் கட்டுக்கு அடங்காமல் வெகு தூரம் சென்றன. எதை நிந்திப்பது—விதியையா, கௌரியின் குணத்தையா, சுந்தரத்தின் புத்தியையா?

ஒன்றும் புரியாமல் மனத்தைக் குழப்பிக் கொண்டு, தூக்கமும் வராமல் புரண்டு கொண்டிருந்தான் சுந்தரம். அவன் அருகில் கௌரி நிர்மல மனத்துடன் நிம்மதியாகத் தூங்கினாள். அவளது மெல்லிய கை, மங்கிய வெளிச்சத்தில் வாழைத் தண்டைப் போல் பளபளவென்று மின்ன, சுந்தரம் அவள் கை வளையல்களை இப்படியும் அப்படியும் தள்ளி விளையாடியவாறே ஆலோசித்துக்கொண்டிருந்தான்.

"சுந்தர், சுந்தர்!" என்று முணு முணுத்தது, கௌரியின் வாய். அதைக் கேட்டு அவன் யோசனை விமானம் ஒரு கணம் தாமதித்தது.

"கௌரி......என்......"

அதற்குள் அவளது ஒரு கை அவன் கழுத்தைச் சுற்றிக் கொள்ள, அவன் எல்லாவற்றையும் மறக்கச் சித்தமானான்.

ஆனால் அவன் மனத்தில் எழுந்த புயல் ஓய்ந்ததா?

## 21

## உமாவின் பிரதிக்ஞை

அனைவரும் பேச்சு வன்மையால் கட்டுண்டு, மெய்ம் மறந்து, வாய் திறந்து பிரசங்கியின் கர்ஜனையைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அவர் பேசியது அங்கே குழுமியிருந்த எல்லோரையும் ஓர் ஆட்டு ஆட்டி, தன் ஆதிக்கத்தில் அவர்களுடைய எண்ணங்கள், உணர்ச்சிகள் யாவற்றையும் அடித்துச் சென்றது.

உமாவும், தன் கூடப் படிப்பவர்களான மற்ற ஹைஸ்கூல் மாணவிகளுடன் தன்னை மறந்து அச் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்தாள். பிரசங்கம் முடிந்ததுமே கரகோஷம் பலத்துக் கொண்டே போயிற்று. உமாவின் கண்களில் நீர் தேங்கிற்று. அவளுடைய சிநேகிதிகளில் சிலர், உணர்ச்சி யற்றுப் பிரிந்து சென்றனர். மற்றும் சிலர் அவளுடன் மேடை மீது ஏறிப் பிரசங்கியாரைச் சூழ்ந்து கொண்டனர். இவர்களைப் போலவே

இன்னும் எத்தனையோ மாணவிகள், மாணவர்கள் அங்கே நெருங்கி, அந்த மனிதரைப் பிரச்னை மேல் பிரச்னை கேட்டுத் திணற அடித்துக் கொண்டிருந்தனர்.

அச்சமயம் உமாவின் உள்ளத்தில் ஓர் அமைதி குடி கொண்டது. தன் வாழ்க்கை இனி எந்தப் பாதையில் செல்ல வேண்டும் என்பதை நன்கு அறிந்து விட்டதாக அவள் திடம் கொண்டாள். இனி சமூக சேவையே தனது வாழ்க்கையின் குறிக்கோள், அதுவே தன் உயிர் நாடி என்று உறுதி கொண்டு, அன்றே, அந்த இடத்திலேயே, சமூக சேவை செய்வதிலேயே தன் ஆவி, உயிர், உள்ளத்துடன் ஈடுபடுவதாக அவள் திடமான பிரதிக்ஞை செய்து கொண்டாள்.

அவள் மனம் ஒரு விநாடியும் சூன்யமாக இருக்காமலும், தன்னைச் சுற்றியுள்ள, அருவருப்பை அளிக்கும் விஷயங்களைக் கவனிக்காமல் இருக்கவும் இப்புதிய உத்தியோகம் சஞ்சீவியாக ஏற்பட்டது. உமாவுக்கு எப்போதும் சேரிகளைப் பற்றியும், சமூக சேவை, இலவசக் கல்வி புகட்டுதல் இவை போன்ற இன்னும் பல்வேறு எண்ணங்கள் தவிர, வேறு எதுவும் புலப்படவில்லை. தானாகக் காதலித்துத் தனக்கென்று விரித்துக்கொண்டு விட்ட பாதையிலேயே அவள் கண்ணும் கருத்துமாக இருக்க, வெளி உலகத்தின் வேறு யாதொரு நடவடிக்கையும் அவளது திருஷ்டியில் விழவில்லை. சுபாவத்தில் மிகவும் நுட்பமான பார்வையையுடைய அவள், இப்பொழுது அத்தனை தீட்சண்யமும் தன் காரியத்திலேயே செலுத்தப்பட்டுவிட, தன்னைச் சுற்றி யிருக்கும் எந்தப் பொருளையும், தன் காரியத்திற்குப் புறம்பான எந்த விஷயத்தையும் கவனிக்கவில்லை. இதன் காரணமாகவே அவளால் கௌரி, சுந்தரம் முதலியவர்களைக் கூடக் கவனிக்க முடியவில்லை.

இதுவும் சுந்தரத்தின் அதிருஷ்டமோ, அல்லது துரதிருஷ்டமோ? இல்லா விட்டால் அவளுக்குச் சுந்தரத்திடமிருந்த சிநேக பாவத்திற்கும், கௌரியிடமிருந்த வாத்ஸல்யத்திற்கும், சுந்தரம் ஏதோ ஒன்றை நினைத்து மனத்தை அலைத்துக் கொள்ளுகிறான் என்பதை ஒரு நொடிப் பொழுதில் அவள் ஊகித்துவிட்டிருப்பாள். அதை மேலும் ஆராய்ந்து, அதைப் போக்க ஏதாவது வழியையும்

தேட முயன்றிருப்பாள். ஆனால் இப்பொழுது அவளுக்கிருந்த புது ஆர்வத்தில், அவள் அவர்களைப் பார்க்கும் போதெல்லாம் அவர்கள் சிரித்துப் பேசுவது தான் அவள் கண்ணில் பட்டது. அவர்களிடையே இருந்த, அவர்களுக்கே புரிபடாத, அந்த ஒரு சந்தேக உணர்ச்சி அவள் கண்களுக்கோ, மனத்திற்கோ புலப் படவில்லை.

## 22

## மனத்தாங்கலும் மருந்தும்

மாலை மணி ஆறு.

"கோவிலுக்கு வருகிறாயா, கௌரி?" என்று கேட்டாள் நாகலக்ஷ்மி அம்மாள்,

"இல்லை, மாமி. நான் அந்த வீட்டுக்குப் போய்விட்டு வருகிறேன்."

சுந்தரம் அதைக் கேட்டுக் கொண்டே அங்கே வந்தான். நாகலக்ஷ்மி அம்மாள் சமையலறைக்குச் சென்றாள்.

"நான் தனியாக இருக்கப் போகிறேன் என்று தெரியுமோ இல்லையோ?" என்று கேட்டான் அவன்.

"ஏன், ரொம்ப பயமாக இருக்குமோ?" என்றாள் கௌரி, கலகலவென்று சிரித்துக் கொண்டே.

"ஆமாம்" என்று அவனும் சிரிப்பில் கலந்து கொண்டான்.

"நான் இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, எதிர் வீட்டிற்கு ஓடிச் சென்றாள் கௌரி.

அங்கே சமையலறையில் உமா, லலிதா, பாலு மூன்று பேருக்கும் காமாக்ஷி அம்மாள் கையில் சாதம் பிசைந்து போட்டுக் கொண்டிருந்தாள். கௌரி வருவதைப் பார்த்து அவர்கள் எல்லோரும் அவளைச் சிரித்த முகத்துடன் வரவேற்றனர். கௌரியும் போய் அங்கே உட்கார்ந்து அவர்களுடன் பேசலானாள். எங்கேயோ அடக்கி வைத்திருந்ததை எல்லாம் வெளியே கொட்டுவதுபோல், பாலு மேலே மேலே சமாசாரங்களை அடுக்கினான். உமா தன்னுடைய புது சேவைத் தொழிலைப் பற்றியும், தான் செல்லும் இடங்களைப் பற்றியும் விஸ்தாரமாகப் பேச ஆரம்பித்தாள். லலிதா தன் பள்ளிக்கூடத்தைப் பற்றிக் கதை அளந்தாள்.

கௌரி எல்லோருடைய வார்த்தைகளையும் பொறுமையாகச் சுவாரஸ்யத்துடன் கேட்டாள். உமாவும் ஒரு விஷயத்தில் இவ்வளவு ஆர்வம் வைத்துப் பேசுகிருளே என்று இறும்பூது கொண்டாள் தமக்கை. அவர்கள் எல்லோரும் அக்கா கௌரி வீட்டில் இல்லாததை உணர்ந்து எவ்வளவு வருந்துகிருர்கள் என்பது அவர்களது ஒவ்வொரு வார்த்தையிலேயும், அவர்கள் அளவளாவிப் பேசும் தொனியிலேயும் தெரிந்தது. அவள் பகல் வேளைகளில் வரும்போது அவர்கள் வீட்டில் இருப்பதில்லை, அவர்களைப் பார்க்க முடிவதில்லை. இதுதான் அவர்கள் எல்லோரும் ஒன்று கூடி வீட்டில் தங்கும் நேரம். ஆனல் இதுதானே சுந்தரம் அகத்திற்குத் திரும்பும் நேரமும்? மாமனர் சந்தியா வந்தன சமயம், மாமியார் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வேளை, கோவிலுக்குப் போகும் நேரமும் இதுதானே!

'கோவிலுக்கு...ஓ மறந்து விட்டோமே!...' கணீர் கணீரென்று கூடத்துக் கடிகாரம் ஏழு மணி அடித்தது. 'ஒரு மணி நேரமா இருந்து விட்டோம்? அவர் காத்திருப்பாரே! ஒரு நிமிஷத்தில் திரும்புவதாகச் சொல்லி விட்டு வந்தோமே!'

பாலு தன் கையில் கொடுத்த புத்தகத்தை அங்கேயே வைத்து விட்டு, கௌரி வேகமாகப் புக்ககத்தை நோக்கி ஓடினள். தம்பி, தங்கையர் ஒன்றும் புரியாமல் அவள் போகும் திக்கைப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

அவள் சிரித்துக் கொண்டே உள்ளே நுழையும்போது சுந்தரம் அவளை ஆவலுடன் கூப்பிடவில்லை. அவன் முகம் வெறிச்சென்றிருந்ததைக் கண்டு கௌரியின் முகம் மாறிவிட்டது. அவளைப் பார்த்ததுமே ஒன்றும் கூருமல் சுந்தரம் மேல் துண்டை உதறிப் போட்டுக் கொண்டே, "நான் கேசவ் வீட்டுக்குப் போய் விட்டு வருகிறேன்" என்று மாத்திரம் அவளை நேரே பார்க்காமல் கூறிவிட்டு, மறு பேச்சின்றி மடமடவென்று வாயிற்படி இறங்கி வெளியே சென்று விட்டான்.

கௌரி ஒன்றும் தோன்ருமல் நின்ற இடத்திலேயே கல்லாய்ச் சமைந்து விட்டாள். நெடு நேரம் கழித்து அவள் மாமனர் வந்த பிறகுதான் அவள் விழிப்படைந்து அவருக்குச் சுசுருஷை செய்யத் தொடங்கினள்.

வாயிற்படியை விட்டுக் கீழே இறங்கிய சுந்தரம் சுய ஞாபகமே இல்லாமல் கனவில் நடப்பவன்போல் காணப்பட்டான். அவனது நெற்றி மடிப்புற்று, ஆழ்ந்த சிந்தனையைக் காட்டிற்று.

'இது முதல் தடவை அல்ல. என்னுடன் தனியாக இருக்க எப்பொழுதுமே அவள் அஞ்சுகிறாள். இல்லாவிட்டால், ஒரு நாள் முழுவதும் நான் வீட்டில் இருப்பதில்லையே, அப்பொழுது போகிறது தானே பிறந்தகத்துக்கு? அவள் யார் மனத்தை அறிந்து அதன்படி நடந்தால் எனக்கென்னவாயிற்று? என் மனம் அவளுக்குத் தெரியவில்லை. ஆனால் நிஜமான அன்பு இருந்தால்தானே அவளுக்குத் தெரியப் போகிறது? நமக்கோ என்றால் அவளை எப்பொழுது காணப் போகிறோம் என்று உள்ளம் துடிக்கிறது. அவளோ ஒவ்வொரு சமயமும் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாள். ஆமாம், அவள் வரையில் நான் பழைய சுந்தரம் தானே? அன்று தான் அவள் வாய் கூசாமல் கூறினாளே: "அத்தகைய தியாகம் செய்ய நான் என்ன நளாயினி காலத்தில் பிறந்த பெண்மணி என்று நினைத்தீர்களோ?" என்று.'

கௌரியின் போதாத காலம், அவளுடைய வார்த்தை ஒவ்வொன்றும் சுந்தரத்தின் மனத்தில் தவறாகவே பதிந்து எதிரொலி செய்தது.

"ஹல்லோ, வாடா, வா! உன்னைக் காண்பதே குதிரைக் கொம்பாக இருக்கிறதே!" என்று ஆவலுடன் எதிர்கொண்டு அழைத்த கேசவராவின் குரல் சுந்தரத்தின் மன வேதனைக்கு முற்றுப் புள்ளி வைத்தது.

சுந்தரம் திரும்பிப் பார்த்ததும் கேசவராவ் முகத்தை ஒரு வாறு வைத்துக் கொண்டான். "உனக்குச் சமாசாரம் தெரியுமோ இல்லையோ?" என்று அவன் கேட்டான், ஒரு நூதனக் குரலில்.

சுந்தரத்திற்கு ஒன்றும் புரியவில்லை. "என்னடா, என்ன சமாசாரம்?" என்று அவன் ஆவலுடன் திருப்பிக் கேட்டான்.

## 23

## கேசவராவின் கேலி

"அட, உனக்குத் தெரியாது என்றா சொல்லுகிறாய்? நீயோ என்னை இப்பொழுது கவனிக்கிறதே இல்லை. மேலும் உங்கள் வீட்டுக்கு இரண்டு நாள் வந்தேன். அங்கே மிஸஸ் சுந்தரம் வந்து,

'அவர் சாயங்காலம் ஆறு மணிக்குத்தான் வருவார்' என்று பதில் கூறியதும், என் மனத்திலும் விவரிக்க முடியாத ஓர் ஏக்கம் குடிகொண்டது."

"போதுமடா உன் கதை, உன் சமாசாரத்தைச் சொல்லேன்."

"என் பேச்சைக் கேட்டாலே பிடிக்காமல் போய்விட்டதா உனக்கு? சரி, சரி, அப்படித்தான் இருக்கும். எதுவுமே பிடிக்காது......"

சுந்தரம் கேசவராவின் தோளின்மேல் போட்டிருந்த கையை எடுத்து, அவன் முதுகில் பளீர் என்று அறைந்தான்.

"அம்மாடி...ஆம், காரணமில்லாமல் கோபங்கூட வரும்..."

"சரிடா, நீ ஆரம்பித்த கதையைச் சொல்லேன்."

"ஓகோ, எங்கே விட்டேன்?"

"கௌரி சொன்னாள்..."

"ஆ, அப்புறம் கிடுகிடென்று ஓடிப் போய் அந்த ரதியைப் பார்த்து விட்டு வந்தேன்..."

"என்னடா உளறுகிறாய்?"

"...அப்படியே விவாகத்துக்குச் சம்மதித்து, என் அப்பா, அம்மாவைத் திணற அடித்து விட்டேன் போயேன்."

"அப்படி என்றால் உனக்குக் கல்யாணமா? எப்பொழுது? அட தடியா, இத்தனை நாளாக ஏன் என்னிடம் சொல்லவில்லை? உன் முகத்தை அப்படி வைத்துக் கொண்டு ஆரம்பித்ததைப் பார்த்தால்..."

"சொல்லுவதற்கு ரொம்பவும் அவகாசம் கொடுத்து விட்டாயாக்கும்! நீ எங்கே அப்பா என்னைக் கவனிக்கிறாய்?"

"நீயும் நாளைக்கு அப்படித் தானே..."

"பின் எதற்காகவாம் எனக்கு இப்பொழுது கல்யாணம்? நீ வந்து வந்து நில்லேன், ஒருதரங்கூட உன் கையிலே அகப்பட மாட்டேன். ஆமாம், உன்னைப் பழிக்குப் பழி வாங்குகிறேனா இல்லையா பார்."

"அப்பொழுது நான் உன்னைப் போல் ஓடிப்போய் விடுவேன் என்று நினைக்கிறாயோ? அதுதான் இல்லை. அங்கேயே வாசற்படியிலேயே சத்தியாக்கிரகம் செய்ய மாட்டேனா?"

"வேண்டாம், வேண்டாம். அப்புறம் உன் தலைக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடப் போகிறது."

"அது இருக்கட்டும், பெண் எப்படி இருக்கிறாள்?"

"எப்படி இருக்கிறாள் என்று என்னைக் கேட்கிறாயே, எனக்கு எப்படி இருப்பாள்?"

"சரிதானடா!...போட்டோ இருக்கிறதா?"

"இருக்கிறது, வா, காண்பிக்கிறேன்."

"உன்னைப் பார்த்து எப்படியடா ஒரு பெண் கல்யாணத்துக்கு ஒத்துக் கொண்டது?" என்றான் சுந்தரம்.

கேசவராவ் செக்கச் செவேலென்ற நிறமும், கறுத்த கிராப்புத் தலையும், தீர்மையான மூக்குமாக வெகு அழகாக இருப்பான் ஆதலால் அவன் சுந்தரத்தின் வார்த்தையை ரசிக்கவே செய்தான். "உன்னுடன் இத்தனை வருஷம் பழகிப் பார்த்த பிறகுகூட ஒரு பெண் உன்னை மணந்து கொண்டாளே, அதைக் காட்டிலுமா?" என்று பதிலளித்தான்.

"பெண்ணைப் பார்க்க என்னை அழைத்துக் கொண்டு போகக் கூடாதா?"

"எதற்கப்பா, சிவ பூஜையில் கரடி புகுந்ததுபோல்? என் கால் நொண்டி, கண் குருடு எல்லாம் எடுத்துக் காட்டவா?"

கலகலவென்று சிரித்தார்கள் இரு நண்பர்களும்.

"அது இல்லையடா. நான் பெரியவனாக லட்சணமாக வந்திருப்பேன். நீ சிறு பிள்ளைத்தனமாக ஒன்றும் நடந்து கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமோ இல்லையோ?"

"தாத்தா, உங்களுக்கு என்ன வயது?"

"இருபத்திரண்டு."

"எனக்கு இருபத்து மூன்று, ஞாபகம் இருக்கட்டும்."

"என்ன இருந்தாலும் எனக்கு அநுபவம் அதிகமல்லவா?"

"பலத்த அநுபவம்! பூ, இது என்னப்பா உன்னைப்போலக் காதல் விவாகமா? சும்மா, பட்டிக்காடு மாதிரி பெண் பார்ப்பதும்..."

"அவள் என்னடா, ராக்கிடி, குச்சு, கால் கொலுசு எல்லாம் அணிந்திருந்தாளா? உன்னைக் கண்டதுமே நமஸ்காரம் செய்தாளா?" என்று கேட்டான் சுந்தரம். அவனுக்கு அந்த விவகாரமே ஒன்றும் தெரியாததால் அவன் ஆவலுடன் கேட்டான்.

இரண்டு வருடங்களுக்கு முன் பஞ்சநதம் சாரதாவைப் பார்க்க வந்திருந்தபோது, அவனும் உமாவும் சினிமாவுக்குப் போய்விட்டிருந்தது அவனுக்கு ஞாபகம் இருந்தது. அப்பொழுது இதிலெல்லாம் என்ன உற்சாகம்? "எல்லாம் விவரமாகச் சொல்லேன்" என்று அவன் மீண்டும் வற்புறுத்தினன். கேசவராவும் விவரித்துக் கொண்டே போனன்.

"ஆமாம், அவள் ராக்கிடி அலங்காரம் செய்து கொண்டு வந்து அப்படியே 'காலைத் தூக்கி' என்ற பாட்டுக்கு அபிநயம் பிடித்து ஆடிவிட்டு, என் காலில் விழுந்து பெருமூச் செறிந்து, கடைக் கண்ணுல்..."

"என்னடா, நீ சரியாகச் சொல்லப் போகிருயா, நான் எழுந்து போகட்டுமா?"

"வேண்டாம், கோபித்துக் கொள்ளாதே, இதோ சொல்லுகிறேன். நான் போனேனு..."

"நீதான் போனுயே, சொல்லேன்."

"நான் போனேன். கூட அம்மா, அப்பா, சிற்றப்பாவும் வந்தார்கள். நாங்கள் உள்ளே நுழைந்ததும், அந்தப் பெண்ணின் தகப்பனர் வந்து எங்களை அழைத்துப் போய் ஹாலில் சோபாவில் உட்கார வைத்தார். அம்மா உள்ளே சென்ருள். அவர் பம்பாயைப் பற்றிப் பேசினர். அப்பா சென்னையைப் பற்றிப் பேசினர். இவர்கள் இப்படியே பேசிக் கொண்டிருக்க, நான் இப்படியும், அப்படியும், ஜன்னலையும், கதவையும் கண்களால் துழாவினேன். எங்காவது யாராவது என்னைத் திருட்டுத்தனமாகப் பார்க்கிருர்களோ என்பது என் யோசனை."

"அப்படியெல்லாம் யாராவது நின்று நிதானித்துப் பார்த்திருந்தால் உனக்கேது கல்யாணம் ஆகிறது?"

"அதுதானே வேடிக்கை. நான் நேரே நிமிர்ந்து நோக்கினேன். அங்கே மாட்டியிருந்த நிலைக் கண்ணுடியில் நன்ருகத் தெரிந்தது ஒரு வடிவம். என்னையே பார்த்துக் கொண்டிருந்த அவள், நான் பார்க்கவும் மறைந்து விட்டாள்."

"பேஷ், பேஷ்... பத்மினி..."

"பிறகு அவளை எங்கள் முன் அழைத்து வந்தார்கள். அவள் அப்பாவுக்கும், சிற்றப்பாவுக்கும் நமஸ்கரித்து விட்டு நின்ருள். என்னை வணங்கலாமா, கூடாதா என்ற சந்தேகம் போலே இருக்

கிறது. பிறகு அவள் தகப்பனர், 'இப்படி உட்காரம்மா' என்று கூறி அவளைத் தம் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். என் தகப்பனர், 'என்ன படிக்கிருள், பாடத் தெரியுமா?' என்று கேட்க, அவளே பதில் கூறினள்.

"பாடுகிருளா? என்ன படித்திருக்கிருள்?"

"சொல்லிக் கொண்டே வருகிறேனே? 'கேம்ப்ரிட்ஜ்' பாஸ் செய்திருக்கிருளாம். வீணை வாசிப்பாளாம்."

"இப்பொழுது யாருக்கடா நவ நாகரிகக் கல்யாணம்! நீ பேசவில்லையா?"

"இல்லையப்பா."

கேசவராவ் அந்தப் பெண்ணின் போட்டோவை வாங்கி வர உள்ளே சென்ருன். தாயை நோக்கி, "எங்கே, அம்மா, அந்தப் போட்டோ?" என்று கேட்டான்.

"உன் அத்தைக்குக் காண்பிக்கக் கொண்டு போனர் உன் அப்பா."

அந்தப் பதிலைக் கேட்டு விட்டு, சுந்தரத்தினிடம் வந்து கையை விரித்தான் கேசவராவ். சுந்தரம் சிரித்து விட்டு, "எனக்கு அதிருஷ்டம் இல்லை போலிருக்கிறது" என்ருன். மேலும், "அவர்கள் எந்த ஊர்?" என்று கேட்டான்.

"இந்தப் பக்கந்தான். ஆனல் அவர்கள் வெகு நாளாகப் பம்பாயிலேயே இருந்தார்களாம். இப்பொழுது இந்தப் பெண்ணின் கல்யாணத்திற்காகத்தான் இந்தப் பக்கம் வந்தார்களாம்."

"ஓகோ, புதிய மனிதர்களோ?"

"ரொம்பவும் புதிது."

சுந்தரம் பிறகு பல்வேறு விஷயங்களை அளவளாவிப் பேசி விட்டு வீடு திரும்பினன். அவனுக்கு எப்பொழுதுமே கேசவராவின் சம்பாஷணையைக் கேட்டால் உயர்ந்த டானிக் சாப்பிட்டாற்போல் உடலில் ஒரு சுறுசுறுப்பும் தெம்பும் ஏற்படுவது வழக்கம். அத்தனை சக்தி வாய்ந்தது கேசவராவின் நகைச்சுவை. எதைப் பற்றியுமே அவன் வேடிக்கை இல்லாமல் பேசியது கிடையாது. எந்தப் பெரிய விஷயத்தையும் சிரித்து லேசாகத் தட்டிக் கழிக்கும் சுபாவம் அவனுக்கு. அவனுக்கும் கல்யாணம். அவனது வாழ்க்கைத் துணைவி எப்படி இருப்பாளோ? அவன் பிற்காலமும் இப்படியே ஹாஸ்யமாகக் கழியுமா?

சுந்தரத்தின் இருதயத்திலிருந்து சிறிது ஏக்கம் தோய்ந்த பெருமூச்சு மெல்ல வெளி வந்தது. தன் வாழ்க்கை என்ன வாயிற்று? கௌரியும் தானும் சில்லறைச் சச்சரவுகூட இல்லாத ஆனந்த வாழ்க்கை நடத்தப் போவதாக மனக்கோட்டை கட்டிய அவன் கனவுகள் எங்கே சென்றன? இதற்குள் இரண்டு, மூன்று தடவை அவன் அவளைச் சினந்து கொண்டு விட்டான். அதற்கு யார் ஜவாப்தாரி? இல்லாத இடத்தில் இருப்பதுபோல் ஐயத்தை உண்டாக்கிக் கொண்டது அவனது கற்பனையா? எல்லோர் வாழ்விலும் காதல்தான் முக்கியத்துவம் பெறுகிறதா? அவள் தனக்காகச் சந்தோஷமாகத் தியாகம் செய்யும்போது அதைத் தான் ஏன் ஏற்றுக் கொண்டு நிம்மதியாக வாழக்கூடாது? அநாவசியமாக மனத்தைக் குட்டையாகக் கலக்கிக் கொண்டு ஏன் திரிய வேண்டும்? நடந்தது நடந்து விட்டது. இனிமேல்...

அவன் வாயிலிருந்து ஒரு வறண்ட சிரிப்பு வெளி வந்தது. இதையா அவன் எதிர் பார்த்தான்! யார் அவளை அப்படித் தியாகம் செய்யச் சொன்னார்கள்? இப்படித் தன் நிம்மதியை இழக்கும்படிச் செய்ய அவளுக்கு என்ன உரிமை?

சுந்தரத்தின் பற்கள், கடித்து, கெட்டியாகி, கன்னத்தின் எலும்புகள் வெளியே தோன்றும்படி நின்றன.

'அவளுக்கு என்பேரில் நிஜமான பிரியம் இருந்தால் இத்தனை நேரம் துடியாகத் துடித்துக் கொண்டிருக்க மாட்டாளா? அவள் முகத்தைப் பார்த்தால் தானே தெரிகிறது.'

சுந்தரத்தின் அர்த்தமற்ற சினம் கௌரியை ஒரு பயங்கரப் பரீட்சைக்கு ஆளாக்கி விட்டது. அவள் முகத்தைத் தேடியவாறே சுந்தரம் வீட்டிற்குள் நுழைந்தான்.

## 24

## ஒரு நாள் இரவு

"என்ன அக்கா உடம்பு உனக்கு, பேசவே மாட்டேன் என்கிறயே?" என்று பாலு கேட்டதும், திரும்பி அவனை நோக்கினாள் கௌரி. எத்தனை நேரந்தான் அவள் அப்படியே படுத்துக் கொண்டு இருந்தாளோ, அவளுக்குத் தெரியாது. அன்று மாலை நடந்த மனஸ்தாபத்திலிருந்து அவள் மனம் வேதனைப் பட்டுப் பட்டு, புண்ணாகி இருந்தது. என்றும் கண்களில் ஜலமே விடாத

கௌரியும் அன்று தன்னையும் மீறி அழுது விட்டாள். தலையெல்லாம் கனத்து, வலி கூட எடுக்க ஆரம்பித்து விட்டது அவளுக்கு. சுந்தரமும் இப்படிக் கோபித்துக் கொள்ளுவான் என்பது இன்னும் அவள் மனத்திற்குப் பிடிபடவில்லை.

'என்ன இருந்தாலும் நாம் அவருடன் ரொம்பப் பழகி இருக்கிறேமா என்ன? சாரதாவுக்காவது நெருங்கி விளையாடி நன்றாகத் தெரியும்!'

"என்ன அக்கா, பேசவே மாட்டேன் என்கிறயே?" என்று மறுபடியும் கேட்டான் பாலு.

"ஒன்றுமில்லையடா, தூங்கி விட்டேன். இன்னும் தூக்கம் கலையவில்லை."

"நீ மத்தியான்னத்தில் கூடத் தூங்கமாட்டாயே, இத்தனை நேரம் கழித்து எப்படித் தூங்கிறய்?"

"தலைவலி."

"ஏன்?...அக்கா, நான் பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போது நீ முன்போல் வந்து என் பையை வாங்கிக் கொள்ளா விட்டால் நன்றாகவே இல்லை. உனக்கு ஒருவேளை ஜுரமோ என்று பயம் தோன்றுகிறது. இனிமேல் நீ இருக்கமாட்டாய் இல்லையா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லையடா, கண்ணு. எதிர் வீடுதானே, நீ தினமும் பள்ளிக்கூடத்திலிருந்து இங்கேயே வந்து விடு. ஆமாம்...?" கடிகாரத்தில் ஏதோ மணி அடித்த சத்தத்தைக் கேட்ட கௌரி திடீரென்று விழிப்படைந்தாள். "ஆமாம்...கீழே மாமா இருக்கிறரா? என்ன செய்கிறர்? நீ வந்து ரொம்ப நேரம் ஆகிறதா? இப்பொழுது என்ன மணி?"

அவள் பதற்றத்தையும், குரலின் பயத்தையும் கவனித்த பாலுவும் பயந்து விட்டான். "ஏன் அக்கா, என்ன? எனக்குச் சொல்லேன்" என்று கேட்டான்.

கௌரி தன்னைச் சமாளித்துக் கொண்டாள். சிரித்துக் கொண்டே, "மாமாவுக்குச் சாதம் போட வேண்டும், அதற்குத் தான் கேட்டேன்" என்றள்.

"மணி எட்டாகிறது. மாமா வாசல் வராந்தாவில் அப்பாவோடு பேசிக் கொண்டிருக்கிறர். நான் இப்பொழுதுதான் வந்தேன், உன்னைப் பார்க்க."

"கீழே இன்னும் யாரும் இல்லையா?"

"இல்லை ... அக்கா, அப்புறம் அந்தாத்துக்கு வரமாட்டாயா?"

"நாளைக்கு வருகிறேன்."

"தலைவலி என்றாயே, இன்று கூடவா...?" என்று கூறிய பாலுவை நோக்கினாள் கௌரி. "ஒரு தலைவலி மாத்திரையை வாங்கி வருகிறாயா?" என்று கேட்டாள்.

"அந்தாத்தில் இருக்கிறதே, கொண்டு வருகிறேன்" என்று கூறிக் கொண்டே, பாலு ஓடினான், தமக்கையின் ஏவலைச் செய்ய.

கௌரி தலையை வாரிக் கொண்டு கீழே இறங்கினாள். பாலு கொண்டு வந்த தலைவலி மாத்திரையுடன் காபியைக் குடித்து விட்டு, பின் புறம் சென்று முகத்தை அலம்பினாள். சில்லென்ற ஜலம் படவும் முகத்தின் சூடு குறைவது போல் இருந்தது அவளுக்கு. தண்ணீரை எடுத்து வாரி வாரி முகத்தில் அறைந்து கொண்டாள். பிறகு நன்றாகத் தேய்த்து அலம்பிவிட்டு, துடைத்துக்கொண்டு கண்ணாடியில் பார்த்தாள். கண்கள் லேசாகச் சிவந்து இருப்பது தவிர அவள் அழுததன் ஜாடை ஒன்றும் தெரியவில்லை. பொட்டு இட்டுக்கொண்டு மீண்டும் ஒரு முறை முகத்தைப் பரீட்சித்தாள்.

'யாராவது என் கண்களைப் பார்த்தால்...குழந்தை மாதிரி... கேலித்தனம் என்று நினைக்கமாட்டார்களா? சுந்தர் பார்த்தால் கோபம் இன்னும் அதிகரிக்கும்' என்று பலவாறு எண்ணமிட்டுக் கொண்டு சற்று நின்றாள். வாசலிலிருந்து வீசிய மாலைக் காற்று அவள் மேல் பட அவளுக்குத் தெம்பு வந்தது. தலைவலியும் கொஞ்சம் கொஞ்சமாக மறைய ஆரம்பித்தது.

தன் உருவத்தைக் கண்டு திருப்தி அடைந்தவளாய்ப் புறக் கடைக் கதவைச் சாத்தி விட்டு உள்ளே திரும்பினாள் கௌரி. சாப்பிட இலைகள், மணைகள் போட்டு, கூஜாக்களில் தீர்த்தம் எடுத்து வைத்து விட்டு, மாமாவும் கணவனும் சாப்பாட்டிற்கு வரக் காத்துக் கொண்டு உட்கார்ந்தாள். நாகலக்ஷ்மி அம்மாள் கோவிலி லிருந்து திரும்பி வந்தாள். கையில் வைத்திருந்த நெய்க் கிண்ணத் தைக் கௌரியிடம் கொடுத்துவிட்டுக் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்தாள். கௌரி எழுந்துசென்று கிண்ணத்தைச் சமயலறை யில் வைத்து விட்டுத் திரும்பி வந்து மாமியின் அருகில் நின்றாள்.

"எங்கே கௌரி அவன்?" என்று கேட்டாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"வெளியே போயிருக்கிறார்."

"எங்கேயும் போகப் போவதில்லை என்றானே?"

கௌரியின் மறைந்த துக்கம் மீண்டும் பிறிட்டுக் கொண்டு வரும் போல் இருந்தது. ஆயினும் சமாளித்துக் கொண்டு, சிரித்த முகத்துடன், "கேசவராவ் வீட்டுக்குப் போனார்" என்றாள்.

"சரி, இப்போது எங்கே வரப் போகிறான், காலையில்தான்."

"இதோ வந்து விட்டாரே" என்று எழுந்தாள், அப்பொழுது தான் உட்கார்ந்த கௌரி.

"உனக்கு நூறு ஆயுசடா!"

"ஏன் அம்மா?" என்று தாயின் அருகில் வந்து அமர்ந்தான் சுந்தரம். கௌரி எழுந்து சென்று விட்டதை அவன் பார்த்தும் பார்க்காதது போல் இருந்தான். உடனே அவன் தகப்பனாரும் அங்கு வந்து விடவே சாப்பிட எழுந்தான்.

சாப்பாடு முடிந்து எல்லோரும் படுக்கப் போகிற வரையி லும் அவன் கண்ணில் கௌரியின் முகம் அகப்படவில்லை.

பாலும் தீர்த்தமும் கையில் எடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தாள் கௌரி. சுந்தரம், தான் படித்துக் கொண்டிருந்த பத்திரிகையை அப்படியே கட்டிலில் வைத்துவிட்டு அவளை நோக்கினான். அவள் அதைக் கவனித்து, அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கதவைத் தாளிட்டாள்.

'அழுது, அழுது கண்ணே போய்விடும் என்று நினைத் தோமே! எனக்குக் கோபம் என்று அவளுக்குத் தெரியாதா? தான் சீக்கிரம் வரவில்லையே என்பதற்கு ஒரு மன்னிப்புக் கேட்டுக் கொள்ள மாட்டாளா? திடீரென்று வெளியே போய் விட்டாயே என்று ஒரு கேள்வி தான் கேட்க மாட்டாளா? தான் ஓடியதன் காரணம் நான் தெரிந்து கொண்டு விட்டேன் என்று அறிந்து என்னிடம் சிரித்து மழுப்பப் பார்க்கிறாளே!' சுந்தரம் தன் புத்தி யைக் கோணல் வழியில் செலுத்தினான். கௌரியிடம் ஒன்றுமே பேசாமல் திரும்பிப் படுத்துக் கொண்டான். தூக்கம் வராவிட் டாலும், கண்களை இறுக மூடிக்கொண்டான்.

பேதை கௌரியின் மார்பில் ஒரு பெரிய பாரம் அழுத்திற்று. அவள் மௌனமாக, படுக்கையில் இருந்த பத்திரிகையை எடுத்து வைத்து விட்டு விளக்கை அணைத்தாள். அவள் கண்களி லிருந்து இரண்டு முத்துக் கண்ணீர் கீழே சிந்திற்று. உதட்டைக்

கடித்துக் கொண்டு படுக்கையில் ஒரு மூலையில் தானும் படுத்துக் கொண்டாள்.

சுந்தரம் மெல்லக் கண்ணைத் திறந்து கௌரியின் பக்கம் நோக்கினன்.

'அவளுக்கு என்ன? தூங்குகிருள். சந்தோஷம் வேறு! பெண்களுக்கே அழுத்தமான மனசு......'

விதியின் விளையாட்டின் காரணமாக, இப்படியே சதிபதிகள் இருவரும் தூங்காமல் தங்கள் தங்கள் எண்ணங்களுக்கு அளவி லாது இடம் கொடுத்துக் கொண்டு, திக்கு முக்காடித் தவித்தனர்.



அடுத்த அறையில் நாகலக்ஷ்மி அம்மாளும் மகாலிங்கைய ரும் பேசிக் கொண்டிருந்தனர்.

"கௌரி அந்த வீட்டுக்குப் போனளா இன்று?" என்று கேட்டார் கணவர்.

"மத்தியான்னம் போகவில்லை. சாயங்காலம் போனளோ என்னவோ? இன்று சொல்லிக்கொண்டிருந்தாள் — மாலை போனல் தான் உமா, லலிதா, பாலுவைப் பார்க்க முடிகிறது என்று" என்று பதிலளித்தாள் மனைவி.

"பின்னே, ராமன் அவளை இன்றெல்லாம் பார்க்கவில்லை என்றுனே?"

"அவரைப் பார்க்காமல் ஓடி வந்து விட்டிருக்கும்."

"அகமுடையான் காத்துக் கொண்டு இருந்திருப்பான்."

"ஆமாம், ஆமாம்......நல்ல பிள்ளை! அவளை எங்காவது விட்டால்தானே?"

"ஏனடி, வேண்டுமென்று கேட்டுப் பண்ணிக் கொண்டிருக் கிருன்......"

"அதற்காக...இப்படியா? அப்பாவுக்கு ஏற்ற பிள்ளை தான்!"

"என்னை ஏன் சண்டைக்கு இழுக்கிருய்? நீ தான் அப்படி அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிருயாக்கும்."

"உங்களுக்கு அவன் இருப்பது தான் சரி என்று எண்ணம். இல்லையா? வாஸ்தவமாகச் சொல்லுங்கள்."

"உனக்கு மட்டுமோ?"

நாகலக்ஷ்மி அம்மாள் ஒன்றும் பதிலளிக்கவில்லை. அவர் எடுத்துக்காட்டியது போல் 'குழந்தைகள்' இருவரும் கூடிக் கூடிப் பேசுவது அவளுக்குப் பெருமையாகவும் சந்தோஷமாகவும் தான் இருந்தது.

"தூக்கம் வருகிறது" என்றாள் அவள் சம்பந்தம் இல்லாமல்.



"இன்றைக்கு..." என்று ஆரம்பித்தார் ராமையர்.

"இன்றைக்கு என்ன?" என்று கேட்டாள் அவர் சம்சாரம்.

"இன்றைக்குப் பூராவும் கௌரியைப் பார்க்கவேயில்லை."

"அவள் தான் இங்கே தலையைக் காட்டுவதே காணோமே."

"என்னடி, சிறிசுகள்-அப்படித்தான் இருக்கும்."

"ஆமாம், யார் இல்லை என்கிறார்கள்? சாயந்திரம் கொஞ்ச நாழிகை வந்திருந்தது. பசங்களும் வரவில்லையே என்று கேட்டதுகள்."

"சாயங்காலமா? பார்த்தாயா, வராமல் இருக்கமாட்டாளே."

"அது என்னவோ, அங்கேயே தான் ஐக்கியமாகி விட்டிருக்கிறாள். மாமியார் உத்தரவோ, அகமுடையான் ஆஞ்ஞையோ?"

"பாவம், அவர்களை ஏன் இழுக்கிறாய்? நான் கூட மகாலிங்கத்தினிடம் சொல்லிக்கொண்டிருக்கேன்."

"இல்லாவிட்டால்...இங்கே எப்பொழுதும் ஓடி விளையாடிக் கொண்டிருந்த சுந்தரம் கூடத் தலையே காட்டக் காணோமே. மாப்பிள்ளையாகி விட்டானோ இல்லையோ?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. அப்படி யெல்லாம் மாறி விடுபவர்கள் அவர்களல்ல."

"என்னவோ?" ஒரு பெரு மூச்செறிந்தாள் காமாக்ஷி அம்மாள். கௌரி ஒருத்தி இல்லாதது வீடே வெறிச் சென்று இருப்பது போல் தோன்றிற்று. ஒரு வேலையும் செய்யத் தெரிய வில்லை. எதிரகத்தில் இருந்தவாறு அடிக்கடி வரும்போதே இப்படி இருந்தால், அந்நிய இடத்தில் கொடுத்துவிட்டிருந்தால் என்ன செய்வாளோ? மேலும், சுந்தரம் முன்போல் வந்து தன் பக்கத்தில் உட்கார்ந்து பேசவில்லை என்ற குறை அவளுக்கு மிகவும் இருந்தது. மிகவும் ஆசைப்பட்டு வைத்திருந்த இரத்தி

னத்தைத் தட்டிக்கொண்டு போய் விட்டான் என்று கூடச் சில சமயம் காமாக்ஷி அம்மாளுக்கு மனத் தாங்கலாக இருந்தது. அந்தத் தொடர்ந்தே, நம் சுந்தரத்துக்கே அவளைக் கொடுத்தோம்; கௌரிக்கு ஏற்றவன் அவன் தான்; அவனுக்கு நிகர் அவள் என்று பெருமையாக எண்ணுவதும் உண்டு. எல்லாம் அவளது தாயுள்ளத்திலிருந்து எழுந்த ஏக்கமே ஒழிய வேறொன்றும் இல்லை.

ராமையர் தாம் ஆரம்பித்த பேச்சை அறவே மறந்துவிட்டுக் கையில் வைத்திருந்த புத்தகத்தைப் படிக்கலானார்.

## 25

## பிறந்த நாள்

எதிர் வீட்டிலிருந்து தம்பூரின் நாதம் லேசாக மிதந்து வந்தது. கௌரி கண்ணை விழித்துக் கொண்டு ஜன்னலருகே சென்று நோக்கினாள். உமா இப்பொழுது கௌரியின் அறையைத் தன்னுடையதாக ஆக்கிக் கொண்டிருந்தாள். கௌரி அந்த இன்னிசையைக் கேட்கும் போது தன் உடம்பில் ஓர் அமைதியும் திருப்தியும் பரவுவதை உணரலானாள்.

அப்பொழுது தான் தெருவில் சூரியன் பிரவேசித்துக் கொண்டிருந்தான். பக்ஷிகள் ஆனந்த அரவம் புரிந்து மரங்களிலிருந்து வெளியே பறந்தன. தெருவில் வாசலுக்குத் தண்ணீர் தெளிப்போரும், கோலமிடுவோரும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர். அந்த உரிமைக்குப் போட்டி இடுவது போல் பால்காரர்களும், மாடுகளும் வீதிகளில் நிறைந்திருந்தனர்.

ராத்திரிப் பாத்திரங்களைக் கையிலெடுத்துக் கொண்டு கீழே இறங்கப் போன கௌரி, அறைக் கதவைத் திறக்கு முன் ஒரு முறை அயர்ந்து உறங்கும் கணவனை நோக்கினாள்.

அவள் முகத்தில் பற்பல விதமான மாறுதல்கள் பரவி, கடைசியில் அவளது மலர் வதனம் நிர்மலமாக நின்றது. சுவரில் மாட்டியிருந்த மகாவிஷ்ணு படத்தைப் பார்த்து மௌனமாகப் பிரார்த்தனை செய்து விட்டு அவள் கீழே சென்றாள்.

காலை வேளையில் செய்ய வேண்டிய வழக்கமான வேலைகள் மேலே விடாது முன்னே வந்து நிற்க, கௌரி சுலோகங்களை முணுமுணுத்தவாறு அவைகளைச் செய்வதில் ஈடுபட்டாள். அவள்

காபி போட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் அவள் மாமனாரும், மாமியாரும் எழுந்து வர, அவர்களுக்கு ஜலம் எடுத்துக் கொடுக்கவும், மற்றும் சில சுசுரூஷைகள் செய்யவும் முன் சென்றாள்.

"நான் எழுந்து காபி போட மாட்டேனா? நீ ஏன் இவ்வளவு சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும்?" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள் பரிவாக.

"அப்புறம் எங்களுக்கு ஒரு வேலையும் செய்ய மறந்து விடும் போலிருக்கிறதே, இப்படி நீ ஒவ்வொன்றும் செய்து கொண்டிருந்தால்?" என்றார் மகாலிங்கையர்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை, மாமா. முன்னே எல்லாம் லலிதா செய்வாளே, அந்த மாதிரி நான் இப்பொழுது செய்கிறேன்" என்று கூறிச் சிரித்தாள் கௌரி.

"ஆமாம், முன்னே எல்லாம் இங்கேயே சுற்றுமே, இப்பொழுது வருகிறதே காணோமே?"

"அவள்தான் இப்பொழுது அம்மாவுக்கு உதவி. மேலும் பள்ளிக்கூடப் படிப்பு."

"மீதி நேரத்தில் நீ அங்கே போய் விடுகிறாய்!" என்று முடித்தாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

கௌரி சிரித்துக் கொண்டே சமயலறைப் பக்கம் சென்றாள். அவள் மனத்தில் ஒரு சிறு கலக்கம், கல் விழுந்த நீர்த் தேக்கம் போல் வட்டத்திற்குள் வட்டமாக ஏற்பட்டிருந்தது. மாமியும், மாமாவும் முன்போலவே இருந்தனர். அணுவளவும் மாறவில்லை. பின் யார் மாறினார்கள்? கௌரி மாறினாளா? இல்லையே, அவளும் முன் போலவேதான், யார் என்ன எப்படி வேண்டுகிறார்கள், யார் மனசு எந்த விதத்தில் வேலை செய்கிறது என்று ஊகித்து அவர்கள் இச்சைப்படி செய்வதையே தொழிலாகக் கொண்டிருந்தாளே? அம்மாவோ? அம்மா கொஞ்சம் மாறுதலடைந்துதான் இருக்கிறாள். முன்போல் இங்கே வருவதில்லை. ஏன்? வேலைதான் பாவம்! நாம் இங்கே வந்து விடவே, மாமிக்குப் பொழுது இருக்கிறது. அங்கே போகிறாள். அப்பா? அப்பாவைப் போல் கூட ஒருவர் இருப்பாரா? தாமரை இலைமேல் நீர்த் துளி எனச் சொல்வது அவருக்குத்தான் தகும். சம்சாரத்தில் பற்று இருந்தும் இல்லாததுமாகத் தனி உலகில் வாழ்ந்து வருகிறார். அவர் என்றும் மாறவும் இல்லை, மாறப் போவதும் இல்லை. உமா? உமாவுக்கு இவ்

வுலக வாழ்க்கை, கோட்பாடுகளும் கொள்கைகளும் நிரம்பிய பிரும்மாண்டமான விஷயம். அவளும் அப்பாவைப் போலவே என்றும் மாறுதலடையாத வர்க்கத்தைச் சேர்ந்தவள். லலிதா, ஆம், லலிதா எப்படி இருப்பாள்? அவள் வாழ்க்கை எப்படி உரு வாகும்? அவள் இப்படியே பொறுப்பற்று, விளையாடி, வாயாடிக் காலந்தள்ள முடியுமா? சந்தோஷமே வழிந்து ஓடும் நந்தவனமாக அமையுமா அவள் வாழ்க்கை? பாலு—அவன் குழந்தை. கோபு அண்ணாவைப் போல் சுயநலப் புலியென விளங்க மாட்டான் என்பது மட்டும் திண்ணம். பின் யார்தான் வேறு விதமாக நடந்து கொள்கிறார்கள்? அதை ஒத்துக் கொண்டு விட்டால்தான் என்ன !

கௌரியின் இருதயத்திலிருந்து இரத்தம் கசிவதுபோல் இருந் தது. அவள் நெஞ்சு பிளக்க எத்தனித்தது.

ஆம், சுந்தரம் மாத்திரம் ஏன் இப்படி இருக்கிறான்—இருக்கிறார்? அவள் என்ன தவறு செய்தாள்? முன்னே அவளுடைய நயனங்கள் உரையாடியதெல்லாம் என்னவாயிற்று? இத்தனை நாள் பழக்கத்தில் இந்த முன் கோபமெல்லாம் எங்கே மறைந்து கிடந்தது? சாரதாவானாலும் கோபித்துக் கொள்ளுவாள், சண்டை போடுவாள், சமாதானம் அடைவாள். சமரசமே தன் குறியென இருக்கும் கௌரிக்கு அவை யாதும் தெரியாதே! அவள் தணிந்து போவதைப் பார்த்தே சண்டைக்குத் துவஜும் ஏற்றிக்கொண்டு வருபவரும் அடங்கிப் போவது வழக்க மாக இருக்க, இப்பொழுது ஏன் அவள் ஏதாவது எக்கச்சக்கமாக நடந்து தவிக்கிறாள்? அவள் சாத்வீகமாக இருப்பதன் காரணம் அவளது சுபாவமான பரந்த நோக்கமும், விவேகமுமே அன்றி இவைகளுடன்கூட உள்ளூறப் பதுங்கிக் கிடந்த ஒரு பயமுமே என்று அவள் அறிவாள். பயம் ஏன்? எதைக் கண்டு பயப்பட வேண்டும்?

சிறு வயதிலிருந்தே பயந்த சுபாவமுடைய அவள், குடும்பத் தில் நடக்கும் சிறு சிறு மனஸ்தாபங்களைக் கண்டு பீதியடைந்து அதனாலேயே வாய் பேசாது எல்லோரையும் சரசமாக்கி வைக்கும் பொறுப்பைத் தன்னை யறியாமலேயே ஏற்றுக் கொண்டாள். யாரும் அவளைக் கோபித்துக் கொள்ள அவளுடைய நடவடிக்கை கள் இடமளித்தது கிடையாது. எத்தனையோ முறை அவளைச் சுறுக்கெனச் சொல்லி இருந்தாலும் அதைச் சிரித்துப் பொறுத்

துக் கொள்ளும் கௌரி, அந்த வார்த்தைகளைக் கொண்டே, கடுமையாகப் பேசியவர்களின் மனத்தை அறிந்து இங்கிதமாக நடந்து கொண்டிருக்கிறாள். ஆனால், இப்பொழுது சுந்தரம் வாய் திறந்து காரணத்தைச் சொல்லாது திடீர் திடீரென்று முன்னெச் சரிக்கையின்றிக் கோபித்துக் கொள்வது அவள் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து புண் செய்தது.

'காரணம் மட்டும் தெரிந்தால்?' என்று, தன் காதலனின் சினத்திற்கு அர்த்தம் கண்டு பிடிக்கக் கௌரி ஏங்கினாள்.

"கௌரி, நீ காபி குடித்தாயோ ? என்ன யோசனை?......" என்று நாகலக்ஷ்மி அம்மாள் ஆரம்பிக்கவும், அவள் யோசனைகள் முற்றுப் பெற்றன.

கௌரி சிரித்தாள். தன் மனக் குமுறல்களை அடக்கிக் கொண்டு காரியங்களில் ஈடுபடலானாள்.

"அவரும் எழுந்து பல் தேய்த்துக் கொண்டு விட்டார். கொடுங்கள், கொடுத்து விட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, கௌரி ஒரு தம்ளரில் காபியை எடுத்துக் கொண்டு, முன் பக்கத்து அறைக்குச் சென்றாள். அங்கே தகப்பனும் தனயனும் ஆளுக்கு ஒரு தாளாகப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார்கள்.

"காபி" என்று கூறி, மேஜைமேல் தம்ளரை வைத்து விட்டுத் திரும்பினாள் கௌரி. சுந்தரம் பத்திரிகையைத் தாழ்த்தி, காபியை எடுத்துக் குடிக்கப் போனான். கௌரி அவன் கவனித்தானா என்று பார்த்து விட்டு உள்ளே சென்று விட்டாள். அவள் மனத்தில் குடியேறி இருந்த அச்சம், சங்கோஜம், பயம் இன்னும் தெளியவில்லை. அவனை ஏறிட்டுப் பார்க்கவும் அவள் மனம் அஞ்சியது.

"இன்றைக்குப் பாலுவுக்குப் பிறந்த நாளாம். எல்லோருக்கும் அங்கே சாப்பாடு" என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தாள் லலிதா.

"சரி, மாமியிடம் போய்ச் சொல்" என்றார் மகாலிங்கையர். அவள் உள்ளே சென்று மாமியிடம் சொன்னாள்.

"அப்படியானால் நீ இப்பொழுதே போ கௌரி. பையனுக்கு எண்ணெய் தேய்" என்று நாட்டுப் பெண்ணை அனுப்பி விட்டாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

கௌரி வாசற்படி இறங்கும்போது, லலிதா மாமாவுடனும், சுந்தரத்துடனும் ஏதோ வாய் கொடுப்பது அவள் காதில் பட்டது. 'இப்பொழுதாவது மாமா குறை தீருமா?' என்று எண்ணி புன்னகை பூத்தவாறே அவள் தன் பிறந்த வீட்டுப் படியேறினாள்.

உள்ளே வந்த கௌரியைப் பார்த்து அவள் தாய், "ஏதடியம்மா!" என்று வரவேற்றாள்.

"உனக்கென்னம்மா, நான் இங்கேயே இருந்து விட்டால்கூட உனக்குத் திருப்தியாகாது" என்று செல்லமாகக் கூறிவிட்டு மற்றவர்களைப் பார்க்கச் சென்றாள் கௌரி. பாலு எதிரே வர, அவன் தோளில் ஒரு கையைப் போட்டுக் கொண்டே, அவள் உமாவைத் தேடிச் சென்றாள்.

"அடேய், பாலு, இன்றைக்கு உன் பிறந்த நாள். காதிலே சங்கீதத்துடன் எழுந்தேனடா" என்றாள் கௌரி.

"என்ன இருந்தாலும் பிறந்த நாள் பாலுவுக்கு, எழுந்ததோ, கௌரி அக்கா!" என்று பதிலுரைத்தான் பாலு.

"உமாவுக்குத்தானடா நீ நன்றி செலுத்த வேண்டும்."

இதற்குள் அவர்கள் உமாவின் அறையை அடைந்தார்கள். பாலு, "உமா அக்கா..." என்று ஆரம்பித்தான். அவன் கையை அழுத்தி அவனுடைய பேச்சுக்குத் தடை போட்டாள் கௌரி. உமாவின் தோற்றம் அவ்வாறு இருந்தது. அவள் கண்களை மூடிக் கொண்டு, தம்பூரை மீட்டிய கை ஆடுவதைத் தவிர சஞ்சலமின்றி, மீரா பஜன் பாடிக் கொண்டிருந்தாள். அவள் குரல் கணீரென்று இல்லாவிட்டாலும், தம்பூருடன் இசைந்து மெல்லியதாக, கேட்போர் மனதை இன்புறச் செய்தது. அவளைக் கலைக்க மனமில்லாது, ஓசை செய்யாமல் வந்த வழியே திரும்பிப் போய்விட்டார்கள் அக்காவும் தம்பியும்.

★

எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். காமாக்ஷி அம்மாள் மருமகனின் அருகே நின்றாள். அவனுக்குப் பரிந்து பரிந்து விசாரித்தாள்.

"மாப்பிள்ளைக்கு மரியாதையைப் பாரேன்!" என்றாள் லலிதா. எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள்.

"இப்படி இருந்தாயானால் பிரயோஜனமே இல்லை. பஞ்சு அத்திம்பேர் என்றால் இத்தனை நேரம் மாடியிலே உட்கார்ந்து

கொண்டு, இங்கே யிருந்து போகும் வாசனைகளை எல்லாம் மோப்பம் பிடித்துக் கொண்டு ஏங்கி..." என்று வருணித்தாள் லலிதா. அதற்குள் அந்தச் சமூகத்தில் தனிப்பட நிற்க இஷ்டப்படாத கௌரி, "அதுவும் எங்கே தெரியுமா உட்காருவார்? மாடிப் படி ஏறின உடனேயே யார் கண்ணிலும் தப்ப முடியாமல் உட்கார்ந்திருப்பார். நம்மைப் பார்த்ததும் திரும்பி விரைப்பாக..." என்று சொல்லி முடிப்பதற்குள், சுந்தரம், "வேண்டாம் அப்பா, நான் இன்றைக்குச் சாப்பிட வேண்டாம் என்று பார்க்கிறேன்" என்று பஞ்சுவைப் போலவே பேசி அழகு காண்பித்தான்.

எல்லோரும் இப்படிச் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கையில் காமாக்ஷி அம்மாள், "என்னப்பா, சுந்தரம், இங்கே தலையே காட்டுகிறதில்லையே?" என்று தன் உள்ளத்தில் இருந்த கேள்வியைக் கேட்டே விட்டாள். ஆனால், அவன் பதில் சொல்வதற்கே அவகாசம் கொடுக்கவில்லை லலிதா.

"கௌரி அங்கேயே இருக்கிறாள். அவன் இங்கே ஏன் வர வேண்டும்?" என்றாள். மகாலிங்கையரும் ராமையரும், "பேஷ், பேஷ்" என்று சிரித்தார்கள்.

அதற்குள் பாலு, "அக்கா, நீ இங்கே வந்து விடு. அப்புறம் என்ன செய்வார் பார்க்கலாம்" என்றான்.

"அவள் எப்படியடா வருவாள்? சுந்தரம் அங்கே இருக்கும் பொழுது அவள் மாத்திரம் இங்கே வந்துவிட முடியுமா?" என்று நாகலக்ஷ்மி அம்மாள் வேறு இவர்களுடன் கலந்து கொண்டாள்.

"இதற்கு என்ன யோசனை சொல்லுகிறாய், உமா?" என்று கேட்டார், மகாலிங்கையர்.

"அவர்களிருவரையும் நாம் கவனிப்பது தவறு. விட்டு விட்டால் தானே வருகிறார்கள்."

இவ்வாறு எல்லோரும் அந்தத் தம்பதிகளைக் கேலி செய்ய, அவர்களும் முகம் மலர்ந்து காணப்பட்டார்கள். அவர்கள் நேற்றைய மனஸ்தாபத்தை மறந்து விட்டனரோ? மறக்காவிடினும், இத்தனை பெயர்களிடையே அதைக் காட்டிக் கொள்ள முடியுமா?

சாப்பிட்டவுடன் சுந்தரம் ஆபீஸுக்குக் கிளம்பினான். கௌரி வலியாகப் பிறந்தகத்திலேயே நின்று விட்டாள்.

## 26

# தெளிவா?

'டிட, கட, கட், டடக்' என்று ஒரே சமயத்தில் பல டைப்ரைடிங் மெஷீன்கள் கோஷித்தன. அவைகளின் வாயிலிருந்து வெள்ளை வெளேரென்று சென்ற காகிதங்கள் கரும்புள்ளி, செம்புள்ளி குத்திக்கொண்டு வெளிவந்தன. திரும்பும்போது அடிக்கும் மணியும், தாள்களை வெளியே இழுக்கும்போது உண்டாகும் 'க்ரீச்'சும் தவிர வேறு ஓசை இல்லை. கைகள் பறந்தன. கீழே டிராம்களின் ஓசையும், மோட்டார்களின் ஹாரன் சத்தமும் தூரத்திலிருந்து கேட்டன. காற்றினால் ஒரு தாள் பறந்து சென்றது.

உள்ளே நுழைந்து கொண்டிருந்த சுந்தரம், அதை மீட்டு, அதற்காக எழுந்த குமஸ்தாவிடம் கொடுத்தான். அறையிலிருந்த அனைவரும் அவனைக்கண்டு சற்று வேலையை நிறுத்தினார்கள். அவன் 'வேண்டாம்' என்று சமிஞ்ஞை செய்ய, அவர்கள் மீண்டும் தங்கள் வேலையைத் தொடர்ந்தார்கள்.

"இதைக் கொஞ்சம் சீக்கிரம் அடித்துக் கொடு" என்று ஒருவரிடம் சொல்லிவிட்டு, அவன் தன் அறைக்குத் திரும்பினான். ஆசனத்தில் அமர்ந்து மேஜையின் மீது வைக்கப்பட்டிருந்த கடிதாசுகளைப் புரட்டலானான்.

'அட, இது என்ன?' என்று ஒன்றைப் படித்தான். அது தான் அந்நிய தேசங்களுக்கு மேல் படிப்புக்குப் போகவேண்டும் என்று விரும்புவோர் மனுப்போடலாம் என்ற ஓர் 'ஆபீஸ் சுற்றறிக்கை.' வாய் மெல்லிய சீட்டி அடிப்பதுபோல் குவிந்தது. அவன் அதை உன்னிப்பாகப் படித்தான். இன்னும் இரண்டு நாட்களே இருந்தன மனுப்போட. அவன் யோசித்தவாறே அதைத் திரும்பப் படித்தான்.

'என் பேரில் தப்போ, அல்லது கௌரியின்மீதுதான் பிசகோ, என் மனம் ஒரு நிலையில் நிற்கவில்லை. ஒரு சமயம், 'எல்லாம் வீண் பிரமை, கௌரிக்கு நம்மிடத்தில் நிஷ்களங்கமான பிரியம் இருக்கத்தான் செய்கிறது' என்று தோன்றுகிறது. மறுகணம் என் பழைய சந்தேகம் முன்னே நிற்கிறது. அவள் இருதயத்தில் என் மீது பிரேமை இல்லாமல் இருந்தும் அதை வெளிக்காட்டாமல்

மலர் முகத்துடன் என்னுடன் வாழ்ந்து கொண்டிருக்கும்போது, நான் மட்டும் அவள்மீது சினந்துகொண்டு பழைய சிநேகத்தையும் இழப்பது நியாயமா? கௌரி, கௌரி! உன்னிடம் நான் கொண்டிருக்கும் அன்புக்கு அளவு உண்டோ? அதைச் சொல்லத்தான் எனக்கு என்ன வாய் இருக்கிறது? அப்படிப்பட்ட கரை கடந்த அன்பு இருந்தால் உன்னைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வதுதானே என் கடமை? அதை விட்டுவிட்டு......? ஒரு வாரமாகிவிட்டது, நாம் ஒருவருடனொருவர் பேசி. நம் பொய் வாழ்க்கைக்கு இன்றியமையாத வெளிவேஷமும் ஆரம்பமாகி விட்டது. மற்றவர் எதிரில் சிரித்துப் பேசுவதும், தனிமையில் இருக்கும்போது மௌனமாக இருப்பதும்......சீ, இது என்ன?... எதற்கும் மனுப் போடுகிறேன். ஒரு வருஷந்தானே? கண்மறைவாக இருந்தால் எப்படியும் எல்லாம் சரியாகிவிடும். தூரதேசம் போய்விட்டு, கொஞ்சநாள் பிரிந்து இருப்பதும் நல்லதுதான்.'

சுந்தரம் ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாய், உடனே ஒரு மனு எழுதி அனுப்பிவிட்டான். தான் செய்த காரியம் மிகவும் உசிதமானது என்று வேறு தன்னைத்தானே அவன் மெச்சிக் கொண்டான்.

'ஒரு சமயம் அதற்குள் எல்லாம் சரியாகி விட்டால்?' என்று கேட்டது அந்தராத்மாவிலிருந்து எழுந்த ஒரு குரல்.

'இப்படித்தான் என் வாழ்க்கை பூராவும் ஒரு நிலைக்கு வராமல் இருப்பேனு? திடமான ஒரு வழிக்கு வராத நம் புத்தி என்ன புத்தி? எப்படியானுல் என்ன, ஒரு வருஷம் நிமிஷமாக ஓடிவிடுறது. அந்நிய தேசங்களைப் பார்க்கும் சமயம் வாய்த்தால் அதைத்தான் விடுவானேன்? இப்பொழுது போகாவிட்டால் பிறகு எப்பொழுது போகப் போகிறோம்? மேலும், உத்தியோகத்துக்கும் உரம் போட்டதுபோல் ஆகிறது. அதுவும் கௌரிக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்றுதானே?'

மனத்தைச் சமாதானப் படுத்துவதில் நிபுணன் ஆகிவிட்டான் கல்யாணசுந்தரம்.



"இருங்கள், அவர் வந்துவிடுவார்" என்று நாற்காலியை முன்னே இழுத்துப் போட்டுவிட்டு உள்ளே சென்றுள் கௌரி. கேசவராவ் தன் நண்பனின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு

உட்கார்ந்திருந்தான். எதிரே மாட்டப்பட்டிருந்த கௌரி—சுந்தரத்தின் கல்யாணப் படமும், அவர்கள் சிறு வயதில் எடுத்துக்கொண்ட பல்வேறு படங்களும் அவன் கவனத்தை இழுத்தன. கௌரி, சுந்தரத்தைப்போல் சிறிய வயதிலிருந்தே பழகிக் கல்யாணம் செய்துகொள்வதுதான் உத்தமமான முறை என்பது கேசவராவின் அபிப்பிராயம். தனக்கு அவ்விதம் நேராவிட்டாலும் தன் தோழனுக்காவது கிடைத்ததே என்று அவன் அகமகிழ்ந்தான். படத்தில் காணும் அவர்களைப் பார்த்து விட்டு, 'என்ன அழகான ஜோடி! நமக்கு இந்தப் போட்டோ ஒன்று வேண்டும். சுந்தரத்தைக் கேட்கவேண்டும்' என்று நினைத்துக்கொண்டான். பிறகு தன் கல்யாணப் படம் ஒன்று அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று எண்ணினான். இப்படி யோசித்துக்கொண்டிருக்கும் போதே சுந்தரம் வந்துவிட்டான். இருவரும் அளவளாவிப் பேச ஆரம்பித்துவிட்டனர்.

சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு, "அம்மா" என்று உரக்கக் கூப்பிட்டான் சுந்தரம்.

"என்னடா?" என்று கேட்டுக்கொண்டே நாகலக்ஷ்மி அம்மாள் அங்கே வந்தாள்.

"கேசவுக்குக் கல்யாணம்."

"எப்பொழுது?"

கேசவராவ் அதற்குப் பதில் கூறினான். "அதற்குத்தான் கூப்பிட வந்தேன். மாயவரத்தில் நடக்கப்போகிறது. சுந்தரத்தை அவன் சம்சாரத்தையும் கூட்டிக்கொண்டு வரச்சொல்லிக்கொண்டிருக்கிறேன்" என்றான்.

"எப்பொழுது?"

"அடுத்த வாரம். திங்கள் கிழமை."

"ஆகா, அழைத்துக் கொண்டு போயேன்" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள் சிரித்த முகத்துடன்.

## 27

## ஊசலாடும் மனம்

கடைசியில் சுந்தரம் மாத்திரம் தான் கேசவராவின் விவாகத்திற்குச் சென்றான். கௌரி போகச் சரிப்படவில்லை. அவன் திரும்பி வந்து எல்லா விவரங்களையும் ஒன்று விடாமல் தாய்க்கும்

தந்தைக்கும் சொல்லிக் கொண்டிருந்தான். கௌரியும் அங்கே இருந்து கொண்டு எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"பெண்ணை எங்கோ பார்த்தாற்போல் இருக்கிறது. அவளும் இரண்டு, மூன்று தடவை என்னையே உற்று நோக்கினாள். யாரோ தெரியவில்லை" என்றான் சுந்தரம்.

"அவர்கள் பம்பாயிலிருந்து இப்பொழுதுதான் இங்கே வந்திருப்பதாகச் சொன்னானே, நமக்கு எப்படித் தெரியும்?"

"அது என்னவோ, பெண் அழகாக இருக்கிறாள். கேசவுக்குத் தலை கால் தெரியவில்லை!"

அந்த வார்த்தை என்னவோ கௌரியை உதட்டைக் கடித்துக் கொள்ளும்படி செய்தது. அவள் எழுந்து உள்ளே சென்று விட்டாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சுந்தரமும் எழுந்து மாடிக்குச் சென்றான். எதையோ உலர்த்துவதற்காக மாடி ஏறிய கௌரி தன் கணவன் அங்கே இருப்பதைப் பார்த்துத் திரும்பிக் கீழே போகப் பார்த்தாள். சுந்தரம் அதைக் கவனித்து விட்டான்.

"கௌரி, இங்கே வா" என்று கூப்பிட்டான்.

கௌரியின் மனம் சந்தோஷத்தால் துள்ளிற்று. பயம் அதைப் பின்னுக்கிழுத்தது. அவன் குரலிலிருந்தே அவன் மனத்தை அறிந்துவிட வேண்டும் என்று அவள் ஆவல் கொண்டாள். ஆயினும் அவளுக்கு ஒன்றும் புலப்படவில்லை. நின்ற இடத்திலேயே அசைவற்று நின்றாள் அவள். சுந்தரத்தினிடம் போய், வாய் விட்டு, மனம் திறந்து, தைரியமாக, 'உங்களுக்கு என்ன கோபம்? நான் என்ன செய்தேன் சொல்லுங்களேன். உங்கள இஷ்டப்படி நடந்து கொள்கிறேன். சுதந்தரத்துடன் நீங்க ளல்லவா என் குற்றங்களை எனக்கு எடுத்துரைக்க வேண்டும்?' என்றெல்லாம் கதற வேண்டும் போலிருந்தது அவளுக்கு. தன் பிரியத்தை யெல்லாம் அவனுக்கு வெளியிட வேண்டும் என்று அவள் உள்ளம் பதறியது. ஆயினும் என்ன பயன்?

"கௌரி, காது கேட்கவில்லையா?"

பேசாமல் அவன் முன்னே போய் நின்றாள் கௌரி. அவள் கண்கள் தரையையே நோக்கின. உச்சந் தலையிலிருந்து உள்ளங் கால் வரையில் உதறியது அவளுக்கு.

"கௌரி, உனக்கு என் மீது கோபமா?" அவன் குரல் யாதொரு உணர்ச்சியையும் பிரதிபலிக்கவில்லை, கௌரியின் காதுகளில்.

"எனக்கென்ன கோபம்?" என்றாள் அவள் மெதுவாக.

"பின் ஏன்...?" என்று கூறிக் கொண்டே சுந்தரம் அவளை நெருங்கினான்.

இதென்ன விந்தை! கோபம் கொண்டவர் யார்? கௌரி தன் மனத்தில் இருந்ததைச் சொல்ல முயன்றும் ஒரு வார்த்தையும் வெளி வரவில்லை. அவள் கண்களிலிருந்து நீர் பொலபொல வென்று கீழே சிந்தியது. அடக்கிக் கொள்ள முடியாமல் பிறிட்டுக் கொண்டு வந்த துக்கத்துக்கு அவள் இடம் கொடுத்தாள். உடல் குலுங்க விம்மி விம்மி அழுது விட்டாள்.

சுந்தரம் அவளைச் சுற்றியிருந்த தன் கைகளை எடுத்துக் கொண்டான். ஆச்சரியத்துடன் அவளையே நோக்கினான். அவள் தலை எதையோ மறுப்பதுபோல் இப்படியும் அப்படியும் அசைந்தது. அவன் இப்பொழுது தனக்குச் சகலமும் தெள்ளெனத் தெரிந்துவிட்டதாகக் கருதினான். தான் நினைத்தது உண்மை என்று நிரூபித்து விட்டதாக இறுமாப்புக் கொண்டான். அவன் மனத்தைப் புண்படுத்தக்கூடாது என்ற பரந்த நோக்கத்தைக் கொண்டு அவனை மணந்து கொண்ட கௌரி, இப்பொழுது அவன் கேட்கும் அன்புப் பிச்சையைக் கொடுக்க இயலாதவளாய்க் குமுறுகிறாள் என்று தவறான வியாக்கியானம் செய்யலானான் அவன். 'பாவம், கௌரி, மனத்தைக் குலைத்துக் கொள்ளாதே. உன்னை முன்பே கேட்காமல் செய்தது என் தவறேயல்லவோ? உன்னை இனியும் துன்புறுத்த மாட்டேன்' என்று நினைத்துக்கொண்டான். தனக்கு எல்லாம் பளிங்குபோல் தெரிந்துவிட்டதாக எண்ணி, மிகவும் வெற்றியுடன் அவளுக்கு ஆறுதல் கூற முன்வந்தான்.

என்ன விசித்திரம்! கொஞ்ச மேனும் இருந்த வெளிச்சத்தை அறவே ஒழித்து, அந்தகாரத்தைத் தானே தேடிக் கொண்டு விட்டான் கல்யாண சுந்தரம். முதல் முதலில் சம்சயம் ஆரம்பித்த புதிதில், இடையிடையேயாவது கௌரியிடமிருந்து தன் மனத்தில் எழும்பிய அன்பு அலைகளின் எதிரொலியை எதிர் பார்த்து, அதைக் கண்டதும் மகிழ்ச்சி யடைந்தான். கௌரியின் உள்ளத்தையும் தாற்காலிகமாகவாவது திருப்தி செய்ய முடிந்தது. இப்

பொழுதோ என்றால், தனக்கு மிகவும் தெரிந்து விட்டதாக எண்ணி, கௌரியுடன் தன் அன்பைச் சொல்லிச் சொல்லி அவளைத் துன்புறுத்துவதில்லை யென்றும், அவளிட மிருந்து அதற்குப் பதில் பிரேமையைத் தேடப் போவதில்லை யென்றும் தனக்குள் நிச்சயம் செய்து கொண்டான். அவனை இறுகச் சுற்றிக் கொண்டிருந்த மேகமண்டலம் எபபொழுது அகலுமோ? மேகம் சூழ்ந்திருப்பதாக அவன் அறிந்தாலல்லவோ!

கௌரியின் கதி தான் என்ன? ' கௌரி, வாய் பேசாது இருப்பது எப்பொழுதுமே நலலதல்ல. 'மௌனம் சர்வார்த்த சாதகம்' என்பார்களே, அதில் அனர்த்தமும் உண்டு என் றல்லவோ தோன்றுகிறது, உன் விஷயத்தில்? வாழ நாள் முழுவ தும் உனது உடலிலும், மனத்திலும் ஒரு பாகம் எனக் கருத வேண்டிய உன் கணவனிடமுமா இப்படி இருப்பது? இது சரியா?'

"கௌரி, என்னை மன்னித்து விடு. உன் நுட்பமான மனசு தெரியாமல் நடந்து கொண்டு விட்டேன்" என்றான் சுந்தரம்.

அவள் அவன் தோளில் சாய்ந்தவாறே, ஒன்றும் சொல்லா மல் இருந்தாள். அவள் மனம் அவ்வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ச்சி யுற்றது. 'சுந்தரம் கோபந் தணிந்து மறுபடியும் நம்முடன் பேசு கிறார். அர்த்தமில்லாமல் நடந்து கொண்டோம் என்று உணர்ந்து கொண்டார். வெயிலிலிருந்து திரும்பினால் தானே நிழலின் அருமை தெரியும்? இன்று அவர் மொழிகள் இனிய கீதம் போலி ருப்பது நேற்று இருந்த மனஸ்தாபத்தால் பன் மடங்கு இன் சுவை யுடன் கூடி விளங்குகிற தல்லவா?'

இவ்வாறாக ஓடியது அப்பேதையின் சிந்தனை. திரை நீங்கி, மயக்கம் தெளிந்து, உண்மையைக் கண்டு விட்டதாக நினைத்தார் கள் அவ்விருவரும். ஆனால் உண்மைக்கு எவ்வளவு எட்டியிருந்தது விஷயம்!

தோளோடு தோளாக ஒட்டிக் கொண்டிருக்கும் மனை வியைக் கடைக் கண்ணால் நோக்கினான் சுந்தரம். கௌரி ஒன்றுமே பேசவில்லை. அவள் கை சுந்தரத்தின் கைக்குள் புகுந்தது. இனி மேல் தொடங்கும் சிநேக பாவத்தின் அறிகுறியாக அதை அவன் கருதினான். ஆனால் அவன் மனம் எதிர்பார்த்தது அதுவல்லவே? அவனையுமறியாமல் ஓர் ஏக்கம் அவன் உள்ளத்தை அழுத்தியது.

கௌரி நகர்ந்து கொண்டாள். அடக்க மாட்டாது அவனெதிரில் அவ்விதம் அழுது விட்டதை நினைக்கும்போது அவளுக்கு மிகவும் அவமானமாகி விட்டது. சிரித்துக் கொண்டே, "மாமி தேடுவாள், நான் போகிறேன்" என்று கிளம்பினாள்.

"முகத்தை அலம்பிக்கொள்" என்றான் சுந்தரம்.

அவளுக்குப் பின்னும் வெட்கம் தாங்க முடியவில்லை. அவள் தலை குனிந்தவாறே கீழே இறங்கப் போனாள். அதற்குள் சுந்தரம், "இந்தா ஜலம்" என்று கூஜாவை எடுத்து அவள் கையில் கொடுத்து, "இங்கேயே அலம்பிக் கொள்" எனவும் அவள் லஜ்ஜை பன் மடங்கு அதிகரித்தது. அவள் மௌனமாக முகத்தைக் கழுவிக் கொண்டு, நெற்றியில் பொட்டிட்டுக் கொண்டாள். கண்கள் கொஞ்சம் தெளிந்த பிறகு கீழே சென்றாள்.

அவள் போனதும், சுந்தரம் அருகே இருந்த நாற்காலியில் சாய்ந்தான்.

"இனிமேல் பழைய சிநேகமாவது மாறாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது தான் நம் கடமை" என்று முணு முணுத்தது அவன் மனம்.

## 28

## கேசவராவின் மனைவி

அந்தப் படத்தைக் கண்டதும் கௌரியால் அவள் வாயினின்று கிளம்பிய "ஆ!" என்ற கூக்குரலை அடக்க முடியவில்லை. கேசவராவும் அவன் மனைவியும் அந்தப் புகைப் படத்திலிருந்து அவளைக் கண்டு நகைத்தனர். கேசவராவின் முகத்தில் தனக்கு இவ்வளவு எழில் வாய்ந்த பெண் மனைவியாக வந்து விட்டாளே என்ற பெருமையுடன் கூடிய ஆனந்தச் சிரிப்பு. அவன் மனைவி ஹேமலதாவின் முகத் தோற்றமோ?......?

மேலே அகன்று, கீழே குறுகி, கவிழ்த்துப் போட்ட முக்கோணம் போன்ற வடிவமான வதனம். அகன்ற நெற்றியிலிருந்து தூக்கி வாரப்பட்ட அவளது கேசம் அழகாக நடுத் தலையிருந்து பிரிந்து, தளர்த்தியாக இரு காதுகளையும் லேசாக மூடியவாறு, அவளுடைய வலது தோளின் மேல் கரு நாகம் போன்ற பின்னலாக வந்து முடிந்தது. இரு காதுகளில் தொங்கிய ஜிமிக்கிகள் அவளுடைய ஒட்டிய கன்னங்களின் பக்கத்தில் நின்று அழகாக

முகத்திற்கே ஒரு தீர்மையை அளித்தன. இரு கண்களின் அடர்ந்த புருவங்கள் மத்தியில் தூக்கி அமைந்திருப்பது, அவளது நீண்ட நேர்மையான மூக்கை ஒரு பட்சி போலவும், அப் புருவங்கள் பறப்பதற்கு ஆயத்தமாக இருக்கும் அப் பட்சியின் இறக்கைகள் போலவும் காட்சியளித்தன.

அவள் இட்டுக் கொண்டிருந்த திலகமும், தடித்துக் குவிந்த அதரங்களும், அவள் அழகுக்கு இன்றியமையாத பொருள்களென விளங்கின. ஹேமாவின் கண்கள் தூங்குவன போல் ஒரு மயக்கத்துடன் தோன்றுவதும், அவளது சங்கீத ஞானத்தை எடுத்துக் காட்டியது என்ருன் சுந்தரம்.

வைத்த கண் வாங்காது அந்தப் படத்தையே நோக்கிய கௌரியின் முகத்தைக் கவனித்தான் கல்யாண சுந்தரம். அவள் திடுக்கிட்டுக் கத்தியதைப் பார்த்து அவன் கல கல வென்று நகைத்தான்.

"என்ன கௌரி, அவள் அழகைக் கண்டால் அவ்வளவு திகைப்பாகவா இருக்கிறது? என் கண்ணில் அவள் உன்னைப் போல் அவ்வளவு அழகாக இல்லை என்று தான் தோன்றுகிறது" என்ருன்.

ஏதோ கவனமாக இருந்த கௌரி, அவன் கூறியதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவள் மார்பு விம்மி விம்மி எழும்பியது. சுந்தரத்தை நோக்கி அவள், "இது யார் என்று தெரியவில்லையா?" என்று கேட்டாள்.

"யார்? எனக்குத்தான் தெரியவில்லை என்றேனே?" என்று அவன் மனைவியின் முகத்தைப் பார்த்தான். அதில் பல வேதனைக் குறிகள், காற்றில் அடிபட்ட மேகங்களைப் போல் அப்படியும் இப்படியும் சஞ்சரித்தன. ஒன்றும் புரியாதவனுய் சுந்தரம் அவள் முகத்தையே உற்று நோக்கினுன். கௌரியும் அவனைப் பார்த்தாளே ஒழிய, அவளுடைய நயனங்கள் உயிரற்றுக் காணப்பட்டன.

"அவள் தான் என்னுடன் படித்தாளே, ஹேமலதா. எழும்பூரிலிருந்து வருவாளே, ஞாபகமில்லையா? அவள் தமையன் ராஜ சேகரராவ் கூட உங்களுக்குத் தெரியுமே!" என்ருள் கௌரி.

"ஆ, அவளா!" சுந்தரத்திற்கு என்ன கூறுவது என்று தெரியவில்லை. அவன் இருதயத்தை யாரோ பிசைந்து ரசம் பிழிவது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டு வேதனையை அளித்தது.

தன் உயிர் நண்பன் கேசவராவின் விவாகமா, இவ்வாறு முடிய வேண்டும்? ஸ்படிகம் போன்ற அவன் மனத்திற்கு இது என்ன பேரிடி? மிகவும் நுட்பமான, மிருதுவான உள்ளம் படைத்தவனுயிற்றே அவன்? இப்படியோ சோதனே! என்ன உலகம்! கடவுள் என்று ஒருவர் இருக்கிருரோ?

அவனும் கேசவராவும் தங்கள் மண வாழ்கையைப் பற்றிப் பேசிய பேச்செல்லாம் பகற்கனவாக முடிய வேண்டுமென்று சாபமோ? அவன் கௌரியிடம் அன்பு கொள்ளத் தொடங்கிய நாள் முதல் கேசவராவ் அதை அறிவான். சுந்தரத்தையே அவன்தான் கௌரியை விவாகம் புரிந்து கொள்ளும்படி தூண்டியவன். அவர்கள் இருவருக்குள், ரகசியம் என்பதே கிடையாது. அவர்களுக்கிடையில அத்தனே நட்பு. ஆனல், இப்பொழுது கொஞ்ச நாளாக அவனிடமுந்தான் எங்கே நெருங்கிப் பழகுகிருன்? சுந்தரத்தின் மனச் சாட்சி அவனேச் சாட்டையால் அடித்தது. 'நம் விஷயத்தையே கவனித்துக் கொண்டிருந்தோமே? கௌரியை ஆராய எடுத்துக் கொண்ட நேரத்தில் ஒரு பங்கு, முன் போல் கேசவராவுடன் சென்று, பழகிப் பேச உபயோகப் படுத்தி யிருந்தால், இப்பொழுது அவனுக்கு இவ்வாறு நேர்ந்திருக்காதோ என்னவோ?'

கௌரி தன் கணவனின் மன வேதனேயை நன்கு அறிவாள். அவ்விருவரின் நேசம் எத்தகையது என்பது அவர்கள் குடும்பத்தில் எல்லோருமே அறிந்த விஷயந்தான். சுந்தரத்திற்கு எவ்வாறு தேறுதல் கூறுவது? மேற்படி என்ன செய்ய வேண்டும், எது தகும்? விஷயம் கைம் மீறி விட்டதோ? இவ்வாறு மனம் குழம்ப, அவள் சுந்தரத்தின் தோள் மீது ஒரு கையை வைத்தாள்.

இத்தனே குழப்பங்களிடையிலும், கௌரி தானகவே தன் மீது கையைப் போட்டது சுந்தரத்தினுடைய நரம்புகளிலெல்லாம் ஆனந்தக் கிளர்ச்சியைச் செய்தது. ஆயினும் அவன் ஒன்றும் பேசவே யில்லே.

"அன்று இல்லே என்ருல், பிறகாவது அவள் போட்டோவைக் காண்பிக்கச் சொல்லிப் பார்த்திருக்கக் கூடாதோ?" என்ருள் கௌரி.

சுந்தரத்திற்கு என்ன சொல்லுவது என்று தெரியவில்லே. "இப்படியாக முடியும் என்று எனக்குத் தெரியுமா? என்னவோ;

அன்றைக்கு அகப்படவில்லை என்றான். சரி என்று இருந்து விட்டேன். அத்துடன், நேரில் பார்த்த போதே எனக்குத் தெரியவில்லையே, போட்டோவைப் பார்த்திருந்தாலும் என்ன பயன்? நீயல்லவோ பார்த்திருக்க வேண்டும்?'' என்றான்.

''இப்பொழுது நாம் செய்ய வேண்டியது என்ன வென்று புரியவில்லையே. அவரிடம் சொல்லுவோமா?'' என்று கேட்டாள் கௌரி.

குழப்பம் பெரிதாகத் தன் வாயைத் திறந்து சுந்தரத்தை விழுங்கியது. அவன் தலை பல உளிகளுக்கும், சுத்திகளுக்கும் நடுவே தவித்தது. ரம்பங்கள் வேறு அவன் மூளையைச் சுக்கு நூறாக அறுத்து, கிழித்துத் தள்ளின.

இரு கைகளாலும் தலையை அழுத்திக் கொண்ட தன் கணவனைப் பார்த்து மனங் கலங்கினாள் கௌரி. அவனை இச் செய்தி இத்தனை தூரம் பாதிக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லையோ? தான் அதை அவரிடம் கூறியது தவறுதானோ என்று அவள் ஐயமுற்றாள். சொல்லாமல் மறைத்து விடவும் அவள் மனச்சாட்சி இடங் கொடுக்கவில்லை. முன்பு ஹேமலதாவும் அவளும் பழகியதும், அவள் உடம்பைப் பற்றி அறிந்ததும், பின்பு நடந்த விஷயங்களும் அவள் மனக் கண் முன் நின்றன. அந்தப் படத்தில் இருக்கும் ஹேமாவின் நகைப்பும் ஏளனமாகத் தன்னைப் பார்த்துக் கேலி செய்வதுபோல் தோன்றிற்று, கௌரியின் பீதியுற்ற கண்களுக்கு.

''இப்பொழுது குணமாகி விட்டதோ என்னவோ?'' என்றான் சுந்தரம். அவன் உள்ளத்தில் எழும்பிய ஆசைதான் அக் கேள்வி ரூபத்தில் வெளிப்பட்டது.

''இல்லையே, கோபு அண்ணாகூடச் சமீபத்தில் பார்த்ததாகச் சொன்னானே? கல்யாணத்துக்கு வந்திருந்தபொழுது அவளுக்கு உடம்புதான். இந்த ஏழெட்டு மாதங்களுக்குள் குணமாகி விடுமா என்ன?''

ஹேமலதா கௌரியுடன் பள்ளிக்கூடத்தில் ஒரு வருஷம் படித்தாள். பிறகு அவளுக்கு அடிக்கடி ஜுரம் வருவதும் அதனால் பள்ளிக்கு வராமல் நின்று விடுவதுமாக இருக்கும்போதுதான் கௌரிக்கு அவளிடம் பரிசயம் ஏற்பட்டது. ஹேமா இவள் வீட்டுக்கு வந்து பாடங்களைத் தெரிந்து கொண்டு போவாள்.

இப்படியே இருக்கும்போது அவள் அடிக்கடி வகுப்பில் இருமுவதைக் கவனித்த உபாத்தியாயினி, அவளை டாக்டரிடம் அழைத்துச் சென்று பரிசோதிக்கச் செய்தாள். அன்று டாக்டரிடம் போவதற்கு ஹேமா படுத்திய பாடு இன்றும் கௌரியின் கண் முன் நின்றது. டாக்டர் பரீட்சை செய்து விட்டுக் கூறியது பேரிடிபோல் இருந்தது அவளுக்கு. அந்தக் கொடிய நோய் அவளுக்கு எப்படித்தான் வந்ததோ? அன்றுடன் ஹேமலதா தன் பள்ளிப் படிப்பை நிறுத்திக் கொண்டாள். அதற்குப் பிறகு கொஞ்ச நாள் கௌரி அவள் வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்தாள். சில நாட்களில் அதுவும் நின்று விட்டது. மீண்டும் கொஞ்ச நாட்களுக்கெல்லாம் ஹேமாவிற்கு விவாகம் நிச்சயமாகி யிருக்கிறது என்று தெரிந்து அவளைப் பார்க்கப் போனாள் கௌரி. ஹேமா அவளைக் கண்டதும் பேசிய விதம் அவளுக்கு என்னவோ அச்சமாக இருந்தது. அவள் அத்துடன் அந்தச் சிநேகத்தை விட்டு விட்டாள்.

அதற்குப் பிறகு கௌரிக்கு ஹேமாவின் ஞாபகமே இல்லை. தன் கல்யாணத்தின் போது கோபு அவளைப் பற்றிப் பேசவும், கௌரி ஆச்சரியத்துடனும், ஆவலுடனும் விசாரித்தாள்.

"பம்பாயில் தான் இருக்கிறாளா? அவளுக்குக் கல்யாணம் ஆயிற்றே, அவள் கணவர் என்ன செய்கிறார்?" என்று கேட்டாள்.

"அது பெரிய கதை" என்று ஆரம்பித்தான் கோபு. "கல்யாணம் நிச்சயமாயிற்றும். கடைசி நிமிஷத்தில் அவளுக்கு வியாதி என்று தெரிந்து அது நின்று விட்டதாம். பிறகு இங்கே இருக்க இஷ்டப்படாமல் அவர்கள் குடும்பத்துடன் பம்பாய்க்குப் போய் விட்டார்களாம்" என்று அவன் கூறியது இன்றுபோல் கௌரியின் காதில் ஒலித்தது.

"இப்பொழுது ஒன்றும் இல்லையா?" என்று தமையனைக் கேட்டாள் கௌரி.

"எப்படி ஒன்றுமில்லை? ஒரு மாதந்தானே ஆகிறது, ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு வந்து?"

கௌரியின் காதில் ஒவ்வொரு வார்த்தையும் பளிச் சென்று இப்பொழுதுதான் கூறியதுபோல் விழுந்தது. சுந்தரமும் பேசவில்லை. அந்த அறையில் மௌனம் குடிகொண்டு ஆட்சி புரிந்தது.

'சாதாரண நோயல்லவே? கேசவுக்குத் தெரிந்தால்...அவனுக்கும் வந்து விட்டாலோ?' மேலும் மேலும் எண்ணங்கள் மோதி அவர்கள் நிம்மதியைக் குலைத்தன.

"நாளைக்குச் சாயங்காலமாகக் கேசவனின் பெண்டாட்டியைப் பார்த்துவிட்டு வருவோமா?" என்று கூறிக் கொண்டே நாகலக்ஷ்மி அம்மாள் அவர்கள் அறையில் நுழைந்தாள்.

தங்கள் மனத்தின் எண்ணங்களுக்கும் தாயின் மொழிகளுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாகப்பட்டது அவர்கள் இருவருக்கும். பீதியுடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

## 29

## உமாவின் நகை

மாலை நேரம். எல்லோரும் அவரவர்கள் வீட்டு வாசலிலும் மாடியிலும் தெருவை நோக்கியவாறு நின்று சாவதானமாக வார்த்தையாடிக் கொண்டும் சிரித்தவாறுமாக இருந்தனர். உல்லாசமாகப் பேசும் சிறுவர்களும், களைத்துத் திரும்பிய நடு வயதினரும், ஓடி விளையாடும் சிறுவர் சிறுமியரும் மாலை நேரத்தின் அழகிலும் அமைதியிலும் லயித்து, ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர். தெருக் கோடியில் சைகிளின் மீது சாய்ந்து கொண்டு உரையாடும் பிள்ளைகள், கோவிலுக்குச் செல்வோர் வழியைத் தடுத்து நிற்க, பெண்மணிகள் வளைந்து ஒதுங்கிச் சென்று கொண்டிருந்தனர். ஒவ்வொரு வீடாக விளக்கேற்றப்பட்டு, அவ் வெளிச்சம் வெளியே சூழ்ந்து கொண்டு வரும் இரவின் இருளைச் சுட்டிக் காட்டிற்று.

தெருவில் திட்டுத் திட்டாகக் கூடியிருந்த கூட்டம் கலைய ஆரம்பித்தது. பிள்ளைகள் வீடு தேடிச் சென்றனர். குழந்தைகள் புழுதியடைந்த கை கால்களை அலம்பாமலேயே உள்ளே சென்று, தாய்மாரிடம் 'பசி, பசி' என்று ஆரவாரித்தன.

ஜன்னல்கள் அருகில் பள்ளிப் பாடங்கள் படிக்கும் சிறுவர், சிறுமிகள் புத்தகமும் கையுமாகத் தோன்றலாயினர். சரித்திரப் பாடமும், வாய்ப்பாடும், 'ஸயன்ஸு'ம், ஆங்கிலமும், திருக்குறளும், தெலுங்கும் பல வீடுகளிலிருந்து வெளியேறி, தெருவில் நின்று பேசும் பெரியவர்களைச் சிரிப்பு மூட்டின.

"எப்படி விழுந்து விழுந்து படிக்கிறார்கள் பாருங்கள் ஸார்" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்ளும் அவர்கள், தங்கள் காதில் கேட்க வேண்டு மென்று தான் அக் குழந்தைகள் அவ் வாறு குரலைத் தூக்குகிறார்கள் என்று அறிவா. ஆயினும் அது தெரியாததுபோல் பேசுவதில் அவர்களுக்கு ஓர் ஆனந்தம். சிறுவர் களுக்கும், தந்தை தாய்மார் ஏமாந்து விட்டதாகப் பாசாங்கு செய்து விட்டதில் ஒரு திருப்தி.

இவர்கள் மாத்திரம் இவ்வாறு செய்வானேன் என்ற பொறாமை போலும் அந்தக் கோடி வீட்டுப் பெண்களுக்கு: பலவித மான வாத்தியங்களின் முழக்கத்தினிடையே, அவ் வீட்டிலிருந்து ரகரகமான சாரீரங்களின் சங்கீதம் எழும்பியது. அதையும் லட் சியம் செய்யாமல் தெருவில், இருட்டில் நின்று பேசுகிறார்களே, அவர்கள் காது செவிடோ?

தினந்தோறும் நடைபெறும் இவ் விநோதக் காட்சிகள் எதை யும் காமாக்ஷி அம்மாள் ரசிக்கவில்லை. அவள் மாடி வராந்தாவில் நின்று தெருக் கோடியையே நோக்கியவாறு இருந்தாள்.

''நல்ல பெண்! வேளைக்கு வீட்டுக்கு வராதோ? சனியன்! மற்றப் பசங்களெல்லாம் படிக்கவில்லையா? இந்த மூடத்துக்கு மாத்திரம் என்ன?" என்று இன்னும் வீடு திரும்பாத உமாவைத் திட்டியவாறு இருந்தது அவள் வாய்.

காலையில் கல்லூரி சென்ற உமா, இன்னும் திரும்பிய பாடில்லை. இதுவரை எந்தப் பசங்களும் அப்படி வீட்டுக்கு வேளை யோடு வராமல் இருந்ததில்லை யாகையால், தாயின் மனம் என்ன என்னவோ கற்பனைகள் செய்து கொண்டு தவித்தது.

''தரித்திரம்! எங்காவது டிராமிலே, பஸ்ஸிலே அகப்பட்டுக் கொண்டு..."

அதற்குள் பஸ் ஸ்டாண்டிலே நின்று பார்த்துக் கொண் டிருந்த பாலு திரும்பி ஓடி வந்தான். காமாக்ஷி அம்மாள் ஆவ லோடு அவனை நோக்கினாள்.

''அம்மா, கால் வலிக்கிறது. எத்தனை நேரம் நிற்பது?" என் றான் குழந்தை. தாயின் கவலை அவனுக்கு என்ன தெரியும்?

பதில் என்ன சொல்லுவது என்று தெரியாத காமாக்ஷி அம் மாள், தெருவில் சாவதானமாகப் பேசிக் கொண்டு நிற்கும் கண வரைக்கண்டு பல்லைக் கடித்தாள்.

'வீடு ஒன்று இருக்கிறது என்று கூடத் தெரியாத மனுஷன், உள்ளேதான் சற்று வரமாட்டாரோ?' என்று நினைத்தாள் அவள்.

இதற்குள் லலிதா, "அம்மா, நான் போய் பஸ் ஸ்டாண்டிலே நிற்கட்டுமா?" என்று கேட்டுக் கொண்டே அங்கே வந்தாள்.

உள்ளே குமுறிய அத்தனை கோபமும் அவள் மேல் பாய்ந்தது காமாக்ஷி அம்மாளுக்கு.

"போ, போ, ஒழிந்து போய் விடு. அவள்தான் ஒருத்தி தறுதலையாக எங்கேயோ போயிருக்கிறாள். நீயும் தொலை..." என்று அவள் சீறினாள்.

"என்னடீ இது?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் ராமையர்.

"எல்லாம் உங்கள் பசங்கள் லட்சணம்தான்..."

"என்ன இப்பொழுது?"

"ஒன்றும் இல்லை. அழகான பெண்ணைப் பெற்றிருக்கிறீர்களே, உமாராணி; இன்னும் வீட்டுக்கு வரத் தோன்றவில்லை அவளுக்கு. எங்கேயோ வெளியே சுற்றிக் கொண்டிருக்கிறாள். இந்தப் பெண்ணும் ஓடுகிறாளாம் அவளைத் தேடிக் கொண்டு."

"ஆப்பா! அம்மாவுக்குக் கோபம் வந்தால் அழகாக இல்லையா?" என்றாள் லலிதா சிரித்த முகத்துடன்.

"பேசாமல் இரு, லலிதா" என்றார் ராமையர். அவர் கண்கள் குறும்பு நாடகமாடின. இதைக் கவனித்த காமாக்ஷி அம்மாளுக்கு ஆவேசமே வந்து விட்டது.

"எல்லாம் ஒரே லட்சணமாகத்தான் இருக்கிறது. போய்ப் பார்த்து விட்டுத்தான் வாருங்களேன். இங்கே நின்று விளையாடா விட்டால் பொழுது போகாதோ?" என்று இரைந்தாள்.

ராமையரும் லலிதாவும் அவளைப் பார்த்து நகைப்பது அவள் பொறுமையை இழக்கச் செய்தது.

"இந்த உதவாக்கறைக் கெல்லாம் என் மனசு அடித்துக் கொள்ளுகிறதே, என் புத்தியைச் சொல்!" என்று தன்னை நிந்தித்தவாறே அவள் கீழே இறங்கினாள்.

"அதிலே நானும் ஒன்றா?" என்று மேலும் அவள் வாயைக் கிண்டினார் ராமையர்.

"ஏன் என் வாயைக் கிளப்புகிறீர்கள்? உங்களுக்கு அக்கறை இருந்தால் போய்ப் பாருங்கள், இல்லாவிட்டால் எப்படியோ

போங்கள்" என்று வெறுத்துக் கொண்டே அவன் உள்ளே போய் விட்டாளாயினும், சிறிது நேரத்திற்கெல்லாம் வந்து, அவரைப் போகும்படி மீண்டும் வற்புறுத்தினாள்.

ஆனால் அவர், "எல்லாம், தானே வருவாள். மணி என்ன, ஏழரைதானே?" என்று மொழிந்து விட்டுத் தம் வேலையில் ஈடு பட்டார்.

பெண் மனம் கேட்கவில்லை. காமாக்ஷி அம்மாள் எதிர் வீட்டிற்குச் சென்று சுந்தரத்தினிடம் கூற, அவன் சட்டையை மாட்டிக் கொண்டு, உமாவைத் தேடச் சென்றான்.

திரும்பி வீடு போக மனமில்லாமல் காமாக்ஷி அம்மாள் அங்கேயே உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தாள். நாகலக்ஷ்மி அம்மாள் அவளுக்கு ஆறுதல் கூறிக்கொண்டிருக்க, கௌரி வீட்டுக்காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது, சுறு சுறுப்பாகச் சுற்றி வரும் தன் பெண்ணைப் பார்த்ததும் காமாக்ஷி அம்மாளின் மனத்தில் விநோதமாகப் பொறாமை தட்டிற்று.

'நாகுவுக்கு என்ன, அவள் அதிருஷ்டசாலி. ஒரே பிள்ளையானாலும் தரமான பிள்ளை. தங்கக் கட்டி போன்ற நாட்டுப் பெண். கௌரி பிள்ளையாகப் பிறந்திருந்தால்...?' என்றெல்லாம் ஓடிற்று அவள் மூளை.

"அம்மா! உமா வந்து விட்டாள்" என்று வெற்றியுடன் அறிவித்தாள் லலிதா.

"சனி!" என்று எழுந்த காமாக்ஷி அம்மாளை, "காமு, கோபித்துக் கொள்ளாதே, ஏன் நாழிகையாயிற்றோ?" என்றாள் கௌரியின் மாமியார்.



சுந்தரம் திரும்பியதும் நேரே தன் வீட்டிற்குள் நுழைந்தான்.

"உமா வந்து விட்டாளா?"

பரபரப்புடன் கேட்ட அவன் முகத்தைத் திகைப்புடன் நோக்கினாள் கௌரி.

"வந்து விட்டாள். ஏன்? என்ன?"

"பீச்சில் நடந்த கூட்டத்துக்கு அவள் வகுப்பைச் சேர்ந்த மாணவிகள் போனார்களாம். அங்கே தடியடி. அதுதான் கேட்டேன்."

"இவளும் போனாளா?"

"இவள்தான் கொடி பிடித்தாளாம்."

சுந்தரமும் கௌரியும் கலவரத்துடன் எதிர் வீட்டிற்கு ஓடினார்கள்.

முற்றத்தில் நின்ற ஒரு வாலிபன் கைகளுக்கு ஜலம் ஊற்றிக் கொண்டு நின்றாள் உமா. இவர்களைப் பார்த்து அவளது கரு கருப்பான முகம் குறு நகையுடன் காட்சியளித்தது. நெற்றியில் விளாங்காயளவு வீக்கம் ரத்தம் தோய்ந்து கிடந்தது.

தாய் அடக்கமாட்டாத அகங்காரத்துடன் பெண்ணை நோக்குவது கௌரியின் கண்ணில் பட்டது. அவள் தன் கணவனை நோக்க அவனும் அவளைப் பார்த்துக் கண்களாலேயே ஆயிரம் கேள்விகள் கேட்டான்.

"போதும், தாங்க்ஸ்" என்று கூறிக் கொண்டே நிமிர்ந்த வாலிபன், பாலு கொடுத்த துண்டால் உடம்பைத் துடைத்துக் கொண்டான்.



அவன் கையைத் தூக்கமுடியாமல், அது மீண்டும் கீழே விழுந்தது. "அடியா?" என்று கேட்டான் சுந்தரம். அவன், "ஆம்" என்று தலையை ஆட்டினான்.

சுடச்சுடக் காபி எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள் லலிதா. அதை வாங்கி அருந்திவிட்டு, "நான் போய்விட்டு வருகிறேன்" என்று கிளம்பினான் அவன்.

"என்னை இங்கே கொண்டு விட்டதற்கு ரொம்ப வந்தனம்" என்றாள் உமா.

அவன் உமாவைப் பார்த்துப் புன்முறுவல் பூத்துவிட்டு வெளியே போனான். நடந்த விவரங்களை விசாரிக்கச் சுந்தரம் அவனைப் பின் தொடர்ந்தான்.

உமா தன் முகத்தைக் கழுவிக் கொண்டு, தன்னையே மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்த எல்லோரையும் பார்த்துச் சிரித்தாள்.

"சிரிப்பு வேறே உன் மூஞ்சிக்கு" என்று சீறினாள் காமாக்ஷி அம்மாள். அவள் தன் தாயை முறைத்துப் பார்த்து விட்டு மாடிக்குச் சென்றாள்.



"உமா வந்து விட்டாள்" என்றாள் காமாக்ஷி அம்மாள் தன் கணவரிடம்.

ராமையர் நிமிர்ந்து நோக்கி, ஒன்றும் புரியாதவர் போல் கொஞ்சம் பிரமித்துவிட்டு, "ஆகா, சரிதான், நான் கூடப் பார்த்தேன் போலிருக்கிறதே?" என்று சொல்லிவிட்டு, மீண்டும் தம் புத்தகத்தில் ஆழ்ந்தார்.

"அதைச் சொல்ல வரவில்லை. அந்தப் பெண்ணை ஓர் இரைச்சல் போடுங்கள்."

"ஊம்."

"ஓர் 'ஊமும்' இல்லை. அவளைச் சற்றுக் கண்டியுங்கள் என்றேன்."

"ஆகட்டும். ஏ, உமா! இங்கே வா, உன்னை நான் கண்டிக்கப் போகிறேன். ஆமாம்" என்று ராமையர் உரத்துச் சொன்னதைக் கேட்ட அவர் மனைவி ஒன்றும் கூறாமல் உள்ளே போய்விட்டாள். அவள் பற்களை நறநறவென்று கடிக்கும் சத்தம் மாத்திரம் கேட்டது.

அவளை எதிர்கொண்ட கௌரி, "அம்மா, வெல்லமும் வெங்காயமும் நசுக்கிக் கட்டட்டுமா உமாவுக்கு?" என்று கேட்டாள்.

"எதுவானாலும் செய். எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை."

'சீக்கிரமே எவன் காலிலாவது கட்டிக் தொலைத்து விட்டால் கவலை இல்லை. இப்படிப் போய்க் கண்ட இடத்திலே மண்டையை உடைத்துக் கொள்கிறதும், முகம் தெரியாதவனையெல்லாம் கூடத் துணைக்கு அழைத்துக் கொண்டு வருகிறதும்! யார் தான் இந்தப் புத்தியை எல்லாம் கொடுத்தார்களோ?' என்று பலவாறு எண்ணிய காமாக்ஷி அம்மாள் மறுபடியும் ஒரு முறை தன் புருஷனை நாடிச் சென்றாள்.

"சீக்கிரமே இந்தப் பெண்ணுக்குக் கல்யாணத்தைச் செய்து தொலையுங்கள்" என்றாள்.



கௌரி தங்கையின் நெற்றிக்கு 'ஸ்பிரிட்' தடவிக் கொண்டிருந்தாள். கறு ரத்தம் தோய்ந்து, கல்குண்டு போல் வீங்கி இருக்கும் நெற்றிக் கொம்மையை வெகு ஆசையுடனும், பெருமையுடனும் கண்ணாடியில் நோக்கிக் கொண்டிருந்தாள் உமா. விலை உயர்ந்த நகைகளை அணிந்தவர்கள் கூட அவ்வளவு ஆனந்தமாக அவற்றை ரசிப்பார்களா என்று வியந்தாள் கௌரி.

"கண்ணுக்கு ஒரு மயிரிழை தப்பிற்று. நல்ல காலம்" என்றான் அவள்.

அதற்கு உமா, "இதெல்லாம் ஒரு பெரிதா? உடல்தான் முக்கியம் என்று நீ நினைக்கிறாயோ, சொல்" என்று கேட்டாள்.

கௌரி பதிலளிக்கவில்லை. அந்தக் கொம்மையைத் தன் தங்கையின் வெற்றிச் சின்னமாகக் கருதிய அவள உள்ளம் கொஞ்சம் பொறாமை அடையத்தான் செய்தது.

## 30

## சந்திப்பு

உமாவால் உண்டாகிய அச் சிறு கலக்கத்தில் அன்று சாயங்காலம் கேசவராவின் வீட்டிற்குச் செல்ல வேண்டுமென்றிருந்ததையும் மறந்து விட்டனர் சுந்தரமும் கௌரியும். சாப்பிடும் போது அந்தப் பேச்சை மகாலிங்கையர் ஆரம்பித்த போது தான் அவர்களுக்கு ஞாபகம் வந்தது.

" ஆமாம், மறந்தே போய் விட்டது" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

" நாளைக்காவது போய் விட்டு வாருங்கள். அந்தப் பையன் ஏதாவது தவறாக நினைத்துக்கொள்ளப் போகிறான். ஒரு நாள் அவர்களை நம் வீட்டில் சாப்பிடக் கூப்பிடேன்" என்றார் அவர்.

★

அடுத்த நாள் மாலை சுந்தரமும், அவன் தாயும், கௌரியும் கேசவராவின் வீட்டிற்குச் சென்றனர். அவ்வீட்டு வாசற்படி ஏறும்போது கௌரி விவரிக்கத் தெரியாத உணர்ச்சிகள் மேலே, மேலே தாக்கத் திக்கு முக்காடினாள்.

'நான் முகத்தை எப்படி வைத்துக்கொள்ளவேண்டும்? என்னை அடையாளம் கண்டு பிடித்துக்கொள்ளுவாளா? நானே தெரிந்தாற் போல் பேசலாமா? என் முகம் என்னைக் காட்டிக் கொடுத்து விட்டால்...?' கௌரியின் மனம் மிகவும் குழப்பமடைந்தது.

சுந்தரத்தின் மனசும் ஒன்றும் தெளிவாக இருந்துவிடவில்லை. அவன் முகத்திலும் சிரிப்பில்லை.

'அவனைப் பார்த்ததும் நாம் எப்படி நடந்துகொள்வது? சொல்வோமா, வேண்டாமா?' அவன் உள்ளத்தில் கலவரம் மிகுந்து கொந்தளித்தது. 'நண்பனின் நலனைக்கோரி நிஜத்தைச்சொல்வதா? இதற்குள்ளேயே அவனுக்குத் தெரிந்திருக்குமோ என்னவோ? நாம் சொன்னால் கூடச் சரியாகப் படாது. சொன்னால் ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுப்பது போல் ஆகிவிடுமோ? தெரிந்து மறைத்து விட்டு, அவனுக்குத் தொற்றிக்கொண்டு விட்டால்?......' அதை நினைக்கும் போதே அவன் உடல் ஒரு குலுங்கு குலுங்கியது.

" குளிராப்பா?" என்று கேட்டான் கேசவராவ் சிரித்த வாறே. சுந்தரம் பதிலுக்கு இளித்தான். கேசவராவ் அவன் வழக்கப்படி பேச ஆரம்பித்ததும், நகைச் சுவை சொட்டும் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சுந்தரத்திற்கு, தெரிந்ததைப் பற்றிச் சொல்ல மனம் வரவில்லை. தன் உள்ளத்தில் எழும்பும் எண்ணக் குவியல்களை எல்லாம் புறக்கணித்து விட்டு, நண்பனின் மணி போன்ற வார்த்தைகளை அவன் கேட்கலானான்.

கௌரி உள்ளே நுழைந்தாள். கூடத்தில் கேசவராவின் தாய் அவர்களை வரவேற்றாள். கீழே விரித்திருந்த பாயின்மேல் எல்லோரும் அமர்ந்து லோகாபிராமமாகப் பேசத் தொடங்கினர்.

கள், கௌரி மௌனமாக உட்கார்ந்து ஹேமாவின் வருகையையே எதிர் நோக்கி இருந்தாள். அவள் ஆத்திரத்தை அறிந்தவள் போல் நாகலக்ஷ்மி அம்மாள், "எங்கே உங்கள் நாட்டுப் பெண்?" என்று கேட்டாள்.

"ஹேமலதா!" என்று கேசவராவின் தாய் அழைத்தாள்.

கையில் ஒரு தட்டில் பழங்களை எடுத்துக் கொண்டு அங்கே தோன்றினாள் ஹேமா. கடைசி சமயத்தில் கௌரியின் தைரியம் நழுவி விட்டது. அவள் மேலே பார்க்காமல் கண்களைக் கீழே தாழ்த்திக் கொண்டாள். அவளுடைய இருதயம் பட படவென்று அடித்துக் கொண்டது. கொஞ்ச நேரம் அவளுக்கு மத்தள இடி போல் கேட்டது.

"கௌரி!" என்ற ஹேமாவின் குரலைக் கேட்டு நிமிர்ந்தாள் கௌரி. மேகங்களைப் பிளந்து கொண்டு வரும் சூரியனைப் போல் அவள் முகம் மந்தஹாசத்துடன் மலர்ந்தது. ஒரு பளு அகன்றாற் போல் அந்தச் சமயத்தில் ஒரு குதூகலம் ஏற்பட்டது அவளுக்கு.

"ஹேமா!"

"என்னை உனக்கு ஞாபகம் இருக்கிறதோ?"

"இல்லாமலா?"

இதற்குப் பதில் கூறுவதற்குள் ஹேமாவுக்கு லேசாக இருமல் வந்து தடை செய்தது. கௌரி ஹேமாவின் கண்களின் மூலம் அவள் மூளையையே ஆராய்ந்து விடுபவள் போல் பார்த்தாள்.

"கல்யாண அலைச்சல். உடம்பே சரியாக இல்லை. புகைந்து புகைந்து இருமுகிறாள்" என்று கூறினாள் ஹேமாவின் மாமியார். கௌரி அந்த அம்மாளின் பக்கம் ஒரு கணம் நோக்கி விட்டுத் திரும்பி ஹேமாவைப் பார்த்தாள். ஹேமாவும் பின் வாங்காமல் கௌரியை நிமிர்ந்து நோக்கினாள். அவள் கண்களில் மட்டும் பீதி, சந்தேகம், கோபம், வெறுப்பு இவை முறையே தோன்றின, கௌரியின் கண்களுக்கு.

பெரியவர்கள் விவாகச் சீர்களைப் பற்றியும், புடைவைகளைப் பற்றியும் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கருகே நடக்கும் கண்களின் போராட்டத்தை அவர்கள் கவனிக்கவில்லை. கௌரியும் நியாயம் பார்த்துச் சொல்லும் பொறுப்புத் தன் மீது தான் விழுந்திருப்பதைப் போல் ஹேமாவின் முகத்தைப் பார்த்தாள். ஹேமாவின் கண்களில் மன்னிப்பைக் கோருவது போல்

காணப்பட்டது. வாய் பேசாது நடந்துகொண்டிருந்த போராட்டம் முற்றுப் பெற்றது. ஹேமா தழைந்தாள். கௌரியின் மனசு பச்சாதாபத்துடன் இரக்கம் கொண்டது.

வீட்டைச் சுற்றிப் பார்ப்பதற்காக எழுந்தார்கள் நாகலக்ஷ்மி அம்மாளும் ஹேமாவின் மாமியாரும். கௌரியும் அவர்களுடன் கூடவே எழுந்து சென்றாள். கண்டவுடனே பேசிய இரண்டு வார்த்தைகளைத் தவிர வேறு ஒரு பேச்சும் நடைபெறவில்லை இரு சிநேகிதிகளிடையே. யார் முன்னே பேசுவது, என்ன பேசுவது என்று சங்கோஜப் பட்டுக் கொண்டு இருவருமே மௌனமாக இருந்துவிட்டனர். அவர்கள் மீண்டும் கூடத்திற்கு வந்ததும் நாகலக்ஷ்மி அம்மாள் ஹேமாவைப் பாடச் சொன்னாள். அவள் வீணையை எடுத்து வைத்துக் கொண்டு வெகு அழகாக வாசித்தாள். நாலைந்து பாட்டுக்கள் வாசிப்பதற்குள் அவள் களைப் படைந்து விட்டதைக் கண்ட கௌரி, "மாமி, நாழிகை ஆகிறதே, வீட்டுக்குப் போக வேண்டாமா?" என்று கேட்டாள்.

ஹேமாவின் கண்கள் கௌரியை நன்றியுடன் நோக்கின. அதைப் பார்க்க விருப்பமில்லாதவள் போல் கௌரி முகத்தை மெல்லத் திருப்பிக் கொண்டாள்.

எல்லோரும் எழுந்து வாசற் பக்கம் வரும் சமயம் ஹேமா பேச எத்தனித்தாள்.

"உன் கணவரை நான் முன்பே பார்த்திருக்கிறாப் போல் இருக்கிறது."

"எங்கள் எதிர் வீட்டுச் சுந்தர் - உனக்கு ஞாபகமில்லை?"

"ஓகோ?...அவர் தானா? வெகு நாளாகி விடவே எனக்கு ஞாபகம் இல்லை. மேலும் நீ தான் அவர் மனைவி என்றும் எனக்குத் தெரியாது."

"நேற்று போட்டோவைப் பார்த்துத்தான் எனக்கும் நீ தான் ஸ்ரீமதி கேசவராவ் என்று தெரிந்தது."

"பின் ஏன் என்னைப் பார்த்து விட்டுக் கூட, தெரியாதது போல் தலை குனிந்து கொண்டாய்?"

"நான்......"

கௌரிக்குத் தன் நடவடிக்கை அவமானத்தைக் கொடுத்தது. ஹேமா நேருக்கு நேராகக் கேட்ட கேள்விக்கு அவளுக்குப் பதிலளிக்கத் தெரியவில்லை.

அவள் குழப்பத்தைக் கவனித்த ஹேமா, "பரவாயில்லை, கௌரி. எப்படியானால் என்ன, நாம் இருவரும் ஒருங்கு சேர்ந்து விட்டோம். இனி நம் கணவர்களைப் போலவே நாமும் சிநேக மாக இருக்க வேண்டும்" என்றாள். அவள் கை கௌரியின் கரத்தைப் பற்றியது. கௌரியும் பேசாமல் அவள் கையைத் திருப்பி அழுத்தினாள்.

வந்த போது இருந்ததைக் காட்டிலும் பன் மடங்கு அதிகக் குழப்பத்துடன் திரும்பினாள் கௌரி. 'அந்தப் பார்வை! ஏன் கெஞ்சி னாள்? என்ன கெஞ்சினாள்? அவள் கணவனுக்கு அவள் உடம் பைப் பற்றித் தெரிவித்து விடுவது அவள் நம்மிடம் வைத்திருக்கும் விசுவாசத்திற்குத் துரோகம் செய்வது போலாகுமோ? சுந்தருக்குத் தெரியுமே, அவர் சொன்னால்? அதைத் தடை செய்தால் அவர் நட்புக்குத் துரோகமல்லவா? இது என்ன தர்ம சங்கடம்? சுந்தர் ஒரு பக்கத்திலிருக்க நாம் வேறொரு பக்கம் இருக்க வேண்டுமா? கடமை எங்கே நிற்கிறது? எது செய்வது நியாயம்? சுந்தர் தன் இஷ்டப்படி செய்து கொள்ளட்டும், நம் இஷ்டப்படி நாம் இருப்போம். நமக்குத் தெரிந்தால் தானே, நம் வாயால் சொன்னால் தானே? ஆனால், அதெப்படி நியாயமாகும்? குற்றம் செய்தாலென்ன, குற்றம் செய்வதற்கு ஏதுவாக இருந்தாலென்ன? குற்றம் நடக்கப் போகிறதென்று தெரிந்தும், தெரியாதது போல் பார்த்துக் கொண்டிருந்தால் தானென்ன? எல்லாம் ஒன்று தானே?'

சுந்தரமும் தன் மூளையைத் துளைத்துக்கொண்டிருந்தான். 'எப்படிக் கூறுவது? தேகத்தில் இன்னும் கோளாறு இருந்தால் மணம் புரிந்து கொள்ள, அவள் உயிருக்கே ஆபத்து நேரத் துணிவார்களா அவளுடைய பெற்றோர்கள்? நடந்தது நடந்து விட்டது, சந்தோஷமாக இருக்கும் வரையில் இருக்கட்டுமே? அதற்குள் அதைக் குலைப்பானேன்? அதுவும், என் கையாலே அவள் தலையில் கல்லைப் போடுவானேன்? ஆனால் பிறகு விஷயம் கைம்மீறி விடுமோ? அவனுக்கும் வந்து விட்டால்?......' அந்த எண்ணமே அவன் குடலில் ஓர் ஆட்டம் ஆட்டியது. பிறகு, 'அவனுக் கென்ன, நல்ல ஆரோக்கியத்தில் இருப்பவன்' என்று தனக்குத் தானே சமாதானப் படுத்திக் கொண்டான் சுந்தரம்.

# 31

## சகோதரிகள்

தெருக் கோடியில் அவன் தலை மறையும் வரை சுந்தரத்தையே நோக்கிக் கொண்டு நின்றாள் கௌரி. வீட்டில் யாரும் இல்லை. நாகலக்ஷ்மி அம்மாள் வழக்கம்போல் கோவிலுக்குப் போய் விட்டாள். மகாலிங்கையர் ராமையருடன் எங்கேயோ போயிருந்தார். வருவதற்கு நேரமாகும். தனியே அங்கேயே சற்று நேரம் நின்று விட்டு உள்ளே சென்றாள் கௌரி. கூடமும் அறையும் அவளைப் பார்த்து விழித்தன. அவள் சுந்தரத்தின் அறைக்குள் நுழைந்தாள். எல்லாம் வைத்த இடத்தில் இருந்தன. ஒழித்து வைக்கும் வேலைகூட இருப்பதில்லை தனக்கு. தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். ஏழெட்டுப் பேர்களுக்காக ஓயாது வேலை செய்து வழக்கப்பட்ட கௌரிக்குப் புக்ககத்தில் வேலை இல்லாது இருப்பதுகூட என்னவோபோல் இருந்தது. சுந்தரத்தின் மேஜை முன்பு அவள் திருடிய போட்டோ இல்லாமல் காலியாக இருப்பதுபோல் தோன்றிற்று. அந்தப் படம் எங்கே என்று ஒருநாள் அவன் கேட்டான். 'திக், திக்' என்று அடித்துக் கொண்ட மனத்துடன் அவள், "எங்கேயோ தெரியவில்லையே, கல்யாணக் கலவரத்தில் எங்காவது போய் விட்டதோ?" என்று ஒரு புளுகு புளுகினாள். பிறகு அதைப் பற்றிப் பிரஸ்தாபமே இல்லை.

வேலை ஒன்றும் இல்லாமல் போய்விடவே கௌரிக்கு வீட்டில் பொழுது போகவில்லை. வீட்டைப் பூட்டிக் கொண்டு, அவள் பிறந்தகம் சென்றாள். உள்ளே நுழைந்ததும், வீடே நிசப்தமாக இருப்பது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

நேரே பின்புறம் சென்று சமையலறையில் எட்டிப் பார்த்தாள். அங்கே வேலை செய்து கொண்டிருந்த சமையற்கார அம்மாளைத் தவிர, வேறு யாரும் காணப்படவில்லை.

"மாமி, எல்லோரும் எங்கே?"

"அம்மா நாகு மாமியுடன் பார்த்தசாரதி கோவிலுக்குப் போயிருக்கிறாள். அப்பா வெளியே உலாவச் சென்றார். மற்றவர்கள் மாடியில் இருக்கிறார்கள்."

"உமா எங்கே? பாலு?"

"உமா சீக்கிரம் சாப்பிட்டு விட்டாள். மேலேதான் இருப்பாள்."

"சரி, நான் போய்ப் பார்க்கிறேன்."

"கொஞ்சம் இந்த உப்புமாவைத் தின்று விட்டுப் போ. உனக்குப் பிடிக்குமே என்று இப்பொழுது தான் நினைத்துக் கொண்டிருந்தேன். அங்கே கொண்டு கொடுக்கலாமா என்று கூட......"

கௌரி அந்த மாமியின் பேச்சுக்காகக் கொஞ்சம் உப்புமா சாப்பிட்டுவிட்டு, தங்கைமாரைத் தேடிச் சென்றாள். படி ஏறிய உடனே லலிதா தென்பட்டாள்.

"உஷ்! ....." என்று ஆள்காட்டி விரலை வாயின்மேல் வைத்து எச்சரித்தாள் அவள். கௌரி அவளை வியப்புடன் நோக்க, அவள், "உமாவுக்குக் கோபம். உரக்கப் பேசாதே!" என்றாள்.

"என்ன விசேஷம்?"

"மறுபடியும் மீட்டிங்குக்குப் போனாள். அம்மா கோபித்துக் கொள்ள, இவள் கத்த, அப்பா சமரசம் செய்யப் பார்க்க...... அந்தக் கண்கொளாக் காட்சியைக் காண நீ இங்கு இல்லாமல் போய்விட்டாயே!"

கௌரி லலிதாவைக் கீழே அனுப்பிவிட்டு உமாவின் அறைக் கதவை மெல்லத் தட்டினாள்.

"யார் அங்கே?" என்று சீறினாள் உமா, உள்ளேயிருந்து.

"நான் தான், கௌரி."

"என்னைச் சமாதானம் செய்ய வந்தாயோ? தட்டி, தூங்கப் பண்ண வந்தாயாக்கும். என் ஜோலிக்கு ஏன் நீங்களெல்லாம் வருகிறீர்கள்? அப்பா, அம்மா தொந்தரவு போதாதென்று......நீ பெரிய சாது. என்னை ராஜிப் படுத்த வந்தாயாக்கும்...."

உமா வாயில் என்ன வருகிறதென்று யோசிக்காமல் பேசினாள் என்பதை அவள் வார்த்தைகளிலிருந்து எளிதாகத் தெரிந்து கொண்டாள் கௌரி. உமா எல்லாம் கொட்டி ஓய்ந்த பிறகு கௌரி, சாவதானமாக, "நீ எதைப் பற்றிப் பேசுகிறாய் என்றே எனக்குத் தெரியவில்லை. வீட்டில் யாரும் இல்லை. இங்கே உங்களுடன் கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் போகலாமே என்று வந்தேன். உன் வேலையை நான் ஏதாவது கலைத்துத் தடை செய்வதாக இருந்தால்..." என்றாள்.

"சரி, உள்ளே வா. அவர்கள்தாம் உன்னை அனுப்பினார்களோ என்று பார்த்தேன்" என்று கூறிக் கொண்டே உமா கதவைத் திறந்தாள்.

"எவர்கள்? யாரும் வீட்டில் இல்லையே?"

உமா கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கோபத்தை விழுங்கிக் கொண்டு, அது உள்ளே எரித்து விடாமல் தடுப்பதுபோல் இரண்டு தம்ளர் தண்ணீரைக் குடித்து விட்டு, தமக்கையுடன் முகம் கொடுத்துப் பேச ஆரம்பித்தாள்.

கௌரி இதை எல்லாம் ஒன்றும் கவனியாதவள் போல் காலேஜைப் பற்றியும், உமாவின் அபிப்பிராயங்களைப் பற்றியும் கேட்டுக் கொண்டே இருக்க, உமாவும் தன்னை யறியாமலேயே அன்று நடந்த சம்பவத்திற்கு வந்தாள். ஒவ்வொன்றையும் விவரமாகக் கூறினாள். அரசியலைப்பற்றி அலசினாள். அவள் முதுகு நிமிர்ந்து, கண்கள் ஒளி வீசின. வாய் வீராவேசம வந்தாற்போல் இறுக மூடிக் கொள்ளுவதும், திறப்பதுமாகப் பேச, கௌரி அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு அவள் வார்த்தைகளை மெய்ம்மறந்து கேட்டாள். அரசியலில் உமாவுக்கிருக்கும் ஊக்கத்தைப் பற்றிச் சந்தேகமே இல்லை. அவள் பேசுவதைக் கேட்ட போது கௌரியின் இருதயம் பெருமையுடன் மலர்ந்தது. தங்கையை அவள் அன்பு கனியும் விழிகளுடன் நோக்கினாள். உமா விவாகம் புரிந்து கொண்டு ஓர் ஆடவனுக்குப் பணிந்து நடப்பாளா? இல்வாழ்க்கையில் அவள் நிம்மதியடைந்து, தினம் செய்யும் காரியங்களில் ஆனந்தம் கண்டு வாழ்வாளா? அல்லது உமா காணும் கனவுகள்தாம் உயிர் பெறுமா? வெளித் தோற்றத்திற்கு இன்னும் கொஞ்சம் வயதானவளாகத் தோன்றினாளே அன்றி, உண்மையில் அவள் ஒரு குழந்தை தானே? இவ் வெளி மதிப்புக் கேற்ற பண்பாட்டை அவள் அடைந்திருந்தாளா? தான் நினைப்பது சரி அல்லது தவறு என்று திடமாகத் தெரிந்து கொள்ளும் அறிவு அவளுக்கு வந்து விட்டதா? சந்தேகத்துக்குப் பின் சந்தேகம் வந்து கௌரியின் மனத்தைத் தாக்கியது.

உமா தன் பேச்சை நிறுத்திக் கொண்டாள். அக்காவின் அபிப்பிராயத்தைக் கேட்டாள்.

கௌரி சற்று நேரம் பேசாமலிருந்தாள். பிறகு ஒரு தீர்மானத்திற்கு வந்தவள்போல் பேசலானாள். ஒவ்வொரு வார்த்தையை

யும் நிறுத்தி நிறுத்தி எடை போட்டுக் கொடுப்பதுபோல் நிதான மாகப் பேசினுள் அவள். தங்கையின் உள்ளத்தில் நன்ருகப் பதிய வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு.

"உமா, நீ கேட்பது எனக்குச் சுலபமான காரியமல்ல. என் நோக்கங்களே வேறு. உன் கொள்கைகளோ அலாதி. நீ போடு வது பெரிய விஷயங்களுக்கு அடி. நானே வீட்டைச் சுற்றிச் சுற்றி, சிறிய சிறிய சமாசாரங்களில் சாந்தியைக் காண்பவள். அம்மா, அப்பா, அகமுடையான், உடன் பிறந்தோர், மாமா, மாமி மற்றும் நெருங்கிப் பழகும் சிலரே என் உலகத்தவர். நான்கு சுவர்களும் ஒரு கூரையுமே அடக்கி விடுகின்றன என் உலகத்தை. உன் எண்ணங்களிலோ நம் தேசம் மட்டுமே அல்லாமல், அமெ ரிக்கா, ரஷ்யா இன்னும் எல்லா நாடுகளும் சஞ்சரிக்கின்றன. 'ஸோஷியலிஸம்', 'புரட்சி' என்றெல்லாம் கூற ஆரம்பித்து விடு கிருய். இந்த விஷயங்களைப் பற்றி என்னைக் கேட்டால்..."

தமக்கையின் தண்மையான பேச்சுக்களைக் கேட்டுக் கொண் டிருந்த உமாவுக்கு, அவள் கூறுவது மிகவும் நியாயம் என்று பட்டது. எப்படித்தான் அவள், மனத்தைத் திருப்பித் திருப்பி வீட்டிலேயே செலுத்தி, அதில் சந்துஷ்டியையும் திருப்தியையும் அடைந்து விடுகிருளோ என்று வியந்தாள் உமா. அக்கா மேலும் கூறுவதை அவள் கவனிக்கலானுள்.

"......இவ்வளவு வித்தியாசமான மனப்பான்மையுடைய நம் இருவருக்குள், ஒருவர் அபிப்பிராயம் எப்படி மற்றொருவருக் குச் சரிப்படும்? ஆயினும், நீ கேட்பதனுல் கூறுகிறேன். நீ மிகவும் சிறியவள். இந் நாட்களில் விவாகத்துக்குக்கூட வயதாகி விட வில்லை. 'நீ ரொம்பப் பெரியவளோ?' என்று கேட்டு விடாதே. நம் மனப்பான்மைகளின் காரணமாக எனக்கு உன்னைவிட அதிக அநுபவம் உண்டு.

"அப்படி யிருக்க, நீ 'கல்யாணமே வேண்டாம். தேசத் தொண்டு தான் செய்வேன். எப்பொழுது வேண்டுமானுலும் வெளியே செல்வேன். எப்பொழுது வேண்டுமானுலும் வருவேன். நம் தைரியத்தில்தான் எல்லாம் இருக்கிறது' என்றெல்லாம் சொன் ஞல் எனக்கு அது புரியாது. புரிந்தாலும் எனக்கு அதை ஒப்புக் கொள்ளப் போதுமான தைரியம் கிடையாது.

"ஆனால், அதற்கு வேண்டிய தைரியமும், மனோதிடமும் கொண்ட நீ உன் இஷ்டப்படி செய்தாயானால் நம் சமூகம் சும்மா இராது. அதை லட்சியம் செய்யாது நெடுநாள் வரை உன் கொள்கைகளின்படியே நடந்து கொள்ளும் மனோதிடம் உனக்கிருந்தாலும், நான்கு பேர்கள் கூறும் பேச்சைக் கேட்டு அப்பா அம்மா மனமுடைந்து போவார்கள்" என்று கூறி நிறுத்தினாள் கௌரி.

"என்ன, கௌரி? நான் சொல்வது உனக்குப் புரியவில்லையே? பெரியோர்கள் அப்படி நினைப்பார்களாயின் அது அவர்கள் சுய நலத்தைக் கருதித்தானே? நம் எண்ணங்களுக்கு இடங் கிடையாதோ?......"

"பொறு, உமா. நான் சொல்வதைச் சொல்லி விடுகிறேன். உலகம் பலவிதம் பேசும். என்னைப் பொறுத்த மட்டில் என்னால் அதை எதிர்க்க முடியாது. அம்மா மனம் நொந்தால் நான் ஒரு நாளெல்லாம் அழுவேன். அகமுடையான் ஒருவேளை கோபித்துக் கொண்டு விட்டால், உலகமே அஸ்தமித்து விட்டது என்று துடிப்பேன். நான் ஒரு கோழை."

கௌரி பேச்சை நிறுத்தி விட்டதைக் கண்ட உமா, "கௌரி, சுந்தரம் உன்னைக் கோபித்துக் கொள்கிறானா?" என்று கேட்டாள். குற்றம் சாட்டுவது போலத் தொனித்தது அவள் குரல்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. பேச்சுக்குச் சொன்னேன்... என் மனத்தில இருப்பதைக் கூறிவிட்டேன்; இனி உன் இஷ்டம்."

உமா பதில் ஒன்றும் கூறவில்லை. வாயிற்படியில் லலிதா நின்றிருப்பதைப் பார்த்து, "நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டாள்.

"கௌரி வந்தாளே என்று வந்தேன். நான் வந்ததனால் உன் அறை அசுத்தமாகி விட்டதா என்ன? நாளைக்கு வேண்டுமானால் 'லேஸால்' புண்ணியாகவாசனம் பண்ணிக் கொள். நம்ப சேஷ வாத்தியார் ....." என்று ஆரம்பித்து விட்டாள் லலிதா.

"எப்பொழுது வந்தாய் என்று தானே கேட்டேன், என்னமோ அளந்து கொண்டே....."

சகோதரிகள் வழக்கமான சச்சரவை ஆரம்பித்து விட்டதைக் கண்ட கௌரி, "உமா, லலி, அது இருக்கட்டும், ஏதாவது பாடுங்களேன், கேட்கலாம்" என்றாள். இதைக் கேட்டுக் கொண்டே

அப்பொழுது தான் வெளியே விளையாடி விட்டு அங்கே வந்த பாலு, மூலையில் சாத்தியிருந்த தம்பூரை எடுத்து உமாவிடம் கொடுத்தான்.

அதற்குள் லலிதா, "அன்பர்களே, இங்கே கூடியிருக்கும் தொண்டர்கள் வெகு வணக்கத்துடன் கேட்டுக் கொண்டதன் பேரில் இப்பொழுது குமாரி உமா ஒரு சிறிய சங்கீதக் கச்சேரி செய்வார்" என்றாள்.

"தேசத் தொண்டர் தம்பூர் மீட்ட, இந்தத் தேகத் தொண்டர் பாடுவதை நானும் (ஆ) மோதிக்கிறேன்" என்றான் பாலு.

அதற்குள் கௌரி கடிந்து கொள்ளவே சகோதரிகள் பாடத் தொடங்கினார்கள். லலிதாவின் பெரிய குரல் ஜீவன் நிரம்பியதாக இருக்கும். அத்துடன் அவளுக்கு நல்ல ஞானமும் உண்டு. அவள் பாட, உமாவும் தன் மெல்லிய குரலில் அவளுடன் இழைய, கௌரி பாட்டை மெய்ம் மறந்து அநுபவித்துக் கொண்டிருந்தாள். பாலுவும் தன் அக்காவின் பக்கத்தில் உட்கார்ந்து பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவன் சங்கீதத்தைத் தான் ரசித்தானோ அல்லது தமக்கையின் அண்மையைத் தான் கண்டு மகிழ்ந்தானோ?

வெளியே சென்றிருந்த பெரியவர்கள் வீட்டுக்குள் நுழையும் போதே அங்கு மிதந்து வரும் கானத்தைக் கேட்டு, "கௌரி வந்திருக்கிறாளாக்கும்!" என்றார்கள்.

## 32

## "யாரைக் கேட்டாய்?"

"யாரைக் கேட்டுச் செய்தாய்?" என்று கேட்டார் மகாலிங்கையர் சற்றுப் பலமாகவே.

"அவ்வளவு தெரியவும் எனக்கு வயதாக வில்லையா?"

"ஆமாம், மகா பெரியவன்!"

"என்ன, அப்பா, இதுவரை என்னை இப்படி நீங்கள் கண்டித்ததே இல்லையே. இப்பொழுது போய்........."

"இத்தனை நாள் மூளையுடன் நடந்து கொண்டாய்."

"............"

"சீமை இல்லாமல் எங்கே குறையாக இருந்தது?"

கௌரி பயத்துடன் அப்பாவையும் பிள்ளையையும் நோக்கினாள். இருவரும் கோபம் வந்தால் சீக்கிரத்தில் தணியாத வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆயிற்றே? நாகலக்ஷ்மி அம்மாள் பெரிய இடி தாங்கினவள் போல் தாழ்வாரத்தில் உட்கார்ந்து விட்டாள்.

"என்றைக்கு வந்தது பதில்?" என்று கேட்டார் தகப்பனார்.

"இன்றைக்குத்தான்."

மகாலிங்கையர் மேலே பேச இஷ்டம் இல்லாதவர் போல் துண்டை உதறி மேலே போட்டுக் கொண்டு படுக்கச் சென்று விட்டார். சுந்தரமும் தன் அறைக்குச் சென்று உட்கார்ந்து கொண்டான். கௌரி கதவை எல்லாம் மூடிவிட்டு மாமியின் அருகில் வந்து உட்கார்ந்தாள். மௌனமாக மாமியும், மருமகளும் தங்கள் இருவரையும் எதிர்பாராத விதமாகத் தாக்கிய சமாசாரத்தைத் தங்களுக்குள்ளேயே வைத்து அநுபவித்தனர். நாகலக்ஷ்மி அம்மாளுக்கு, 'குழந்தை என்ன நினைப்பாளோ? அவளுக்கு எப்படி ஆறுதல் கூறுவது? இந்த அசட்டுப் பிள்ளை சொல்லாமல் கொள்ளாமல் இப்படிச் செய்து விட்டிருக்கிறதே' என்ற நினைவு. கௌரிக்கோ, பிறர் முகம் வாடியிருக்கக் காணச் சகியாத அவள் உள்ளம் மாமாவுக்காகவும் மாமிக்காகவும் உருகியது. அவர்களை எப்படிச் சாமாதானப் படுத்துவது என்று அவள் தவித்தாள். சுந்தரந்தானே அவர்களது முழு உலகமும்.

அடுத்தபடியாக, சுந்தரத்தை எல்லோரும் தடுக்கிறார்களே என்றுதோன்றியது அவளுக்கு. 'அவர் தம் பிற்காலத்து வேலைக்கு நலம் எதுவோ அப்படித்தானே செய்வார்? அவருக்கு மாத்திரம் தெரியாதா? நம்மை விட்டு இருக்க அவருக்கு மட்டும் கஷ்டமாக இருக்காதா?'

"வாடி, படுத்துக் கொள்ளலாம்" என்று எழுந்தாள் மாமி. கௌரி ஒரு முறை தன் கணவன் அறையை நோக்கி விட்டு, மாமியாரைப் பின் தொடர்ந்தாள்.

படுக்கையில் இப்படியும் அப்படியுமாகப் புரண்டாள் கௌரி. அவளுக்குத் தூக்கமும் வரவில்லை. தனிமையில் இருக்கும் போது தன் அடி மனத்திலிருந்து வெளிக் கிளம்பிய ஏக்கத்தை அவளால் எதிர்க்க முடியவில்லை. சுவரில் தொங்கும் மகாவிஷ்ணு படத்தைப் பார்த்துத் தியானித்தாள்.

'சொல்லாமல் கொள்ளாமல் இப்படிச் செய்ததற்கு என்னிடம் ஒரு வார்த்தை சொல்ல மாட்டாரா? நான் அவர் மனத்தை, அவர் எண்ணங்களை, நோக்கங்களை அறிந்து கொள்ளாமல் போய் விடுவேனா? மனுப் போடுவதாக என்னிடம் மாத்திரமாவது ஒரு வார்த்தை சொல்லி வைக்கக் கூடாதோ? அவருக்கு அதில் ஊக்க மென்றால் என்னுடைய சௌகரியத்தையே, என்னுடைய சுகத்தையே கருதுவேனே?' பலவாறு அவள் சிந்தனைகள் ஓடின.

நீ அவ்வாறு செய்வாய், தன் உள்ளத்தை அறிந்து அதற்குத் தகுந்தாற் போல் பதில் கூறி விடுவாய், உன் விஷயத்தைக் காட்டிலும் பிறர் மனத்தின் திருப்தியே உனக்கு முக்கியம் என்பது அவனுக்குத் தெரியும். அதுதானே உன்மீது அவன் சாற்றும் குற்றம்? பேதையே, உனது உன்னத குணம் உன்னைப் பொறுத்த மட்டில் இன்பத்திற்கு வழி காட்டாது, இன்னல்களுக்கே இடம் கொடுக்கிறதே? நீ உன் மனத்தை அடக்கி, அடக்கி நடப்பதன் பயனே யல்லவோ, அவன் உன்னை விட்டு இப்பொழுது வெளிதேசம் செல்வதும்? ஆனால் இதை நீ எப்படி அறிவாய்?

கௌரி வெகு நேரம் வரை சுந்தரம் வராததைக் கண்டு, அவனைத் தேடிக் கொண்டு கீழே இறங்கி வந்தாள்.

சுந்தரத்திற்குக் கோபம் எப்பொழுதோ தணிந்து விட்டது. சீமைப் பிரயாணம் அருகே நெருங்கி விட்டதும் அவன் உள்ளத்தில் ஓர் அச்சமும், கலக்கமும் குடி கொண்டன. கௌரியை விட்டுப் பிரிந்து விடப் போகிறோம் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் ஊற ஊறத் தாங்க முடியாத ஏக்கம் அவனை வாட்டியது. 'இங்கே இருந்தால் அவளைப் பார்த்துக் கொண்டு நாமாவது சந்தோஷமடையலாமே? அவசரப்பட்டு வேலை செய்து விட்டோமே?' என்று அவன் ஆலோசிக்கலானான். கௌரி, தன்னிடத்தில் தனக்குக் காதல் இருப்பதாகக் காண்பித்து விட்டாளானால் தன் உள்ளம் சாந்தி அடைந்து விடும். விதேசத்தில் கழிக்கும் ஒரு வருஷத்தையும் சந்தோஷமாகவும், தைரியமாகவும் கடத்தி விடலாம் என்று தோன்றியது அவனுக்கு.

கௌரி அவனிடம் காதல் கொள்ள வில்லையா? அவன் அதைத் தெரிந்து கொள்ள மறுத்து, தன் கண்களில் விஷ மருந்தை இட்டு அவைகளைக் குருடாக்கிக் கொண்டது அவன் பிசகே யல்லவோ? அவன் தன் பார்வையை மீண்டும் பெற முடியுமா?

அநாவசியமாக யோசனைகள் புரிந்து தன் வாழ்வையே பாழாக்கிக் கொள்ளும் மனிதனும் உண்டோ? குடித்தனம் அழகாக நடந்தால் அதுவே போதாதோ? வெகு நாட்கள் பழகினால் சாதாரண நட்பும் நேசமாக மாறுவது இயல்பு என்பது மட்டும் அவன் புத்திக்கு ஏனோ எட்டவில்லை? அவன் படிக்கும் புத்தகங்களிலும் காதலர்கள் தன் நாயகிகளை நாளடைவில் அன்பு வரும் என்று உறுதி கூறி மணக்கும்படி கேட்டுக் கொள்வதும் உண்டே? அவை அவன் கவனத்துக்கு வரவில்லையோ? வெள்ளித் திரையிலும், நாடக மேடைகளிலும் இது போன்ற சந்தர்ப்பங்கள் சித்திரிக்கப் படுவதை அவன் கண்டதில்லையா?

கௌரி சுந்தரத்தின் அறையில் புகுந்து சற்று நேரம் மௌனமாக நின்றாள். அவன் ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தான். கௌரி தன் தைரியத்தை எல்லாம் சேர்த்துத் திரட்டிக் கொண்டு தன் கணவன் அருகில் சென்றாள்.

சுந்தரம் அவள் வந்து நிற்பதை அறிந்தும் பேசாமல் இருந்தான். என்ன தான் செய்கிறாள், என்னதான் கேட்கப் போகிறாள் பார்ப்போம் என்று யோசித்துக் கொண்டிருந்தான் அவன்.

கௌரி தன் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, வேடிக்கையாகப் பேச எத்தனித்தாள்.

"சீமைக்குப் போகிறாப் போலேயோ? என்னிடம் கூடச் சொல்ல வில்லையே? அவ்வளவு ரகசியமா?"

சுந்தரம் அவள் வதனத்தை நோக்கினான். அவன் நயனங்கள் அன்பை அள்ளி வீசின. கௌரிக்கு ஆனந்தமும், நாணமும் குழப்பமும் ஒன்றாக உண்டாக, அவள் பேச்சை நிறுத்தி விட்டு முகத்தில் குறு நகை வாடாமல் நின்றாள். சுந்தரம் அவளுடைய மிருதுவான கரங்களை எடுத்துத் தன் பெரிய கைகளில் அமைத்துத் தடவிக் கொடுத்தான்.

"கௌரி, உனக்கு என் மேல் கோபமா?" என்று கேட்டான்.

"எதற்குக் கோபம்? நன்றாக இருக்கிறது. உங்களுக்கு எது நல்லதோ அது தானே செய்ய வேண்டும்?" என்றாள்.

சுந்தரத்தின் இருதயம் திரும்பிப் படுத்துத் தூங்கிற்று. அவன் எவ்வளவு முயன்றும் அவனுக்கு அம் மொழிகளுக்கு அர்த்தமோ, அனர்த்தமோ கண்டுபிடிக்க முடியவில்லை. இதுபோன்ற சொற்கள்

அவன் தோழி கௌரி கூறலாம். அவன் மனைவி வாயில் வர, அவைகளுக்கு உணர்ச்சி போதுமா? 'கௌரி, கௌரி, உன் மனம் என்றுமே எனக்கு விவரிக்கத் தெரியாத மர்மமாகவே இருந்து விடுமா?' அவன் தன் கேள்விக்குப் பதில் அளிக்கவில்லை. அவள் கையை எடுத்துக் கண்ணிலும் கன்னங்களிலும் பொருத்திச் சாந்தி பெற முயன்றான்.

"நாழிகை ஆகவில்லை? தூங்க வேண்டாமா?" என்றாள் கௌரி.

சுந்தரம் பதில் கூறாமல் எழுந்தான். அவனது ஒரு கை அவள் தோள் மீது இருந்தது. அவள் தன்னை விடுவித்துக் கொள்ள எத்தனிக்க வில்லை. அதில் அவன் தைரியம் கொள்ளலாமா?



"எதற்கடீ இப்பொழுது சீமை?" என்றாள் காமாக்ஷி அம்மாள். "காமாகத் தேடிக்கொள்ளும் கவலை. இங்கே இல்லாதது அங்கே என்ன வந்து விட்டதாம்? பெரியவர்கள் கிடையாது பெருந்தலை கிடையாது. நாகுக்குக்கூடத் தெரியாதாமே? ஏனடீ..." என்று தன்னை அதட்டிய தாயைப் பார்த்துச் சிரித்தாள் கௌரி.

"என்ன அம்மா கவலை? எத்தனை பேர் போக வில்லை? ஒரு வருஷந்தானே?—வந்து விடுகிறார்."

"உனக்குத் தெரியுமோ முன்னமேயே?"

"தெரியாது" என்று ஒப்புக்கொண்டாள், 'கௌரி. தெரியும் என்று சொல்லாமற் போனேமே என்று வருந்தினாள் அவள் அடுத்த கணம்.

"அவ்வளவு லட்சணம். ஒவ்வொரு குழந்தை எப்படி இருக்கிறது!" என்று பெருமூச்செறிந்தாள் தாய். "குறியாக வந்தால் போச்சு......"

"இல்லையானால் என்று ஒன்று இருக்கிறதா என்ன?" என்றாள் கௌரி, சற்றுக் கடுமையாகவே.

"உனக்கென்ன தெரியும்? இளங்கன்று..."

"கோபு அண்ணா பம்பாய்க்குப் போயிருக்கிறானே, வருஷத்துக்கொரு தடவை தானே இந்தப் பக்கம் வருகிறான்? அதைக் காட்டிலும் இது என்ன மோசமாகி விட்டது? கண் மறைந்தால் நூறு மைலாக இருந்தாலென்ன, ஆயிரம் ஆனால்தானென்ன ?'

காமாக்ஷி அம்மாள் ஒன்றும் கூறவில்லை.

'இந்தக் காலத்தில் கூட அம்பாவைப் போல் மனிதர்கள் இருக்கிறார்களே' என்று எண்ணியவாறே கௌரி அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

★

"எனக்கு அப்பொழுதே தெரியும். 'மண வாழ்க்கை உன்னதமானது. அதில் காணும் திருப்தி வேறு எதிலும் இல்லை' என்றெல்லாம் பிதற்றுகிறாயே, பார்த்தாயா? முதல் 'சான்ஸ்' கிடைத்ததுமே ஓடப் பார்க்கிறான் சுந்தரம். அற்பத்திலேயே மனசு நிலைத்து நிற்குமா என்ன? வெளியே எங்காவது போய்விட வேண்டும் என்று தான் அலைகிறது பார்த்தாயா?" என்று உமா தனக்குத் தெரிந்ததை எல்லாம் சொன்னாள்.

பொறுமை சாலியான கௌரிக்கும் கோபம் வந்து விட்டது. "உனக் கென்ன அதைப்பற்றி? உனக்கென்னதான் தெரியும் அதைப் பற்றி? அத்துடன் யாரைப் பற்றி, யார் எதிரில் பேசு கிறாய் என்பது ஞாபகம் இருக்கட்டும்" என்று சீறினாள் அவள்.

இந்தப் புது கௌரியைக் கண்டு உமா வியப்புடன் வாயை மூடிக்கொண்டாள்.

'எல்லோரும் ஏன் இப்படி சுந்தரின் மீது குற்றம் சாட்டு கிறார்கள்? ஏதாவது ஓர் அந்தரங்கமான காரணம் இல்லா விட்டால் யாரும் வெளி தேசங்களுக்குப் போகக் கூடாதோ? அவர் தம் அறிவை விருத்தி செய்து கொண்டால் இவர்களுக்கு என்ன இடையூறு?' அவள் சினம் அதிகரித்துக்கொண்டே வந்தது. சுந்தரத்தின் சார்பாக வாதித்தாள், தாங்கிப் பேசினாள். எல்லாம் மானசீகமாகத்தான். தன் உள்ளத்தில் எழும்பிய எண்ணங்களை அடக்கி, சுந்தரம் செல்லும் போது தானாவது அவரைச் சிரித்த முகத்துடன் வழியனுப்ப வேண்டுமென்று திட சங்கல்பம் செய்து கொண்டாள் கௌரி.

சுந்தரம் அமெரிக்காவுக்குச் செல்லப் போவதாகத் தெரிந்த திலிருந்து அவன் தாய் அவனை ஓயாது ஏதாவது குறை கூறிக் கொண்டிருந்தாள். ஆனால் மகாலிங்கையர் மட்டும் முதல் நாள் கூறிய இரண்டு வார்த்தைகளைத் தவிர வேறொன்றும் சொல்ல வில்லை. 'நடந்தது நடந்தாகிவிட்டது. போய்விட்டுத்தான் வரட்டுமே. சிறிய வயதில் போய்ப் பார்த்து விட்டு வராவிட்டால்,

எப்பொழுது போகிறது? மேலும் நமக்கும் பெருமையல்லவோ?' என்று சமாதானம் அடைந்தவராய் இருந்துவிட்டார்.

நாகலக்ஷ்மி அம்மாளுக்கு மனச் சாந்தி அவ்வளவு சுலபமாக வந்து விடவில்லை.

" கல்யாணம் செய்து கொள்வதற்கு முன்னேயே போவது தானே ?" என்று சலிப்புடன் மகனைப் பார்த்துக் கூறினாள் அவள். "இப்பொழுது அந்தப் பெண் வேறு கவலைப் பட வேண்டுமோ ?"

சுந்தரம் சிரித்தபடியே யார் சொல்வதையும் காதில் போட்டுக் கொள்ளாமல், தன் வேலைகளைக் கவனிக்கலானான். தந்தைதான் என்ன சொல்லுவாரோ என்ற பயம் இருந்தது அவனுக்கு. அவரோ, ஒன்றும் சொல்லாமல் இருந்ததோடு இல்லாமல், அவனுக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் வசதிகளையும் தாமே கவனிக்கலானார். பல பேர்களைப் போய்ப் பார்த்தார். எத்தனையோ பேர்களுக்குக் கடிதங்கள் எழுதினார். இதை எல்லாம் கண்டு திருப்தியுடன் இருந்த சுந்தரம் தாய் சொல்வதைப் பொருட் படுத்தவில்லை. அவளும் காமாக்ஷி அம்மாளும் கூறு வதை எல்லாம் அவன் வேடிக்கையாகவே எடுத்துக் கொண்டு சிரித்தான்.

" அம்மாமார்களுக்கே இப்படித்தான். சீமைக்கு அனுப்புவது என்றால் பிள்ளைகளைப் பறி கொடுப்பது என்று அவர்கள் நினைத் துக் கொண்டு விடுகிறார்கள் " என்றான் அவன்.

கௌரியிடமிருந்து அவளது இருதயத்தின் திறவு கோலாக ஒரு சொல் வருமா என்று அவன் எதிர் நோக்கியது பயனில் லாமல் போயிற்று. அவள் அவனை, " ஏன் போகிறீர்கள் ? நீங்கள் போய்விட்டால் எனக்கு எப்படி இருக்கும் ?" என்பது போன்ற கேள்விகள் ஒன்றையும் கேட்கவில்லை.

தன் அன்னையின் சொற்களை வைத்துக்கொண்டே கௌரி யின் மனத்தை ஆராயப் பார்த்தான் சுந்தரம்.

" அம்மா என்ன சொல்லுகிறாள் பார்த்தாயா ?" என்று அவளைக் கேட்டு விட்டு, அவள் முகத்தை அவன் கூர்ந்து கவனித் தான்.

அவள் சாவதானமாக நிமிர்ந்து பார்த்தாள். " முன்பு போவதற்கும் இப்பொழுது போவதற்கும் என்ன வித்தியாசம்?

என்று கேட்டாள், கள்ளங் கபடமற்ற முகத்துடன். தன் கணவனுக்கு விவாகத்திற்கு முன் இருந்த சுதந்தரம் இப்பொழுதும் உண்டென்றும், அவனது வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கான காரியங்கள் தன்னால் தடைப் படக் கூடாது என்றும் அவளது சுய நலமற்ற மனத்தில் தோன்றிற்று.

ஆனால் சுந்தரத்தின் காதில் அனர்த்தமாக விழுந்தது அவளுடைய பதில். 'இப்பொழுது என்ன புதிய உறவு வந்து விட்டது? நீ எப்பொழுது போனாலும் எனக்கு ஒன்று தான் என்கிறாள் பார்த்தாயா?' என்று நினைத்து அவன் தன் உள்ளத்தை வாட்டிக் கொண்டான்.

இந்த விபரீதத்தை அறியாத கௌரி, தான் கூறிய பதிலை நினைத்து நினைத்துத் தானே அதிசயப்பட்டாள். 'என்ன தைரிய மாகப் பதில் சொல்லிவிட்டோம்! இதுபோல் அந்தரங்க எண்ணங் களை எட்டும் கேள்விகள் நம்மை மகிழ்ச்சியில் அழுத்தி வாயடைத்து விடுமே? வாய் திறந்து பேசவும் கற்றுக்கொண்டு விட்டோமே? சுந்தரம் அதிலிருந்தே என் மனத்தை அறிந்து விட்டிருப்பார். ஆமாம், எப்பொழுது போனால் என்ன? விவாகம் ஆனதனால்தான் உறவா? எப்படியும் அவரைப் பிரிந்தால் எனக்குக் கஷ்டந்தானே?' என்று ஓடின அவள் யோசனைகள்.

## 33

## சுயம் பிரகாசம்

"என்ன, நான் பட்டணம் போய் விட்டு வரட்டுமா?" என்று கேட்டாள் சாரதா, தன் கணவனைப் பார்த்து.

"என்ன விசேஷம் அங்கே?"

"சுந்தரம் அமெரிக்காவுக்குப் போகிறானாமே, அது தான் போய்ப் பார்த்து விட்டு வரட்டுமா என்றேன்."

"அவன் போனால் போகட்டுமே. இங்கே வந்து சொல்லி விட்டுப் போகத் தெரியவில்லை. அவன் போகிறானாம், இவள் போய் வழி அனுப்புகிறாளாம்!" பஞ்சநதம் விறைப்பாக நாற் காலியில் திரும்பி உட்கார்ந்தான்.

சாரதா அவனையே உற்று நோக்கினாள். சுருக்கிய அவன் நெற்றி ஒரு பக்கத்துப் புருவத்தை உயர்த்தி, அவள் கண் பார் வையை ஒரு பெரிய கேள்விக் குறியாகத் தோற்றுவித்தது.

பஞ்சகதம், அவள் ஏதாவது கூறுவாள், அதற்குப் பதில் எப்படிச் சொல்ல வேண்டும் என்று அழகாகத் தொகுத்துத் தயாராக இருந்தான். ஆனால் அவள் அதற்குச் சந்தர்ப்பம் அளிக்கவில்லை. அவன் திரும்பிப் பார்த்தான். மூக்குக் கண்ணாடியில் நேர் வழியாகத் தவிர மேலும், பக்கவாட்டிலும் அவன் பார்ப்பது ஒற்றைப் பார்வையைக் கொண்ட காக்கையின் நினைவு வந்தது சாரதாவுக்கு. மனைவியிடமிருந்து ஒரு பேச்சும் கிளம்பாததைக் கண்ட பஞ்சு தானே பேச ஆரம்பித்தான்.

"ஊரிலிருந்து கடிதம் வந்ததோ?"

"ஆமாம்" என்றாள் சாரதா. இனி அவனுடன் பேசுவதில் சத்து ஒன்றும் இருப்பதாகத் தோன்றவில்லை அவளுக்கு. அருகே இருந்த ஒரு மாத சஞ்சிகையை எடுத்துக் கொண்டு அவள் உள்ளே செல்லக் கிளம்பினாள்.

"சாரு!" என்றான் பஞ்சு.

கொஞ்சம் தாமதித்து, "என்ன?" என்று அவள் கேட்டாள், வேண்டா வெறுப்பாக. அவன் கூப்பிடும் போது மீறிப் போய் விட்டாலோ, அவ்வளவுதான்; அவனுக்குக் கோபம் வந்து விடும். பிறகு இரைவதெல்லாம் இரைந்துவிட்டு, சாப்பிடவும், வரவும், போகவும் பிரமாதமாக ரகளை செய்ய ஆரம்பித்து விடுவான். அதை நினைக்கும் போது தன்னையும் அறியாமலேயே சாரதாவின் வாய், 'பேய்க்கு வாழ்க்கைப் பட்டால்' என்று முணு முணுத்தது.

அவளுக்கும் சில சமயங்களில் மிகவும் சலிப்பாகத்தான் இருந்தது. மேலும், சுந்தரம் ஊருக்குப் போவதற்கு முன் அவனைப் பார்க்க முடியாது என்றதும் அவளுக்கு விவரிக்கத் தெரியாத ஓர் ஆத்திரம் வந்தது. பிறந்ததிலிருந்து கூடப் பழகி, விளையாடி, சண்டையிட்ட நண்பனல்லவா அவன்? கொஞ்ச நாளாகவே பஞ்சுவின் காலி கலாட்டா அவளுக்கு வெறுப்பாக இருந்தது. சிறிது காலமாவது ஊருக்குப் போய்த் தனியாக இருந்து விட்டு வர மாட்டோமா என்று அவள் ஏங்கிக் கொண்டிருந்தாள். ஊரிலிருந்து வந்த கடிதத்தைப் பார்த்ததும் அவளுக்கு இரட்டிப்புச் சந்தோஷமாக இருந்தது.

"சாரு, நீ போக வேண்டு மென்கிறாயா? நீயே யோசித்துப் பார். அவனே இங்கு வந்து சொல்லுவது மரியாதையா; நாமே போய் அங்கு இளித்துக் கொண்டு நிற்பதா?"

"அவன் ஊர் ஊராக வந்தா சொல்லிவிட்டுப் போவான்?"

"நான் வரமாட்டேன். நீ வேண்டுமானால் போ."

'அப்பாடா!' என்றது அவள் மனம். அவன் கூட வராமல் இருந்து விடப் போகிறானே என்று அவள் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறாள்!

"நானும் போகாமல் இருந்து விடட்டுமா?"

"நான் என்ன சொல்லுகிறேனென்றால், ரயில் பிரயாணம் ஒரு கஷ்டம். அப்புறம் அங்கே அவர்களெல்லாம் ஒரே வேலையாக இருப்பார்கள். குழந்தையை ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டும். பட்டணத்துப் பால்..."

"வீட்டில்தான் பசு இருக்கிறதே."

"அது சரி. என்ன இருந்தாலும் இங்கே சிந்து பசு. எதிரே இருந்து பார்த்து வாங்குகிறோம்."

'வீட்டில் நாமே தீனி போட்டு வளர்த்து, பசுவைக் கறந்தால் அந்தப் பால் நன்றாக இருக்காதுதான். வாசலில் வாங்குவதுதான் அதைக் காட்டிலும் நல்லது, வெகு அழகு!' என்று மனத்திற்குள் சிரித்துக் கொண்டாள் சாரதா.

"சரி, நான் போகவில்லை."

"கோபமா?"

"எனக்கு என்ன கோபம்? நீங்கள் நல்லதுக்குத் தான் சொல்லுவீர்கள்." சாரதாவின் வார்த்தைகள் மிகவும் பணிவாக இருந்தனவே தவிர, அவள் அம் மொழிகளை வெடுக்கென்று கூறி விட்டு, சட்டென்று உள்ளே சென்று விட்டாள். அவள் வதனம் சினமே உருவாக இருந்தது.

பஞ்சு, தான் வெகு சாமர்த்தியமாகப் பேசி விட்டதாக எண்ணித் தன்னைத் தானே மெச்சிக் கொண்டிருந்ததில், மனைவியின் முகத்தைக் கவனிக்கவில்லை. இன்னும் வேறு என்ன தடங்கல்கள் கூறுவோம் என்று அவன் யோசிக்கலானான். அவனுக்கு உள்ளூறச் சுந்தரத்தின் மீது பொறாமை தோன்றிற்று. வீட்டுக்கு ஒரே மாப்பிள்ளையாக இருந்த ஹோதா போய் விட்டதே என்ற குறை அவனுக்கு. அதோடு நிற்காமல், சுந்தரம் சீமைக்கு வேறு போய் விட்டுத் திரும்பி வந்தால் தன் மதிப்புக் குறைந்து விடுமோ என்ற சந்தேகம். இந்தச் சமயத்தில் மாமனார் வீட்டுக்குப் போனால் தானே முக்கியமாக இராமல், தன்னையே எல்லோரும் சுற்றிச்

சுற்றி வராமல், சுந்தரத்தைத் தானே எல்லோரும் கவனிப்பார்கள் என்ற எண்ணந்தான் அவனை அங்கே போக விடாமல் தடை செய்தது. சாரதா தன்னை விட்டு விட்டு, தனியாகப் போக இஷ்டப் படுவாள் என்பது அவன் கற்பனைக்குக் கூட எட்டவில்லை. 'நான் இல்லாவிட்டால் அவளுக்கு எங்கே போனால்தான் என்ன ரசம் இருக்கிறது?' என்பது அவன் சுயம்பிரகாச உள்ளத்தில் ஆழ்ந்து ஊறிய எண்ணம்.

"சாரதா, இதைக் கேட்டாயா?" என்றான் அவன் ரேடியோவைத் திருப்பிக் கொண்டே.

"என்ன?"

"உயர்ந்த ரேடியோ வைத்துக் கொண்டிருப்பதன் அநுகூலம் இதுதான். கேட்டாயா, இதுதான் 'பாலித் தீவு' சங்கீதம்."

"இல்லை, அது பொப்பிலி நாட்டுப் பாடல்கள்; சென்னையிலிருந்து" என்றாள் சாரதா சுருக்கமாக.

பஞ்சு தன் காதுகளை நம்பாது, ஆச்சரியத்துடன் தன் மனைவியையே நோக்கினான். அதாவது, 'விர்'ரென்று பறந்து சென்று கொண்டிருக்கும் அவளது புடைவையின் தலைப்பைப் பார்த்தான்.



"சுந்தரம் வரும்போது கௌரியையும் அழைத்து வரும்படி எழுதுங்கள்" என்றாள் சுசீலா.

"எழுதலாம் என்றுதான் பார்த்தேன். ஆனால், இங்கே வந்தால் இடம் போதுமா?"

"போதாது என்கிறீர்களா?"

"எழுதுகிறேன். சுந்தரமும் நானும் சின்னக் குழந்தையில் எப்படி விளையாடுவோம் தெரியுமா?"

"ரொம்பவும் சிநேகம், இல்லையா?"

"நான் இதுதான் வேண்டும் என்றால் பேசாமல் கொடுத்து விடுவான். சாரதா விடமாட்டாள்...ஹூம். ஜோராகச் சீமைக்குப் போகிறான்."

"அவரேவா போகிறார்?"

"இல்லை, என்னவோ ஆபீஸில் அனுப்புகிறார்களாம்."

சுசீலா தன் கணவனுக்கு ஏற்ற மனைவி. 'நான் போனேன்' என்று அவன் கூறினால், 'ஆ, நீங்கள் போனீர்களா?' என்று ஒரு கேள்வி கேட்பாள். அவ்வாறு கேட்கும்போது அவளுக்கு என்ன

உணர்ச்சிகள் தோன்றுமோ, அவள் முகத்திலிருந்து ஒன்றும் கண்டு பிடிக்க முடியாது. ஏன் அப்படிக் கேட்கிறோம் என்பது அவளுக்கே தெரியாது. கோபுவுக்கும் அவள் இவ்வாறு கேட்பது மிகவும் செளகரியமாக இருந்தது. தன்னயம் படைத்த அவனுக்கு யாராவது - அதிலும் கேவலம் தன் மனைவி - எதிர்ப் பேச்சுக் கொடுத்திருந்தால் தாங்கமாட்டாத கோபம் வந்து விட்டிருக்கும்.

"அப்படியானால், கெளரியை வரச் சொல்லி எழுதட்டுமா?" என்று கேட்டான் அவன்.

"எழுதுகிறீர்களா?"

கோபு தங்கைக்குக் கடிதம் எழுத உட்கார்ந்தான். அவனுக்குக் கெளரியிடம் கொஞ்சம் பற்றுதல் அதிகம்தான். அவளை வரச் சொல்லவேண்டும் என்று அவனுக்கு ஆசைதான். எனினும் அவன் ரத்தத்தில் ஊறிக் கிடக்கும் அந்தச் சுபாவந்தான் மேலே நிற்கும். அதுதான் அவன் வாயில் முதலில் வரும். கெளரியை அழைத்து வந்து, சுந்தரத்தையும் அவளையும் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று உபசரித்தால், ஊருக்குப் போய்த் தன்னை அவர்கள் புகழ்வார்களே என்ற அவாவும் திருப்தியுந்தான் இப்பொழுது அந்தக் கடிதத்தை எழுதும்படி பெரும்பாலும் தூண்டின. இல்லாவிட்டால் அவர்கள் இருக்கும் வரையில் தன் உடம்பு அலண்டு விடுமோ, பணம் செலவழிந்து விடுமோ என்றெல்லாம் தோன்றி அவனை எழுத விட்டிருக்காது.

இப்பொழுதும் அவன் அக் கடிதத்தில் கெளரியைப் பல சாமான்கள் வாங்கி வரும்படி எழுதினான். இந்த அதிகச் செலவுக்கும் அந்தச் சாமான்களுக்கும் சரிகட்டி விடலாம் என்பது அவன் கணக்குப் போலும்.

★

"சாரதா!"

"என்ன?"

"நீ பட்டணம் போய் விட்டு வருகிறாயா?"

"எதற்கு?"

"என்னால் இப்பொழுது வர முடியாது. ஆபீஸில் நான் இல்லாவிட்டால் ஒன்றும் நடக்காது."

"ஏன், நான் போகவில்லை. அப்புறம், அங்கே போய்க் குழந்தைக்கு ஏதாவது வந்துவிட்டால்?"

"ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும். அதற்காக என்ன செய்வது? போகாமல் இருந்தால் நன்ருக இருக்குமா?"

சாரதா தன் கணவனைப் பார்த்தாள். 'இப்படியும் ஒரு பிரகிருதியா? யார் என்ன சொன்னுலும் அதற்கு எதிரிடையாகப் பேசவேண்டு மென்று பிரதிக்ஞை போலும். என்னவாளுல் என்ன; நம் காரியம் ஆகவேண்டியதுதானே?' என்று எண்ணியவளாய், அவள் தன் கணவனின் பிரத்தியேகப் 'பிருத் தந்திரத்தை'த் தானே பிரயோகப் படுத்திப் பார்த்தாள்.

"எதற்கு இப்பொழுது போகவேண்டும்? நான்கு நாட்களுக்குக் கூட இருக்க முடியாது. ஓடிவந்து விடவேண்டும்."

"அப்படிச் சொல்லாதே. தேசத்தை விட்டே போகிருன்..."

"போனுல் என்ன, ஒரு வருஷத்தில் திரும்பி விடுகிருன்."

"அது வேறு விஷயம். அவனுக்கு இங்கே வரத் தெரியவில்லையே என்பதைச் சுட்டிக் காட்டுவதுபோல் நான் நின்று விடுகிறேன். அது போதுமே. நீ போய் விட்டு வா."

"என்னத்திற்கு..."

"சே, சே. நீ கூடப் போகாவிட்டால் நன்ருக இராது. சின்ன வயசிலிருந்து ஒன்ருகப் பழகிவிட்டு, இப்பொழுது..."

சாரதாவின் முகம் ஒரு நூதனமான கள்ளச் சிரிப்புடன் விளங்கியது. தன் திருப்தியை அவர் தெரிந்து கொண்டு விடுவாரோ என்று பயந்தவள்போல் அவள் தன் கணவனை ஓரக் கண்ணுல் நோக்கினுள். ஸ்ரீமான் பஞ்சநதத்திற்கு இதெல்லாம் கவனிக்கப் பொழுதேது? முகத்தில் அசட்டுச் சிரிப்பு வழிய எதிரே நிற்கும் கண்ணுடியில் தம் முக லாவண்யத்தைக் கண்டு பரவசமடைந்து கொண்டிருந்தார் அவர்!

மறுபடியும் அவன் பேச்சைத் துவக்கினுன். தன் மனுேபிஷ்டம் நிறைவேறிய பிறகு அவன் என்ன சரடு திரித்தாலும் அதைச் சப்புக் கொட்டாமல் கேட்கும் மன நிலைமையில் இருந்தாள் சாரதா அப்பொழுது.

"என்னைக் கூட, 'சீமைக்குப் போ, சீமைக்குப் போ' என்று கெஞ்சினுர்கள் ஆபீஸில்.

"நீங்கள் ஏன் ஒத்துக் கொள்ளவில்லை?"

"நமக்கு எதற்கு அந்தச் சனியனெல்லாம்? அத்துடன் இல்லாமல், போவதென்ருல் நம் கைப் பணத்தைச் செலவழித்துக்

கொண்டு போகவேண்டும். கம்பெனி கொடுக்கும் பணத்தில் பிச்சை மாதிரி......ஹும்...நான் கை தீண்ட மாட்டேன் என்று சொல்லி விட்டேன், கண்டிப்பாக—என்ன?" மூக்குக் கண்ணாடி கீழே நழுவுதலும், மேலிருந்து பார்வையும். "ஊம். ஹ...ஹ. என்ன சொல்லுகிறாய்? அந்தப் பிச்சைக் காசு நமக்கு எதற்கு?"

"ஆமாம், நீங்கள் கூறுவதும் நிஜந்தான்." எவ்வளவு நிஜம் என்று அவளது மனச்சாட்சிக் கல்லவோ தெரியும்! "நம் பணத்தைச் செலவழித்துக் கொண்டே போயிருக்கலாமே?"

"சரி, அப்படித்தான் போய்த் தொலைப்போமென்றால், இப்பொழுது அந்த மானேஜர் விட மாட்டேன் என்கிறான்."

"அவனுக்கு என்னவாம்?"

"அப்படிச் சொல்லாதே. அப்புறம் அவர்கள் ஆபீஸ் தடமாடி விட்டால்?...அதற்குத்தான் இப்படிக் காலிலே விழுந்து கெஞ்சினான். இந்த ஆபீஸை விட்டுப் போய் விடுவேனோ என்று பயந்து 'பிரமோஷன்' கூட அல்லவா கொடுக்க மாட்டேன் என்கிறான்! நான் இல்லா விட்டால் என்ன நடக்குமென்று நினைக்கிறாய்?"

எவ்வளவோ நாள் பழகி, இவ்வாறான பேச்சுக்களைக் கேட்டுக் கேட்டுச் சலித்திருக்கும் சாரதாவுக்குக் கூட இப்போது அடக்க முடியாத சிரிப்பு வந்து விட்டது. சமயலறைக்குப் போகும் சாக்காக அவள் அவசரமாக அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

## 34
# ஹேமாவின் வேண்டுகோள்

பூரண சந்திரன் நீல விசும்பில் பவனி வந்து கொண்டிருக்க, தெருக்களெல்லாம் பால் பெருக்கில் குளித்துப் புதிய அழகுடன் காட்சியளித்தன. சிறு பிள்ளைகள் இதுதான் சமயமென, வாசலில் பலிஞ்சடுகுடு ஆடினர். சிறுமிகள் கயிறுகள் கொண்டு வந்து குதித்து விளையாடினர். இளம் வயதினர் முதியோர் யாவரும் கடற்கரையை நோக்கி நடந்து விட்டனர். தெருவிலே குழந்தைகளின் ராஜ்யமாக இருந்தது. 'கிரீச், கிரீச்' என்ற அவர்களின் கீச்சுக் குரல்களும், ஓடும் சத்தமும், குதிக்கும் கயிறுகள் தெருக் கற்களை அடித்துத் தூரத்தும் சத்தமும் தவிர, பெரியவர்கள் பேசும் ஓசையே இல்லை. சில வீட்டு வாசல்களில் மட்டும் வயது

முதிர்ந்த ஸ்திரீகள் சிறு பேரன் பேத்திகளுக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தனர். சில பெண்கள் குழந்தைகளுக்குச் சாதம் ஊட்டியவாறு நின்றிருந்தனர்.

தெருக் கோடியில் நாய் ஒன்று தன் வாலேயே சுற்றிச் சுற்றி, குரைத்து விளையாடிற்று. பூனைகள் வீடுகளின் ஓட்டின் மேல் பிரசங்கித்தன.

நாகலக்ஷ்மி அம்மாளும் காமாக்ஷி அம்மாளும் வாயிற் படியில் உட்கார்ந்தவாறு பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன பசங்கள் அம்மா!" என்றாள் காமாக்ஷி அம்மாள்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய், காமு? யோசித்துப் பார்த்தால் அவரவர்கள் வாழ்க்கை அவரவர்களுக்கே உரித்தானது. நம் குழந்தைகள் தப்பு வழிக்குப் போகாமல் நாம் பார்த்துக் கொள்ளலாமே தவிர வேறு என்ன செய்ய முடியும் என்கிறாய்?"

"உனக்கென்னடி, ஒரு பிள்ளை. சுலபமாய்ச் சொல்லி விட்டாய். எனக்கிருப்பதைப் போல் ஒவ்வொன்றும் வக்கிரமாய் இருந்து விட்டால் ரொம்பவும் நன்றாகத் தான் இருக்கும்" என்று பட படப்புடன் கூறினாள் காமாக்ஷி அம்மாள்.

நாகலக்ஷ்மி அம்மாளுக்கு இதைக் கேட்டதும் விநோதமாகச் சிரிப்பு வந்தது. 'செடிகளை வைக்கிறோம், ரோஜாச் செடிக்கு ஒரு விதம், தென்னை மரத்திற்கு வேறு, வாழைக்கு ஜலம் அதிகம், மல்லி நடு நடுவில் காயவேண்டும் என்றெல்லாம் பதம் பார்த்துப் போஷிக்கிறோம். அப்படி யிருக்க, குழந்தைகளை மாத்திரம் ஏன் நாம் ஒரே அச்சில் போட்டு வார்த்து எடுக்க எத்தனிக்க வேண்டும்?' என்று அவள் யோசித்தாள். தனக்கு நிறையக் குழந்தைகள் இல்லையே என்று கூடத் தோன்றிற்று அவளுக்கு. உடனே தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டாள். 'நீ மாத்திரம் என்னவாம்? இத்தனை நாளும் சுந்தரம் சீமைக்குப் போவதைப் பற்றிப் பொருமிக் கொண்டிருக்க வில்லையா? அவள் தான் என்ன செய்வாள் பாவம்!'

நாகலக்ஷ்மி அம்மாள் மறுபடியும் பலமாக யோசிக்கலானாள். 'சுந்தரம் சீமைக்குப் போவதனால் என்ன விபரீதம் வந்து விட்டது? உமா அரசியலில் இறங்குவதில் என்ன தவறு? ஒவ்வொருவரும் தனிப் பட்டவர்கள், அவரவர்கள் வாழ்க்கை குறிப்பிட்ட பாதைகளில் தான் செல்லும். அதற்கேற்பத்தான் அவர்கள் உள்ளத்தில்

எண்ணங்கள் எழும்' என்று அவள் மனம் அவளுக்குப் போதித்தது.

"நான் சொல்லுவதென்ன?" என்று கேட்டாள் காமாக்ஷி அம்மாள்.

"என்னவோ, காமு, எனக்குத் தோன்றுவது என்னவென்றால் கௌரி அப்பா சொல்வது போல் அவரவர்கள் இஷ்டப்படி விட்டு விடத்தான் வேண்டும்" என்றாள் நாகலக்ஷ்மி.

"அது கிடக்கட்டும். இன்றைக்கு யார் சாப்பிட வருகிறார்கள்?" என்று கேட்டாள் காமாக்ஷி அம்மாள்.

"கேசவராவும் அவன் பெண்டாட்டியும் வருகிறார்கள்."

"இப்பொழுது எங்கே போயிருக்கிறார்கள் உன் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும்?"

"வந்தவர்களோடு பீச்சுக்குப் போயிருக்கிறார்கள். இப்பொழுது எல்லோரும் திரும்பி வருகிற சமயந்தான்."

"போதும், கௌரி உனக்கு ஒத்தாசையாக இருக்காமல் எங்கே பீச்சுக்குப் போனாளாம்!"

"எல்லாம் செய்து விட்டுத்தான் போனாள்" என்று கூறிச் சிரித்தாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

அப்பொழுது எதிர் வீட்டில் யாரோ நுழைவது கண்ணில் படவும், காமாக்ஷி அம்மாள் எழுந்து தன் வீட்டிற்குப் போனாள். 'நாகுவுக்குக் கூடப் பைத்தியந்தான் பிடித்திருக்கிறது. அவள் கொடுக்கிற இடம்தான் கௌரியும் எதிர்த்துப் பேச ஆரம்பிக்கிறாள். எல்லோரையும் போகிற வழி விட்டுவிட வேண்டுமாமே, நன்றாக இருக்கிறது!' என்று அவள் உதட்டை முறுக்கி, தோளில் முகத்தை இடித்துக் கொண்டாள்.

★

கடல் அலைகள் விம்மி விம்மி எழுந்து சந்திரிகையைக் கண்டு பெருமூச்செறிந்தன. பூர்ண சந்திரனின் மாய விரல்கள் தழுவிய இடங்களெல்லாம் உருக்கிவிட்ட வெள்ளிபோல் தளதளவென்று அசைந்து ஓடின. நடுவில் ராஜபாட்டை போல் வெள்ளிப் பாதை செல்ல, இரு பக்கங்களிலும் அது இருண்ட தண்ணீருடன் கலந்து புரியும் இந்திர ஜாலம் கண் கொள்ளாக் காட்சியாக விளங்கியது. அந்த வெளிச்சத்தில் பல்லாயிரம் வெண் பரிகள் தலை தூக்கி ஓடி வந்தன.

கேசவராவ், ஹேமலதா, சுந்தரம், கௌரி, சிவா ஐந்து பேரும் அந்த இயற்கைக் காட்சியின் எழிலைப் பருகியவாறு உட்கார்ந்திருந்தனர். 'சமுத்திர ராஜனின் கர்ஜனைக்கு முன் கேவலம் மாந்தர் பேச்சு எம்மாத்திரம்!' என்று அவர்கள் எண்ணம் போலும். தங்கள் பேச்சையெல்லாம் நிறுத்திவிட்டு அவர்கள் கடலின் பேரரவத்தில் லயித்து விட்டனர். செயற்கை அழகு எவ்வளவு இருப்பினும், எந்நாளும் புது மெருகுடன் விளங்கும் இயற்கை எழிலுக்குச் சமானமாகுமோ? பஞ்சணை மெத்தையின் சௌக்கியம் எம்மடங்கு இருந்தாலும், குளிர்ந்த மணல் உடலை அணைவதுபோல் வருமோ?

"அடே, சமுத்திரத்தைப் பார்த்தாயா?" என்றான் கேசவராவ்.

"எப்படி இருக்கிறது!"

"எப்படி இருக்கிறது, குப்புப் பாட்டியின் மயிர் நிறைந்த தலையின் வகிடு ஞாபகம் வருகிறது" என்றான் சிவா.

"அட, அட, என்ன கவிதா சக்தியடாப்பா, கவியுள்ளம் பெருகுகிறது!" என்று எல்லோரும் அவனைக் கேலி செய்தார்கள்.

கௌரியும் ஹேமாவும் கூட அவர்களுடன் சேர்ந்து கொண்டு சிரித்தார்கள்.

"உங்கள் மற்றொரு நண்பர் வரவில்லையா?" என்று கேட்டாள் கௌரி.

"யார்? கிட்டுவா? வருவான். ஏனோ வரவில்லை."

"உத்தரவு கிடைத்திருக்காது" என்றான், சிவா, அர்த்தபுஷ்டியுடன்.

கௌரியும் ஹேமாவும் அவனைப் பார்த்து, "ஏன் நீங்களெல்லாம் எங்களைக் கண்டு நடுங்குகிறீர்கள்?" என்று கேட்டு விட்டார்கள், ஒரே சமயத்தில். மற்ற இருவரும் 'ஹோ' வென்று சிரிக்க, சிவா மாத்திரம் அசடு வழியப் பேசாமலிருந்தான். பிறகு, சற்று சமாளித்துக் கொண்டு, "மன்னிக்கவும், நீங்கள் இங்கு இருப்பதை மறந்து விட்டேன்" என்றான்.

"அப்படியானால், நாங்கள் இல்லாவிட்டால் மாத்திரம் கண்டபடி பேசலாமோ?" என்றாள் ஹேமா. அவன் ஏதும் பதில் கூறுவதற்குள், அவள் கௌரியைப் பார்த்து, "கௌரி, நம்மை அவர்

கள் விரும்பவில்லையாம். நாம் தனியாகச் சென்று பேசிக் கொள்ளுவோம், வா" என்று கூறி, அவள் கையை இழுத்து அப்புறம் அழைத்துச் சென்றாள். அவள் செய்கையில் ஹாஸ்யம் மாத்திரம் இல்லாமல் வேறு ஏதோ அர்த்தமும் பதிந்து கிடந்ததாகக் கௌரிக்குத் தோன்றவே, அவள் ஒன்றும் கூறாமல் ஹேமா வுடன் சென்றாள்.

"ரகசியம் பேச வேண்டுமாக்கும்; இது ஒரு சாக்கு" என்று யாரோ கூறியது அவர்கள் காதில் விழுந்தது.

அவர்களிருவரும் கொஞ்ச தூரம் சென்று உட்கார்ந்து கொண்டார்கள்.

"நான் வெகு நாட்களாக உன்னுடன் பேச வேண்டுமென்று காத்துக் கொண்டிருந்தேன், கௌரி. சமயம் வாய்க்கவில்லை. வீட்டில் பெரியவர்கள் எதிரிலும் பேச முடிவதில்லை" என்று பீடிகை போட்டுக் கொண்டு பேச ஆரம்பித்தாள் ஹேமலதா. கௌரி ஒரு மூச்சைச் சட்டென்று இழுத்துக் கொண்டாள். ஹேமா எதைப் பற்றிப் பேசப் போகிறாள் என்று அவள் ஊகித் திருந்தா ளாதலால், ஹேமாவின் முகத்தை அவள் ஆவலுடன் நோக்கினாள்.

"என்னை அன்று பார்த்ததும் நீ என்ன நினைத்துக் கொண் டாய், நிஜத்தைச் சொல்" என்றாள் ஹேமா.

இந்தக் கேள்விக்குக் கௌரி என்ன பதில் சொல்ல முடியும்? அவள் வாயடைத்து மௌனம் சாதித்தாள்.

"நீ சொல்லவே வேண்டாம். அன்று உன் பார்வையே எல்லாம் சொல்லி விட்டது" என்று கூறினாள் ஹேமா.

"ஹேமா, உனக்கு இப்பொழுது உடம்..." கௌரி அதற்கு மேல் பேச முடியாமல் நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

ஹேமாவின் முகம் வெளுத்துப் பயங்கரமாகத் தென் பட்டது. "எனக்கு உடம்பு அப்படியே தான் இருக்கிறது. நான் நெடு நாள் இருக்க மாட்டேன் என்றாலும், முடிவும் சீக்கிரத்தில் வருவதாகக் காணோம்."

அவள் பேச்சைச் சற்று நிறுத்திக் கொண்டாள். கஷ்டப் பட்டுப் பேசியதன் காரணமாக அவள் முகத்தில் முத்து முத்தான வியர்வைத் துளிகள் துளிர்த்தன. மேல் மூச்சுத் துரத்திக்கொண்டு வந்தது.

"எனக்குக் கல்யாணம் வேண்டாம் என்று நான் எவ்வளவு கூறியும் பயன் இல்லை. என் பெற்றோர்கள் பிடிவாதமாக எனக்கு விவாகம் செய்து வைத்து விட்டார்கள்."

"ஏன், நீ படித்துவிட்டு வேலைக்குப் போயிருக்கலாமே?"

"எந்த வேலைக்குப் போவது? வியாதிக்காரியை யார் வேலைக்கு எடுத்துக் கொள்வார்கள்?"

"கல்யாணத்திற்கு மறைத்துச் செய்தார்களே...?...நான் ஏன் அப்படிச் சொன்னேன் என்று நினைக்காதே, ஹேமா. இப்பொழுது வேறு ஒருவர் வாழ்க்கையும் பாதிக்கப் படுகிறது பார்."

"விவாகத்திற்கு மறைக்கலாம். உத்தியோகத்திற்கு மறைக்க முடியுமா? டாக்டர் சர்டிபிகேட்டைக் காண்பிக்க வேண்டுமே?" என்றாள் ஹேமா. "ஆதலால் எனக்கு ஒரு வழியும் இல்லாமல் இந்த வழி காட்டப் பட்டது. இம்மாதிரி மறைப்பது நியாயமல்ல வென்று நான் வாதாடினேன். ஆனால் என் பெற்றோர், எனக்குக் கல்யாணம் ஆகவில்லை யென்றால் என் தங்கைகளுக்கும் நின்று விடும் என்றும், அதுவுமல்லாமல் நிஜக் காரணத்தைக் கூறினால் என் தமையனுக்குப் பெண் கொடுக்க யாரும் முன்வரமாட்டார்கள் என்றும் கூறினார்கள். அவர்களைத் தைரியத்துடன் எதிர்க்க எனக்கு அப்பொழுது வயதும் இல்லை; விவகாரமும் தெரியாது.

"கிடைத்த கணவர் குணஹீனராகவோ, மற்ற எவ்விதத்திலாவது குறைபாடு உள்ளவராகவோ இருப்பினும், எனக்கு அவ்வளவு கஷ்டமாக இருந்திருக்காது. அவரைக் காணும் போதெல்லாம் என் நெஞ்சை வாள் கொண்டு அறுப்பது போலிருக்கிறது. அவர் நற்குணத்தைப் பார்த்தால், எனக்கு இந்தப் பொய் வாழ்க்கை உறுத்துகிறது. உண்மையைக் கூறவும் மனம் கூசுகிறது. என் விஷயம் உனக்குத் தெரிந்து விட்டதே, இனி நீ என்ன செய்யப் போகிறாய்?"

கௌரி என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் சற்று நேரம் தயங்கினாள். அதற்குள் ஹேமா மறுபடியும் பேசலானாள்.

"கௌரி, என் வரையில் அவர் மனிதரல்ல, தேவாம்சம் தான். அவர் மனம் புண்படாமலிருக்க என் உயிரைக் கொடுக்கவும் நான் தயார். அவரை ஏமாற்றுவது மிகவும் பாவம். அவரிடம் நான் சொல்லி விடத்தான் போகிறேன். ஆனால்

எப்படிச் சொல்வது, எப்பொழுது சொல்வது என்று தான் தெரியவில்லை..."

கௌரி அவளை இடைமறித்து, "ஹேமா, மேலும் நீ ஒன்றும் சொல்ல வேண்டாம். உன் சங்கடம் எனக்கு நன்றாகத் தெரிகிறது. என்னைப் பற்றி நீ பயப்பட வேண்டாம். எல்லாம் தீர யோசித்து நிதானமாகச் செய். இதற்கிடையே நான் ஒன்றும் செய்ய மாட்டேன். ஆனால் ஹேமா..."

"ஆனல்?" ஹேமாவின் குரலில் பயம் தொனித்தது.

"ஆனல் இவரும், உன் அகத்துக்காரரும் மிகவும் நெருங்கிய நண்பர்கள். அவர் இதுவரை ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் இருந்தால் என்னால் முடிந்த வரையில் அவரைச் சொல்லாமல் இருக்கச் சொல்லுகிறேன்."

"கௌரி, நீ அவ்வளவு செய்வாயா? என் மாமியாருக்கு என் உடம்பைப் பற்றித் தெரிந்தால் என்ன ஆகுமோ? இனிமேல் எனக்கு என் பிறந்தகத்தில் போய் இருக்க முடியாது......இங்கேயும்..." ஹேமாவின் குரல் ஒன்றுமில்லாத ஓசையாகக் காற்றுடன் கலந்தது.

★

"என்னடா இத்தனை நேரம்? அப்பொழுதே வந்திருந்தால் பீச்சுக்குப் போய் வந்திருக்கலாமே?" என்று கிட்டுவைப் பார்த்துக் கேட்டான் சுந்தரம்.

"ஏதோ நாழிகை ஆகிவிட்டது. ஸ்ரீமதிகள் 'டிரெஸ்ஸிங்' தெரியுமோ இல்லையோ?" என்றான் கிட்டு, ஓரக் கண்ணால் மனைவியைப் பார்த்தவாறு.

ஸ்ரீமதி கிட்டு அதி வேகமாக உள்ளே நுழைந்தாள். கௌரி அவளை வரவேற்று, ஹேமாவை அறிமுகப்படுத்தினாள்.

பிறகு மாடியில் நிலா வெளிச்சத்தில் சிரிப்புக்கும் கும்மாளத்திற்குமிடையே சாப்பாடு நடந்தது. புருஷர்களுக்கு ஓர் அறையில் வெற்றிலை பாக்கு எடுத்து வைத்து விட்டுக் கௌரி வந்தவுடன், பெண் மணிகள் எல்லோரும் கீழே கூடத்திற்குச் சென்றனர். பேசிக் கொண்டே இருந்ததில் மணி ஆனதே தெரியவில்லை. நாகலக்ஷ்மி அம்மாள் அந்த இளம் பெண்களுக்கு ஏற்றாற்போல் பேசுவது அவர்களுக்கெல்லாம் வியப்பை அளித்து, அவளிடம் ஒரு மரியாதையையும், பிரியத்தையும் உண்டு பண்ணிற்று.

கிட்டு கீழே வந்து வீட்டுக்குப் போக வேண்டுமென்று அழைத்தான். மனமில்லாமல் எழுந்து சென்றாள் அவன் மனைவி.

அவள் போன பிறகு கௌரியும் ஹேமாவும் தனிமையில் விடப்பட்டனர். அன்று மாலை மனம் திறந்து பேசியதன் பயனாக ஏற்பட்ட அன்னியோன்னியத்தால் பிணைக்கப்பட்ட இரு தோழிகளும் சந்தோஷமாக ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். ஹேமாவிடத்தில் ஓர் அநுதாபமும், தான் அவளை ஆதரவுடன் காக்க வேண்டும் என்ற உணர்ச்சியும் கௌரியின் இருதயத்தில் குடி கொண்டன. தான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டும் என்று அவள் திட சங்கல்பம் செய்து கொண்டாள்.

"என்னதான் எனக்கு நோய் என்றாலும், நான் ஓர் இளம் பெண்தானே? எனக்கும் கொஞ்சமாவது சந்தோஷம் அநுபவிக்க வேண்டும் என்றிராதா?" என்ற ஹேமலதாவின் சொற்கள் பல வண்டுகள் போல் அவள் மூளையில் துளாவி ரீங்காரம் செய்தன.

கேசவராவ் சுந்தரத்துடன் கீழே இறங்கி வந்தான். ஹேமலதா எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு கணவனுடன் புறப்பட்டாள். கௌரியும் சுந்தரமும் அவர்களை வழி விடுவதற்காக வந்து, அவர்கள் தெருக் கோடியில் மறையும் வரையில் வாசலிலேயே நின்று பார்த்துக் கொண்டிருந்தனர். இருவரும் கண் வாங்காது தங்களையே பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள் என்பதை அறியாத கேசவராவ் தன் மனைவியுடன் சிரித்துப் பேசிக் கொண்டு குசாலாக நடந்தான். ஹேமாவும் அவனைத் திரும்பி நோக்கும்போது அவள் முகத்தில் ஜ்வலித்த மலர்ச் சிரிப்பின் அடையாளமாக அவள் பற்கள் மின்சார வெளிச்சத்தில் மின்னின. அதைக் காணும்போது பெருமிதம் அடைந்தாள் கௌரி.

சுந்தரம் உள்ளே செல்ல, கௌரியும் பின் தொடர்ந்தாள்.

"சீக்கிரம் வாருங்கள். படுத்துக் கொள்ளலாம். மணி ஏகமாக ஆகிறது" என்று கொட்டாவி விட்டுக் கொண்டே விளக்கை அணைத்தாள் நாகலக்ஷ்மி அம்மாள். கதவுகளை யெல்லாம் தாளிட்டுக் கொண்டு எல்லோரும் படுக்கச் சென்றார்கள்.

தங்கள் அறையில் தனிமையாக இருக்கும்போது, கௌரி கணவனைப் பார்த்துப் பேச ஆரம்பித்தாள்.

"ஹேமாவின் கதையைக் கேட்டீர்களா, பாவம்? அவளது பரிதாபமான நிலைமையைக் கேட்டால், அவருக்குத் தெரியப் படுத்துவதே பாவம் என்று படுகிறது."

"என்ன சொன்னாய்?" என்று கேட்டான் சுந்தரம்.

கௌரி, "ஒன்றும் இல்லை, நம்ம ஹேமா......" என்று ஆரம்பித்து, அன்று மாலை அவள் அறிந்த விஷயங்களையெல்லாம் சவிஸ்தாரமாக அவனிடம் கூறினாள். அவன் முகம் மாறிக் கொண்டே வந்தது. கடைசியாகக் கௌரி அவனைப் பார்த்து, "நீங்கள் சொல்லவா போகிறீர்கள்?" என்று வினவினாள்.

"நான் சொல்லி விட்டேன்" என்றான் சுந்தரம்.

"ஆ!" என்று ஒரு கூக்குரல் கௌரியின் கண்டத்திலிருந்து எழும்பியது. "என்ன! சொல்லி விட்டீர்களா?"

## 35

## பம்பாய்ப் பிரயாணம்

உமா வெகு தீவிரமாகக் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தாள். அவர்கள் சங்கத்திற்காக வசூலான பணத்தின் வரவு செலவுக் கணக்கு அவளைத் தனக்குள் ஐக்கியமாக்கிக் கொண்டு விட்டது.

"உமா!"

உமா திரும்பிப் பார்த்தாள். அங்கே சுந்தரம் நின்று கொண்டிருந்தான். அவன் அவள் அருகில் வந்து உட்கார்ந்தான்.

"என்ன, சுந்தர்?"

"நான் நாளைக்குக் காலை பம்பாய்க்குக் கிளம்புகிறேன், தெரியுமோ இல்லையோ?"

"தெரியுமே. கௌரி கூட வரப் போகிறாள் போலிருக்கிறதே?" என்றது உமாவின் வாய். ஆனால் அவள் மூளை 'நான்கு ரூபாய் பத்தரை அணா...' என்று கணக்குப் போட்டுக் கொண்டே இருந்தது.

"ஆமாம். அவள் நான் கப்பலேறிய பிறகு கொஞ்ச நாள் அங்கே இருந்து விட்டுத் திரும்பி வந்து விடுவாள்."

"உம்...ரூபா 52—12—0. செலவு ரூபா. 23—8—0. மீதி...? வேறு புத்தகத்தில் எழுத வேண்டும். அன்றைக்கு யாரோ 'செக்' கொடுத்தார்களே, அதை மாற்றினோமா, பார்க்க வேண்டும்.'

வாயில் லேசாக ஏதோ முணுமுணுத்தவாறு உமா தன் புத்தகங்களையெல்லாம் புரட்டி வேகமாக ஏடுகளைத் தள்ளிப் பார்க்கலானாள். சுந்தரம் பொறுமையாக உட்கார்ந்திருந்தான்.

"உமா!"

அவள் பார்வை அவன் பக்கம் திரும்பியது. வெகு நேரம் அவள் மனசு எங்கேயோ இருந்தது. பிறகு மெல்ல சுய ஞாபகம் பெற்றவளாய் அவள், "சுந்தர், என்னை மன்னித்து விடு. என்னவோ கவனமாக இருந்து விட்டேன். நீ என்ன சொன்னாய்?" என்று கேட்டாள்.

சுந்தரம் சிரித்துவிட்டு, "அதுதான் நானும் பார்த்தேன். நான் ஊருக்குப் போகிறேன். ஒரு வருஷம் ஆகும் நான் திரும்பி வர. உனக்குத் தெரிந்ததுதான். அதுவரை நீ எனக்காகக் கௌரியை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுகிறாயா?" என்று கேட்டான், ஆவலுடன் தன் மைத்துனியின் முகத்தைப் பார்த்துக்கொண்டு.

"ஏன், என்ன வந்துவிடும் அவளுக்கு?"

"அதற்குச் சொல்லவில்லை. நீதான் அவளிடம் நெருங்கிப் பழகுவாய். அதற்காகச் சொன்னேன்."

உமா ஒன்றும் பதில் கூறவில்லை. சுந்தரம் எழுந்தான். "சாரதா எங்கே, வெகு நேரமாகக் காணோமே?" என்று கேட்டான்.

"இப்பொழுது தான் அந்த வீட்டுக்குப் போனாள். நீ பார்க்கவில்லை?"

"இல்லை...சரி, நான் போய் விட்டு வரட்டுமா?"

"சரி, போய் விட்டு வருகிறாயா?"

அவன் சென்ற திக்கையே சிறிது நேரம் நோக்கி விட்டுத் தோளைக் குலுக்கினாள் உமா.

'உள்ளத்தில் எழும் தாகத்தைத் தணிக்க விதேசம் கிளம்புகிறான். வாழ்க்கையில் லட்சியத்தைக் காணப் போகிறானோ என்னவோ? இந்தச் சமயத்திலுமா இவ்வளவு கோழைத் தனம்? வீடும், வாசலும் மனைவியும் இருக்கவே இருக்கின்றன. சை! இவர்கள் தாம் இந்தியத் தாயின் வீரப் புதல்வர்கள் போலும்!' என்ற எண்ணங்கள் எழும்ப, அவள் தன் முகத்தைச் சுளுக்கிக் கொண்டாள்.

★

"கௌரி அக்கா, பம்பாய்க்குப் போகிறாயாமே?"

"ஆமாம். நீயும் வருகிறாயா?"

"ஏன், பள்ளிக் கூடத்துக்குப் பட்டை நாமமோ?" என்று கூறி நகைத்தாள் லலிதா.

கௌரியும் கலகலவென்று சிரித்தாள். அவளுக்குச் சுந்தரத்துடன் பம்பாய்க்குப் போகப் போகிறோம் என்று அளவிலாத சந்தோஷம். மகிழ்ச்சி தாங்காது, சிறு மானைப் போல் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தாள். தமையன் எழுதிய சாமானுக்கு இரட்டை மடங்கு வாங்கிக் கொண்டு பிரயாணத்திற்கு ஆயத்தமானாள். யாராவது அவள் போவதைப் பற்றிக் கேட்டுவிட்டாலோ புளகாங்கிதம் அடைந்தாள்.

"கௌரி அக்கா, உன்னைப் போல் பைத்தியம் நான் பார்த்ததே யில்லை" என்றாள் லலிதா.

"ஏன்?"

"பம்பாய் வரை போவதற்கே இவ்வளவு பிரமாதப் படுத்திக் கொள்ளுகிறாயே, நானாக மட்டும் இருந்தால் அமெரிக்காவுக்கே அவர் கூடப் போகாமல் இருப்பேனா? சமயம் வாய்த்த போது போகாமல் என்னவோ......"

"எப்படிப் போவது? போய் என்ன செய்வது?"

"எப்படிப் போவது? போய் என்ன செய்வது?" தமக்கைக்கு அழகு காட்டினாள் லலிதா. "ஏன், ஏதாவது நீயும் படிக்கிறது."

"அதற்குப் பணம் வேண்டாமா?"

"ஆமாம், போக வேண்டுமென்றால் கிடைக்காமலா போய் விடும்?"

இதற்குள் இந்தப் பேச்சில் சுவாரஸ்யம் குறைந்து விட்டது லலிதாவுக்கு. அவள் அந்த இடத்தை விட்டு ஓடி விட்டாள். கௌரியும் தன் தங்கையின் மொழிகளை நினைத்துத் தனக்குள் ஆலோசனையில் ஆழ்ந்தாள்.

'ஆம், நாமும் அமெரிக்காவுக்குப் போவதென்றால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அப்பொழுது சுந்தரை விட்டுப் பிரியவே வேண்டாமே? அவர் திரும்பி வரும் வரை எப்படித்தான் இருப்போமோ தெரியவில்லை. நாம் கற்பனை செய்து கொண்ட மண வாழ்க்கை வேறு என்றல்லவா இருக்கிறது? சுந்தரும் தான் நாம் நினைத்ததற்கு மாறாக இருக்கிறார். ஒரு தடவை பார்த்தால்...'

காமாக்ஷி அம்மாள் அங்கே வந்து அவள் சிந்தனைகளைக் கலைத்தாள்.

"ஏண்டியம்மா, எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டாயா?"

"எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது, அம்மா."

★

வண்டி ஏறும் சமயம் எல்லோரும் வாசலில் கூடி இருந்தனர். குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு நின்றிருந்த சாரதாவின் கண்களில் நீர்த் திரை படிந்திருந்தது.

"என்ன, சாரதா?" என்று விசாரித்தான் சுந்தரம். அவள் வெட்கியவளாய்ச் சிரித்தாள்.

"நீ புக்ககம் போறயே, அப்பொழுது?...சரி, நீ இன்னும் கொஞ்ச நாள் இருப்பாயோ? வருவதற்குப் பட்ட சிரமமாவது தீரவேண்டாமா?" ஒரு குறும்பு நகை தோன்றியது அவன் உதடுகளில்.

சாரதாவும் புன்முறுவல் பூத்தாள். "இருக்கலாம் என்று தான் பார்த்தேன். கௌரி கூட இருக்கப் போவதில்லை. நானும் போய் விடுவேன் சீக்கிரமே" என்றாள்.

★

கௌரிக்கு ரெயிலில் உட்கார்ந்து கொண்டு, ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டே இருக்கும்போது வருஷத்தில் ருதுக்கள் மாறிக்கொண்டு வருவதுபோல், வழியில் காட்சிகள் மாறுவது ஓர் அதிசயமாகப்பட்டது. பிறந்ததிலிருந்து பட்டணத்தை விட்டு வெளியே எங்கும் செல்லாத அவளுக்கு ரெயிலில் போவதே ஓர் அதிசயம். அதிலும் சுந்தரத்துடன் தனிப் பிரயாணம் செய்வதில் உள்ள ஆனந்தமும், மாறி மாறி வரும் புதிய புதிய காட்சிகளைக் காண்பதன் ஆர்வமும் ஒருங்கு சேர்ந்து அவள் வாய்க்குப் பூட்டுப் போட்டு விட்டன. வண்டிச் சக்கரங்களைப் போல் கண்களை வட்டமாக விழித்துப் பார்த்தவள் இமை கொட்டவில்லை.

சென்னையின் 'தட்டுச் சுற்று' வேஷ்டியும், 'அரைக்கைச் சட்டையும்' கிரமமாக மாறி, பழுப்பேறிய கதர் மூலக் கச்ச வேஷ்டியும், தெலுங்குப் பேச்சும் பிரசன்னமாயின. வறண்ட வயல்களும், சவுக்குத் தோப்புகளும் போய், மலைச் சரிவுகளும், கிச்சிலித் தோட்டங்களும் எப்படி வந்தன என்ற விவரம் புரியாமல்

திகைத்தாள் கௌரி. அவளுக்கு, தாங்கள் அதி வேகமாக ஓடும் வண்டியில் ஏறி எங்கோ பறந்து செல்லும் உணர்ச்சியே தோன்றவில்லை. தான் ஒரே இடத்தில் இருப்பதாகவும், ஏதோ மாய வித்தையால் ஜன்னலுக்கு மறுபுறம் மனிதர்களும், காட்சிகளும் மாறுவதும்போல் அவளுக்கு ஒரு பிரமை தோன்றிற்று. தமிழ், தெலுங்கு, கன்னடம், பிறகு வட நாட்டுப் பாஷைகளான மராட்டி, குஜராத்தி, ஹிந்துஸ்தானி இவை முறையே வண்டியில் குடி கொண்டன. ஒவ்வொரு பிராந்தியத்து மனிதர்களையும் அவர்களது பாஷை, நடை, உடை, பாவனைகளையும் பார்க்கப் பார்க்க அவளது ஆச்சரியம் பன்மடங்கு அதிகரித்தது. மேலும், ராத்திரி ஆக, ஆக அவளையுமறியாமல் தூக்கம் வந்து அவள் கண்களைச் செருகிற்று. மீண்டும் கண்களைத் திறக்கும் போது வேறு மனிதர்கள், வேறு பாஷை! இப்படியே கௌரி தனது முதல் நீண்ட ரெயில் பிரயாணத்தில் அநேகமாக மௌனமாகவே இருக்க, சுந்தரம் எவ்வளவோ பேசித் தள்ளி விட வேண்டுமென்று ஆவல் கொண்டான். அவன் பேச்சுக் கொடுக்கும் போதெல்லாம், கௌரி தான் கண்ட விநோதங்களையே சொல்லிச் சொல்லி ஆர்ப்பரித்தாள். அடிக்கடி பிரயாணத்திலீடுபட்டவனான சுந்தரத்திற்குக் கொஞ்ச நேரத்திற்குள் இந்தப் பேச்சில் சப்புத் தட்டி விட்டது. ஒரு நாவலை எடுத்து வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்து விட்டான்.

## 36

# பிரிவு

பம்பாயில் கோபு ரெயிலுக்கு வந்திருந்தான். 'விக்டோரியா டர்மினஸி'ன் கம்பீரத் தோற்றத்தைக் கண்டவுடன் கௌரிக்கு வியப்பு மிகுந்தது. அவள் வாய் திறந்து, வேடிக்கை பார்த்து மெய்ம்மறந்தாள்.

"கௌரி" என்று அவள் தோளில் ஒரு கையை வைத்தான் சுந்தரம். அந்தப் பிரமையிலும் அவனது கரத்தின் ஸ்பரிசம் அவள் உள்ளத்தில் இன்ப லாகிரிகளை எழுப்பின. திரும்பி அவனைப் பார்த்து லேசாகச் சிரித்தாள். சுந்தரத்தின் இருதயமும் இரண்டு அடி சர சர வென்று அடித்துக் கொண்டது.



அவர்கள் கடற்கரையில் உட்கார்ந்திருந்தனர். பெரிய பெரிய கற்பாறைகளின் மேல் சமுத்திர ராஜன் அடித்து அடித்து விளையாடுவதைப் பார்க்கும் போது, கௌரிக்கும் அவனுடன் திருப்பி அடித்து விளையாட வேண்டும் போல் உற்சாகம் எழும்பியது.

"சுந்தர்!"

"என்ன கௌரி?"

"பார்த்தீர்களா இந்தச் சமுத்திர ராஜனின் கொழுப்பை! எப்படி இந்தப் பாறைகளை மோதி மோதி அடிக்கிறான் பாருங்கள். தன்னைத் திருப்பி அலைகளால் அடிக்க முடியாது என்ற தைரியந் தானே அவனுக்கு? சுத்தக் கோழை" என்றாள். கௌரி தானாகவே இப்படி வேடிக்கையாகப் பேசியதைக் கண்ட சுந்தரத்திற்குச் சந்தோஷ மிகுதியால் தேகம் பரவசமடைந்தது. கண்கள் தனி ஒளியுடன் பிரகாசித்தன.

"ஆமாம், கௌரி. இரு, அவனுக்குப் பாடம் கற்பிக்கிறேன்" என்று கூறி அவன் எழுந்தான். வேகமாகச் சென்று ஒரு பாறை மீதேறி அடுத்த பாறைக்குத் தாவினான். கால் நழுவி விட்டது.

தூரத்தில் உட்கார்ந்திருந்த கோபு வருவதற்குள், கௌரி எழுந்தோடி அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அவனும் அதற்குள் சமாளித்துக் கொண்டு விட்டான். ஆனால், அந்த ஒரு கணம் அவள் கண்களில் காட்சி யளித்த பீதியும், அவள் பிடியின் அழுத்தமும் சுந்தரத்தின் உள்ளத்தில் புகுந்து ஓர் இனிய தேன் சுரந்தது. தான் இதுகாறும் நினைத்த தெல்லாம் தவறு தானோ என்று ஒரு சம்சயமும், அதனுடன் ஓர் அநுமானமும் மீண்டும் அவன் உள்ளத்தில் சதிர் ஆடின. அவைகளைத் துரத்தி விட்டுக் கௌரியுடன் சந்தோஷமாகச் சல்லாபமாடத் தீர்மானித்துக் கொண்டான் சுந்தரம்.

"நீ இப்படி என்னைப் பிடித்துக் காப்பாற்றுவாய் என்று எனக்குத் தெரிந்திருந்தால், நான் தினமும் ஒரு முறை விழுந்திருப்பேனே" என்றான் கண்கள் மினு மினுக்க.

கௌரி அவனைப் பார்த்து லஜ்ஜையுடன் சிரித்துவிட்டு, "இப்பொழுது இங்கே, லலிதா, பாலு இல்லையே என்று தோன்றுகிறது. இந்த அலைகளைப் போல் ஓய்ச்சலில்லாமல் பேசுவாள்

அவள். அவைகளைப் போலவே பாலுவும் கூத்தாடுவான்" என்றாள்.

இந்தப் பதில், யாரோ ஒரு கை குளிர்ந்த ஜலத்தைத் தன் முகத்தில் அறைந்தாற் போலிருந்தது சுந்தரத்திற்கு. வெறித்தோடிய மனத்துடன் திரும்பினான் அவன்.

கௌரியும் கோபுவின் குழந்தையிடம் விளையாட ஆரம்பித்தாள். தான் ஏதும் தவறாகக் கூறி விட்டதாக அவள் அறிந்தாலல்லவோ? களங்கமற்றுப் பளிங்கு போல் விளங்கியது அவள் உள்ளம். தன்னைச் சுற்றி இருக்கும் புதிய காட்சிகளைக் கண்டு களித்து, சுந்தரத்துடன் நெருங்கி இருப்பதை ரசித்து, அண்ணா, மன்னியுடன் உரையாடி அவள் அகமகிழ்ந்தாள்.

அவர்கள் 'மெட்ரோ' சினிமாவுக்குச் சென்றார்கள், 'மலபார் ஹில்' ஏறினார்கள். 'மகாலக்ஷ்மி'யைத் தரிசித்தார்கள். அங்கேயும் அவர்கள் சிரித்து விளையாடிப் பேசிக் கொண்டே இருக்கும் போது, சுந்தரம் தன் மனைவியுடன் சல்லாபமாக ஒன்று சொல்ல, அவள் வெகுளித்தனமாக, ஸ்திரீயின் இயற்கைக் குணமான வெட்கத்துடன் லலிதாவைப் பற்றியோ, மற்று யாரைப் பற்றியோ பேசி வார்த்தையை மாற்றி விடுவாள். இதனால் சுந்தரம் அடைந்த சிரமம், ஏமாற்றம் கொஞ்ச நஞ்சமல்ல.

ஆயினும், மொத்தத்தில் சுந்தரம் அங்கு இருந்த இரண்டு நாட்களும் எப்படித்தான் சென்றனவோ என வியக்கும்படி இருந்தது அந்த இளம் தம்பதிகளுக்கு.



"எல்லோரும் கீழே இறங்கி விடுங்கள்" என்ற எச்சரிக்கை பிறந்தது. அவரவர்கள் கப்பலில் செல்லும் உறவினரையும், சிநேகிதர்களையும் விட்டுப் பிரிய மனமில்லாமல் பிரிந்து கீழே இறங்கினார்கள்.

கோபு மைத்துனனைப் பார்த்து, "சரி, நீ போய் விட்டு வருகிறாயா? ரொம்ப தூரம் போகிறாய். அடிக்கடி கடிதம் மாத்திரம் தவறாமல் போட்டுக் கொண்டிரு!" என்று பெரிய அண்ணன் என்ற தோரணையில் பேசி முடித்தான். பிறகு, தன் தங்கையைச் சீக்கிரம் கீழே இறங்கும்படி துரிதப் படுத்திவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றான்.

"ஐயோ, அண்ணு போய் விட்டானே, நானும் இறங்க வேண்டுமே" என்ருள் கௌரி.

"இறங்க வேண்டுமா?......" என்ருன் சுந்தரம். முகத்தை மிகவும் வேடிக்கையாகவும், அசட்டையாகவும் வைத்துக் கொண்டான். ஆயினும் அவன் குரலில் பிரிவினையின் ஏக்கமும், காதலனின் கொஞ்சுதலும் மிதந்தன.

"இல்லாவிட்டால் அமெரிக்காவுக்கு வந்து விடட்டுமா?" என்ருள் கௌரி.

"கௌரி!"

சுந்தரத்தின் அழைப்பில் சகலத்தையும் மறந்து விட்டாள் அவள். பொறுமையே வடிவாகிய கௌரியின் கண்களும் நீர் வடித்தன. நனைந்த அவளது கண்ணிமைகள் பள பளவென, சுந்தரத்தின் மனத்திலும் ஈரத்தைக் கிளப்பி விட்டன.

"கௌரி, அழாதே. அசடு" என்ருன் சுந்தரம். ஆனாலும் உடனே, "உனக்கு அவ்வளவு கஷ்டமாகவா இருக்கிறது?" என்று கேட்டான். அவன் கண்கள் கௌரியின் உணர்ச்சிகளை அளந்து விட யோசித்தன; எத்தனித்தன.

"என்ன, சுந்தர்! நாம் குழந்தையிலிருந்து பழகிய தோஷமல்லவா?" என்று தன் அழுகையை மாற்றிக் கொண்டு சிரித்துக் கூறினாள் கௌரி. அவன் எதிரே, அவன் கப்பல் புறப்படும் சமயத்தில் கண்களில் ஜலம் உகுத்தோமே என்று நினைத்து, தன் மனக் கஷ்டத்தை மறைத்துப் பேசிச் சிரித்துத் தட்டிக் கழித்தாள் அவள்.

சுந்தரத்தின் கைகள் தாமாகவே தளர்ந்தன. அவன் ஒன்றும் பேசவில்லை. அவள் கீழே இறங்கிச் செல்லும் வரை அவளது நளின நடையையே நோக்கி நின்ருன்.

கௌரி வேண்டா வெறுப்பாகக் கப்பலை விட்டுச் சென்ருள். 'லலிதா சொன்னபடி கூடவே செல்வதாக இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்!' என்று நினைத்துக் கொண்டாள்.

கௌரியின் கடைசி வார்த்தையும், சுந்தரத்திற்கு விபரீதமாகவே பட்டது. மார்பில் ஒரு குத்து விட்டாற் போல் இருந்தது அவனுக்கு. ஒரு நிமிஷம் அவன் கண்ட இன்ப உலகம் தகர்ந்து விட்டது.

"குழந்தையிலிருந்து பழகிய தோஷந் தானா? வேறொன்றும் இல்லையா?......" என்று அவன் தனக்குத் தானே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டான். அதை ஒவ்வொரு தரம் நினைக்கும் போதும், மார்பின் பாரம் மேலும் மேலும் அழுத்தியது. கப்பல் மெல்ல நகர்ந்தது. தூரத்தில் கௌரியும் கோபுவும் நிற்பதைப் பார்க்கும் போது, அவன் இருதயம் சுக்கல் சுக்கலாக வெடித்து விடும் போலிருந்தது. அவன் உள்ளம் பறந்து கௌரியிடம் சென்று விட்டது. காலிச் சடலம் தான் கடல் கடந்து சென்று கொண்டிருந்தது.

'வேறொன்று மில்லை என்றாலே சுந்தரை விட்டுப் பிரிவது கஷ்டம். இப்பொழுது எப்படித்தான் அவரை விட்டுத் தனித்து இருப்பேனோ? ஆனால் என் உயிர்தான் அவருடன் சென்று விட்டதே!' என்று மனத்திற்குள் புலம்பினாள் கௌரி. ஆயின் இதெல்லாம் சுந்தரத்திற்கு எப்படித் தெரியப் போகிறது?

கோபு தங்கையை அழைத்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினான். வெளிக்கு இயந்திரம் போல் அவன் கேட்டதற் கெல்லாம் பதில் கூறிக் கொண்டு வந்தாள் கௌரி. 'நம்முடன் இருப்பது கோபு தானே? அதுவும் ஒரு நல்லது தான். வேறு யாராவது இருந்தால் நாம் பேசாதிருப்பதைக் கவனித்துக் கேலி செய்யவோ ஆறுதல் கூறவோ ஆரம்பித்து விடுவார்கள்' என்றெல்லாம் சிந்தித்தாள் அவள். ஒரு பேச்சு வெளிக் கிளம்பு வதற்கும் பிரயாசையாக இருந்தது அவளுக்கு. சுந்தரத்தின் சுந்தர வடிவம் அவள் மனக் கண்களின் முன் நின்று, அவள் மனத்தை எதிலும் செல்ல விடாமல் தடுத்தது. உள்ளம் குமுறிக் குமுறி, 'குப், குப்' என்று அழுகை மேலே வர முயன்றது அவளுக்கு. பல்லைக் கடித்துக் கொண்டாள். அவள் தோள் களைச் சுற்றி அவன் கைகள் அணைத்த இடம் இன்னும் உஷ்ண மாகவே இருந்தாற் போல் தோன்றிற்று அவளுக்கு. அந்த உணர்ச்சி கூட மனத்திற்குச் சற்று ஆறுதலாக இருந்தது.

வீடு அடைந்ததும், சுசீலா அவளைப் பார்த்து, அவள் நிலைமையை நன்கு உணர்ந்து, அவள் வேதனையை மிகைப் படுத்தாமல் இதமாகப் பேசி, இங்கிதமாக நடந்து கொண்டாள்.

வீட்டுக்குப் போன உடனேயே படுக்கையில் படுத்துக் கொண்டாள் கௌரி. அவர்கள் அவளைச் சாப்பிடவோ, வேறு

ஏதற்காகவோ கூப்பிடவில்லை. இதற்காகக் கௌரி அவர்களுக்கு மனமார நன்றி செலுத்தினாள்.

மனிதர்கள் ஹாஸ்ய உணர்ச்சியற்றவர்களாக இருக்கலாம், அழகின்றி விளங்கலாம், படித்தும் பண்பற்று இருக்கலாம். ஆயினும் மனிதர்களிடையே, அதுவும் காதலர்களிடையே, பிரிவாற்றுமையின் வேகத்தை அறிந்தவர்கள், பிறரிடம் அச் சமயங்களில் இதமாக நடப்பது சகஜமே யல்லவா?

## 37
## முதல் பேட்டி

கோபு தன்னாலியன்ற வரை தங்கையைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டு மென்று, அவளை எல்லா இடங் களுக்கும் அழைத்துச் சென்றான். சௌபாத்தி கடற்கரை, துறை முகம், மாதுங்காவில் சிநேகிதர் வீடுகள் என்று அவளைச் சுற்றிச் சுற்றி அடித்தான். மாடி போட்ட டிராமில் ஏறினார்கள் எலக்ட்ரிக் டிரெயினில் பூனாவுக்குச் சென்று விட்டு வந்தார்கள், பார்க்குகளில் நடந்து சென்றார்கள். ஒரு நாள் காலை தமிழ் சினிமாவும் பார்த்தார்கள்!

என்ன வாயினும் கௌரியின் மனம் சாந்தி அடையவில்லை. எங்கு சென்றாலும் சுந்தரம் இல்லாமையையே எடுத்துக் காட்டுவது போல் இருந்தது அவளுக்கு. பம்பாய் நகரமே காலியாகத் தோன்றி யது அவள் கண்களில். அவள் சுபாவமாகச் சிரித்துப் பேசினாளே தவிர, அவளால் தன் ஏக்கத்தை மறைக்க முடியவில்லை. சூன்ய மான பார்வையுடன் அவள் நிற்கும் சிற்சில சமயங்களில் அவளுடைய அண்ணனும் மன்னியும் ஒருவரை யொருவர் நோக்கி ஜாடை காட்டிக் கொள்ளுவார்கள்.

கௌரி இம்மாதிரி ருசியற்று நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கையில், ஊரிலிருந்து கடிதம் வந்தது. உமாவுக்குக் கல்யாணத்திற்காக இரண்டு, மூன்று வரன்கள் பார்த்திருப்ப தாகவும், அவர்கள் பெண்ணைப் பார்க்க வரும் போது கௌரி அங்கு இருந்தால் நல்லது என்றும் காமாக்ஷி அம்மாள் எழுதி யிருந்தாள். நாகலக்ஷ்மி அம்மாளும் நாட்டுப் பெண்ணுக்கு ஒரு கடிதம் போட்டிருந்தாள். சுந்தரம் இல்லாததால் மகாலிங்கையரும் தானும் மிகவும் சிரமப் படுவதாயும், கௌரியாவது தங்களுடன்

கூட இருந்தால் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும் என்றும் எழுதியிருந்தாள். இவ்விரண்டு விஷதங்களையும் படிக்கும் போது கௌரியின் கண்களில் சர சர வென்று நீர் பெருக ஆரம்பித்தது. தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டு அவள் கோபுவிடம் சென்று, "அண்ணு, நான் ஊருக்குப் போகலாமென்று பார்க்கிறேன். அம்மாவும், மாமியும எழுதி யிருக்கும் கடிதங்களைப் பார்" என்றுள்.

"எதற்கு இப்பொழுது போகிறது? இன்னும் ஒரு மாதமாவது இருப்பாய் என்று பார்த்தேன். சுந்தரம் ஊருக்குப் போனதில்' உன்னைக் காட்டிலுமா அவர்களுக்கு?"

"இல்லை என்கிருயா?"

கடைசியில் கௌரி யாரோ சென்னை வருபவர்களைத் துணையாகக் கொண்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டாள்.

★

"நானும் இத்தோடு இரண்டாயிரம் தடவை சொல்லி விட்டேன். எனக்குக் கல்யாணம் வேண்டாம். என்ருல் அதற்கெல்லாம் சம்மதிக்க முடியாது."

உமா உரத்த குரலில் கத்திக் கொண்டிருந்தாள். அவள் நெற்றியில் உபாத்தியாயர் கைப்பட்ட 'காம்போஸிஷன்' நோட் புக்கைப் போல் குறுக்கும் நெடுக்கும் கோடுகள் ஓடின. அவள் மூக்கும் வாயும் அருவருப்பிஞல் சுளுக்கிக் கொண்டன.

"அந்தக் கதை யெல்லாம் என்னிடம் நடக்காது. நம் வீட்டில் அப்படி யெல்லாம் விட முடியாது. என்ன, தலைக்கு மேல் ஏறிக் கொண்டே போவதா?" என்று காமாட்சி அம்மாள் அதட்டிஞள்.

அனைத்தையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டு நின்ருள் கௌரி. காமாக்ஷி அம்மாள் மீண்டும் பேச ஆரம்பித்து விட்டாள்.

"இன்றைக்கு மத்தியான்னம் யாரோ பார்க்க வரப் போகிருர்கள். என்னை வீணுகத் தொந்தரவு செய்யாதே. ஆமாம்" என்று தீர்மானமாகச் சொல்லி விட்டு அவள் கீழே சென்று விட்டாள்.

முடுக்கி விட்ட 'ஸ்ப்ரிங்' பொம்மை மாதிரி குதிக் காலால் வட்டமிட்ட உமா கௌரியை நோக்கி, "நீயும் ஏதாவது சொல்லேன்" என்ருள்.

"ஏதாவது ஒரு குட்டிப் பிரசங்கம் செய்யேன். 'இல் வாழ்க்கையே இனிது' என்று ஏதாவது உபதேசம் செய்யேன்" என்று தமக்கையைப் பார்த்துச் சீறினாள் அவள்.

"நான் ஏனம்மா உனக்கு உபதேசம் செய்யப் போகிறேன்? முன்னமேயே ஒரு நாள் என் விருப்பு வெறுப்புகளைச் சொல்லி முடித்து விட்டேனே. இனி என்ன இருக்கிறது சொல்ல?"

"இதோ பார், கௌரி, எல்லாம் பேசுவதற்குச் சரிதான். இன்றைக்குப் பெண் பார்ப்பது என்பது என்னிடம் நடக்காது. வேண்டுமானால் லலிதாவை நிறுத்துங்களேன் அவர்கள் எதிரில்!"

"லலிதாவுக்கு இன்னும் வயதாகவில்லையே? அடுத்த வருஷம் நீ சொல்லாமலேயே அவளை நிறுத்தத்தான் போகிறார்கள். அதைப் பற்றி இப்பொழுது என்ன? உன் விஷயத்தைச் சொல்."

சற்று நேரத்திற்கொரு முறை காமாக்ஷி அம்மாள், ராமையர் லலிதா, நாகலக்ஷ்மி அம்மாள் ஆகியோர் இச் சகோதரிகளின் வாக்கு வாதத்தைக் கதவருகில் நின்று கேட்டு விட்டுச் சென்றார்கள். கௌரி, சாவதானமாக, நிதானமாகத் தான் சொல்ல வேண்டியதை நிலை நாட்டுவதும், உமா அதைத் தகர்த்து விடுவதும், கௌரி மீண்டும் விட்ட இடத்தில் ஆரம்பிப்பதும் கேட்போருக்கு மிகவும் வேடிக்கையாகத் தான் இருந்தன. ஆயினும் நாழிகையாகிக் கொண்டிருக்கிறதே, வருகிறவர்கள் வந்து விட்டால் என்ன செய்வது என்ற அவர்களது பரபரப்பில் இவ் வாக்கு வாதத்தைக் கேட்கும் பொறுமை ஏற்படவில்லை.

காமாக்ஷி அம்மாள் பல்லைக் கடித்தாள். கை விரல்களைச் சொடுக்கினாள். "அந்தப் பெண்ணை வெட்டித் துண்டாக்கினாலும் பாவமில்லை" என்று உமாவைச் சபித்தாள். "இந்தப் பிராம்மணன் வேறு பெண்களை வைக்கிற இடத்தில் வைக்காமல்..." என்று தன் கணவரை நோக்கிக் கைகளை ஆக்ரோஷத்துடன் ஆட்டினாள்.

நாகலக்ஷ்மி அம்மாள் அவளைத் தன்னால் இயன்ற வரை சாந்தப்படுத்த முயன்றாள். "அவசரப் படாதே, காமு. கௌரி சரிப் படுத்தி விடுவாள்" என்று கூறும் போது அவள் குரலில் பெருமை தொனித்தது.

மணி மூன்றாகி விட்டது. இன்னும் வாக்கு வாதம் முடியவில்லை. வெட்டிப் பேச்சுப் பேசிக் கொண்டிருக்க மனம் இடங் கொடுக்க

வில்லை. பிரார்த்தனை செலுத்துவது போல், எல்லோரும் மறு படியும் மாடிக்குப் பிரயாணம் செய்தார்கள்.

கௌரியின் குரல் கேட்டது. "என்ன உமா, சாரதாவைப் பார். எல்லோரும் திருப்தியுடன் இல்லையா?" என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"அது இருக்கட்டும், சுந்தரம் உன்னைப் பிரிந்து அமெரிக்காவுக்கு ஓடிவிட்டானே ஏன்? தன் உள்ளத்தின் தாகத்தைத் தணித்துக் கொள்ளவே யன்றோ? கல்யாணம் செய்து கொண்ட பிறகு நான் அப்படி ஓடினேன் என்றால் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பார்" என்று கூறிச் சிரித்தாள் உமா. "நீயே சொல், கௌரி. எனக்கிருக்கும் ஆர்வத்தை யெல்லாம் அடக்கி, என்னுடைய மனோபிஷ்டத்தை அழிப்பது நியாயமா? அத்துடன் முன் பின் தெரியாதவன் காலில் என்னைக் கட்டி அவன் உயிரை எடுப்பது தான் நியாயமா?" என்று ஒரு புதிய அஸ்திரத்தைத் தொடுக்க ஆரம்பித்தாள் உமா.

"உமா, அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ ரொம்பவும் புத்திசாலி. உன் கொள்கைகளுக்காக நீ எந்தத் தியாகத்தையும் செய்வாய் அல்லவா?"

"ஓ! கட்டாயம் செய்வேன்."

"சரி. உனக்கு இந்தக் கொள்கைகளை ஏற்படுத்திக் கொள்ளு வற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுத்தவர்கள் யார்? நம் தாய் தந்தையருக்கு நீ இதற்காகக் கடமைப் படவில்லையா? யாரோ உன்னைப் பார்க்க வருவதனால் என்ன ஆகிவிடும்? 'இந்த வரன் எனக்கு இஷ்டம் இல்லை' என்று சொல்லி விட்டால் போகிறது. இவ்வளவு கூடச் செய்யக் கூடாதா?"

உமா ஒன்றும் பதில் கூறவில்லை.

அந்த மருந்து அவள் மனத்தில் நன்றாகத் தான் வேலை செய் திருக்க வேண்டும். உமா, சற்று நேரத்திற்குள் தன் வழக்கமான உடையை விடச் சற்றுச் சுமாரான புடைவை ஒன்றைத் தரித்துக் கொண்டாள். யுத்தத்திற்குத் தயாராவது போல் தனக்குள் தைரியப் படுத்திக் கொள்வதும் தன்னைத்தானே உற்சாகப்படுத்திக் கொள்வதுமாக இருந்தாள்.

தான் முயன்ற காரியம் ஜயமடைந்தது என்ற திருப்தியுடன் வருகிறவர்களை வரவேற்க, தக்க ஏற்பாடுகள் செய்யத் தொடங்கி,

ளுள் கௌரி. காமாக்ஷி அம்மாளுக்கோ, முதல் முதலில் தன் மானம் போகாமல் 'அந்த மட்டும் அவர்கள் எதிரே வர ஒத்துக் கொண்டதே இந்த ஜடம்' என்ற திருப்தி. சற்று நேரத்திற் கெல்லாம் சுவாமியைப் பிரார்த்திக்கக் கூட ஆரம்பித்து விட்டாள், இந்த வரனே நிச்சயம் ஆக வேண்டுமென்று! அடுத்தபடி உமாவின் இல்லற வாழ்க்கையைப் பற்றிய கனவுகள் கூடக் கண்டு விடுவாளோ என்றிருந்தது, அவள் முகத்தில் மெல்ல மெல்லப் படர்ந்து பிரகாசிக்கும் மந்தஹாசம்.

மணி நான்கடித்தது. வாசலில் கார் வந்து நின்றது. ஒரு வாலிபனும், ஒரு வயோதிகரும், அவர்களைத் தொடர்ந்து ஐம்பது வயதென்று மதிக்கும் படியான ஓர் அம்மாவும் வந்தார்கள். பையன் தோளில் விசிறி மடிப்பு அங்க வஸ்திரம். அதை அடிக்கடி தட்டிக் கொடுக்கும் சுபாவம். மூக்குக் கண்ணாடி மூலமாகப் பார்க்கும் கம்பீர திருஷ்டி. அந்த அம்மாள் இடுப்பில் ஜரிகைப் புடைவை இஸ்திரி போட்ட பள பளப்புடன் உடலை அலங்கரிக்க, அழுந்திய கழுத்தைச் சிரமப்பட்டு வலம் வரும் வைர அட்டிகை பகல் வெயிலில் பளீர் பளீரென்று மின் வெட்டுகள் செலுத்த, தெருவிலிருப்போர் அத்தனை பெயர்களின் ஆவலையும் தூண்டி வாசலுக்கு வரும்படி செய்து விட்டது.

அவர்கள் கூடத்தில் வந்து உட்கார்ந்தார்கள். உமாவும் தன்னுலியன்ற அடக்கத்துடன் தம்பூரை மீட்டிப் பாடினாள். அந்தச் சங்கீத மந்த மாருதத்தில் மிதந்து செல்லும் அவள் உள்ளத்தைப் பூமிக்கு இழுத்து வந்தார் ராமையர்.

"உமா, எழுந்து நமஸ்காரம் செய்" என்ற அவர் குரல் அவள் உடலை உலுக்கி ஏனோ அர்த்தமற்ற அருவருப்பை உண்டாக்கியது. அவள் எழுந்து அந்தப் பெரியவரையும், உள்ளே இருந்த அம்மாளையும் நமஸ்கரித்தாள். 'அந்தப் பிள்ளையையும் வணங்கு' என்னும் பாவனையில் கையைக் காண்பித்தார் ராமையர். வேண்டா வெறுப்பாக அவனையும் நமஸ்கரித்தாள் உமா. அதே சமயத்தில் சட்டென்று திரும்பினான் அவன். ஒரு பெண் அவன் காலில் விழுவது அவனுக்கு வெகு நூதனமாக இருந்தது போலும். அந்தக் கணத்தில் ஏனோ உமாவின் கண்களில் அவன் செய்கை கழுகு கொத்த வருவது போல் தோன்றிற்று.

"அட கழுகு மூக்கே!" என்று அவள் தன்னையுமறியாமல் மெல்ல முணு முணுத்து விட்டாள். உடனே தன் வாய் தவறி வந்த வார்த்தைகளுக்கு வருந்தியவளாய் அவனைக் கடைக் கண்ணால் நோக்கினாள். அவன் முகம் நிமிஷ நேரத்தில் சுண்டி விட்டது. அதிலிருந்து தான் கூறியது அவன் காதிலும் விழுந்திருக்க வேண்டுமென்று ஊகித்தாள் உமா. இதை உணர்ந்ததும் அவள் உள்ளம் பூரித்தது. 'ஒரு வரன் பைசல்' என்று மனத்திற்குள் விரல் விட்டு எண்ண ஆரம்பித்தாள். கௌரியின் அடக்கமும், கோபுவின் சுய நலத்திற்கு வேண்டிய சாமர்த்தியமும், லலிதாவின் குறும்புத் தனமும் திடீரென்று உமாவிடம் அடைக்கலம் புகுந்தன. மேலுக்கு வெகு சாதுரியமாக நடந்து கொண்டு விட்டு, அவள் மாடிக்குச் சென்றாள். பரஸ்பரம் உபசார வார்த்தைகள் பரிமாறிக் கொள்ளப் பட்ட பிறகு வந்தவர்கள் புறப்பட்டார்கள்.

உமா ஜன்னல் வழியே நோக்கினாள். அவர்கள் வெளியே போய் விட்டதைக் கவனித்ததும் தான் உடுத்தி யிருந்த புடைவையை வீசி எறிந்து விட்டு, கதர்ப் புடைவை ஒன்றைத் தரித்துக் கொண்டு, வெளியே கிளம்பி விட்டாள்.

வந்தவர்களை வழியனுப்பக் காமாக்ஷி அம்மாளும் ராமையரும் வாசற் பக்கம் போயிருந்த சமயம் நாகலக்ஷ்மி அம்மாளும் கௌரியும் பேசிக் கொண்டிருந்தனர். கௌரிக்கு இந்தப் பெண் பார்க்கும் விஷயம் நூதனமாகவும் வேடிக்கை யாகவும் இருந்தது. தனக்கு அப்படி ஒன்றும் நடக்க வில்லை யாகையால் அவள் எல்லாவற்றையும் ஊன்றிக் கவனித்தாள். உமாவின் முகத்தையும், அவள் கானத்தின் மேன்மையையும், அவள் நடந்து கொண்ட மாதிரியையும் நினைத்து நினைத்து அவள் மனம் பூரித்தாள். மாப்பிள்ளை முடுக்காக உட்கார்ந்ததும், பார்க்காதது போல் பெண்ணைப் பார்த்ததும், அவனுடைய அப்பா தம் தீட்சண்ய திருஷ்டியால் சந்தையில் மாடு பார்ப்பது போல் உமாவைப் பார்வை யிட்டதும், அந்த அம்மாள் தங்களது கௌரவத்தை விளக்கும் பொருட்டு இரண்டு விரல்களினால் சொகுசாக ரவிக்கையில் படியாதிருந்த தூசியை வெகு கவனத்துடன் சுண்டி விட்ட காட்சியும், அவளுடைய ஆவல் மிகுந்த கண்களுக்கு மிகவும் ரம்மியமாக இருந்தன.

“உமாவுக்கு இஷ்டந்தான் போலிருக்கிறது” என்றுள் நாகலக்ஷ்மி அம்மாள் கௌரியிடம்.

“அப்படித்தான் தோன்றுகிறது அல்லவா? அவள் எவ்வளவு அழகாக, பணிவாக நமஸ்காரம் செய்தாள் பார்த்தீர்களா? பிறகு அவள் கடைக்கண்ணுல் பார்த்ததும்........! யார் நம்புவார்கள் இவள் தான் நம் உமா என்று?” என்று அதிசயித்தாள் கௌரி.

“எல்லாம் பிராப்த வேளை வந்தால் தானே தோன்றும்” என்று மாமியார் வியாக்கியானம் செய்வதற்கும் உமா கீழே இறங்குவதற்கும் சரியாக இருந்தது. ராமையரும் அவர் மனைவியும் உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். கௌரி ஆவல் மிகுந்தவளாய்த் தங்கையிடம் சென்று, “உமா, உன் அபிப்பிராயம் என்ன? இஷ்டந்தானே?” என்று கேட்டாள்.

உமா சிரித்துக் கொண்டே, “சற்றுப் பொறுத்துக் கொள்ளடி, அக்கா! நாளைக்கே அவர்களிடமிருந்து கடிதம் வரும் பார்” என்று கூறிக் கொண்டே ஓடி விட்டாள்.

ஆச்சரியமும் சந்தோஷமும் மிக, கௌரி உமா ஓடிச் சென்ற திக்கை நோக்கி நின்றுள். “இயற்கை வேலை செய்கிறது!” என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

## 38

## பிரிவாற்றுமை

கடிதத்தைப் பிரித்த ஆவல் இறக்கை கட்டிக் கொண்டு பறந்து சென்று விட்டது. அவள் கடித்த பற்களையும் தாண்டி, சூள் கொட்டி விட்டது கௌரியின் நாக்கு. அவள் வதனத்தில் ஏக்கமும், ஏமாற்றமும் ஒன்றன் மேல் ஒன்று மடிந்து காட்சி அளித்தன.

“என்னம்மா எழுதி இருக்கிறன்?” என்று கேட்டாள் மாமியார்.

உடனே கௌரியின் முகம் சந்தோஷம் எனும் ஒரு பொய்ப் படுதாவைப் போர்த்திக் கொண்டது. “மாமி, இந்தத் தடவை என்ன என்கிறீர்கள்? வழக்கத்தைக் காட்டிலும் இரண்டு மடங்கு பெரியதாக இருக்கிறது கடிதம். ஒரு புத்தகமே போடலாம் போலிருக்கிறது” என்று வேடிக்கையாகப் பேசினுள் அவள்.

"என்னவாம் அப்படி?"

கௌரி சவிஸ்தாரமாக ஒவ்வொன்றையும் படித்துச் சொன்னாள். நியூயார்க்கில் அவன் பார்த்த இடங்கள், கண்ட காட்சிகள் ஒன்று விடாமல் படித்து விவரித்து, அழகாக எடுத்துக் கூறினாள். அதைக் கேட்ட மாத்திரத்தில் நாகலக்ஷ்மி அம்மாளின் உள்ளத்தில் மகிழ்ச்சி நிரம்பி வழிந்தோடியது. தன் பிள்ளைக்கு இணை இந்த உலகில் உண்டோ என்று அவள் பெருமிதம் கொண்டாள். கௌரியின் குணத்தைப் பார்த்து அகமகிழ்ந்தாள். எல்லாவற்றையும் மகாலிங்கையரிடம் தானே கூறும் போது, அவளே அமெரிக்காவுக்குச் சென்று விட்டு வந்தாளோ என்னும்படி இருந்தன அவளுடைய உற்சாகமும் கவனிப்பும். மகாலிங்கையர் தாமாக வேறு கௌரியைப் படிக்கச் சொல்லிக் கேட்டார். அவருக்குத் தினசரி தெய்வ ஸ்தோத்திர பாராயணத்துடன் வாரத்திற்கொருதரம் மகனின் கடிதப் பாடமும் உடன் சேர்ந்து கொண்டது. அவன் இல்லாமல் இருப்பதற்கு, அவன் கடிதங்கள் தாம் அவர்கள் இருவருக்கும் சற்று ஆறுதலாக இருந்தன.

கௌரி கடிதத்தை அவர்களுக்குப் படித்துக் காட்டி விட்டு, பெட்டியில் வைக்கத் தன் படுக்கை அறைக்குச் சென்றாள். அங்கு மீண்டும் ஒரு முறை அதை வாசித்தாள்.

'அமெரிக்காவைப் பற்றி வியாசம் நன்றாக எழுதுகிறாய், சுந்தர்! வியாசம் முடிந்த பிறகு ஊரிலிருப்பவர்கள் அனைவரையும் பற்றி ஓர் உபசாரம். ஆனால், ஹூம், எனக்கு ஒன்றும் இல்லையாக்கும்' என்று வருந்தியது அவள் உள்ளம்.

தன் பெட்டியில் அடியில் கிடந்த படத்தை - முன்பு ஒரு தினம் திருடிக் கொண்டு வந்த சுந்தரத்தின் புகைப் படத்தை - எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள் அவள். அதைப் பார்க்க விடாமல் மறைத்த லேசான கண்ணீர்த் திரை, சுந்தரத்தை அவளுக்கு எட்டாப் பொருளெனத் தோன்றும் படி செய்தது. கௌரியின் மனத்தில் இந்த எண்ணம் முள் போல் தைத்தது. கொஞ்ச நாட்களாகத்தான் சுந்தருக்கும் தனக்கும் நடுவே ஓர் அகழி தோன்றிக் கொண்டு வருவது போன்ற உணர்ச்சி அவள் உள்ளத்தில் ஏற்பட ஆரம்பித்தது. அவன் இங்கே இருக்கும் போது அன்பு மொழிகள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தாற் போல் இப்பொழுதுதான் அவளுக்குத் தெரிந்தது.

இதற்குக் காரணம் தன் இயற்கையான லஜ்ஜை தான் என்பதை மட்டும் அவன் எப்படி அறியக் கூடும்?

கௌரி தன் கணவனின் படத்தை மார்புறத் தழுவிக்கொண்டு படுத்திருந்தாள். ஏகாந்தத்தின் பயங்கரம் அவள் உடலை நிரப்பிக் கொண்டு அவளது ஒவ்வொரு நரம்பையும் சுண்டி விட்டது. அதை யெல்லாம் அடித்துக் கொல்லுவது போல் உடம்பை முறுக்கி, சுருட்டிப் படுத்துக் கொண்டாள் கௌரி. 'இன்னும் ஆறு மாதம் இருக்கிறதே, ஈச்வரா!' என்று அவள் இருதயம் ஓலமிட்டு அரற்றியது. அவள் பித்துப் பிடித்தவள் போல் கணவனின் கடிதத்தை மறுபடியும் பிரித்துப் படித்தாள். அது தான் மனப் பாடம் ஆகிவிட்டதே! அதன் வரிகளின் நடுவில் தனக் கென்று பிரத்தியேகமாக இரண்டு வார்த்தைகளேனும் இருக்குமோ வென்று தேடிக் கண்டுபிடித்து விடுவேன் என்பது போலிருந்தது அவளது வெறிச் செய்கை.

ஏ கௌரி, பேதைப் பெண்ணே! இந்த உணர்ச்சியில் நூற்றில் ஒரு பங்கு சுந்தரம் இருக்கும் போது அவனிடம் காட்டி யிருந்தால், அவன் அமெரிக்காவுக்கே போயிருக்க மாட்டானே, கடிதம் எழுத வேண்டியே வந்திருக்காதே? அப்படியே தன் தூய அன்பை அள்ளிச் சொரிந்து விட்டிருப்பானே? ஆனால், இதெல் லாம் நீ எப்படி அறிவாய்?

கடிதத்தில் காதல் வாசனை கமழவில்லையே என்ற குறை பெருங் குறையாக இருந்தது கௌரிக்கு. தன் சிந்தனைகளை அலம்பித் தள்ளுவது போல் தாரை தாரையாகக் கண்ணீர் உகுத் தாள் அவள்.

★

"ஸார்!" என்ற குரல் வாசலில் கேட்டது. கௌரியின் காதில் அது மிகவும் பரிசயமான குரல் போல் படவே, யாராக இருக்கலாம் என்று வாசற் புறம் சென்று நோக்கினாள். சுந்தரத்தின் நண்பர்கள் சிவாவும் கேசவராவும் அங்கு நின்று கொண்டிருந்தனர். கதவைத் திறந்து அவர்களை உள்ளே வரச் சொல்லிவிட்டு, மாமியாரைக் கூப்பிடச் சென்றாள் கௌரி. நாகலக்ஷ்மி அம்மாள் வந்து அவர்களுடன் பேச ஆரம்பித்தாள்.

"சுந்தரத்தினிடமிருந்து ஏதாவது கடிதம் வந்ததா?" என்று அவர்கள் கேட்டது தான் அடி, முதலிலிருந்து கடைசி வரை,

இதுவரை வந்த கடிதங்கள் யாவையையும் விவரிக்க ஆரம்பித்து விட்டாள் தாய். அதைக் கேட்கக் கேட்க, சிவாவுக்கும் கேசவ ராவுக்கும் ஓர் அன்னையின் அன்பு அவளை எம்மட்டும் பாதிக்கிறது என்று வியப்பாக இருந்தது. சுந்தரத்தின் தாயைக் காணும் போது அவர்களுக்குப் பரிதாபமாகக் கூட இருந்தது. மேலும், இவ்வளவு அழகாகச் சுந்தரம் தான் எழுதுகிறானா, அல்லது சுந்தரத்தின் மனைவி தான் அவ்வளவு நன்றாக எடுத்துக் கூறுகிறாளா என்ற சந்தேகம் வேறு அவர்கள் ஆவலைத் தூண்டிவிட்டது. ஆயின் எப்படிக் கேட்பது என்று அவர்கள் பேசாமல் இருந்து விட்டனர்.

"அவன் இல்லாதது எங்களுக்கே மிகவும் வெறிச் சென்று இருக்கிறது. உங்களுக்குப் பாவம்......" என்று அநுதாபப் படலானான் சிவா.

நாகலக்ஷ்மி அம்மாளுக்கு அது தாங்க முடியவில்லை. பெருமூச் செறிந்தாள்.

"என்னவோ, அவனுக்கு அப்படிப் போகவேண்டுமென்று தோன்றி விட்டது. எங்களைப் பற்றி யோசிக்க அவனுக்குச் சமயம் ஏது?" என்றாள் வருத்தம் மிகுந்த தொனியில்.

கேசவ ராவ் அதற்குள், "ஒன்றுமில்லை, மாமி. ஒரு வருஷந் தானே? வந்து விடுகிறான். அதைக் காட்டிலும் அதிகமாக இருந்தால் நானே அவனைத் தடுத்திருப்பேன்" என்றான்.

"ஹூம். ஒரு வருஷம், இப்பொழுது ஒன்றரை வருஷம் ஆயிற்று. இன்னும் எத்தனை நாள் கழித்து வருவதாக எண்ணமோ தெரியவில்லை."

"இதோ ஆகி விட்டதே, வந்து விடுகிறான். மேலும், உங்களுக்கு ஒரு துணையை ஏற்படுத்தி விட்டுத்தானே போயிருக்கிறான்......" என்றான் கேசவ ராவ், சமயலறைப் பக்கம் பார்வையைச் செலுத்திக் கொண்டே.

அதைக் கவனித்த நாகலக்ஷ்மி அம்மாள் புளகாங்கிதம் அடைந்தாள். கௌரியைப் பற்றிப் புகழ்மாலை தொடுக்க ஆரம்பிப்பதில் அவளுக்குச் சலிப்பே இருப்பதாகக் காணவில்லை. நாட்டுப் பெண்ணைப் பற்றி மகிழ்ச்சியுடன் பேச ஆரம்பித்து விட்டாள்.

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு இரு நண்பர்களும் விடை பெற்றுக் கொண்டு தங்கள் வீட்டிற்குப் போகப் புறப்பட்டனர்.

"நீங்களாவது சற்று அடிக்கடி வந்து கொண்டிருந்தால் நல்லது. எனக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும். சுந்தரம் இங்கு இல்லை என்பதை மறந்து சிறிது நேரமாவது இருக்க முடியும் போலிருக்கிறது" என்று கூறி அவர்களை வழியனுப்பலானாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"ஆகா, அதெற்கென்ன? கட்டாயம் வருகிறோம். சுந்தரத்தின் க்ஷேமலாபங்களும் தெரிந்து கொள்ள முடியும்" என்றான் சிவா.

கௌரி வாசலுக்கு வந்தாள். அவர்கள் இருவரும் வாசற்படி இறங்கிக் கொண்டிருந்தார்கள். கௌரி மிக்க சிரமத்துடன் தன் சங்கோஜத்தைத் தணித்துக் கொண்டு, கேசவராவை ஒரு கேள்வி கேட்டாள்.

"ஹேமா சௌக்கியமா? இவர் இல்லாவிட்டால் என்ன? அவளை அழைத்துக் கொண்டு இங்கே வரக்கூடாதா?"

ஒரு கணம் ஆலோசித்தான் கேசவராவ். பிறகு மெல்ல ஏதோ ஞாபகமாக இருப்பவன் போல், "அவளுக்கு உடம்பு சரியில்லை. முடிந்தால் அழைத்து வருகிறேன்" என்று கூறி விட்டுப் போய் விட்டான்.



கேசவராவின் பதிலைக் கேட்டதிலிருந்து கௌரிக்கு மனசு குழம்பிக் கொண்டே இருந்தது.

'ஹேமாவுக்கு உடம்புக்கு வந்து விட்டது. இனி அவள் வாழ்க்கை என்னவாகும்? கேசவராவ் ஏன் தயங்கித் தயங்கிப் பதில் கூறினர்?' என்றெல்லாம் அவள் மனம் கலங்கியது. அவளைப் போய்ப் பார்த்து விட்டு வர வேண்டும் என்ற ஆவல் அவளைப் பிடித்துக் கொண்டது.

தன் மாமியாரிடம் சென்று ஹேமாவின் கதை பூராவும் கூறினாள். தான் அவளைப் பார்க்க மிகவும் ஆவலாக இருப்பதாகவும் சொன்னாள். மாமியார் அவளை அழைத்துப் போவதாகத் தேறுதல் உரைத்தாள்.

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே மகாலிங்கையர் உள்ளே நுழைந்தார். கௌரி, ஏதோ காரியம் செய்யும் பாவனையாக எழுந்து உள்ளே செல்ல முயன்றாள்.

"கௌரீ!" என்று கூப்பிட்டார் மாமனார். அவள் நின்று, திரும்பி நோக்கினாள்.

"கௌரீ, என்னம்மா, இது? கல்யாணமாகி விட்டதனாலேயே உறவு மாறி விடுமா என்ன? மாமாவையே மறந்து விட்டாயா? மாமனார் மரியாதை மிகவும் செய்கிறாயே? ஏனம்மா, இதற்காகவா உன்னை வேறிடத்தில் கொடுக்கக் கூடாது என்று நான் பாடு பட்டது? ஊம்..." என்ற அவருடைய அன்பு சொட்டும் மொழிகள், கௌரியின் மனத்தை மிகவும் சஞ்சலப் படுத்தின. அவள் தனக்குத் தானே ஏதேதோ சொல்லிக் கொண்டாள்.

'பாவம், சுந்தர் இல்லாததற்கு நாமாவது அனுகூலமாக இருக்க வேண்டாமா? இந்தச் சனியன் பிடித்த சங்கோஜத்தை விட்டுத் தொலைக்க வேண்டும். ஆமாம், சுந்தருக்குத்தான் கல்யாணத்துக்குப் பிறகு உறவு மாறி விட்டது. பழைய சிநேகத்தின் நெருக்கம் கூட அபாவமாகி விட்டது. இவர்களுக்கென்ன அப்படி......மாமா உள்ளம் நோகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.'

கௌரியின் உள்ளம் உணர்ச்சியால் உலைந்தது.

## 39

## மழையும் மந்தாரமும்

மழை 'ஜோ' வென்று கொட்டிக் கொண்டிருந்தது. ஆகாயம் பொத்தலாகி விட்டதோ என்னும்படி இருந்தது அக் கோர மழை. காதில் கடலைப் போன்ற பலத்த இரைச்சல். கூடு வாய் மூலையிலிருந்து பெரு நீர் வீழ்ச்சி போன்ற பிரவாகம் முற்றத்தைப் பெயர்த்து அந்தப் பிரவாகத்தில் வீட்டையே அஸ்திவாரத்துடன் நகர்த்திக் கொண்டு போய் விடுமோ என்று பயப்படும் படி இருந்தது. போர் முனையின் பீரங்கிகள் போல் இடியின் முழக்கம் ஆகாயத்தில் உருண்டு செல்லும் போது பூமியையும் ஓர் உலுக்கு உலுக்கியது.

கௌரி தன் அறையிலிருந்தவாறு எதிர் வீட்டை நோக்கி நின்றாள். அதையும் விரும்பாதது போல் வருணன் மழை என்னும் தன் கேசத்தை அவள் முகத்தில் வீசினான். கௌரி கண்கள் தெறிக்க உள்ளே நகர்ந்து விட்டாள். காலை எட்டு மணிக்குப் பிடித்த மழை இன்னும் விடாமல் பெய்து கொண்டிருந்தது. சற்று நிற்கிறாற்போல் ஒரு கணம் ஜாலம் காட்டும், மறு கணம் அதி வேகத்துடன் யுத்தம் தொடங்கும். அந்த ஒரு கணத்தில் வீதியில்

ஜலப் பிரவாகம் சுழலமிட்டு, கொப்பளித்து, நுரைத்து, சாக்கடைகள் கக்கித் தள்ள, தெருக்கோடியை நோக்கி ஓடுவதைப் பார்த்தால் சமுத்திரம் தான் நகரத்திற்குள்ளே பிரவேசித்து விட்டதோ என்று நடுங்கும்படி இருந்தது.

வீட்டில் வேலை ஓடவில்லை. மகாலிங்கையர், நாகலக்ஷ்மி அம்மாள், கௌரி ஆகியோர் பேசாமல் கூடத்தில் உட்கார்ந்திருந்தனர். மாமியும் மருமகளும் பல்லாங்குழி ஆடிக் கொண்டிருந்தார்கள். மாமனார் பத்திரிகை படிக்கும் பாவனையில் இவ்விருவரையும் நோக்கி மகிழ்ந்து கொண்டிருந்தார்.

"என்னடி, இந்த அலவாணை நீ எடுக்கவே இல்லையே? ஞாபகமாக ஆடு" என்று நாகலக்ஷ்மி அம்மாள் எச்சரிக்கவும், கௌரி திடுக்கிட்டவளாய் நிமிர்ந்து நோக்கினாள். பிறகு தன் பிழையை உணர்ந்து, சிரித்து விட்டு, மீண்டும் ஆட ஆரம்பித்தாள். அப்பொழுது அவளுடைய விழிகளைச் சுற்றிக் கறு வட்டம் படிந்திருப்பதைக் கவனித்து அவள் மாமனார் திடுக்கிட்டார். 'பாவம், குழந்தை. ஏக்கம்' என்று தமக்குள்ளேயே ஏதோ தந்தி அடித்துக் கொண்டார்.

மழை ஓயும் சத்தம் கேட்டது. கனத்த மழையைத் தொடர்ந்து வரும் நிசப்தம் அவர்களைச் சூழ்ந்து கொண்டு விட்டது.

"அக்கா!" என்ற ஒரு மெல்லிய குரலைக் கேட்டுக் கௌரியும் நாகலக்ஷ்மி அம்மாளும் திரும்பி வாயிற்படிப் பக்கம் நோக்கினர். ஜலம் சொட்ட, தலைமயிரெல்லாம் நெற்றியுடன் படிந்து கிடக்க, சட்டை உடம்புடன் ஒட்டிக்கொண்டு, குளிரினால் வெட வெடவென்று நடுங்கியவாறு நின்று கொண்டிருந்தான் பாலு. கௌரி சட்டென்று எழுந்து அவனிடம் சென்று, அவன் கையிலிருந்த புத்தகப் பையை வாங்கி வேறிடத்தில் வைத்து விட்டு, "என்னடா இந்தக் கோலம்!" என்று அதட்டினாள்.

"இல்லை அக்கா......" என்று ஆரம்பித்த பாலு 'கோ' வென்று அழ ஆரம்பித்து விட்டான். கௌரி அவனை உள்ளே அழைத்துச் சென்று அவன் உடுப்புக்களைக் கழற்றிப் போடச் சொல்லி, உடம்பைத் துடைத்து, ஒரு துண்டை இடுப்பில் கட்டிக் கொள்ளச் சொன்னாள். அவன் தலையைத் துவட்டிக் கொண்டே அவனை எல்லாம் விசாரித்தாள். அவன் பள்ளிக் கூடத்திலிருந்து வரும் போது பாதி வழியில் மழை பெரிதாகப் பிடித்துக் கொண்டு,

விட்டதாம். இப்படி நனைந்து கொண்டே வீட்டுக்குப் போனால் அம்மா வையப் போகிறாளே என்று அங்கு வந்தாளும். இதைக் கேட்ட கௌரிக்கு அவனைக் கோபித்துக் கொண்டு விட்டோமே என்று மனம் இளகி விட்டது. அவள் கரி அடுப்பும் சாம்பிராணியும் கொண்டு வந்து புகையில் அவன் தலையை உலர்த்தி விட்டு, தானே அவனைக் கூட்டிக் கொண்டு எதிர் வீட்டிற்குச் சென்றாள்.

இவள் உள்ளே நுழைவதற்குச் சரியாக லலிதா புழக்கடையிலிருந்து ஓடி வந்தாள். அவள் பாவாடை, மேலாக்கு யாவும் ஈரம். தோளில் போட்டுக் கொண்டிருந்த ஈரத் துணிகளை ஒவ்வொன்றாக உதறிக் கொசுவிக் கொடியில் உலர்த்தலானாள். கௌரிக்குத் தன் தங்கையைப் பார்க்க மிகவும் பெருமையாக இருந்தது. முழுவதும் தன்னைப் போல் இல்லாவிட்டாலும், வீட்டு வேலைகளைப் பொறுப்பாகக் கவனிக்கிறாளே என்று அவள் மகிழ்ச்சி அடைந்தாள். லலிதாவின் தலையும் நனைந்திருந்தது.

"என்னடீ இது? ஒருத்தரைப் போல் இப்படிச் சொட்டச் சொட்ட வந்திருக்கிறீர்களே? இவ்வளவு பெரிய பெண்ணுக்கு இது கூடவா தெரியாது?" என்று சுவாதீனத்துடன் தங்கையைக் கடிந்து கொண்டே, கௌரி அவள் தலையை அவிழ்த்து, துவட்டி, உதறி உலர்த்தினாள்.

இதைக் கேட்டுப் புன் முறுவல் பூத்தாள் லலிதா. "அக்கா! இவ்வளவு பெரிய பெண்ணுக்குத் துப்பு இல்லாதது கூட நல்லது தான். நீ முன் போலவே எங்களை அதட்டுவாயோ இல்லையோ! பெரியவளாக இருக்க எனக்குத் துளி கூடப் பிடிக்கவில்லை. நீயே பார். பள்ளிக்கூடத்திலிருந்து வந்தோம், ஏதோ குஷியாகக் கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் படித்தோம் என்பது இல்லை. உமாவோ முன்போலவே தன் வேலையைப் பார்த்துக் கொண்டு போய் விடுகிறாள். நான் தான் எல்லாம் செய்ய வேண்டி இருக்கிறது. காலையில் எழுந்தாலும் அப்படியே. வீட்டில் அப்பாவுக்குப் பூஜைக்கு எடுத்து வைத்து, அம்மாவுக்குக் காபி போடுவதற்கு ஒத்தாசை செய்து விட்டுஓடவேண்டி இருக்கிறது. சுகமாகப் பறக்கிற கிளியைக் கூண்டில் அடைத்தாற் போல் இருக்கிறது இந்த வாழ்வு. அம்மா தனியாகத் திண்டாடுவதைப் பார்த்தால் ஒன்றும் செய்யாமல் இருக்கவும் முடியவில்லை. இந்தச் சமையற்காரப் பாட்டி இப்பொழுது தானா ஊருக்குப் போய்விட வேண்டும்!"

"ரொம்ப அழகுதான் போ. வர வரக் குழந்தையாகி விடுகிற தாக எண்ணமோ? அடுத்த வருஷம் உனக்குக் கல்யாணம் ஆக வேண்டாம் போலே இருக்கிறது! கழுதை! வாலைக் கட்டி வைக்க வேளை வந்து விட்டது தெரியுமோ இல்லையோ?" என்று லலிதாவைச் செல்லமாகத் திட்டினுள் கௌரி.

"உமாவுக்கே ஒன்றையும் காணுமாம். எனக்குத்தான் முந்திக் கல்யாணம் போலிருக்கிறது!"

கௌரிக்கு உமாவின் கல்யாண விஷயம் என்ன வாயிற்று என்ற யோசனை வந்தது. அது தான் சமயமென்று, லலிதாவை, "ஏனடீ, முன்னே வந்தானே ஒரு பிள்ளை, அது என்னவாயிற்று?" என்று கேட்டாள்.

லலிதா தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, "அதுவா?" அந்தப் பிள்ளைக்கு உமா பிடிக்கவில்லையாம். ரொம்பவும் துடுக்குப் போலே இருக்கிறது என்று சொல்லி விட்டானும்" என்று விளக்கினுள்.

கௌரிக்கு அடக்க மாட்டாத கோபம் வந்து விட்டது. அன்றைக்கு உமா நடந்து கொண்ட அவ்வளவு அடக்க ஒடுக்கம் தன்னல் கூட முடியாதே என்று அவள் பொருமினுள். இவர்கள் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டே வந்த உமா கௌரியைப் பார்த்துச் சிரித்தாள். என்றும் அமைதியாகத் திகழும் கௌரியின் வதனத்தில் அப்பொழுது தோன்றிய கோபக் குறி பொருத்தமாக இல்லை. ஒட்ட வைத்தாற் போல் இருந்தது. அதைக் கண்டு மறுபடியும் சிரிக்க ஆரம்பித்து விட்டாள் லலிதா.

"சிரி, சிரி; நீ இப்படியே சிரித்துக் கொண்டிரு. உனக்கு ஒரு கண்டிப்பான அகமுடையான் வரப்போகிறுன். இளிக்கும் போதெல்லாம் ஒரு குட்டு வைப்பான்" என்றுள் கௌரி.

"வைப்பான், வைப்பான்! திருப்பி நான்கு வைத்து விட மாட்டேனு? உமாவைக் கேட்டுப் பார்; அவள் கணவனை அவள் கொடுக்கும் அடி அவன் ஊரை விட்டு ஓடிப் போக வேண்டியது தான். இல்லை உமா?" கல கலவென்று சிரித்தாள் லலிதா.

உமாவுக்குக் கோபம் வந்து விட்டது. தன் தங்கையைப் பார்த்து ஒரு முறை முறைத்தாள். பிறகு ஏனே அவளுக்கும் சிரிப்பு வந்து விட்டது. சகோதரிகள் இருவரும் சேர்ந்து விலாப் புடைக்கச் சிரித்தார்கள்.

ஏதோ நினைத்துக் கொண்டவளைப் போல் உமா, "லலி, நீ சொன்னயோ அந்த விஷயத்தை, கௌரிக்கு?" என்று கேட்டு விட்டுத் தன் கூர்மையான மூக்கைத் தடவிக் கொண்டாள்.

லலிதா அதற்காக ஒரு துண்டுச் சிரிப்புச் சிரித்து விட்டு, "கௌரி! ஏன் தெரியுமா, அவன் உமாவைத் 'துடுக்கு' என்ருன்?...என்று பெரிதாக ஒரு பீடிகை போட்டு நிறுத்தி விட்டாள். கௌரி லலிதாவின் தலை உலர்ந்ததா என்று தொட்டுப் பார்த்து, தலையை வாரியவாறே 'என்ன சமாசாரம்?' என்னும் பாவனையில் இரு தங்கை மாரையும் மாறி மாறி நோக்கினுள். உமா அவனைக் 'கழுகு மூக்கு' என்ற அடை மொழியால் அழைத்ததை லலிதா கூறினுள். அதைத் தொடர்ந்தே உமாவும், "எப்படியானுல் என்ன கௌரி? இடம் தட்ட வேண்டியது ஒன்றுதானே நமக்கு வேண்டியது?" என்ருள்.

கௌரி அவர்களுடன் சேர்ந்து சிரிப்பதா, அல்லது அவர் களைக் கண்டிப்பதா என்று புரியாமல் திகைத்து நின்ருள்.

எதிர் வீடு சென்றிருந்த காமாக்ஷி அம்மாள் அப்பொழுது தான் உள்ளே நுழைந்தாள். அவள் தன் பெண்ணைப் பார்த்து, "கௌரி, நீ போ அம்மா. நாகு தனியாக இருக்கிருள்" என்ருள்.

"ஏன், மாமா இல்லே?" என்று கேட்டாள் கௌரி.

"இருக்கிருர். ஆனுலும் அவள் ஏதோ நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருள். நீ போ."

கௌரி எழுந்து முன் கட்டுக்கு வந்தாள். அங்கே பாலு படித் துக் கொண்டிருப்பதைப் பார்ப்போமென்று அவன் மேஜை யண்டை சென்ருள். அவளைக் கட்டதும் பாலு, "அக்கா, எனக் குக் குளிருகிறது" என்ருன் பரிதாபமாக. கௌரி தன் தாய் பார்க்கு முன் அவனைப் படுத்துக் கொள்ளச் சொல்லி விட்டுக் கம்பளியை எடுத்துப் போர்த்தினுள். "போடா அசடு. இப்படி நனைந்தால்......" என்று வேண்டா வெறுப்பாக அவனைக் கடிந்துகொண்டு விட்டு உள்ளே சென்று மிளகு கஷாயம் போட்டு அவனுக்குக் கொண்டு கொடுத்தாள்.

"யாருக்கடி கஷாயம் இப்பொழுது?" என்று கேட்டாள் காமாக்ஷி அம்மாள்.

"ஒன்றும் இல்லை. பானு மழையில் நனைந்தானே, எதற்கும் இருக்கட்டும் என்று கொடுக்கிறேன்" என்று மழுப்பி விட்டு, தன் வீடு நோக்கிச் சென்றாள் கௌரி.

வாசல் வரை அவளுடன் வந்த லலிதா, "அக்கா, நீ இங்கே தான் இரேன். சுந்தர் கூட ஊரில் இல்லையே" என்றாள்.

கௌரியின் மனத்தில் அவ் வார்த்தைகள் ஆழமாகப் பதிந்தன. 'ஆம், இவர்களுடன் முன் போல் இருந்து விட்டால் போகிறது. அப்பொழுது கன்னு பின்னு வென்று யோசிக்க வேண்டாமே. அதற்குள் சுந்தர் கூடத் திரும்பி வந்து விடுவார்' என்று தனக்குளளேயே சொல்லிக் கொண்டாள். சுந்தரைப் பற்றி நினைவு வரும் போது மாத்திரம் தன் இருதயத்தில் ஏதோ ஓர் இடம் காலியாக இருப்பது போன்ற ஓர் எண்ணம் அவள் மனத்தில் வேரூன்றி நின்றது. மறுபடியும் தானே சமாதானமும் கூறிக் கொண்டாள். 'முன் போல் அந்த வீட்டையும், தங்கைகளையும், தம்பியையும் கவனித்துக் கொண்டால் போயிற்று. இன்னும் கொஞ்சம் வேலை இருந்தால் இன்னும் வீண் யோசனைகள் செய்வதற்குச் சற்று சமயம் குறைவு தானே? அநாவசியமாக உடம்பையும் மனத்தையும் உள்ளத்தையும் அலட்டிக் கொள்ளாமல் இருக்கலாம்.' இவ்வாறு யோசித்துக் கொண்டே புக்ககத்தில் காலை வைத்தாள் கௌரி.

முற்றத்தில் நாகலக்ஷ்மி அம்மாள் ஏதோ யோசனையுடன் உட்கார்ந்திருந்தாள். அவளை உற்சாகப் படுத்துவதற்காகக் கௌரி அவள் அருகே சென்று உட்கார்ந்து பேச்சுக் கொடுக்கலானாள். மாமியார் வழக்கம் போல் மனம் தெளிந்து, முகம் சிரிக்காமல் சப்புக் கொட்டி விட்டு மௌனமாக இருந்து விட்டாள். கௌரிக்கு நெடு நாள் பழக்கத்தில் நாகு மாமிக்கு மிகவும் மனச் சோர்வு ஏற்பட்டாலொழிய இவ்வாறு இருக்க மாட்டாள் என்று தெரியும். மாமியின் வாடிய முகத்தைப் பார்த்து அவள் மிகவும் கவலை அடைந்தாள். என்ன பேசுவது என்று தெரியாமல் விழித்தாள். பிறகு ஒன்றும் தோன்றாதவளாய் எழுந்து போய் விட்டாள்.

கொஞ்ச நேரம் கழித்து வந்து நோக்கிய போது மாமியார் இன்னும் அப்படியே உட்கார்ந்திருப்பது அவளுக்கு என்னவோ போலாகி விட்டது. மறுபடியும் மாமியின் அருகில் சென்று

நேரிடையாகவே, "மாமி, உங்கள் முக வாட்டத்தைப் பார்த்தால் எனக்கு மனசுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது" என்றாள்.

"ஹூம். ஒன்றும் இல்லை. உன்னை வேறு எங்காவது கொடுத்திருந்தால் சௌக்கியமாக இருந்திருப்பாய். இப்பொழுது பார், அவன் ஊருக்குப் போய் விட்டான். பேசாமல் நீயும் எங்களுடன் கஷ்டப் படுகிறாய்" என்று வெறுத்துக் கொண்டாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"ரொம்ப அழகாக இருக்கிறது, மாமி, உங்கள் பேச்சு. வேறு இடமாக இருந்தால் அவர்கள் மாத்திரம் போக மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?" என்று சிரித்தாள் கௌரி.

"அப்படிச் சொல்லாதே......" என்று நாகலக்ஷ்மி அம்மாள் பேசிய மாதிரி கௌரிக்கு ஏதோ சந்தேகத்தைக் கிளப்பி விட்டது.

"அம்மா ஏதேனும் சொன்னாளா என்ன?" என்று கேட்டாள் அவள்.

"என்ன சொன்னாள்—நிஜத்தைத் தான் சொன்னாள். கல்யாணமாவது பிறகு செய்திருக்கலாம். அந்தப் பிள்ளைதான் இப்படிக் குதியாகக் குதித்தது."

கௌரிக்கு விஷயம் தெரிந்து விடவே, மேலே எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பது வெளிச்சமாகி விட்டது.

"மாமி, அம்மாவின் சுபாவத்தைப் பற்றி உங்களுக்கு நான் சொல்ல வேண்டாம். நீங்களே தான் எல்லோருக்கும் சொல்லுவீர்களே. அவளுக்கு மாத்திரம் அவர் இல்லாதது கஷ்டமாக இல்லையா? தன்னுடைய சுந்தருக்கு என்னைப் பண்ணிக் கொண்டதாக அவளுக்கு எண்ணமே தவிர, தன் பெண்ணை உங்கள் பிள்ளைக்குக் கொடுத்ததாக இல்லை. தன் இருதயத்திலிருக்கும் ஏக்கம் தான், அவள் அப்படிப் பேசுகிறாள். கல்யாணம் ஆகாவிட்டால் மாத்திரம் நமக்கெல்லாம், அவர்களுக் கெல்லாம் கவலை விட்டு விடுமா என்ன?"

இவ்வாறு சொல்லி முடிப்பதற்குள் கௌரிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. இதற்குள் நாகலக்ஷ்மி அம்மாளுக்கும் மனம் தெளிவடைந்து விட்டது.

ராத்திரி படுக்கையில் படுத்துக் கொண்டும் கௌரிக்குத் தூக்கம் வரவில்லை. உள்ளம் பாரமாக இருந்தது. கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது.

# 40

## உமாவின் உள்ளம்

வங்காளத்திற்குத் துர்க்கதிக்கு மேல் துர்க்கதி நேர்ந்து கொண்டே இருந்தது. முதலில் பயங்கரமான பஞ்சம் வந்தது, பிறகு நம் சரித்திரத்திலேயே கேட்டறியாத, ஆங்கிலேயர்களால் எழுதப்பட்ட சரித்திரங்களில் காணப்படும் 'கல்கத்தா இருட்டறை' என்னும் சம்பவத்தையும் தோற்கடித்து விடும் கோரமான, கல்கத்தா பயங்கரப் படுகொலை நடந்தது. மனிதர்கள் கேவலம் மிருகங்களென, காரணமின்றி ஒருவரை ஒருவர் கொன்று விடும் காலம் நம் தேசத்தில், அதிலும் நம் பாரத மாதாவின் செல்வப் புதல்வியான வங்க தேசத்தின் மடியிலேயே, வந்து விட்டது. இதையெல்லாம் கேட்கக் கேட்க, உடல் நடுங்கி உள்ளம் குமுறினார்கள் மக்கள்.

இதையெல்லாம் கேட்ட உமா தன்னைச் சுற்றி இருக்கும் ஆடம்பரத்தை வெறுத்தாள். சமூக சேவையில் ஈடுபட வேண்டும் என்று மேலும் தீவிரம் கொண்டாள். தான் உட்கொள்ளும் ஒவ்வொரு கவளம் அன்னத்தையும் வேண்டா வெறுப்பாக உள்ளே தள்ளினாள். பயங்கரமான பசியால் வாடும் மனிதர்களை நினைக்கும் போது அவளுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. மாந்தர் மேன்மையான குணங்கள் யாவையும் துறந்து நீச ஸ்திதிக்கு வந்து விட்டார்களே என்று எண்ணும் போது, அவள் கண்களில் ரத்தம் சொட்டிற்று. உடல் எரிந்து, உதரம் கொதித்தது. அவளது மனம் இருந்த நிலைமையில் பாலுவின் பூணூலிலும், கௌரியின் கல்யாணத்திலும் சிரத்தையாகக் கலந்து கொள்ளாததிலும், இவ் விசேஷங்களின் ஆடம்பரங்களை வெறுத்ததிலும் வியப்பில்லை.

இப்பொழுது நவகாளி, திப்பேரா என்னும் ஜில்லாக்களிலிருந்து வந்த கோரமான செய்திகள், பயங்கரமான அட்டூழியங்கள், மனித உணர்ச்சியுள்ள எவரையும் ஒரு கலக்குக் கலக்கி விட்டன. பத்திரிகைகளைப் படிக்கும் போதே அந்த அறிவிழந்த மனிதர்கள் செய்யும் தீய செயல்கள் நமது ஆறறிவையும் இழக்கச் செய்தன. சித்தப் பிரமையை உண்டாக்கின. அவைகளைக் கண்ணெதிரிலே பார்த்த சிலர் சொல்லும் விவரங்களோ இது வரையில் நாம் கதைகளில் படித்த எந்த இரணியாட்சனது கோர

கிருத்தியங்களையும், ஹிட்லர், டோஜோவின் அட்டூழியங்களையும் மங்கச் செய்து விட்டன.

மிக்க புனிதமான நம் பாரத நாட்டில், காந்தி மகான், புத்தர், அசோகர் உதித்த புண்ய பூமியில், அதிலும் கலை உணர்ச்சியில் நனைந்த மேன்மையான வங்காளத்தில், இப்படி நடக்குமேயானால், மேல் நாடுகளில் நாம் கேள்வியுற்ற அதிவிகாரமான செயல்கள் ஏன் பொய்யாக இருக்க வேண்டும் என்று மக்களது மனம் அரற்றியது.

இச் செய்திகள் வர வர, உமா பலவித உணர்ச்சிகளுக்கு ஆளாகி விட்டாள். தினமும் ஒரு பத்திரிகை பாக்கி இல்லாமல் படித்துப் பார்த்தாள், பத்திரிகாலயங்களுக்கும் சென்று 'கடைச் செய்தி'களைக் கேட்டுத் தெரிந்து கொண்டாள். உயிர் துள்ளி வெளியே குதித்துவிடும்போல் அவள் துடித்தாள். அவள் முகமும் சஞ்சலப்பட்டு, தன்னைப் பார்ப்போரை எல்லாம் விநோதமாகத் திரும்பி நோக்கும்படி செய்தது. அவள் வீட்டில் தங்குவதே அரிதாகி விட்டது. யார் எப்பொழுது பார்க்கும் பொழுதும் அவள் அவசரமாக உடை தரித்துக் கொள்ளுவதாகவோ வெளிக் கிளம்பு வதாகவோ இருந்தாள். அந்த நாட்களில் பெரும் பகுதி நேரம் அவள் பஸ் ஸ்டாண்டுகளிலும், பீச்சுக் கரையிலுமே கழித்தாள் என்று தான் சொல்ல வேண்டும். எத்தனையோ சங்கங்கள், எத் தனையோ கூட்டங்கள். எண்ணற்ற திட்டங்களும், கணக்கில்லா எண்ணங்களும் அவளை அடிமையாக்கித் துளைத்தன.

ஒரு மாணாக்கர் குழு வங்காளத்திற்குச் சென்று சேவை புரிவ தாகத் திட்டமிடப்பட்டது. உமாவுக்கு அவர்களுடன் சேர்ந்து வங்காளத்திற்குச் செல்ல வேண்டும் என்ற அவா மிகவும் அதிக மாக இருந்தது. வீட்டில் வந்து தானும் போய்த்தான் தீருவேன் என்று குதித்தாள் அவள். ஆனால், அவளுக்குக் கிடைத்த பதில் அம்மாவின் வசைமாரிதான். காமாக்ஷி அம்மாள் அவளையும், அவள் படிப்பையும், அவள் துடுக்கையும் விவரித்து ஒரு சாம் தொடுத்து விட்டு, தன் அதிருஷ்டத்தைப் பற்றியும் புத்தியீனத் தைப் பற்றியும் ஒரு குரல் நிந்தித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டாள்.

"என் மேல்தான் குற்றம். உங்களைப் படிக்க வைத்தேன் பார்! என்னை என்ன செய்தாலும் பரவாயில்லை! செருப்பாலே

அடித்தாலும் பாவமில்லை" என்று காமாக்ஷி அம்மாள் பிரலாபித்துக் கொண்டே போனாள்.

உமா அவளை இடைமறித்து, "அம்மா, திரும்பத் திரும்ப இதே பழங் கதை தானே?—உன் சுகம், உன் சௌக்கியம், உன் இஷ்டம். இதுதானே உனக்குப் பிரதானம்? எனக்காக ஒன்றும் கிடையாதா? அப்படித் தானென்றாலும், கௌரியும் சாரதாவும் தான் உன் இஷ்டப்படி கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களே? லலிதா வேறு இருக்கிறாள். உனக்கு என்ன நான் ஒரே பெண்ணா, ஒரே குழந்தையா? மற்றவர்களை உன் வழியில் கொண்டு வாயேன். என்னை ஏன் தொந்தரவு செய்கிறாய்? விருப்பமில்லாமல் எனக்கு விவாகம் தான் செய்தாய் என்று வைத்துக் கொள். அந்த மனிதனுக்குத் தான் என்ன சுகம்? நீ எனக்குக் கல்யாணம் செய்து வைத்தால்கூட நான் சந்தோஷமாக இருக்க மாட்டேன். பின்னால் நான் எப்படி நடந்து கொள்வேன் என்று இப்பொழுது சொல்ல முடியாது. அதனால் உனக்கு அவமானம் ஏற்பட்டாலும் ஏற்படும். அதற்கு நான் ஜவாப்தாரி இல்லை. இப்பொழுதே சொல்லி விட்டேன். உங்கள் அர்த்தமற்ற பாசத்தை யெல்லாம் விட்டுவிட வேண்டிய காலம் வந்து விட்டது. இப்பொழுது ஒருவன் நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை கேட்டால் கொடுப்பாயல்லவோ? அதை என்னிடம் கொடு. என் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறேன். உனக்கு என்ன, உன் குழந்தைகள் சௌக்கியமாக இருக்க வேண்டும் என்பதுதானே உன் விருப்பம்? என் சந்தோஷம் இதில்தான் இருக்கிறது" என்று ஒரு சிறு பிரசங்கம் செய்து விட்டு மாடிக்குத் தன் அறைக்குச் செல்லக் காலெடுத்து வைத்தாள்.

"அதெல்லாம் ஒன்றும் என்னிடத்தில் சரிப்படாது. அதற்குச் சரியான வழி இதோ கூடிய சீக்கிரத்திலேயே செய்து விடுகிறேன்" என்று உறுமிக் கொண்டே காமாக்ஷி அம்மாள் எழுந்து செல்வது உமாவுக்குத் தெரிந்தது. அவள் ஏளனம் நிறைந்த பார்வையுடன் தன் தாயை நோக்கினாள். "அம்மா, விலை கொடுத்து உன் பெண்ணைக் கஷ்டப் படுத்தினாலும் படுத்துவாய், அவள் சந்தோஷமாக இருந்தால் ஒத்துக் கொள்ளாது போலும் உன் தாயுள்ளம்!" என்று நினைத்து, தன் இரு தோள்களையும் குலுக்கி விட்டு உமா தன் அறைக்குச் சென்று விட்டாள்.

"உமா, நாளைக்கு யாரோ உன்னை..." என்று கௌரி வாய் திறந்து சொல்வதற்குள் உமா சட்டென்று, "...பார்க்க வரப் போகிறார்கள். அது தானே?" என்று முடித்தாள். அவள் உச்சரித்த ஒவ்வொரு சப்தத்திலும் ஆக்கிரோஷம் தேங்கி நின்றது. கௌரியோ வழக்கம்போல் மௌனம் சாதித்தாள். உமா தன் ஆவேசத்தை வெளி வீசி விட்டாலொழிய, தான் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ள மாட்டாள் என்பது அவளுக்குத் தெரிந்த விஷயம்.

"உமா, இதைத் திரும்பத் திரும்பச் சொல்வதில் என்ன பயன்? நம் வீட்டுப் பழக்கம் அப்படி இல்லை என்றால் அதற்கு விட்டுக் கொடுக்க வேண்டியது தானே?"

"எல்லோர் வீட்டிலும் மாத்திரம் இம்மாதிரி வழக்கங்கள் தொன்று தொட்டு வந்தனவோ? நம் வீட்டில் இது வரை இது போன்ற சந்தர்ப்பம் நேரவில்லை, இப்பொழுது நேர்ந்திருக்கிறது. எனக்கும் இது வரை இது போன்ற சந்தர்ப்பம் நேரவில்லை. இனி நேருமோ நேராதோ? இப்பொழுது என் கையால் இயன்ற வரையில் செய்யா விட்டால், பிறகு என் வாழ்நாள் முழுவதும் நான் இதை நினைத்து வருந்தக் கூடும். எல்லாத் தாய்மார்களும் இப்படித் தங்கள் பெண்களையும் பிள்ளைகளையும் தேச சேவை புரிய அனுப்பமாட்டேனென்றால் நம் நாட்டின் கஷ்டந்தான் எப்பொழுது விடியும், சொல்லேன்."

"பிள்ளைகளையே அனுப்ப மாட்டார்களே, உமா. உன்னை அனுப்பவில்லை என்று கவலைப் படுகிறாயே?" என்று எடுத்துக் கூறினாள் கௌரி.

"இது ஒரு பெரிய தேறுதலோ? என் இஷ்டத்திற்கு விரோதமாக இப்படி விலங்கு போட்டால் அது அவர்களுக்குத் திருப்தி அளித்து விடுமோ? நீ வேறு நான் வாயெடுக்கு முன் அவர்களுக்குச் சிபாரிசுக்கு வந்து விடுகிறாய். உனக்குக் கூடவா புரியாது? எனக்காகத் தான் ஒரு தரம் அவர்களிடம் பேசேன்" என்று ஓர் அதிர் வெடி போட்டாள் உமா.

கௌரியும் பயந்து விட்டாள். "நானு,...உம்...வந்து" என்று அவள் தடுமாறினாள்.

"பார்த்தாயா? உனக்குத்தான் தைரியம் கிடையாது என்றால், என்னையும் கெடுக்கிறாயே!"

"இல்லை, உமா. உன் காரியம் ஆகவேண்டுமானால், நான் தான் சொன்னேனே, அப்படி நடந்து கொள்ளேன். பார்ப்பவர்களெல்லாம் உன்னை மணந்து கொண்டு விடப் போகிறார்களா? விவாகம் என்பது எல்லாம் ஈசுவரன் கையில் இருக்கிறது என்பது என் அபிப்பிராயம். உனக்கு இதமாகவே, உன் கொள்கைகளுக்கு உடன்பட்டவனாகவே ஒருவன் உனக்குக் கணவனாக வாய்க்கலாம்" என்று தனக்குத் தெரிந்ததைப் பிரசங்கித்தாள் கௌரி.

அதற்கு உமா அளித்த பதில் கௌரியையே திகிலடையச் செய்தது. உமாவின் பிடிவாத குணத்தை அறிந்த யாரையும் பயப்படச் செய்திருக்கும். "நாளைக்கு ஏதாவது எக்கச் சக்கமாக நடந்தால் என்னைக் குறை சொல்லாதே" என்று உமா கூறியதைக் கேட்டு, கௌரி திகைப்புடன் கண்களை விழித்தாள். பிறகு அவள் வேகமாகத் தன் தாயைத் தேடிச் சென்றாள்.

"அம்மா, அவள் ஏதோ பேசுகிறாள். எனக்குப் பயமாக இருக்கிறது" என்று ஆரம்பித்து எல்லாவற்றையும் விவரித்துக் கூறினாள்.

"அவள் கிடக்கிறாளடி. அது ஏதோ பிதற்றிக் கொண்டே தான் இருக்கும். அதற்காக..." என்று அவளை அடக்கி விட்டாள் காமாக்ஷி அம்மாள்.

கௌரி மாத்திரம் ஒன்றும் புரியாதவளாய்ப் பக்கம் சென்றாள். தன் மனச் சாந்திக்காக எல்லா விஷயங்களையும் மாமியாரிடம் சொல்லி ஆற்றிக் கொண்டாள். நாகலக்ஷ்மி அம்மாளும் ஒரு கணம் யோசித்தாள். பிறகு, "அவள் ஒன்றும் பைத்தியக்காரத் தனமாகச் செய்யாமல் இருக்க வேண்டுமே?" என்று அங்கலாய்த்தாள்.

இதைக் கேட்ட கௌரி உள்ளூற மிகவும் சஞ்சலமடைந்து விட்டாள். அடுத்த நாள் நல்ல பொழுதாக விடிய வேண்டுமே என்று இஷ்ட தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டாள். ராத்திரி பூராவும் உமா சொல்லாமல் ஓடி விட்டாற் போலவும், உயிருக்கே ஆபத்துத் தேடிக் கொண்டு விட்டாற் போலவும் கனவு கண்டு, மனத்தை அலட்டிக் கொண்டாள்.

காலையில் எழுந்ததும் ஜன்னலண்டை சென்று நோக்கியதில் மெல்லியதாகத் தம்பூரின் நாதம் கேட்பது போலத்தான் இருந்தது கௌரிக்கு. ஆயினும் அது தன் மனப் பிராந்தியோ வென்று

தன் செவிகளை நம்பாமல், நேரே சென்று பார்க்க வேண்டு மென்று கீழே வேகமாக இறங்கினாள். நாகலக்ஷ்மி அம்மாள் ஏதோ சிற்சில சில்லறை வேலைகள் செய்யச் சொன்னது கூட அவளுக்கு அப்பொழுது கஷ்டமாக இருந்தது. சமயம் கிடைத்த போது பைத்தியம் பிடித்தவள் போல் ஒரே எட்டில் எதிர் வீட்டை அடைந்தாள்.

அவள் சந்தேகத்தை ஊர்ஜிதப் படுத்துவது போல் அவள் போவதற்குச் சரியாக அவள் தாயும் தகப்பனாரும் ஏதோ வாக்கு வாதத்தில் ஈடுபட்டிருந்தனர். உமாவின் பெயர் அடிக்கடி அதில் அடி பட்டது. கௌரி கிலி பிடித்தவள் போல் தன் தாயை நோக்கி, "அம்மா! உமா...எங்கே?" என்று தடுமாற்றத் துடன் கேட்டாள்.

அவள் நிலைமையைக் கண்டு காமாக்ஷி அம்மாள் பயந்தே போய் விட்டாள். "என்னம்மா? உனக்கு என்ன உடம்பு?" என்று கவலையுடன் கேட்ட தாயைச் சமாதானப் படுத்த வேண்டியதாயிற்று கௌரிக்கு.

"எனக்கு ஒன்றும் இல்லை. உமா எங்கே?"

"எல்லாம் மேலே தான் இருக்கிறாள்" என்று சலிப்புடன் கூறி விட்டுக் காமாக்ஷி அம்மாள் ராமையரிடம் மேலே பேச ஆரம்பித்து விட்டாள்.

"வெறுமனே அந்தப் பெண்ணுக்கு இஷ்டமா, இல்லையா என்று பார்த்துக் கொண்டே போக வேண்டாம். இந்த இரண்டு வரன்களில் ஒன்றைச் சட்டு புட்டென்று முடிப்பதைப் பாருங்கள். பதினாறுவது வயது வந்துவிட்டது" என்றாள்.

"கல்யாணம் செய்து கொள்ளப் போவது அவளா நீயா? அதோடு, ஒருத்தர் பார்த்து விட்டுப் பதில் சொல்லும் வரையில் வேறு இடம் எப்படிப் பார்க்க முடியும்?......"

"போதும்! உலகத்தைப் போல் பெண்ணும், பிள்ளையும் பெற்று வைத்திருக்கிறீர்களோ? அதெல்லாம் இந்தப் பெண் வரையில் பார்க்க வேண்டாம். ஏதோ ஒன்று இப்பொழுதே முடித்தீர்களோ பிழைத்தீர்கள். இல்லை என்றால் பிறகு மானம் போய் விடும், அந்தப் பெண் போகிற போக்கு" என்று காமாக்ஷி அம்மாள் சொல்லும் வரையில் தான் கௌரியின் காதில் விழுந்தது. அதற்கப்புறம், அவள் உமாவின் அறையை அடையும்

வரை, அவளுக்குப் 'படீர், படீர்' என்ற தனது இருதய ஒலியைத் தவிர வேறு ஒன்றும் கேட்கவில்லை.

"உமா!" என்று கௌரி அழைத்த குரலையும், அவளது தலை விரி கோலத்தையும், கசுங்கிய புடைவையையும் காணும் போது, உமாவுக்குக் கௌரியின் உடம்பைப் பற்றி யோசனை வந்து விட்டது. "என்ன உடம்பு உனக்கு, கௌரி?" என்று அவள் விசாரித்தாள்.

"ஒன்றும் இல்லை, உமா. ராத்திரி எல்லாம் என்னவோ தூக்கமே வரவில்லை. தம்பூர் நாதத்தைக் கேட்டு விட்டு இங்கு வந்தேன்" என்னும் அக்காவின் சொற்களிடையே பதிந்து கிடந்த அர்த்தத்தை நுட்பமான புத்தியைப் படைத்த உமா நன்றாகப் புரிந்துகொண்டு விட்டாள்.

அவள் கலகலவென்று நகைத்தாள். "அடி அசட்டு அக்காளே எங்காவது தற்கொலை செய்து கொண்டு விடுவேன் என்று பார்த்தாயோ? உயிருடன் இருந்தால் தானே சேவை செய்ய முடியும்? உயிரை உபயோகமாகக் கழிக்க வேண்டும் என்பதே தவிர, அதை மாய்த்துக் கொள்ள வேண்டும் என்பது என் கொள்கையல்லவே? ஏன், என் லட்சியத்துக்காகப் போராட முடியாத கோழையா நான்? என்னை நீ இன்னும் தெரிந்து கொள்ள வில்லையே? கல்யாணம் தான் ஆகட்டுமே, என் கொள்கைகளை அப்பொழுதும் விட்டுக் கொடுக்க மாட்டேன் என்பது திண்ணம்" என்று கூறினாள் தங்கை. அவள் முகம் அப்பொழுது ஒரு புதுச் சோபையுடன் பிரகாசித்தது. அவள் கண்கள் ஜ்வலித்தன.

வாயடைத்து நின்றாள் கௌரி. தன் செய்கையைப் பற்றி மிகவும் வெட்கமடைந்தாள். உமாவை இத்தனை நாட்களுக்குப் பின்னும் தான் அறிந்து கொள்ளாதது தவறுதான் என்று அவள் எண்ணினாள். உமாவின் பதில் கௌரிக்கு ஒரு பக்கம் பெருமையாகவும் ஆறுதலாகவும் இருந்தது. கூடவே என்னவோ திகைப்பும் பயமும் தோன்றின. அதற்குக் காரணம் தான் மிகவும் கோழை என்று தன்னை வருணித்துக் கொண்டாள் அவள். ஆயினும் தான் வந்ததற்குத் திருப்தி அடைந்து, தெளிந்த மனத்துடன் தன் வேலைகளைக் கவனிக்க மீண்டும் எதிர் வீட்டுக்குத் திரும்பினாள் கௌரி.

## 41

# மறுபடியும் பேட்டிகள்

இரண்டாவது தடவையாக மறுபடியும் ராமையர் வீட்டில் பெண் பார்க்கும் வைபவம் நடை பெற்றது. தெருவில் மற்ற வீட்டினர் அவர்களுடைய சம்பிரதாயப்படி வாசலில் ஆஜரானார்கள். இந்த முறை கார் வரவில்லை. இரண்டு ரிக்ஷாக்கள் தாம் வந்து நின்றன. ஒன்றிலிருந்து இறங்கிய பிள்ளையாண்டான், வெகு அழகாக மடிப்புக்கள் 'டைட்' என்று நிற்க ஸூட் தரித்து, அழகிய வெள்ளைப் புள்ளி போட்ட சிவப்பு டை மென்னியைப் பிடிக்க, சுளுக்குக் கழுத்துக்காரன் போல் தலை இப்படியோ அப்படியோ திரும்பாமல் கம்பீர நடை நடந்து உள்ளே சென்றான். இரண்டாவது ரிக்ஷாவிலிருந்து ஓர் அம்மாள் இறங்கினாள். அவள் உடலில் சரிகைப் புடைவை தான். மெல்லிய வெள்ளை ஜாக்கெட், மூக்குக் கண்ணாடி, தலையில் கனகாம்பரம், கையில் ரிஸ்ட்வாட்ச், கக்ஷத்தில் தோல் பணப் பை, முப்பது வயது. இவ்வித லட்சணங்களுடன் அவள் அந்த யுவனைப் பின் பற்றினாள். தெருவினரும் தாங்கள் வெளியில் வந்து நின்றது வீண் போகவில்லை. என்ற திருப்தியுடன் தங்கள் தங்கள் வீட்டுக்குள்ளே சென்றனர்.

அந்த அம்மாள் உள்பட எல்லோரும் டிராயிங் ரூமிலேயே அமர்ந்தனர். உமாவும் கௌரியும் ஒரு சோபாவில் உட்கார்ந்தார்கள். பிறகு பேச்சு ஆரம்பமாயிற்று. கொஞ்ச நேரம் கழித்து வழக்கம் போல் உமாவை நமஸ்காரம் செய்யச் சொன்னார்கள். உமா அந்த ஸ்திரீயை மாத்திரம் வணங்கி விட்டு வந்து உட்கார்ந்தாள். காமாக்ஷி அம்மாள் தன் பெண்ணைப் பார்த்து, 'அவருக்கும்' நமஸ்காரம் செய்யச் சொல்ல, உமா அத் திக்கை நோக்கினாள். அவனது கால் பூட்ஸ் இரண்டும் வெளியே நீட்டிக் கொண்டு நிற்பதைப் பார்த்தால் அதற்குத்தான், தான் வணங்கப் போவதாக அவள் மனத்தில் ஏதோ தோன்றி விட்டது போலும். 'மாட்டேன்' என்று தலையை அசைத்து விட்டாள். காமாக்ஷி அம்மாளுக்கு ரௌத்திராகாரம் கிளம்பி விட்டது. பெண்ணின் மீது கண்களால் நெருப்புப் பொறி பறந்தாள். ஆனால் அந்த வாலிபன், "வேண்டாம், எனக்கு இந்தப் பழைய வழக்கங்களிலெல்லாம் நம்பிக்கை

இடையாது" என்று கூறி விட்டு, உமாவின் மெச்சுதலை எதிர் நோக்கினான். அவனுடன் வந்தவள் அவன் தமக்கையாம். அவள் வேறு, "எங்கள் வீட்டில் எல்லாம் புதிய 'பாஷன்' தான். ரொம்பவும் 'ப்ரீடம்.' எங்களுக்கு 'ஓல்ட்' ஒன்றும் பிடிக்காது" என்று ஒரு விதமாக சுட்ட மண்ணுடன் பச்சை மண்ணைக் கலந்தாற் போல் நான்கு பொருத்தமான வார்த்தைகளுடன் எட்டுப் பொருத்த மற்ற ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசினாள். உமா அவர்களை அசட்டையாக ஒரு பார்வை பார்த்தாள்.

பக்கத்தறை ஜன்னல் வழியாக லலிதா எட்டிப் பார்த்தாள். அவள் அந்த இடத்திற்கு வரக் கூடாது என்பது அவள் தாயின் உத்தரவு. வந்தவர்கள் அவளைப் பார்த்து விட்டு, உமாவை வேண்டாம் என்று சொல்லி விடப் போகிறார்களே என்பது காமாக்ஷி அம்மாளின் பயம். இந்தச் சாமர்த்தியம் அவள் ரேஷன் கடைக்காரர்களிடம் கற்றுக் கொண்டிருக்க வேண்டும். மட்டச் சரக்கு இருக்கும் வரை எல்லோருக்கும் அதையே கொடுத்து விட்டு, பிறகு நல்ல சரக்கை வெளியே எடுக்கும் அவர்களுடைய சாதுரியம் அவர்களுடன் பழகும் வீட்டு எஜமானிக்குக் கொஞ்சமேனும் வராதா? காமாக்ஷி அம்மாளின் கண்களில் உமா அழகற்றவள். ஆனால் அன்று வந்திருந்த வாலிபனோ அவளது அசட்டைப் பார்வையிலேயே சொக்கி விட்டான். தன் பிரதாபங்களை ஒன்று விடாமல் சொல்ல ஆரம்பித்தான்.

"நான் 'ட்வீட்' தவிர போடுவதில்லை. என் 'லாண்ட்ரி'க்கே மாதம் இருபத்தைந்து ரூபாய் ஆகிறது. எனக்குத் தலைக்கு 'அன்ஜோரா' தவிர்த்து ஒன்றும் சரிப்படாது."

அவன் இதே ராகத்தில் தனது புகழ் அருட்பாவைப் பாடிக் கொண்டிருக்க, உமா தனக்கு வந்த கொட்டாவியை அடக்க முடியாமல் அடக்கிக் கொண்டு ஏதோ சொன்னாள், கௌரியைப் பார்த்து.

"என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டான் வாலிபன்.

"ஒன்றும் இல்லை, எங்கள் அத்திம்பேர் ஞாபகம் வருகிறது என்றேன்" என்றாள் உமா.

அந்தப் பையனுக்கு ரோஜாப் பூ மாலை போட்டாற் போல் உள்ளம் குளிர்ந்தது. முகம் மந்தகாசத்தால் பிரகாசிக்க, அவன்

மேலும் பேச ஆரம்பித்தான். உமா தன் கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். அங்கு வந்திருந்த அம்மாளும் தன் ரிஸ்ட் வாட்சை நோக்கினாள். "இது சரியான ரேடியோ டைம்" என்று யாரோ கேட்டாற் போல் தானே முன் வந்து கூறினாள்.

"ரொம்ப வந்தனம். மீட்டிங்குக்குப் போக வேண்டும்" என்றாள் உமா.

"ஆ, மீட்டிங்கா?" என்றாள் அந்த அம்மாள். அவள் தம்பியும், "என்ன மீட்டிங்?" என்று விசாரித்தான்.

"ஏதோ எங்கள் சேவா சங்கத்து மீட்டிங், நான் இன்று பேசுகிறேன்" என்றாள் உமா.

"அப்படியா? ரொம்ப அழகாக இருக்கும் என்று நினைக்கிறேன்."

"ரொம்ப வந்தனம்."



இவர்களுடைய சம்பாஷணையை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தனர் அவர்கள் தமக்கைமார்கள். நாகலக்ஷ்மி அம்மாளும் காமாக்ஷி அம்மாளும் கொஞ்ச நேரம் பார்த்து விட்டுத் தங்களுக்குப் பிடித்தமான கோதுமை, வனஸ்பதி என்று பேச ஆரம்பித்து விட்டனர். ராமையர் வெகு நேரத்திற்கு முன்னேயே தம் புத்தகம் ஒன்றில் லயித்து விட்டார்.

உமா 'சேவா சங்கம்' என்றவுடன் அந்த வாலிபன் தேச பக்தியையும், சேவை உணர்ச்சியையும் பற்றிப் பேச ஆரம்பித்தான்.

"எனக்குக் கூட அந்த மாதிரி சேவையிலும், 'ஸோஷல் ரிலீப்' வேலையிலும் மிகவும்......" என்று ஆரம்பித்த அவனை, உமா இடை மறித்து, "உங்கள் நடை உடை பாவனையே சொல்கிறதே—என்னை மன்னிக்கவும், நாழிகையாகி விட்டது" என்று கூறிவிட்டு, வெளிக் கிளம்பி விட்டாள்.

கௌரி திகைப்பே உருவாய், அந்த வாலிபனையும் அவன் அக்காவையும் பார்த்தாள். தன்னைச் சுற்றி நோக்கினாள். நாகலக்ஷ்மி அம்மாளும், தன் தாயும் தங்கள் பேச்சு சுவாரசியத்தில் இரு கால்களையும் தூக்கிச் சோபாவில் வைத்துக் கொண்டு அவர்களுக்கு வழக்கமான விதத்தில் மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு, போயி நெய்யில் என்ன கலக்கிறான் என்று தீவிரமாக

ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தனர். ராமையர் எங்கு இருக்கிறோம் என்ற பிரஞ்ஞையையே இழந்து விட்டார் போலும்.

"அம்மா" என்று மெல்லக் கூப்பிட்டாள் கௌரி. காமாக்ஷி அம்மாளும், நாகலக்ஷ்மி அம்மாளும் திரும்பிப் பார்த்தார்கள். அங்கு ஏதோ ஒன்று காணோம் என்ற உணர்ச்சி இருந்ததே தவிர என்னவென்று முதலில் கண்டு கொள்ள முடியவில்லை அவர்களுக்கு. அதற்குள் கௌரியே அவர்கள் சந்தேகத்தை நிவர்த்தித்து விட்டாள்.

"அம்மா, உமா மீட்டிங்குக்குப் போய் விட்டாள்."

காமாக்ஷி அம்மாள் என்ன கூறுவதென்று தெரியாமல் விழித்தாள். அதற்குள் அந்த வாலிபன் அவர்களை நோக்கி, "பரவாயில்லை. கடமையைச் சரிவர நடத்தும் பொறுப்புப் போற்றத் தக்கதாயிற்றே? நாங்கள் போய் விட்டு வருகிறோம். அவளுக்குச் சம்மதமானால் முகூர்த்தம் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்" என்று மொழிந்து, ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்து விட்டுக் கை கூப்பிக் கொண்டே எழுந்தான்.

காமாக்ஷி அம்மாளுக்கோ இவ்வளவு எளிதில் நிச்சயமாகி விட்டதே என்ற குதூகலத்தில் பேச்சு எழவில்லை.

"அம்மா, அப்பாவை......?"

"அதெல்லாம் வேண்டாம். எங்கள் 'பேரென்ட்ஸ்' ஒன்றும் சொல்ல மாட்டார்கள். அவன் இஷ்டம் தான்" என்று, கூடப் பாடினாள் தமக்கை.

இதற்குள் ராமையருக்கு மெல்ல விஷயங்களைத் தெரியப் படுத்தியிருந்தாள் கௌரி. அவரும் எழுந்து விடை கொடுத்தார்.

உமாவைக் கேட்டதன் பயனாக, அடுத்த நாளே 'ஜாதகம் பொருத்தமில்லை' என்று ஒரு கடிதம் போடவேண்டியதாயிற்று என்று சொல்லவும் வேண்டுமா? உமா இரண்டு விரலை விட்டு எண்ணினாள்.



ஏதற்கும் ஒன்று தப்பினால் மூன்று என்பார்களல்லவா? உமாவின் விவாக விஷயத்திலும் மூன்றாவது வரன் ஒன்று வந்தது. இந்தச் சமயம் ஒரு பெரியவர், இரண்டு சிறு பெண்கள் ஒரு வயது வந்த மாது, ஒரு வாலிபன் அனைவரும் ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு, புஷ்பங்களுடன் வந்தார்கள். ராமையர்

தமக்குத் தெரிந்த சில முகமன்களைச் சொல்லிவிட்டு, பெண்களைப் பார்த்துக் கொண்டு நின்றார். உமாவின் கல்யாண விஷயமே அவள் குணத்தைப் போலவே விசித்திரமாகத் தோன்றிற்று அவருக்கு.

உமா கீழே விரித்திருந்த பாயில் உட்கார்ந்து நான்கு பாட்டுப் பாடினாள். பிறகு தம்பூரை வைத்து விட்டு, தன் தமக்கையுடன் பேசிக் கொண்டிருந்த இரு பெண்களின் பேச்சில் கலந்து கொண்டாள். பெரியவர் தன் அப்பாவுடன் பேசுவது அவள் காதில் விழுந்தது. அந்தச் சம்பாஷணையை அவள் ஆவலுடன் கவனிக்கலானாள்.

"நவகாளியில் ரகளை நடக்கிறதாம். அங்கே அடிபட்டுச் சாகிறவர்களை இந்த மகா மேதாவிகள் போய்த்தான் காப்பாற்றப் போகிறார்களாம். இந்தப் பைத்தியக்காரக் கூட்டம் போய்த் தான் உலகமே க்ஷேமம் அடையப் போகிறது போலிருக்கிறது!" என்றார் வந்தவர்.

வந்த இளைஞன் புன்சிரிப்புத் தவழ, பேசாமல் அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தான். பெண் பார்க்கும் இடத்தில் இப்படித் தான் பேசுவார்களோ என்று நினைத்தான் போலும். அவன் தகப்பனாரோ அவனைக் கண்ட துண்டமாக்கி, காற்றில் பறக்க விட்டுக் கொண்டிருந்தார். வந்திருந்த பெண்களும் அந்தப் பேச்சைக் கவனிக்கத் தொடங்கினர். அவர்கள் தலையணைப் பார்த்து ஜாடை காட்டினார்கள். அவன் தாயோ, இதென்ன இப்படி அசட்டுப் பிசட்டென்று பேசுகிறாரே என்று கவலை கொண்டாள். ஆனால் அவர் விடுவதாக இல்லை.

"ஆமாம், ஸார், ஆமாமம். இந்த மகா, மகாப் பெரியவர்கள போய் அங்கே அடி பட்டவர்களை ஆதரித்து, அடி படாதவர்களை அநுசரித்துச் சேவை புரியப் போகிறார்களாம். சேவை! ஹெ, ஹெ, ஹெ" என்று கேலியாகச் சிரித்தார் அவர்.

உமா தன் இடத்திலிருந்து எழுந்தாள். "அது ஒன்றும் அவ் வளவு பைத்தியக்காரக் காரியம் இல்லை. அதற்குத் தான் எவ் வளவோ மனோதிடம் வேண்டும். அவ்வாறு செல்லவோ, மற்ற வர்களை அனுப்பவோ தைரியம் இல்லாவிட்டால் கேலியாவது செய்யாமலிருக்கலாம். முடிந்தால் நானே அவர்களுடன் செல் லலா மென்றிருக்கிறேன்" என்று கூறி விட்டு, அருவருப்புடன் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு உள்ளே சென்று விட்டாள்.

வந்தவர் எழுந்தார். பிள்ளையையும் 'எழுந்திரு' என்று சமிக்ஞை காட்டினார். உமாவையே பார்த்துக் கொண்டிருந்த அவன், தந்தையின் ஆக்ஞைப்படி எழுந்து நின்றான். கலவரமடைந்த காமாக்ஷி அம்மாள் வெற்றிலை பாக்கு வழங்கினாள். பெரியவர் போகுமுன், "சுவாமி, உங்கள் பெண்ணை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள். இந்த மாதிரித் துடுக்கு நல்லதற்கு அடையாளமில்லை" என்று தம் அபிப்பிராயத்தை வேறு வெளியிட்டார். அவர் பிள்ளை குறுக்கிட்டு, "அதெல்லாம் ஒன்றும் இல்லை. இந்த மாதிரிப் பெண்களும் பத்துப் பேர் நம் சமூகத்திற்குத் தேவை தான்" என்று கூறிச் சிரித்தான். அவனுடைய தகப்பனார் அவனை வெறித்துப் பார்க்க, அவன் மேலே பேசாமல் அவரைப் பின் தொடர்ந்தான்.

உமா அவர்கள் தெருக்கோடியில் மறைந்த பிறகு, மூன்று விரல்களை மடக்கி, "மூன்றாவதும் முற்றிற்று" என்றாள்.

காமாக்ஷி அம்மாள் அருவை மிகுந்த குரலில், "போதும், பெருமை. ஏனோ என்னைக் கொல்லுவதற்கென்று பெண் பிறந்திருக்கிறாய்" என்று வெறுத்துக் கொண்டு சென்றாள்.

உமா சர சர வென்று படி ஏறி, தன்னறைக்குச் சென்றாள். வழியில் கௌரி உட்கார்ந்திருந்தாள். பாலு அவள் மடியில் தலை வைத்துப் படுத்திருந்தான்.

"என்ன வந்து விட்டது, இப்பொழுது, என் செல்லமே?" என்று கேட்டாள் உமா.

கௌரிக்கு உமா துடுக்காகப் பேசியதில் அதிருப்தி. மேலும் தலைவலி, ஜலதோஷம் என்று முனகிக் கொண்டிருந்த பாலுவை யாரும் கவனிக்க வில்லையே என்று வருத்தம். இப்படி வியர்த்தமாக முடிந்த இந்தக் கலவையில் அவனைத் தானும் மறந்து விட்டோமே என்று தன் மீதும் கோபம். அதனால் உமாவின் கேள்விக்கு அவள் சற்றுச் சூடாகவே பதில் கூறினாள்.

"ஒன்றும் பிரமாதமாக வந்து விடவில்லை இன்னும். வீட்டில் பொறுப்புக் கிடையாது. கைக்கு எட்டாததை வைத்துக் கொண்டு பிரசங்கித்து விட்டால் போதுமா?"

உமா மிகுந்த ஆச்சரியமடைந்தாள். "ஓகோ, என் மேல் கோபமா? நான் தான் முன்னெச்சரிக்கை கொடுத்து விட்டேனே?

மேலும், வீட்டை நீ கூடக் கவனிக்கலாம் போலிருக்கிறதே. இப்பொழுது தான் சுந்தரம் ஓடி......"

"போதும், உமா. உன் கல்யாண விஷயத்தில் நான் இனி மேல் தலையிடுவதில்லை, அவ்வளவு தானே?" என்றாள் கௌரி.

பதில் ஒன்றும் பேசாமல் தன்னறைக்குச் சென்றாள் உமா.

## 42
## திறந்த உள்ளம்

அன்று சுந்தரத்துடன் கேசவ ராவ் வீட்டிற்கு முதல் முதலாகச் சென்ற போது எப்படியிருந்தாளோ அதே நிலைமையில் தான் இன்றும் இருந்தாள் கௌரி.

உள்ளே நுழைந்ததும் வீடே என்னவோ போல் வெறிச் சென்றிருந்தது. கௌரியின் உள்ளமும் அதற்கேற்றாற் போல் கலவரம் அடைந்தது. பீதியடைந்த மனத்துடன் அவள் உள்ளே சென்றாள். நாகலக்ஷ்மி அம்மாள் முன்னே சென்று கேசவ ராவின் தாயுடன் பேச ஆரம்பித்தாள். அந்த அம்மாள் இவர்களைப் பார்த்து வரவேற்கும் போது, முன்பிருந்த உற்சாகம் இல்லாமல், அவள் முகம் சூன்யமாகத் தென்பட்டது.

கௌரிக்கு ஹேமாவைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல். சுற்றிச் சுற்றி நோக்கியும் அவள் எங்கிருக்கிறாள் என்று தெரியவில்லை அவளுக்கு. கொஞ்ச நேரம் ஏதோ ரேஷன் சாமான்கள், துணிவிலை என்று பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு நாகலக்ஷ்மி அம்மாள், தன் நாட்டுப் பெண்ணைப் பார்த்த போது அவளது அவாவை அறிந்து கொண்டாள். தானே அந்த அம்மாளிடம் ஒன்றும் தெரியாதது போல், "உங்கள் நாட்டுப் பெண் எங்கே? பிறந்தகம் போயிருக்கிறாளோ?" என்று ஆரம்பித்தாள்.

"அதை ஏன் கேட்கிறீர்கள்! அந்தக் கூத்துக்குத் தான் நான் வரவில்லையே? என்னவோ வியாதியை யெல்லாம் மறைத்து வைத்துக் கல்யாணத்தைத் திடுதிப்பென்று முடித்து விட்டு இப்படி என் பிராணனை எடுக்கிறார்கள்" என்று தொடங்கி, மருமகளைப் பற்றியும், சம்பந்திகளைப் பற்றியும் வசை மாரி பொழிய ஆரம்பித்து விட்டாள் அந்த அம்மாள்.

இதைக் கேட்கும் போதே கௌரிக்குக் கண்களில் நீர் நிரம்பி விட்டது. ஆனால் அவள் ஒன்றும் செய்ய மாட்டாமல், பேசத்

தெரியாமல், வேறு வழியின்றி பெரியவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் மனம் ஹேமாவிற்காக மிகவும் பச்சாதாபப் பட்டது. 'அவள் பெற்றோர்கள் செய்த காரியத்தின் பயனாக இப்பொழுது, பாவம், இவள் கஷ்டப் பட வேண்டி இருக்கிறது. அன்று அவள் கணவர் என்னவோ போல் பேசினாரே, ஒரு வேளை அவரும் அவளிடம் ஒரு தினுசாக நடந்து கொள்கிறாரோ? அதற்குக் காரணம் நாமாகக் கூட இருக்க முடியுமோ? நாம் சுந்தரிடம் சொல்லாமலிருந்தால் எவ்வளவு அழகாக இருந்திருக்கும்! அவள் வாழ்க்கையையே கெடுத்து விட்டோமா?' என்றெல்லாம் அவளுக்குத் தோன்றிற்று. பிறகு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "மாமி, ஹேமா இங்கே இருக்கிறாளா?" என்று கேட்டாள் கௌரி.

"எல்லாம் இருக்கிறாள்" என்று கூறி, முன் பக்கத்து அறையைச் சுட்டிக் காட்டினாள் கேசவராவின் தாய். உடனே குரலைத் தாழ்த்திக் கொண்டு, "அம்மா, அவளுக்கு உடம்பு என்று சொல்லக் கூடாதாம். அந்த அறையிலேயே கதியாய்க் கிடக்கிறாள். இவனுக்கு வேறு......" என்று சொல்லும் போது, அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

கௌரி வேகமாக எழுந்து முன்பக்கத்து அறைக்குச் சென்றாள். வாசற் படியில் மெல்லிய துணித் திரை ஒன்று அசைந்து ஆடிற்று. உள்ளே இருந்து சிரிப்பின் ஒலி லேசாக வந்து அந்தத் திரையில் மோதி கௌரியின் செவிகளையும் எட்டிற்று. அவள் உள்ளே பிரவேசிக்கச் சங்கோசப் பட்டுக்கொண்டு சற்று நின்றாள். பிறகு திறந்திருந்த கதவை லேசாகத் தட்டினாள். கேசவராவ் வந்து பார்த்தான். கௌரியைக் கண்டதும் சிரித்து விட்டு, உள் பக்கம் திரும்பி, "ஹேமு, யார் வந்திருக்கிறார்கள், பார்!" என்று அவள் வரவைத் தெரியப்படுத்தினான்.

ஹேமாவின் மலர்ந்த முகத்தில் சாயை படிந்தது. கௌரி அதைக் கவனித்து மனம் அஞ்சினாள். பிறகு என்ன ஆனாலும் ஆகட்டும் என்று எண்ணியவளாய் அவள் உள்ளே சென்று, ஹேமாவின் உடல் நலத்தைக் கவனியாதவள் போல், மந்தஹாசித்த வாறு, "ஹேமா!" என்று அழைத்து, அவள் கையைத் தன் கைக்குள் எடுத்து வைத்துக் கொண்டாள். சூடாக இருந்த ஹேமாவின் கை, வியர்வையால் நனைந்திருந்தது. கௌரியின்

சிநேகபாவமான செய்கையை விரும்பாதவள் போல் ஹேமா முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு விட்டாள். கேசவ ராவ் அங்கேயே நின்று நோக்கினான். அவனுக்கு ஒன்றும் புரிய வில்லை. அவனுக்குத் தன் மனைவியின் மீது சிறிது கோபங் கூட வந்து விட்டது. அவன் முகத்தில் சினத்தின் நிழல் படக் கண்டு கௌரி திடுக்கிட்டாள். கேசவராவ், "ஹேம்!........" என்று ஆரம்பித்ததும், அவள் கையை அமர்த்தி அவனை வெளியே போகும்படி ஜாடை காட்டினாள். அவனும் வியந்த வாறே வெளியே சென்றான்.

கௌரி தன் சிநேகிதியின் படுக்கையில் உட்கார்ந்தாள். மீண்டும் அவள் கையை எடுத்து வைத்துக் கொண்டு, "ஹேமா, என்னைப் பார்" என்று கனிவும், கண்டிப்பும் கலந்த குரலில் கூப்பிட்டாள்.

ஹேமா, வேண்டா வெறுப்பாகத் திரும்பி, கௌரியை நோக்கி, "உனக்கு இப்பொழுது திருப்திதானே?" என்று வெடுக்கென்று கூறினாள்.

கௌரி உதட்டைக் கடித்துக் கொண்டாள். பிறகு மேலும் மேலும் எழும்பும் தன் துக்கத்தை அடக்கிக் கொண்டு எல்லா வற்றையும் விவரமாக ஹேமாவிடம் கூறலானாள். ஹேமாவின் போட்டோவைப் பார்த்து, தான் சுந்தரிடம் சொன்னது, சுந்தரம் கொண்ட சந்தேகங்கள் — எல்லாவற்றையும் ஒன்று விடாமல் உரைத்தாள். பிறகு அவள் ஹேமாவைச் சந்தித்ததும், அப்பொழுது அவள் மனத்தில் வீசிய புயலும், எல்லாம் விவரித்தாள். கடற்கரையில் தனது வேண்டு கோளும், அதன்படி நடக்கக் கௌரிக்கு இயலாமல் போய் விட்டதையும் கேட்க ஹேமாவின் உள்ளமும் கலங்கிற்று. கௌரி தன்னால் இயன்ற வரையில் செய்திருக்கிறாள் என்பதை அறிந்ததும் தன் நடத்தைக்கு மிகவும் வருந்தினாள் ஹேமா.

"ஹேமா, உன்னை உன் கணவர் ஏதாவது சொன்னாரா? நானும் ஒன்றும் சந்தோஷமாக இருந்து விடவில்லை. உங்கள் தாம்பத்திய வாழ்க்கையில் குறுக்கிட்டு விட்டேனா? சொல்லேன்" என்று கேட்டாள் கௌரி.

ஹேமா அதற்குப் புன் முறுவல் பூத்தவாறு பதில் கூறினாள். "அவர் என்னை ஒரு நாளும் ஒன்றும் கூறமாட்டார். அவர்தாம்

அன்பே வடிவாயிற்றே. எனக்கு என்னவோ அசட்டுத் தனமாக உன் பேரில் சந்தேகம் வந்தது. என்னை மன்னித்து விடு. நான் கூறியதற்கு அர்த்தமே இல்லை.''

அவுன்ஸ் கிளாஸில் மருந்தை எடுத்துக் கொண்டு கேசவராவ் உள்ளே நுழைந்தான். கௌரியின் கண்கள் சிவந்திருப்பதையும், ஹேமாவின் ரோஜா முகத்தையும் பார்த்து அவனுக்கு எல்லை யற்ற ஆச்சரியம் உண்டாயிற்று. என்ன பெரிய மர்மமாக இருக்கிறதே என்று அவன் நினைத்துக் கொண்டான். அவன் குனிந்து மனைவிக்கு மருந்து கொடுக்கும் போது அவனுடைய முக பாவமே ஒரு பெரிய கேள்விக் குறியாக இருந்தது. ஹேமா அதைக் கவனித்து, 'எல்லாம் சொல்லுகிறேன்' என்ற பாவனை யில் சிரித்தாள். கௌரி, "வீட்டுக்குப் போக வேண்டும்" என்று சொல்லி விட்டு, வெளியே வந்து விட்டாள்.

கூடத்தில் மாமியார்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த இடத்தில் தானும் போய் உட்கார்ந்தாள் கௌரி. தன் மாமியா ரிடம், "மாமி, வீட்டுக்குப் போகலாமா?" என்று கேட்டாள்.

அதற்குப் பதில், கேசவ ராவின் தாய், ஏளனம் கலந்த குரலில், "உன் சிநேகிதி என்ன சொல்லுகிறாள்?" என்று கேட்டாள்.

"என்ன சொல்லுகிறாள்......?" என்று அந்தக் கேள்வியையே லேசாகக் கேட்டு விட்டு எழுந்தாள் கௌரி.

ஆனால் ஹேமாவின் மாமியார் மறுபடியும் ஆரம்பித்து விட் டாள். "என்ன தான் பேசுவார்களோ? எப்பொழுது பார்த் தாலும் சிரிப்பு—கொம்மாளம். ஆபீசுக்குக் கூட லீவு போட்டு விட்டு உட்கார்ந்திருக்கிறான்..."

அவள் மேலே பேசுவதற்குள் கேசவராவ் அங்கே வந்தான். கௌரியைப் பார்த்து, "உங்களைக் கூப்பிடுகிறாள் அவள்" என்று கூறி, அவளை அழைத்துச் சென்றான். முகவாய்க் கட்டையைத் தோளில் இடித்துக் கொண்டாள் அவன் தாய்.

கௌரி தன் தோழியிடம் மீண்டும் சென்றாள். கேசவராவ் அவளுக்கு முன்னே சென்று, மனைவியின் படுக்கையின்மீது உட் கார்ந்தான். கௌரி அருகிலிருந்த நாற்காலியைப் பிடித்தவாறு நின்று கொண்டு, ஹேமாவின் பேச்சை எதிர்பார்த்தாள். கேசவ ராவ் கௌரியை நோக்கி, "நீங்களும் உட்காருங்களேன்" என்று

நாற்காலியைக் காண்பித்தான். கௌரி முதலில் மிகவும் சங்கோசப்பட்டாள். பிறகு மெல்ல உட்கார்ந்தாள். ஹேமா பேசலானாள்.

''நான் உன்னிடம் கோபித்துக் கொண்டதற்குக் காரணமே இல்லை என்பதற்கு அத்தாட்சி பார். அவருக்கு முன்னமேயே தெரியுமாம்.''

''ஆமாம், கல்யாணம் கழிந்த கொஞ்ச நாளைக்கெல்லாம் இவளுக்கு ஜலதோஷமும் ஜுரமும் வந்தன. அப்பொழுது நான் இவளை டாக்டரிடம் அழைத்துச் சென்றேன். அப்பொழுதே எனக்குத் தெரியும். ஆனால் அவளே சொல்லவில்லையே, நாமாகக் கேட்டால் ஏதாவது தப்பாக நினைத்துக் கொள்ளப் போகிறாளே என்று பேசாமல் இருந்து விட்டேன். பிறகு சுந்தரம் என்னிடம் சொன்ன அன்றைக்கே இவளும் சொன்னாள்'' என்று கூறி நிறுத்தினான் கேசவராவ்.

ஹேமா தொடங்கினாள்: ''நான் சொன்னதும் இவர் 'எனக்கு முன்னமேயே தெரியும்' என்றார். 'உங்கள் சுந்தரம் சொன்னாரோ?' என்று கேட்டேன். இவர் 'ஆமாம்' என்று கூறி விட்டுப் பேச்சை மாற்றி விட்டார். எனக்கு உள்ளுக்குள் ஏனோ உன் பேரில் அளவு கடந்த குரோதம் உண்டாகி விட்டது. என்னை நீ என்றைக்காவது க்ஷமிப்பாயா?''

''போடி, அசடே. யார் யாரை மன்னிப்பது? ஏதோ நடந்தது நடந்து விட்டது. உன் நல்ல காலம் அவர் ஒன்றும் நினைக்கவில்லை'' என்று கூறி, நன்றியுடன் கேசவராவின் முகத்தை நோக்கினாள் கௌரி. அவனும் சிரித்து விட்டு, ''ஆமாம், அம்மா தான் ஏதோ சொல்லுகிறாள்...அதைப் பற்றி இவளுக்கு என்ன? இன்னும் கொஞ்ச நாட்களில் சரியாகி விடுகிறது. அப்புறம்...''

''கேட்டாயா கௌரி? 'சரியாகி விடுமாம்!'' என்றாள் ஹேமா, ஒரு வறண்ட சிரிப்புடன்.

''ஏன் சரியாகாது?'' என்றாள் கௌரியும்.

கௌரி எழுந்தாள். தனக்கு நேரமாகி விட்டது என்றாள். கேசவராவும் அவளை வழியனுப்ப எழுந்தான். ஹேமா தன் தோழியை அடிக்கடி வரும்படி கேட்டுக் கொண்டாள்.

வெளி ரேழியை அடைந்ததும் கௌரிக்கு ஏனோ கேசவராவை ஒரு கேள்வி கேட்க வேண்டுமென்று தோன்றிற்று. அவள்

அவளைப் பார்த்து, "அவனுக்கு உடம்பு என்று தெரிந்த பிறகு உங்களுக்கு ஒன்றும் மாறுதல் தோன்றவில்லையே?" என்று தைரியமாகக் கேட்டு விட்டாள். அவ் வார்த்தைகள் வாயை விட்டு வெளி வந்தனவோ இல்லையோ, தன் துடுக்குத் தனத்தை நினைத்து அவள் குழப்பமுற்றாள். நாக்கைக் கடித்துக் கொண்டாள். அவள் உடலெல்லாம் நடுங்க ஆரம்பித்தது.

கேசவராவ் இதை எல்லாம் கவனிக்கவில்லையாதலால் சர்வ சாதாரணமாகப் பதில் கூறினான். "என்ன, தெய்வ சங்கல்பப்படி நடந்த காரியத்துக்கு அவள் என்ன செய்வாள்? மேலும், பழக்கம் ஏற்பட்டு விட்டால் எதுதான் மாறாது?" என்று கேள்வி ரூப மாகவே பதில் சொல்லி முடித்தான். அவன் தன்னோடு சொல் வதன் காரணமாக, தனக்கு ஹேமாவிடமிருக்கும் அன்பைத் தான் 'பழக்கம்' என்று கூறினான் என்று அவள் அறிந்து கொண் டாள். அவனுடைய அந்தப் பதில் அவள் மனத்தில் ஒரு சந்தோஷக் கிளர்ச்சியை எழுப்பி விட்டது. 'பிரியம் அவ்வளவு செய்யக் கூடுமா?' என்று அவளுடைய அந்தராத்மா வினவியது. தனக்கும் சுந்தரத்துக்கும் நடுவில் என்ன இருக்கிறது என்று தெரிய வில்லையே எனக் குழம்பினாள் கௌரி.

# 43
## வெங்கடேசன்

மூன்றாவது வரனும் வந்த வழி பார்த்துக் கொண்டு போன பிறகு, உமாவின் விவாக விஷயம் சற்று ஓய்ந்திருந்தது. காமாக்ஷி அம்மாளுக்கு எவ்வளவு தீவிரம் இருப்பினும், அப் பெண்ணின் வாய்த் துடுக்கை நினைத்து என்ன யுக்தி செய்தால் நலம் என்று ஆலோசிக்கலானாள். ராமையரோ, இஷ்டமில்லாத பெண்ணுக் குக் கல்யாணம் செய்து வைத்துத்தான் என்ன பலன் என்று யோசனையில் ஆழ்ந்திருந்தார். ஆனால், இன்னொரு பக்கத்தில், 'உமா எங்கோ போவேன் என்றெல்லாம் கூறுகிறாளே, ஒருவன் கையில் அவளை ஒப்படைத்து விட்டால் நம் வயதான காலத்தில் கவலை யில்லாமல் இருக்குமே' என்றும் தோன்றிற்று. கடைசி யில், 'அவனன்றி ஓரணுவும் அசையாது, நாம் ஏன் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும்?' என்று பேசாமல் இருந்து விட்டார்.

உமாவோ, இன்னும் கொஞ்ச நாளைக்கேனும் மறுபடியும் விவாகப் பேச்சு ஒன்றும் கிளம்பாது என்னும் திடத்துடன் காலேஜுக்குச் செல்லும் நேரம் தவிர, கூட்டங்களுக்கும், சங்கங்களுக்கும், சேவாசதனத்துக்கும் சென்று கொண்டிருந்தாள். அடிக்கடி வீட்டில் பல பெண்களும், சில ஆண் பிள்ளைகளும் கூட உமாவைத் தேடிக் கொண்டு வருவதும் நாளடைவில் சகஜமாகி விட்டது.

லலிதா உமாவைக் கண்டு சிரிப்பதும், மறுபடியும் வேலைகளைக் கவனிப்பதுமாகக் காலங் கழித்தாள். இப்பொழுது கௌரி அடிக்கடி வந்து அநேகமாக எல்லா வேலைகளையும் கவனித்து வருவதால், லலிதாவுக்கும் முன்போல் சிரித்து விளையாடிப் பள்ளிக்கூடத்து வேடிக்கைகளிலெல்லாம் பங்கெடுத்துக்கொள்ள முடிந்தது.

கௌரியோ நத்தை தன் கூட்டிற்குள் போய்ப் புகுந்து கொள்ளுவதைப்போல், மறுபடியும் அடிக்கடி தன் மௌனத்தில் ஆழ்ந்து விடலானாள். இதற்கு எத்தனையோ காரணங்கள். அன்று மழையில் நனைந்ததிலிருந்து பாலு பள்ளிக் கூடத்திலிருந்து வரும்போது முக்கால்வாசி நாள் ஜுரம் என்று படுத்துக் கொண்டிருந்தான். அதுவே அவளை என்னவோ மேகம்போல் மூடிக் கொண்டு விட்டது. மேலும் சுந்தரத்தின் கடிதங்களில் வரவர கேவலம் சிநேகபாவமே மேலோங்கி நிற்கும் விஷயம் அவளை மிகவும் வருந்தச் செய்தது. அவன் இருக்கும் வரையில் தெரியவில்லையே தவிர, இப்பொழுது தன் தனிமையில் அவனுடைய அன்புச் சொற்களுக்கும், காதற் செயல்களுக்கும் அவள் ஏங்கி நின்றாள். உமா விஷயம் வேறு அவளை வாட்டியது. அவள் விதண்டா வாதமும், அன்னையின் பிடிவாதமும் எங்கே கொண்டு விடுமோ என்று அவள் திகைத்தாள். உமா இப்படி முட்டுக்கட்டை போட்டால், பிறகு லலிதாவின் கல்யாணமும் தடைப்பட்டு விடுமோ என்றெல்லாம் அவள் மனத்தைக் கலக்கிக் கொண்டாள்.

★

“உமா இருக்கிறாளா?” என்று ஒரு வாலிபனின் குரல் வாசலில் கேட்டது. கௌரி வந்து பதில் சொல்லுவதற்குள் உமாவே வந்து விட்டாள்.

“இதோ வந்து விட்டேன் வெங்கடேசன்” என்று கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே அவள் அங்கு வந்தாள். கௌரி

நிற்பதைப் பார்த்து விட்டு, அவனிடம் அவளைக் காண்பித்து, "இவள் என் அக்கா...இவர் வெங்கடேசன்; எம். பி. பி. எஸ். படிக்கிறார். கல்கத்தாவுக்குப் போகிறவர்களில் இவரும் ஒருவர்" என்று அறிமுகப்படுத்திவிட்டு, "வா போகலாம்" என்று அவனைத் துரிதப்படுத்திக் கொண்டே முன்னே நடந்தாள் உமா. அவன் கௌரியைப் பார்த்துக் கைகூப்பி விட்டு, உமாவைப் பின் பற்றினான்.

கௌரி சற்று நேரம் அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு ஏதோ பயமும் சந்தேகமும் தோன்றவே தெருவைச் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தாள். அவள் நினைத்தபடியே அடுத்த வீடுகளிலிருந்து இரண்டு, மூன்று பெண்மணிகள் உமாவையும் அவள் நண்பனையும் அர்த்தபுஷ்டியுடன் நோக்கிக் கொண்டிருந்தார்கள். கௌரி ஒரு பெருமூச்செறிந்து கொண்டே உள்ளே சென்றாள்.

★

வெங்கடேசன் அன்று வழி முழுவதும் உமாவையே ஒரு விதமாக நோக்கிக் கொண்டு சென்றான். அவனுக்கு அவளுடைய நிட்சண்ய புத்தியும், சுறுசுறுப்பும், விடா முயற்சியும், வேலையில் காண்பிக்கும் தீவிரமும் மிகவும் பாராட்டத் தக்கனவாகத் தென்பட்டு, அவன் உள்ளத்தை அப்படியே அபகரித்து விட்டன. உமாவின், உணர்ச்சியுடன் பேசும் கவர்ச்சி பொருந்திய சக்தியும், கேட்போரைத் தன் வசம் லயிக்கச் செய்யும் திறமையும் எத்தனையோ பெயர்களின் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டன. அவர்கள் எல்லோரையும் காட்டிலும் வெங்கடேசன்தான் அவளிடம் அதிக மதிப்பும் அன்பும் கொண்டிருந்தான். ஆனால், அதை அவளிடம் பிரஸ்தாபிக்க அவனுக்குத் தோன்றவில்லை. தக்க சமயம் மாத்திரம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இதை யெல்லாம் கவனிக்க உமாவுக்கு நேரமில்லை. அவள் தானும் கல்கத்தாவுக்குப் போக முடியவில்லையே என்பதையே ஒரு பெரிய குறையாக வைத்துக் கொண்டிருந்தாளாதலால், வெளியே வேறு எதிலும் கண்ணையோ மனத்தையோ செலுத்தவில்லை. மேலும், 'கல்யாணம், அகமுடையான்' என்றெல்லாம் யோசனை செய்யும் களங்கமும் அவளது வெண்மையான மனத்தில் இன்னும் புகவில்லை. வசந்தத்தின் நாணம் இன்னும் அவளைக்

கொள்ளவில்லை. வீட்டில் தனக்காக நடக்கும் விவாக ஏற்பாடுகளையே அவள் தன் வழியில் பெரியோர்கள் வேண்டுமென்றே உண்டாக்கும் முட்டுக்கட்டைகள் என்று நினைத்தாள்.

★

"அக்கா!" என்றழைத்தான் பாலு.

கௌரி ஓடி வந்தாள். அவன் தோற்றத்தைப் பார்த்துப் பரிதவித்தவளாய், "ஜுரம் வந்து விட்டதாப்பா?" என்று கவலையுடன் விசாரித்தாள்.

"ஆமாம், அக்கா" என்றான் பாலு. களைப்பு மிகுதியால் அவனுக்கு மூச்சு வாங்கிற்று. படுக்கையைப் பரப்பி அதில் அவனைப் படுக்க வைத்துவிட்டு, பக்கத்தில் உட்கார்ந்தாள் கௌரி. அவனது நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். ஜுரம் நெருப்புப் பறந்தது.

"மாமி!" என்று கூப்பிட்டாள் கௌரி. நாகலக்ஷ்மி அம்மாள் வந்தாள். பாலு படுத்திருப்பதைப் பார்த்து, தொட்டுப் பார்த்தாள்.

"மாமா வெளியே போயிருக்கிறார், உன் அப்பாவோடு கூட. யார் போய் டாக்டரை அழைத்து வருவது?"

"நானே, டாக்டர் வீட்டுக்கே பாலுவை அழைத்துப் போய் விட்டு வந்து விடுகிறேன்" என்றாள் கௌரி.

வேலைக்காரி சென்று ஒரு ரிக்ஷாவைக் கூப்பிட்டு வந்தாள். கௌரி பாலுவுடன் பக்கத்துத் தெருவிலிருக்கும் டாக்டர் வீட்டிற்குப் புறப்பட்டுச் சென்றாள்.

டாக்டர் பாலுவைப் பரிசோதித்து விட்டு, "ஒன்றும் இல்லை, சாதாரண ஜுரம்தான்" என்று கூறிய பிறகே கௌரிக்குச் சற்று நிம்மதியாயிற்று.

அவள் திரும்பி வந்து, பாலுவைத் தன் வீட்டிலேயே படுக்க வைத்து விட்டுத் தன் தாயிடம் சொல்லச் சென்றாள். சமாசாரத்தைக் கேட்ட காமாக்ஷி அம்மாள் பெண்ணைப் பார்த்து, "இதோ பார், கௌரி. எனக்கு இருப்பது போதாதென்று இது வேறு வந்து விட்டதா? நீயே பார்த்துக் கொள். என் காதில் ஒன்றும் போடாதே!" என்று சொல்லி விட்டாள்.

★

பாலுவுக்கு ஒரு வாரமாக ஜுரம். கௌரியின் கவலைக்கேற்றபடியே அது குறையவே இல்லை. மகாலிங்கையரும் நாக

லக்ஷ்மி அம்மாளும் டாக்டர் வீட்டுக்கு நடையாக நடந்தனர். டாக்டரும் தினம் ஒரு தடவை வந்து பார்த்துப் போனார். அது மலேரியா என்று சொல்லி மருந்து கொடுத்து வந்தார்.

ஒரு வாரம் கழித்து ஜுரம் தணிந்து, பாலு எழுந்து நடக்க ஆரம்பித்தான். பள்ளிக்கூடம் போய் விட்டதே என்று அழுதான். கௌரி தான் அவனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாமல், இன்னும் இரண்டு, மூன்று நாட்களாவது ஆகட்டும் என்று கண்டிப்பாகச் சொல்லி நிறுத்தி விட்டாள். உடம்பு மிகவும் பலஹீனமாக இருந்ததனால்தான் பாலுவும் அதற்குச் சம்மதித்தான்.

இப்படியே நாட்கள் சென்றன. கௌரியின் மனத்தின் நிலைமை முகத்தில் சாயை விழ ஆரம்பித்தது. அவள் மாமியார், மாமனார் அவளை எப்படித் தேற்றுவது என்று தெரியாமல் திகைத்து நின்றனர்.

★

"இன்னும் ஒரு வாரத்தில் கிளம்புகிறோம்" என்றான் வெங்கடேசன். காமாக்ஷி அம்மாள் அவனுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

"ஏன் அப்பா இப்படியெல்லாம் துணிகிறீர்கள்? உங்களையே நம்பிக் கொண்டிருக்கும் பெற்றோர்களின் கதி என்ன? உங்களாலான உதவியை இங்கிருந்தே செய்யுங்களேன்."

"அதெப்படி மாமி முடியும்? அங்கேயும் சென்று சிலர் பார்க்க வேண்டுமோ இல்லையோ? இங்கே இருந்தால் எப்படி நடக்கும்—எங்கள் மனம் நிற்க வில்லையே!"

"இப்படியெல்லாம்தான் உமாவும் பேசுகிறாள். உங்களை அனுப்பிவிட்டு வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் மனிதர்களுக்குத் தானே அதன் சிரமம் தெரியும்? நீங்களென்ன, இளங்கன்று பயமறியாது என்று..."

"ஒரு மனிதன் தலையில் ஒருவாறு எழுதி இருந்தால் அது மாறப் போகிறதா? என்றைக்குக் கடவுளுக்கு அவனை அழைத்துக்கொள்ள வேண்டுமென்றிருக்கிறதோ, அன்றைக்கு எங்கிருந்தாலும் போய் விடுகிறான்."

"எல்லாம் இந்த வீட்டிலேயே இருக்கிறது. இந்தாத்து மாமா இப்படித்தான் வேதாந்தம் பேசுகிறார். உம், பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு..." என்றாள் காமாக்ஷி அம்மாள்.

வெங்கடேசன் சிரித்தான். அவன் சுபாவம் காமாக்ஷி அம்மாளுக்கு மிகவும் பிடித்து விட்டது. அவனை அவன் ஊர், பெயர் எல்லாம் விசாரித்துக் கொண்டே இருந்தாள்.

உமா அங்கு வந்தாள். "என்னவாம்? அம்மா, உன்னையும் போகவேண்டாம் என்கிறளாக்கும்!" என்று கூறி விட்டு, அவனை அழைத்துக் கொண்டு வெளியே சென்றாள்.

பெருமூச்செறிந்தாள் தாய்.

## 44

## கௌரியின் திகைப்பு

இரவு எட்டு மணி. உமா இன்னும் வீடு திரும்பியபாடில்லை. கௌரி வழக்கம்போல் உள்ளுக்கும் வெளிக்கும் நடந்து கொண்டிருந்தாள். தெருக் கோடியில் வெங்கடேசனும் உமாவும் வருவது தெரிந்து அவள் அங்கேயே நின்றாள். அவளைப் பார்த்துவிட்டு வெங்கடேசன் அவள் வீட்டு வாசலிலேயே நின்றான்.

"என்ன விசேஷம்? இவ்வளவு நேரமாகி விட்டதே?" என்று வினவினாள் கௌரி.

"காலேஜ் முடிந்து மீட்டிங்குக்குச் சென்று வர மிகவும் நேரமாகி விட்டது. நான் தான் உங்கள் அம்மாவுக்கு வாக்குக் கொடுத்தேனே, அவளை ஜாக்கிரதையாகக் கொண்டு விடுகிறேன் என்று" என்று அவன் கூறினாயினும், கௌரிக்கு அது சமாதானமாகப் படவில்லை. கல்யாணத்திற்கு இருக்கும் ஓர் இளம் பெண் இருட்டின பிறகும் வெளியே செல்வதும், ஓர் இளைஞன் அவளைப் பார்த்துக் கொள்ளுவதாக உறுதி கூறுவதும் அவள் மனத்திற்குச் சிறிதும் உகந்தவையாக இல்லை.

வெங்கடேசன் மேலும் கூறினான். "என் துணையில் உமா எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாள் பாருங்கள். உங்கள் பெற்றோர் அவளைக் கல்கத்தா செல்ல அநுமதிக்க மாட்டேனென்கிறார்களாம். அதைப்பற்றி இன்றைக்குக் கடைசி முறையாகக் கேட்டுவிடப் போகிறாளாம். அதற்காக என்னையும் அவள் சார்பாகப் பேசவேண்டு மென்றான். இதுவரை நீங்களும் அவளுக்கு அநுகூலமாக இருந்தீர்களாம். இப்பொழுதும் சற்று..." என்றான் வெங்கடேசன்.

ஏற்கனவே மௌனியான கௌரி இதைக் கேட்டதும் தனக்கு நாக்கு என்று ஒன்றும் இருக்கிறதோ என்று சந்தேகம் பட ஆரம்பித்து விட்டாள். தான் என்ன பதில் சொல்லுவது என்று யோசிப்பதற்குள், வெங்கடேசன் எதிர் வீட்டை நோக்கிச் சென்று விட்டான். வீட்டிற்குள்ளிருந்து அங்கே வந்து அவளை, "என்ன சமாசாரம்?" என்று விசாரித்த நாகலக்ஷ்மி அம்மாளுக்குக் கூட என்ன பதில் சொல்வது என்று தெரிய வில்லை கௌரிக்கு. அவள் தேகம் துணிபோலாய் விட்டது. பிறகு மெல்ல விஷயத்தைச் சொன்னாள். நாகலக்ஷ்மி அம்மாள் வேக மாக எதிர் வீட்டிற்குச் சென்றாள். கௌரியோ தன் மனத்திற்குள் பிரார்த்தனைகள் செலுத்தலானாள். எதற்காக, யாருக்காக, என்ன வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம் என்பது அவளுக்கே விளங்க வில்லை.

'உமா தன்னிஷ்டப்படி போனால், எப்படி இருக்கும், சமூகம் என்ன சொல்லும்?' என்று கௌரி யோசிக்கலானாள். அவள் துளசி மாடத்துக்குத் தீபம் ஏற்றி வைத்துவிட்டு நமஸ்கரித்தாள்.

அன்று தான் அவள் ஹேமாவைப் பார்க்கச் சென்றிருந் தாள். ஹேமாவுக்கு நாளுக்கு நாள் உடம்பு அதிகமாகிக் கொண்டே வந்து இப்பொழுது அவள் தாம்பரத்துக்குச் செல்ல வேண்டும் என்று டாக்டர்கள் கூறும் நிலைமை வந்து விட்டது. கௌரிக்குக் கேசவராவின் சிரித்த முகத்தையும் நகைச் சுவை ததும்பும் பேச்சையும் கேட்க மிகவும் பரிதாபகரமாக இருந்தது. ஹேமா தாம்பரத்துக்குப் போக வேண்டும் என்று சொன்ன போது கௌரியால் தன் துக்கத்தைக் காண்பித்துக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. கேசவராவ் அதைக் கவனித்தால் தானே?

"எங்கள் ஹேமுவை என்னவென்று நினைத்துக் கொண்டு விட்டீர்கள்? அவள் தாம்பரத்திலிருந்து திரும்பி வரட்டும் பாருங் கள். அவர்கள் கொடுக்கும் முட்டையையும் வெண்ணெயையும் சாப்பிட்டு விட்டு எப்படியாகி விடப் போகிறாள் தெரியுமா? வாசற் படியை எல்லாம் நகர்த்திவிட வேண்டி வந்தாலும் வரலாம். ஏன் ஹேமு?"

அவன் முகத்தில் பிரதிபலித்த அன்பு கௌரியைத் திணற அடித்து விட்டது. உடலும் உள்ளமும் மிகவும் சோர்ந்து போயிருந்த ஹேமாவும் அதில் கலந்து கொள்ளாமலிருக்க முடிய

வில்லை. இன்னும் இதே ரீதியில் அவன் பேசிப் பேசி அவர்களைச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தான். ஆனால் கௌரி கவனித்ததில் ஹேமாவின் தேக ஸ்திதி மிகவும் மோசமாக இருப்பதாகத்தான் தென்பட்டது. தன்னை எதிர்க்கப் போகும் பேரிடியை எப்படி வரவேற்கப் போகிறார் கேசவராவ் என்று யோசித்து மனமுருகினாள் கௌரி. பிறகு ஹேமலதாவின் பெற்றோர்கள் வந்தார்களா என்று விசாரிக்க, அதற்கும் கேசவராவ் வேடிக்கையாகவே பதில் கூறினான்.

"இல்லை. அவர்கள் வரவில்லை. அம்மா கூட ஊருக்குப் போயிருக்கிறாள். அப்பாவுக்கும் திடீரென்று கிராமத்தில் வேலை ஏற்பட்டு விட்டதாம்" என்று கூறி அவன் கலகலவென்று சிரித்தான். இப்பொழுது கௌரியிடம் அவன் மிகவும் நெருங்கிப் பழகி, அவளைத் தன் சகோதரிபோல் பாவிக்க ஆரம்பித்து விட்டான். ஆதலால், அவன் அவளுடன் சகஜமாகப் பேசினான்.

அதை யெல்லாம் பார்த்துவிட்டு வீட்டிற்கு வந்தாள் கௌரி. அங்கே சுந்தரத்தின் கடிதம் காத்துக் கொண்டிருந்தது. அவனிடமிருந்து கடிதம் வராமலிருந்தாலே சற்று நிம்மதியாக இருக்குமென்று அவள் கருத ஆரம்பித்தாள். போதாக்குறைக்கு உமாவின் விஷயம் வேறு வந்தது. இதையெல்லாம் மனத்தில் திருப்பித் திருப்பிப் போட்டுக் கொண்டே, அவள் மாமனாருக்குச் சந்தியா வந்தனத்துக்கு எடுத்து வைத்தாள். பிறகு எதிர் வீட்டில் என்னதான் ஆயிற்று பார்ப்போம் என்று அங்கு சென்றாள்.

வீடே நிசப்தமாகக் கிடந்தது. காமாக்ஷி அம்மாளும் நாகலக்ஷ்மி அம்மாளும் பின் பக்கத்துக் கூடத்தில் குசுகுசு வென்று ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். கௌரி மாடிக்குச் சென்றாள். உமா தம்பூருடன் லயித்திருந்தாள். லலிதா பரீட்சைக்கு மும்முரமாகப் படித்துக் கொண்டிருந்தாள். கௌரி அடிமேலடி வைத்துக் கீழே இறங்கினாள். வந்ததே தெரியாமல் வெளியே போகப் பார்த்தாள். 'என்னவோ, இன்றைக்கு எழுந்த வேளை நன்றாகவே இல்லை, சீக்கிரம் தூங்கிவிட வேண்டும்' என்று எண்ணிக் கொண்டே முன் ஹாலில் காலை வைத்தாள்.

அவள் தப்ப முயலுவதைக் கேலி செய்வதுபோல், கம்பளியைப் போர்த்திக் கொண்டு சோபாவில் படுத்திருந்த பாலு எழுந்து 'கொள், கொள்' என்று இரும ஆரம்பித்தான். கௌரி

யின் இருதயம் படீரென்று முன்னெச்சரிக்கையின்றி வெடித்து விடும்போல் இருந்தது. அதுவரை அடக்கி யிருந்த அத்தனை துக்கமும் அவளுக்குப் பிறிட்டுக் கொண்டு வந்துவிட்டது. பாலுவின் அருகில் சென்று கூட நோக்காமல் அவள் புக்ககத்துக்கு ஓடி விட்டாள். அங்கே சென்று தன் படுக்கையில் படுத்துக் கொண்டு மனமார அழுது தீர்த்தாள். அயர்ந்து அப்படியே உறங்கிவிட்டாள்.

"கௌரீ!" என்ற மகாலிங்கையர் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் கௌரி. அவள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

"என்ன, மாமா?"

"நாம் சாப்பிடலாம், வருகிறாயா?" என்றார் மாமனார் பரிவுடன்.

கௌரி எழுந்து சென்று அவரைப் பின் பற்றினாள். அவளுக்கு உடம்பெல்லாம் தெம்பற்று இருந்தது. அவளுடைய சிவந்த கண்களையும், வீங்கிய கன்னங்களையும் பார்த்ததும் மகாலிங்கையருக்கு என்னவோ போலிருந்தது. குனிந்து பரிமாறும் அவளைப் பார்த்து அவர், "ஏனம்மா? உடம்பு சரியாக இல்லையா? மாமாவிடம் சொல்லக்கூடாதோ?" என்று அன்புடன் விசாரித்தார்.

"ஒன்றும் இல்லை மாமா" என்று புன்முறுவலுடன் பதிலளித்த அவளை நோக்கும்போது அவளுடைய மாமனாருக்குத் தம் பிள்ளையின் பேரில் அளவிலாக் கோபம் வந்தது.

## 45

## லட்சிய சுயம்வரம்

உமா தம்பூரை மீட்டியவாறு தீவிர ஆலோசனையில் ஆழ்ந்திருந்தாள். ஏதோ ஒரு வழி பளிச்சென்று உதயகாலத்துச் சூரியனைப்போல் தன் பிரகாசத்தை அவள் மூளை பூராவும் பரப்பிற்று. கடைசித் தடவையாக ஒரு பிரயத்தனம் செய்து விடுகிறது என்று தீர்மானித்தவளாய், தம்பூரை வைத்துவிட்டு அவள் கீழே இறங்கினாள். அவள் வெளிச் செல்லுவதைக் கவனித்த காமாக்ஷி அம்மாள், "எங்கே பிரயாணம் உமா?" என்று கேட்டாள் அதட்டும் தொனியில்.

"சினிமாவுக்கு, அம்மா" என்று வெகு அடக்கத்துடன் பதில் கூறினாள் உமா.

"சரி, போ."

உமா தன் அன்னையைப் பார்த்து, "அம்மா, நான் நவகாளிக்குச் செல்லுவதானல் உன்னிடம் சொல்லி விட்டுத்தான் போவேன்" என்று கூறிவிட்டு வெளியே சென்றாள்.

'நியூ குளோப்'பில் க்யூவில் நின்று கொண்டிருந்தான் வெங்கடேசன். உமா அவனைத் தாண்டிச் சென்று அவன் கண்ணில் படும்படி நின்றாள். அவன் க்யூவிலிருந்து வெளியே வருவதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அவள் சென்று தனக்கும் அவனுக்கும் சேர்த்து இரண்டு டிக்கட்டுகள் வாங்கி விட்டு, அதை அவனுக்குத் தெரியும்படி காண்பித்தாள். அவன் க்யூவிலிருந்து வெளி வர, இருவரும் உள்ளே சென்று உட்கார்ந்தார்கள். படம் ஆரம்பித்தது. இருவரும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இடை நேரம் வந்ததும், உமா அவனை நோக்கி, "வெங்கடேஸ், உன்னிடம் நான் ஒன்று கேட்கப் போகிறேன்" என்றாள்.

"ஆகா, நன்றாகக் கேள். முடிந்தால் கொடுக்கிறேன்."

"நான் கல்கத்தாவுக்கு வந்தால் நீ என்னை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்வாய் அல்லவா?"

"கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!"

"அது இருக்கட்டும். அந்த மாதிரி என் தாயிடம் வாக்குறுதி கொடுப்பாயா?"

"கொடுப்பதற்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. ஆனல், ஏன் அப்படி வீணாக வீட்டில் மனஸ்தாபப் பட்டுக் கொண்டு வர வேண்டும்? நீ புருஷனில்லை, பார். என்னைப் போன்ற தடிப் பிரம்மசாரிகளுக்கே சிரமமாக இருக்கும் போது, நீ ஒரு சிறிய பெண், குடும்பத்தைத் திரஸ்கரித்து விட்டு வருவது சரியா? யோசனை செய்து பார்."

"போயும், போயும் இதற்குத் தான் நான் உன் உதவியைக் கேட்டேனா?"

"கோபித்துக் கொள்ளாதே, உமா. எனக்கு என்ன மிகவும் கசப்பா உன்னைப் பார்த்துக் கொள்வது? மேலும் அத்தனை பெண்கள் வரும் போது உனக்கென்று என்ன பிரமாத ஏற்பாடுகள் செய்ய வேண்டும்? அதைப் பற்றி நான் சொல்ல வில்லை. உன் இளம் வயது, உன் குடும்பம், நம் சமூகம், உன்

பிற்காலத்து வாழ்க்கை இவை யாவையும் யோசித்தால் நீ பெற்றோரை வருத்தப் படுத்தி விட்டு வருவது அவ்வளவு சரியில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. என்னிடம் நீ கோபித்துக் கொள்ளக் கூடாது. உன் போன்ற பெண்கள் நம் காரியத்திற்கு மிகவும் அவசியம் என்பதையும் நான் உனக்கு எடுத்துக் கூற வேண்டியதில்லை. நன்கு ஆலோசித்துப் பார். இப்பொழுதே பலர் பல விதமாகப் பேசுவார்கள்......"

"என்ன, யாராவது ஏதாவது சொன்னதாக உன் காதில் பட்டதா என்ன?"

"ஊம்......எவன்களோ—அது கிடக்கட்டும். உன் பிற்காலத்தை உத்தேசித்து எனக்குச் சற்று......"

அதற்குள் படம் மீண்டும் துவங்கி விட்டது. இருவரும் மிகுதிப் படத்தையும் பார்த்து விட்டு வெளியே வந்தனர். வழக்கம் போல் வெங்கடேசன் அவளை வீட்டில் கொண்டு விட வந்தான். ஆனால் பஸ்ஸில் ஏறுமுன் உமா, "நாம் நடந்தே போகலாமா?" என்று கேட்டாள். வெங்கடேசனின் ஒவ்வொரு வார்த்தையும் அவள் மனத்தில் புகுந்து பஞ்சாயத்து வகித்தது.



அவள் யோசனைகளைக் கலைக்கக் கூடாதென்று பேசாமல் கூட நடந்தான் அவன். இவ்விருவரும் ஒன்றாக நடந்து செல்வதைக் கண்டு சில தெரிந்தவர்கள் கூடத் தெரியாது போல் ரோட்டின் எதிர்ப் பக்கத்திற்குத் தாண்டி நடக்கலானார்கள். இதை வெங்கடேசன் கவனித்தான். உமாவுக்காக அவன் மனம் மிகவும் சஞ்சலப் பட்டது. ஆனால் அவள் ஒன்றையும் கவனிக்க வில்லை.

இதற்குள் அவர்கள் கௌடிய மடத்தை அடைந்து விட்டனர். வீடு நெருங்கி விடவே, உமா திரும்பி வெங்கடேசனை ஒரு முறை உற்று நோக்கினாள்.

'இன்று தான் கடைசி நாள். இன்று விட்டால் பிறகு போக முடியாது. போகாவிட்டால் என் உயிரே நிற்காது போலிருக்கிறது. என்ன செய்வது?' என்று யோசித்துக் கொண்டே இருந்த உமா, தன் தோழனை நோக்கி, "நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாதாக்கும்?" என்று சந்தேகிக்கும் குரலில் கேட்டாள். அது கேள்வி கூட அல்ல; சிந்தனைகளுக்குக் குரல் கொடுத்தது போலிருந்தது.

அவள் கண்கள் சுய ஞாபகமற்று எங்கோ நோக்கின. குரலும் கம்மி யிருந்தது. வெங்கடேசன் அவள் கேள்வியைக் கேட்டு மகிழ்ச்சி தாங்காது விழித்தான். தன் மனதிற்குள் இத்தனை நாட்களாக அடக்கி வைத்திருந்த ஆசை, பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போல் ஆகி விடுவதா! ஆனால் அவன் தன் அதிருஷ்டத்தை நினைத்து மகிழவும் நியாயமில்லை. உமா கேட்பது கல்கத்தா செல்லச் சௌகரியார்த்தமாகத் தான் என்று அவன் அறிவான். அவர்கள் காதல் வாழ்க்கையும் ஒரே ஒரு மாடு பூட்டிய இரட்டை மாட்டு வண்டியாகத் தான் இருக்கும் என்பதை யும் அவன் அறிவான். ஆயினும் இப்பொழுது அதைப் பற்றி யெல்லாம் யோசனை செய்யச் சமயமில்லை.

"உமா, நிஜமாகவா கேட்கிறாய்? பின்னால் வருந்தப் படமாட்டாயா?" என்று அவன் கேட்ட குரலின் ஆர்வமும், அவன் முகத்தின் வசீகர சந்தோஷமும் உமாவையே திகைக்கச் செய்தன. அவள் அதற்குப் பதில் ஆர்வம் காண்பிக்கச் சக்தி யற்றவளாக இருப்பினும், தன் காரியம் இவ்வளவு லகுவில் நடந்து விட்டதே என்ற திருப்தியைத் தாராளமாகக் காட்டினாள்.

"அப்படியானால் நீ இப்பொழுதே போய் என் பெயரையும் உங்கள் ஜாபிதாவில் எழுதி விடு" என்று ஆஞ்ஞாபித்தாள் உமா.

"வீட்டில்..." என்று ஆரம்பித்த அவனை அடக்கி, "என் கணவன் எப்படிச் சொன்னாலும், அப்படி நான் செய்ய வேண்டியது தானே?" என்றாள் அவள்.

வெங்கடேசன் தன் பணியைச் செய்ய ஓடினான். உமா வீடு நோக்கி நடந்தாள். 'இனி ஒரு யுத்தம் இருக்கிறது' என்று தனக்குள் கூறிக் கொண்டே, அவள் சர்வாயுதபாணியாய்த் தாயுடன் போருக்குத் தயாரானாள். உள்ளே நுழைந்ததும் நேரே அம்மாவைத் தேடிச் சென்றாள்.

## 46
# கடைசி யுத்தம்

"அம்மா, சற்று மாடிக்கு வாயேன்."

உமாவின் கண்டிப்பான அழைப்பைக் கேட்ட காமாக்ஷி அம்மாள் தன் பெண் எந்த விதமான வெடி குண்டைப் போடப் போகிறாள் என்று தெரியாமல் திகிலுடன் அவளைப் பின் பற்றினாள். உமா தன் அறையை அடைந்ததும் அம்மாவை ஒரு நாற்காலியில் அமர்த்தி விட்டுக் கதவைத் தாளிட்டாள். கதவின் மேல் சாய்ந்து கொண்டு, இரு கைகளையும் கட்டிக் கொண்டாள்.

இந்த முஸ்தீப்புகளைக் கவனித்த காமாக்ஷி அம்மாளின் கலவரம் பன் மடங்கு அதிகரித்தது. அவள் செயலற்றுப் பெண்ணின் வாயையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா, நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்" என்ற அணு குண்டு திடும் பிரவேசமாக உமாவின் வாயிலிருந்து வரவே வந்து விட்டது.

காமாக்ஷி அம்மாள் இமையைக் கூட அசைக்கவில்லை. ஒரே கேள்வியைத்தான் கேட்டாள்.

"என்ன ஜாதி?"

"வெங்கடேசன்" என்றாள் உமா தந்தி பாஷையில். அவள் தாயின் மனத்தில் ஒரே விநாடியில் எழுந்த எத்தனையோ சந்தேகங்களும், யோசனைகளும் பறந்தோடின. அந்த ஆறுதலில் அவள் உடல் துவண்டது. நெற்றியில் வியர்வை முத்துப் பூத்தது.

"இன்று என்னைக் கேட்டார். நானும் சரி என்றேன்" என்று தொடர்ந்து கூறினாள் உமா.

"என்னை ஏன் முன்னமேயே கேட்கவில்லை, ஹூம்?" என்று மிரட்டினாள் அவள் தாய்.

"உன்னைக் கேட்டு, நீ அநுமதி கொடுத்தாலும் நான் மாட்டேனென்று சொல்லி விட்டால், உனக்குக் குறைவாகி விடுமே என்று என்னையே நேரே கேட்டார் அவர்."

காமாக்ஷி அம்மாளுக்கு ஒரு பளு இறங்கிற்று. அவள் பேசுவதற்குள் உமா மீண்டும் ஆரம்பித்தாள்.

"நாளன்றைக்குக் கல்யாணம் ரிஜிஸ்டர் ஆபீஸில். அதற்கு அடுத்த நாள் கல்கத்தா பிரயாணம்."

"என்னடீ இது? இந்த மாசத்திலே யெல்லாம் கல்யாணம் பண்ணிக் கொள்ளுவார்களா என்ன? நம் வீட்டிலே இப்படி யெல்லாம் வழக்கமே இல்லையே?"

"ஏனம்மா, நம் வீட்டிலேயே வழக்கம் இல்லாதபடி விவாகமே இல்லாமல் இருக்கப் பார்த்தேனே, அதற்கு இது தேவலை யல்லவா?"

காமாக்ஷி அம்மாளுக்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியவில்லை. தன் கணவரையும், நாகலக்ஷ்மி அம்மாளையும் கலந்து பேச அவள் கீழே இறங்கிச் சென்றாள்.

எதிர் வீட்டில் மகாலிங்கையரும் ராமையரும் வாசலில் நின்று பேசிக் கொண்டிருந்தனர். நாகலக்ஷ்மி அம்மாளும் கௌரியும் கூடத்திலிருந்தனர். காமாக்ஷி அம்மாள் உள்ளே நுழையும் போது வாசலிலிருந்த இருவரையும் உள்ளே வரும்படி கூப்பிட்டு விட்டு, கூடத்துக்குச் சென்றாள்.

அவள் எல்லா விஷயங்களையும் சொல்லி முடித்ததும், ஒரு கணம் எல்லோரும் ஸ்தம்பித்து நின்றனர். பிறகு மகா லிங்கையர்தாம் முதலில் பேசினார்.

"வெங்கடேசனைப் பற்றி விசாரித்தேன். அவன் நல்ல இடத்துப் பையன் தான்."

"அது எதற்கு நீ விசாரித்தாய்?" என்று கேட்டார், ராமையர்.

மகாலிங்கையர் ஒரு நிமிஷம் தயங்கினார். பிறகு மெல்ல, "எப்பொழுது பார்த்தாலும் இந்தப் பெண் அவனுடனேயே சுற்றுகிறதே என்று விசாரித்துப் பார்த்தேன்" என்றார்.

"சரி, இப்பொழுது என்ன செய்கிறது?" என்று கேட்டாள் தாய்.

"என்னத்தைச் செய்கிறது? மகாலிங்கம் சொல்வதில் பையன் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று தெரிகிறது. அவன் குணம், நடவடிக்கையைப் பற்றிக் காமுவே மெச்சி இருக்கிருள். முடித்து விடுகிறது" என்ருர் ராமையர்.

"என்னவோ ரிஜிஸ்டர் கல்யாணமாமே?" என்ருள் காமாக்ஷி அம்மாள்.

கடைசியில், மகாலிங்கையர் உமாவுடன் பேசிக் கல்யாணத்தைத் தள்ளி வைத்துக் கொள்ளும் படி செய்ய வேண்டும் என்று தீர்மானமாயிற்று. அவர் உமாவைத் தேடிக் கொண்டு சென்ருர். இங்கு கூடத்தில் மற்றவர்கள் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

"இதென்னடி கூத்து? முன்னே வழக்கமா, பின்னே வழக்கமா? கண்டது உண்டா, அல்லது கேட்டது தான் உண்டா? அவன் அவளையே நேரில் கேட்கிறதாம், இவள் பதில் சொல்லுவதாம்! பெரியவாள் கிடையாது, பெருந்தலை கிடையாது......" என்று அடுக்கிக் கொண்டே போனுள் காமாக்ஷி அம்மாள்.

"எப்படித்தான் தைரியமாகப் பேசுவார்களோ அம்மா இந்தக் குட்டிகள்? வெட்கமாக இருக்காதோ?" என்று அதிசயித்தாள் நாகலக்ஷ்மி அம்மாளும்.

"வெட்கமேது, மானமேது இந்தக் காலத்தில்?"

லலிதா அங்கு வந்தாள். அவள் நேரே கௌரியிடம் போய், "ஏனக்கா, உமாவுக்குக் கல்யாணமாமே?" என்று கேட்டாள்.

அதற்குக் காமாக்ஷி அம்மாள், "ஏன், நீயும் நிச்சயம் பண்ணிக் கொண்டு வந்து விட்டாயோ?" என்ருள் கோபத்துடன்.

லலிதா சிரித்தாள். "ஹூம், என்னம்மா, என்னை அப்படிச் சொல்கிருய்? உமாவாளுலும் இப்பொழுதே கூறினுள். நான் கல்யாணம் முடிந்த பிறகுதான் உனக்குச் சொல்லப் போகிறேன்" என்ருள்.

"என் வீட்டில் எது வேண்டுமாளுலும் நடக்கும்" என்று பெருமூச் செறிந்தாள் காமாக்ஷி அம்மாள்.

★

"ஏனம்மா, உமா, இந்த மாதிரி நமக்கு வழக்கமில்லையே. அவன் திரும்பி வந்த பிறகு சாஸ்திரப்படி நடத்திளுல் போச்சு."

"இல்லையே மாமா. அவர் போகுமுன்னேயே வேண்டு மென்கிறுரே. திரும்பி வந்து சாஸ்திரப் படியும் நடத்தினல் போச்சு. இப்பொழுது என்னை அம்மா கவலை இல்லாமல் அனுப் பலா மல்லவா?"

"அப்படி யென்றால், நீ கூடக் கல்கத்தாப் போக போகிறுயா?"

"அப்படித்தான் யோசனை. எல்லாம் முடிந்த பிறகு சொல்ல லாம் என்றிருந்தேன். தயவு செய்து, மாமா, நீங்கள் குறுக்கே நிற்க வேண்டாம்."

அவள் குரலின் கண்டிப்பைக் கவனித்த மகாலிங்கையர், தாம் வந்த காரியம் வீண் என்று தெரிந்து திரும்பிப் போய் விட்டார்.

★

கடைசியில் உமாவின் இஷ்டப் படியே தான் அவளுக்கும் வெங்கடேசனுக்கும் ரிஜிஸ்டர் விவாகம் நடந்தேறியது. அந்த விவாகப் பத்திரத்தில் கையொப்ப மிடும் போது உமாவுக்குத் தன் சேவா சங்கத்து விஷயங்களில் கையெழுத்துப் போடும் போது தோன்றும் உணர்ச்சி கூடத் தோன்ற வில்லை. ஒரு வேலை ஆயிற்றே என்று எண்ணியவளாய் அவள் வீட்டிற்கு ஓடி வந்து ஊருக்குப் போகத் துணி மணிகளை எடுத்து வைப்பதில் ஈடுபட் டாள. வெங்கடேசன் தன் பெட்டியை முந்தின நாளே அங்கு கொண்டு வந்து வைத்திருந்தான்.

உமா தன் அறையில் சுற்றிச் சுற்றி வந்து, சமான்களைப் பெட்டியில் ஒழுங்காக வைப்பதைப் பார்க்கும் போது வெங்கடேச னுக்கு உடம்பில் தெம்பின் அலைகள் அசைந்து ஓடின. அவன் உரிமையுடன் அவள் அறையில் ஒரு நாற்காலியில் அமர்ந்து எல்லாவற்றையும் பார்வை யிட்டான். உமா தன் மனைவி என்பதை அவனால் நம்பவே முடியவில்லை. ஆனால், பெயரில் மட்டும் தானே? நிஜமாகவே அவளுடைய அன்பைத் தான் பெற்று விடலாம் என்ற நிச்சயம் அவன் மனத்தில் அப்பொழுது இல்லை. ஆயினும் தங்கள் வங்காள யாத்திரை எல்லாம் முடிந்து, திரும்பி வந்து சாதாரண வாழ்க்கை நடத்தும் போது, நெடுநாள் பழகி விட்ட தோஷத்தினல் கொஞ்ச மேனும் நட்புத் தோன்றுதா என்று நினைத்தான். எதற்கும் அவசரப் படக் கூடாது என்று அவன் பேசாமல் இருந்தான்.

வீட்டில் உள்ள அனைவரும் இவ்விசித்திர தம்பதிகளைக் கண்டு வியந்தது வியந்தவாறு இருந்தனர். கௌரி மாத்திரம் மிகவும் வியாகுல மடைந்தாள். 'பரஸ்பரம் காதல் கொண்டு, இல்லற வாழ்க்கையே லட்சியமாகக் கொண்ட தன் தாம்பத்திய உறவே அவ்வளவு லட்சணமாக இருந்ததே! கேவலம் சௌகரியத்திற்காக, ஒரு விதமான உணர்ச்சியையும் அடிப் படையாகக் கொள்ளாத, உமா—வெங்கடேசன் மண வாழ்க்கை எவ்வாறு இருக்கப் போகிறதோ? அவசரப்பட்டுச் செய்யும் வேலையல்லவே இது? பிறகு சலிப்பு ஏற்பட்டு விட்டால்......? வேறு யாரை யாவது உமாவின் மனம் விரும்பினால்......?' என்றெல்லாம் அவள் சிந்திக்கலானாள்.



உமா தன் கணவனுடனும் கோஷ்டியுடனும் கிளம்பி விட்டாள். அவள் உள்ளத்தில் குதூகலம் நிரம்பி நின்றது.

அவளை வழியனுப்பிய பெற்றோர்கள் பலவித எண்ணங்கள் உள்ளத்தில் அலை மோத, பின்னால் என்ன நடக்கப் போகிறது என்று புரியாமல் திகைத்து நின்றனர். அவள் இல்லாததும் வீடு மிகவும் காலியாகத் தென்பட்டது. தினமும் தன்னுடைய போக்கு வரத்தால் எல்லோரையும் எப்பொழுதும் விழிப்பில் வைத்திருந்தாள் அவள். பொழுது விடிந்தால் காமாக்ஷி அம்மாளுக்கு உமாவைப் பற்றி ஒரு சர்ச்சைக்கோ, கவலைக்கோ ஏதாவது காரணம் கிடைத்து விடும். அது இல்லாததும் கூட அவளுக்கு இப்பொழுது மிகவும் கஷ்டமாக இருந்தது.

"முதலில் சுந்தரம் போனான், இப்பொழுது இவள்" என்று அடிக்கடி சொல்லிக் கொள்ளுவாள் அவள்.

'ஒவ்வொரு பட்சியாகக் கூண்டை விட்டுக் கிளம்புகிறது' என்று நினைத்தாள் கௌரி. 'அடுத்த படி லலிதா தன் சிறகை விரிக்கப் போகிறாளோ?'

## 47
## சோதனை

பாலு மறுபடியும் படுத்த படுக்கையாகிப் பதினைந்து நாட்களாகி விட்டன. முன்பு ஆரம்பித்த அதே ஜுரம் முதலில் ஜன்னி ஜுரமென்றும், பிறகு மலேரியா என்றும், இப்பொழுது

டைபாய்ட் என்றும் பலவித நாமகரணங்களுடன் குன்றுமல் விளங்கிற்று.

நெருப்புப் போல் காய்ச்சல் கிட்டே அண்ட விடவில்லை. கௌரி அவன் அருகிலேயே பழியாய்க் கிடந்தாள். உமாவும், சுந்தரமும் இல்லாத குறையுடன், இவன் படுக்கை வேறு வீட்டில் மேகம் மூடி விட்டது. கௌரி தன் பிறந்தகத்திலேயே, தம்பியின் அருகிலேயே காலங் கழித்தாள். அவனும், "அக்கா, அக்கா" என்று அவளையே கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

டைபாய்டு இரண்டாம் வாரம் என்றார்கள் டாக்டர்கள். எல்லோரும் கவலையே உருவாக இருந்தனர். ஒருவருக்காவது ராத் தூக்கம் இல்லை. மன நிம்மதி இல்லை.

பாலு பிரஞ்ஞையும் இழந்தான். வாய் ஏதோ பிதற்றியது. உடல் படுக்கையில் நிலை கொள்ளாமல் தூக்கித் தூக்கி அடித்தது. கௌரி அவனை அழுத்திப் பிடித்துக் கொண்டு படுக்கையின் மேல் உட்கார்ந்திருந்தாள். நெடு நேரமான பிறகு அப்படியே தூங்கி விட்டாள்.

ராமையர் வந்து அவளை எழுப்பினார். "கௌரி, நீ போய்ப் படுத்துக் கொள்ளம்மா. நான் கொஞ்ச நேரம் பார்த்துக் கொள்ளுகிறேன். உனக்கு வேறு வந்து விட்டால் என்ன செய்வதம்மா?" என்றார்.

கௌரி எழுந்து தன் அறைக்குச் சென்று படுக்கையில் படுத்தவுடன் உறங்கி விட்டாள். காலையில் பத்து மணிக்குப் படுத்துக் கொண்டவள் மாலை நான்கு மணி வரை தூங்கினாள். அவள் சாப்பிடக் கூட இல்லை. பெரியவர்கள் ஒவ்வொருவராக வந்து பார்த்து விட்டு, அவளை எழுப்ப மனமில்லாமல் சென்று விட்டனர். அவள் உடலும் மனமும் மெலிந்திருப்பதைக் கண்ட அவர்கள், தானாகச் சற்றுத் தூங்கினால் தூங்கட்டுமே என்றிருந்தார்கள்.

★

டாக்டர் வரும் போது கௌரி வீட்டில் இல்லை. எதிர் வீட்டுக்குப் போயிருந்தாள். அவள் பாலுவிடம் வரும் போது எல்லோரும் படுக்கையைச் சூழ்ந்து கொண்டு, முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். பாலு எலும்பும் தோலுமாய்ப் படுக்கையில் கிடந்தான். அடிக்கடி அவனது உடலையே உலுக்கும் சலங்கை இருமல் தான் அவன் உடலில் பிராணன் இருப்பதற்கு

அடையாளமாக இருந்தது. அவனது கறுத்து, தடித்திருந்த உதடுகள் அகன்று அவன் பற்களைக் காண்பித்தன.

ஒரு மூலையில் கௌரியின் தாய் புடைவைத் தலைப்பால் கண்களைத் துடைத்தவாறே இருந்தாள். கௌரிக்கு நிலைமையை ஒருவாறாகக் கிரகித்துக் கொள்ள முடிந்தது.

அப்பொழுது அவன் பக்கத்தில் உட்கார்ந்தவள் உட்கார்ந்தவள் தான்; அதை விட்டு எழுந்திருக்கவே இல்லை. ராத்திரி முழுவதும் உயிருக்கு மன்றாடும் தம்பிக்குத் துணை இருந்து, கண்களில் நீர் சொரிய, மனத்திலிருந்து கடவுளுக்குப் பிரார்த்தனை மாரியைச் சொரிந்தாள். தானே எடுத்து வளர்த்ததனால் அவளுக்கு அவன் பேரில் அவ்வளவு பாசம். இப்பொழுது அவனுக்காகத் தான், தான் ஜீவித்திருப்பதாக அவள் நினைத்திருக்கும் போது அந்த ஜீவ நாடியே படுத்து விடுகிறதென்றால்?



கௌரியின் பிரார்த்தனைக்கு இணங்கியோ, அல்லது தன் விடாமுயற்சியினால் தானோ, அன்று கண்டத்தைத் தாண்டி விட்டான் பாலு.

இப்பொழுது கௌரி அவனுக்குக் கதை படித்துக் கொண்டிருந்தாள். அவன் சிரிக்கும் போதெல்லாம் அவள் தொண்டை கரகரத்து விடும். அவள் நயனங்கள் ஆனந்த பாஷ்பத்தில் நனைந்துவிடும். இவ்வாறு தத்தளிக்கும் தமக்கையைப் பார்த்துப் பாலுவுக்கு ஒன்றும் புரியவில்லை. வேடிக்கையான கதையைப் படிக்கும்போது அக்கா ஏன் அழுகிறாள் என்று அவன் வியந்தான்.

லலிதா அங்கே வந்தாள். பாலு அவளைப் பார்த்து, "லலிதா, நீ படியேன். அக்காவுக்குப் படிக்கவே முடியவில்லை" என்று கேட்டுக் கொண்டான். லலிதாவும் கதையின் பெயரைப் படித்து விட்டு, "ஓ, 'சபாபதி'யா?" என்று சொல்லிக் கொண்டே படிப்பதற்கும் சிரிப்பதற்கும் தயாரானாள்.

## 48

## சிவா

கௌரி மருந்து, பழம் முதலிய சாமான்கள் வாங்கிக் கொண்டு வருவதற்காக வெளிக் கிளம்பினாள். வீட்டில் கௌரி

யின் தகப்பஞர், மாமஞர் இருவரைத் தவிர வெளியே செல்ல மனிதர்கள் யாருமில்லே. ஆதலால் கௌரியே வெளிக் காரியங்களுக்குச் செல்வது வழக்கமாகி விட்டது.

அவள் மருந்துக் கடைக்குப் போய் மருந்துகள் வாங்கிக் கொண்டு, பழக் கடைக்குப் போய் ஆரஞ்சு முதலியவைகளை வாங்கிப் பையில் நிரப்பிக் கொண்டு, மற்றும் வீட்டுக்கு வேண்டிய இதர சாமான்களையும் வாங்கிக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருந்தாள். தூக்கமாட்டாமல் பளுவைத் தூக்கிக் கொண்டு அவள் பஸ் ஸ்டாண்டில் நின்ருள். இரண்டு மூன்று பஸ்கள் நிற்காமல் சென்றன. டிராமிலாவது போவோமென்று, அழுத்தும் கனமான பைகளைச் சிரமத்துடன் சுமந்து கொண்டு அவள் டிராமைப் பிடிக்க ஓடிஞள். திடீரென்று தன் கைப் பையை யாரோ வாங்கிக் கொள்ளவே, அவள் திடுக்கிட்டுத் திரும்பிஞள்.

சிவா சிரித்துக் கொண்டு நின்ருன்.

"பயப்படாதீர்கள். நான் தான்."

"நான் நிஜமாகவே பயந்து விட்டேன். இத்தனை நேரம் அலைந்த அலைச்சல் எனக்குத்தானே தெரியும்?" என்று சிரித்தாள் கௌரி.

இருவரும் ஒரு டிராமில் ஏறிஞர்கள்.

"உங்களுக்கு என்ன? உடம்பு சரியாக இல்லையா? இப்படி உருமாறிப் போய் விட்டீர்களே?" என்று கவலையுடன் விசாரித்தான் சிவா. வாஸ்தவத்திலேயே கௌரி அவ்வளவு அடையாளம் தெரியாமல் கறுத்து இளைத்துப் போயிருந்தாள்.

"பாலுவுக்கு இரண்டு மாதமாக உடம்பு சரியாக இல்லை. உமா வங்காளத்திற்குப் போயிருக்கிருள். அதுதான்—வேறென்றும் இல்லை."

"பாலுவுக்கா? என்ன உடம்பு?"

"வெறும் ஜுரமென்று நினைத்துக் கொண்டிருந்தோம். பிறகு கொஞ்சங் கொஞ்சமாக 'டைபாய்டு' என்ருயிற்று. இப்பொழுது கொஞ்சம் சுமார். நடுவில் மிகவும் கவலையாக இருந்தது."

சிவா அவள் தோற்றத்தைப் பார்த்தும் கதையைக் கேட்டும் மிகவும் பரிதவித்தான்.

"சுந்தரம் இருந்தாலும் சற்று ஒத்தாசையாக இருக்கும்" என்ருன் அவன், வேறு ஓர் ஆறுதலும் கூறத் தெரியாமல்.

"ஆமாம். இப்பொழுது நான்தான் எல்லாம். என்னை விட்டாலோ மாமாவோ அப்பாவோ போகவேண்டி வருகிறது" என்று சொல்லிக் கொண்டிருந்த கௌரி, "ஐயோ, மறந்து விட்டேனே, பாங்குக்குப் போக வேண்டுமே!" என்று கூறியவளாய் முன்னெச்சரிக்கையின்றி மவுண்ட் ரோட்டில் இறங்கி விட்டாள்.

சிவாவுக்கு அவளிடம் மிகுதியும் கேட்கக் கூடச் சமயம் இல்லை. அவள் பையை வாங்கிக் கொண்டு, நாமும் அவள் கூடப் போகாதிருந்து விட்டோமே என்று நினைத்துக் கொண்டான் அவன்.



"ஸார்!" என்று ஒரு குரல் வாசலில் கேட்டது. கௌரி பாலுவுக்குப் பழ ரசம் பிழிந்து கொண்டிருந்தாள். லலிதா வாசலுக்குப் போய்ப் பார்த்தாள்.

சிவா வாசலில் வந்து கொஞ்ச நேரமாகவே, அவன் சிந்தனைகள் தாமாகவே சுந்தரத்தை நாடின. யோசனையுடன் நின்று கொண்டிருந்த அவன், லலிதாவின், "யாரது?" என்ற கேள்வியைச் செவியுற்றதும், அதே கவனத்தில், "சுந்தரம் இருக்கானா?" என்று கேட்டான். நெடு நாள் பழக்கத்தின் காரணமாகவும், அன்று பகல் கௌரியைச் சந்தித்துப் பேசியதன் பயனாகவும், அந்த இடத்தில் வரும்போது தானாகவே அவன் நாக்கு அப்படிக் கேட்டுவிட்டது. அவன் கேட்கவேண்டுமென்றிருந்தது என்னவோ, "மாமா இருக்காரா?" என்றுதான்.

"சுந்தரம் இந்தத் தேசத்திலேயே இல்லையே!" என்று பளிச் சென்று பதில் வந்தது அவன் கேள்விக்கு.

இதைக் கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்து நோக்கினான் சிவா.

வாசற்படியில் கட்டை விரல் நுனியில் தாங்கி நிற்பதுபோல் பூமியில் பட்டதும் படாததுமாக, வன தேவதையோ எனும்படி ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். முகத்தில் சதா துறுதுறுவென்று அலைந்து கொண்டிருக்கும் கருவிழிகளும், உருக்கி வார்த்த தங்கப் பதுமை போன்ற உடம்பு அமைப்பில் தேங்கி நிற்கும் பெண்மை அழகின் சுகந்தம் சிவாவின் நாசிகளுக்கும் எட்டிற்று. அவனைப் பரவசமூட்டிற்று.

தன் தவறை உடனே உணர்ந்த சிவா, வெளி வந்த சிரிப்பை மெல்ல அடக்கிக் கொண்டு, சங்கோஜத்துடன், "பாலுவைப் பார்க்க வேண்டும்" என்று மெதுவாகக் கூறினான். தனக்கு

இவ்வாறு சவால் கொடுத்தது சுந்தரத்தின் வாயாடி மைத்துனி லலிதாதான் என்று அவள் பேச்சிலிருந்து அவன் அறிந்து கொண்டான். அந்தச் சிறுமியா இதற்குள் இப்படி வளர்ந்து விட்டாள்!

அவள் உள்ளே குதித்துக் குதித்துச் சென்றாள். அவன் வாசலிலேயே நின்றான். சற்று நேரத்திற்கெல்லாம் ராமையரே வந்து அவனை உள்ளே அழைத்துப் போனார். இருவரும் பாலு படுத்திருந்த அறைக்குள் நுழைந்தனர். கௌரி தன் புன்முறுவலால் சிவாவை வரவேற்றாள். படுக்கைக்குப் பக்கத்தில் போட்டிருந்த நாற்காலியில் அவன் போய் உட்கார்ந்தான்.

"இப்பொழுது எப்படி இருக்கிறது?"

"கொஞ்சம் சுமார். நடுவில்தான் எல்லோரையும் பயப் படுத்திவிட்டான்" என்றார் ராமையர்.

"உங்கள் பெண்ணுக்குத்தான் மிகவும் சிரமம். பாவம், மிகவும் இளைத்து விட்டாள்."

இதைக் கேட்டு கௌரி சிவாவை நோக்கி லேசாகச் சிரித்தாள்.

"ஆமாம், ஆமாம். அவள் இல்லா விட்டால் நாங்கள் என்ன செய்திருப்போமோ? அவள் உடம்பு தேறவே இன்னும் வெகுநாள் செல்லும் போலிருக்கிறது."

"சுந்தரத்தினிடமிருந்து கடிதம் வந்து கொண்டிருக்கிறதா?"

"ஆகா, வருகிறது, வருகிறதோ இல்லையோ கௌரி?"

★

அதிலிருந்து சிவா அடிக்கடி அவர்கள் வீட்டிற்கு வர ஆரம்பித்தான். கௌரிக்கு ஒத்தாசையாகக் கடைக்குச் சென்று வருவதும், டாக்டர் வீட்டிற்குச் செல்வதும், மற்றும் வெளியே சென்று பார்க்க வேண்டிய வேலைகளையும் செய்து வந்தான்.

அன்று சிவா உள்ளே நுழைந்தபோது லலிதா பாலுவின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். அவன் வந்ததைப் பார்த்து அவள் உள்ளே ஓடிவிட்டாள். சிவா பாலுவின் அருகில் உட்கார்ந்தான். பாலு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான்.

சிவா வந்திருக்கிறானென்று தெரிந்து கௌரி அங்கே வந்தாள். அவள் முகம் கவலையாகத் தென்பட்டதைக் கண்ட சிவா, "இரண்டு நாளாக ஏதோ வேலை. வர முடியவில்லை. இப்பொழுது

பாலுவுக்கு எப்படி இருக்கிறது? உங்களுக்கென்ன, ஒரு மாதிரியாக இருக்கிறீர்களே?" என்று கேட்டான்.

"பாலுவுக்கு மறுபடியும் ஜுரம் ஆரம்பித்து விட்டது. இந்தத் தடவை 'நியுமோனியா' என்கிறார்கள். ஈசுவரன்தான் காப்பாற்ற வேண்டும்" என்று அவள் கூறுவதற்குள் அவள் கண்களில் நீர் நிரம்பி விட்டது.

சிவாவிற்கும் கவலையாகி விட்டது. கௌரிக்கு என்ன தேறுதல் சொல்லுவது என்று தெரியாமல் அவன் தவித்தான். பாலுவைத் தொட்டுப் பார்த்தான். உடம்பு நெருப்பாக இருந்தது. பாலு தூக்கத்தில் இடையிடையே என்னவோ முனகிக் கொண்டிருந்தான்.

சிவா கொஞ்ச நேரம் உட்கார்ந்து கொண்டிருந்தான். பிறகு கௌரியை நோக்கி, "கவலைப்படாதீர்கள் அம்மா. ஒன்றும் இருக்காது. கடவுள் நம்மைக் கெடுக்கமாட்டார்" என்று தேறுதல் கூறிக் கொண்டே எழுந்தான்.

பாலுவின் உடம்பு நிலவரத்தைச் சரிவரத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவன் டாக்டர் வீட்டை நோக்கிச் சென்றான்.

கௌரியின் அறையாக இருந்து, பிறகு உமாவின் அறையாக இருந்த இடத்தின் ஜன்னல் வழியே ஒரு பெண்ணுருவம் வேகமாக நடந்து செல்லும் சிவாவையே நோக்கி நின்றது.

## 49

## தாயுள்ளம்

உமாவின் அறையிலிருந்து தம்பூர் சுருதியுடன் ஒரு குரல் கணீரென்று பாடிக் கொண்டிருந்தது. ஜீவன் ததும்பும் அக்குரல் வீடு முழுவதும் நிரம்பி, அக்கட்டிடத்திற்குப் புத்துயிர் கொடுத்தது.

"எத்தனை நாளாயிற்று வீட்டில் பாட்டு கேட்டு?" என்றாள் காகலக்ஷ்மி அம்மாள். லலிதா 'பராமுக மேனையா' என்னும் பாட்டைக் குழைத்துக் குழைத்துப் பாடும் நளினமே எல்லோர் மனத்தையும் அடிமை கொண்டது. பாலுவின் கவலையையும் அந்தக் கணம் மறந்தனர் அவர்கள்.

கீழே எல்லோரும் இவ்வாறு தங்கள் சோர்வை மறந்து, இன்னிசைத் தழுவலில் மனச் சாந்தியை அடைந்திருக்கையில்,

கௌரி மாத்திரம் மாடியில் தனியாக ஓர் அறையில் இரு கைகளை யும் முகத்தில் பதித்தவாறு சோகமே உருவாக வீற்றிருந்தாள். வெகு நேரம் அவளைக் காணவில்லையாதலால் காமாக்ஷி அம்மாள் மகளைத் தேடிக் கொண்டு மேலே வந்தாள்.

தான் வந்ததைக் கூடக் கவனியாமல் பித்துப் பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்த கௌரியின் தோற்றத்தைக் கண்டு, தாயின் உள்ளம் இளகி விட்டது.

"என்னடியம்மா, இப்படி உட்கார்ந்திருக்கிறாய்? பாலுவுந் தான் பிழைத்து எழுந்து விட்டானே?"

திடுக்கிட்டு விழிப்படைந்தாள் கௌரி. "ஒன்றுமில்லையே அம்மா" என்றாள்.

எப்பொழுதும் உடல் சுறுசுறுப்பும், புன் சிரிப்புத் தாண்டவ மாடும் முகமும், சாந்தமான பேச்சும் பொருந்தியவளான கௌரி, இப்பொழுது பொலிவிழந்து, மனம் குன்றி, சோகமே வடிவென இருப்பது கொஞ்சமேனும் பொருத்தமாகத் தோன்றவில்லை அவள் தாய்க்கு. அன்னையின் கண்ணுக்கும் மனத்திற்கும், கௌரியின் சோகத்துக்குக் காரணம் வேறு ஏதோ மறைந்திருப்ப தாகப் பட்டது.

"ஏன் இப்படி இருக்கிறாய், கௌரி? என்னால் பார்க்கச் சகிக்க வில்லையே!"

"ஒன்றும் விசேஷமாக இல்லையே, அம்மா. இந்த இரண்டு மூன்று மாதமாக அலைச்சலோ இல்லையோ, அது தான். வேறொன்றும் இல்லை."

"என்ன செய்வது, இந்தச் சமயத்தில் தான் அந்தக் குழந் தைக்கும் ஜுரம் வருகிறது. இந்தப் பெண்ணும் போன பிறகு சரியாக விவரமே தெரியவில்லை. கோபு தான் சற்று லீவு வாங்கிக் கொண்டு வரக் கூடாதா? எல்லாம் உன் தலையிலே வந்து விடு கிறது. உழைக்கிறவர்களுக்கு என்றும் உழைப்புத் தான்" என்று அலுத்துக் கொண்டாள் காமாக்ஷி அம்மாள்.

"இப்பொழுது அப்படி ஒன்றும் வேலை இல்லையே அம்மா- அதுவும் சிவா வர ஆரம்பித்த பிறகு. லலிதா கூட எவ்வளவு செய்கிறது, பாவம்."

"என்னவோ, உனக்கு மனசாவது நன்றாக இருந்தால், இதெல்லாம் பாராட்ட மாட்டாய். முன்பு வீட்டோடு அம்மை

போட்டிருந்ததே, செய்ய வில்லையா என்ன? ஹூம்......" ஒரு நீண்ட பெருமூச்சு அவள் பேச்சைத் தடுத்தது. மறுபடியும் அவள் ஆரம்பித்தாள். "ஆசையாக, வேண்டுமென்று கேட்டு, பண்ணிக் கொண்டதே அந்தப் பையன், நம் கண்ணுக்கு இன்ப மாகப் பார்க்கலா மென்று நினைத்தேன். அதுவும் பிராப்தி யில்லை......நான் நினைத்ததற்கும், அவன் இருக்கிறதற்கும்......"

"அம்மா, உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் கௌரி, நிதானமாக. தன் தேகத்திலிருந்த அத்தனை பலத்தையும் பிரயோகித்து, ஒவ்வொரு மொழியையும் சிரமப் பட்டு அழுத்தி அழுத்தி உச்சரித்தாள்.

"தெரியாமல் என்ன? நீ சாதாரணமாக இருந்தால், அவன் கடிதம் வந்தால் ஆவலுடன் ஓட மாட்டாயா? அதிலிருப்பதை ஒரு தரமாவது என்னிடம் சொல்ல மாட்டாயா? எனக்குக் கொஞ்ச நாளாகவே சந்தேகம். இப்பொழுது நிதர்சனமாகி விட்டது. மற்ற எல்லாப் பசங்களிடமும் எனக்கு அவ்வளவு பிடிப்புக் கிடை யாது. நீ ஒருத்தி தான் எனக்கு ஆதரவு. என்றும் வெளியே சொல்லாமல் உன் பேரில் என் பஞ்சப் பிராணனையும் வைத்திருக் கிறேன். நீ சந்தோஷமாக இருக்கக் கூடாது என்று சாபம் போலும்" என்று வருத்தப் பட்டாள் காமாக்ஷி அம்மாள்.

கௌரி ஆச்சரியத்துடன் தன் அன்னையை நோக்கினளே தவிர, பதில் பேசவில்லை. அவள் தாய் பேசிக் கொண்டே போனாள்.

"உனக்கு நான் என்ன தேறுதல் கூறப் போகிறேன், கௌரி? நான் என்ன படித்தவளா? உன் கஷ்டத்தைப் பார்த்து நானும் மனம் உருகுகிறேன்; அவ்வளவு தான்."

"நீ எனக்கு ஒன்றும் செய்ய வேண்டாம், அம்மா" என்று கூறிய கௌரி, தன் வழக்கத்திற்கு மாருக, தன் உணர்ச்சிகளின் வேகத்தைத் தடுக்கவில்லை. அன்னையின் மடியில் தலையை வைத் துத் தேம்பித் தேம்பி அழுது ஆறுதல் அடைந்தாள்.

காமாக்ஷி அம்மாள் பெண்ணின் தலையை அணைவாகக் கோதியவாறு உட்கார்ந்திருந்தாள்.

★

"யார் பாடுகிறது? வெகு அழகாக இருக்கிறதே" என்று சிவா கேட்டது லலிதாவின் காதிலும் விழுந்தது. அவள் இன்னும்

இரண்டு பாட்டுக்கள் பாடினுள். மிகவும் உருக்கமாகவும், அதிகப் பலத்துடனும் 'சொல்லவல்லாயோ, கிளியே' என்ற ராக மாலிகையைப் பாடியபோது அவள் கண்டம் இழைந்து தம்பூருடன் கலந்து, அப்பொழுது வீசிய மந்தமாருதத்துடன் சேர்ந்து ஆகாயத்தைப் பரவியது, கலைவாணியின் பாதத்தையே எட்டியிருக்கக்கூடும். அவ்வளவு இனிமையாக இருந்தது அந்தச் சாரீரத்தின் நயம்.

தன்னையும் அறியாமலேயே நாளாக, நாளாக லலிதா சிவாவிடம் ஒரு பக்தியும் பிரேமையும் கொண்டாள். காதல் என்பது இதுதானே?

ஒரு நாள் சிவா, ராமையர், மகாலிங்கையர் மூவரும் பேசிக் கொண்டிருந்தனர். பேச்சு, பெண்கள் படிப்பைப் பற்றித் திரும்பியது.

அப்பொழுது சிவா, "பெண்கள் காலேஜ் படிப்புப் படித்துத் தான் ஆகவேண்டும் என்பதில்லை - உத்தியோகம் பார்ப்பதாக இருந்தால் தவிர" என்று தீவிரமாக வாதித்தான்.

மகாலிங்கையர், "அப்படிச் சொல்ல முடியாது, சிவா. வெறும் ஏட்டுப் படிப்புக்காக வேண்டாமே ஒழிய, பத்துப் பேர்களுடன் பழகவோ, உலகத்தைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளவோ, தன் விஷயத்தைத் தானே நடத்திக் கொள்ளவோ ஆகிய திறமை எல்லாம் காலேஜில் படித்தால்தான் வரும்" என்றார்.

"குடும்பத்தில் ஈடுபட்டுக் காலத்தை நடத்துபவர்களுக்கு அது அவசியமில்லை என்பது என் கொள்கை. அவ்வளவு பண்பும், கலை விருத்தியும் வீட்டிலிருந்து கொண்டே அடையலாம். பெண்கள் வாழ்க்கையில் முக்கியமான நாட்களையெல்லாம் காலேஜிலும், பள்ளியிலும் கழித்து விட்டால், வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளான மற்ற விஷயங்களை எப்பொழுது கற்றுக் கொள்ளுகிறது?"

"கலைக்கு வயதுண்டா என்னப்பா? அப்புறமும் கற்றுக் கொண்டே இருக்கலாமே?"

"அது என்னவோ மாமா. எங்கள் வீட்டில் இருக்கும் என் தங்கை, அத்தை மகள் இவர்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் இப்பொழுது படித்திருக்கும் படிப்பு எதற்கு உபயோகமோ?

வாழ்க்கைக்குப் பயன்பட வேண்டுமெனில் வேறு விதமான ஒரு காலேஜில் போய்ப் படித்தால்தான் அவர்களுக்குக் கல்யாணம் பண்ணலாம். ஆனால் இப்பொழுதே அவர்களது விவாக வயது காலம் தவறிக் கொண்டு வருகிறது...நம் நாடு மேலும் மேலும் அபிவிருத்தி அடைய வேண்டுமென்றால், படுத்துவிட்ட நமது புராதனக் கலைகளையெல்லாம் தட்டி எழுப்பி மீண்டும் துளிர்க்கச் செய்ய வேண்டாமா? தமிழ், சம்ஸ்க்ருதம், சித்திரக்கலை, இலக்கியம் எல்லாவற்றிலும் புரட்சி செய்து முன்னுக்குக் கொண்டு வரலாமே பெண்கள்? வருங்கால ஜனசமூகமே அவர்கள் கையில் இருக்கிறதே? அவர்களே தங்களை அதற்கு ஏற்ற மாதிரி பக்குவப் படுத்திக் கொள்ள வேண்டாமா?"

மகாலிங்கையருக்குச் சிவாவின் பேச்சில் சுவாரஸ்யம் ஏற்பட்டு விட்டது. அவனை இன்னும் கிளறி விட்டார்.

"அப்படியென்றால், ஆண்களால் அது முடியாது என்று ஒத்துக் கொள்கிறாயாக்கும்?" என்று சொல்லி, ஒரு குறும்புச் சிரிப்புச் சிரித்தார்.

"அப்படி ஒருகாலும் சொல்ல மாட்டேன். எல்லோரும் ஒரே துறையில் போட்டி யிடுவானேன்? பகிர்ந்து கொள்ளலாமே என்கிறேன்" என்று கூறி, அவனும் நகைத்தான்.

பெரியவர் அவனைக் கேலி செய்ய ஆரம்பித்தார். "உனக்குக் குறைந்த பட்சம் ஒரு பி. ஏ. பட்டதாரியாவது வரவேண்டும்" என்று ஆசிர்வதித்தார்.

"அவள் பி. ஏ. பட்டத்தைக் கண்டால் எனக்கு என்ன பயமா, பகையா? அப்படியும் நான் சொன்னதை யெல்லாம் கற்றுக் கொள்வதற்கு நான் முன்னே கூறியதுபோல் அவள் வேறு படிப்புப் படித்தாக வேண்டும். ராமேசுவரம் போயும் சனீசுவரன் விடவில்லை என்றாகிவிடும் அவளுக்கு."

எல்லோரும் சிரித்தனர். மறைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த லலிதாவும் சிரித்துக் கொண்டாள்.

"கௌரி அக்கா இண்டர்மீடியட் பாஸ் செய்தாள், உமா பி. ஏ. படிக்கப் போகிறாளாம், நான் எம். ஏ. படிக்கப் போகிறேன்" என்றெல்லாம் இதுவரையில் சொல்லிக் கொண்டிருந்த லலிதா, தான் அந்த வருஷத்தோடு பள்ளிக்கூடத்தை விட்டு விடுவதாக அன்றிரவு தன் அன்னையிடம் சொன்னாள். வீட்டி

லேயே சம்ஸ்கிருதமும், தமிழும் படிக்கப் போவதாகக் கூறினாள்.

இதெல்லாம் எதனால் விளைந்தது என்று யாரும் அறிந்து கொள்ளவில்லை. லலிதாவின் இருதயத்தின் ஒரு மொட்டுக் கமலம் புஷ்பித்து விட்டது. அது சிவா என்னும் சூரியனின் இதமான கிரணங்களுக்கு ஏங்கி நின்றது. அவளை இன்னும் சிறு குழந்தை என்றே எல்லோரும் பாவித்தனர். சிவாவும் அதற்கு விலக்காக வில்லை. அவன் அவளைச் சுந்தரத்தின் மைத்துனி—அந்த வாயாடிக் குட்டி—என்றே பாவித்தான். அவனைக் கண்ட மாத்திரத்தில் சிறுமி லலிதா, தன் குழந்தைத் தனத்தை உதறிவிட்டு இளம் பெண்ணாக மாறிவிட்டாள் என்பது யாருக்குத் தெரியும்—அவளுக்கும், அவ்விதமான நூதன உணர்ச்சிகளை அவள் மனத்திற்குள்ளே புகுத்திய ஆண்டவனுக்கும் தவிர?

வீட்டில் வேலைக்கு உதவியாக இருக்க வேண்டும் என்று படிப்பைத் துறந்துவிடப் போகிறது குழந்தை என்று எல்லோரும் நினைத்துக் கொண்டார்களே தவிர, அந்தப் பெண்ணின் உள்ளத்தில் எழும் அன்பு அலைகளின் அரவம் ஒருவர் காதுக்கோ புத்திக்கோ எட்டவில்லை.

# 50

## அன்பு வடிவம்

வாசலில் சிவாவின் குரல் கேட்டதோ இல்லையோ, லலிதா சமையலறையிலிருந்து ஓடிப் போய் முகத்தைக் கழுவி, பொட்டிட்டு, தன்னை அலங்கரித்துக் கொண்டாள். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவனுக்குக் காபியும் பலகாரமும் எடுத்துப் போகக் கௌரி சமையலறைக்கு வந்தபோது, லலிதா அவைகளைத் தயாராக எடுத்துக் கொடுத்தாள்.

"உனக்கு எப்படியடி தெரியும் நான் கேட்பேன் என்று?" என்று அதிசயித்தாள் தமக்கை.

லலிதாவால் ஒரு வேலை ஆகவேண்டுமென்றால், அவளைப் பத்துத் தரம் அழைத்தால்தான் புழக்கடையிலிருந்து சிரித்துக் கொண்டு ஓடி வருவாள். அதற்கப்புறம் வேலையைச் செய்து முடிப்பதற்குள் எத்தனையோ கோணல் சொல்லி விட்டுச் செய்

வாள். இன்று இப்படி கேட்பதற்கு முன்னமேயே செய்திருப்பதைப் பார்த்து கௌரி வியந்ததில் ஆச்சரியமில்லை.

அதற்குள் சமையல்கார அம்மாள், "தானே இன்றைக்கு மைசூர்ப்பாகு பண்ணினளோ இல்லையோ, அதுதான். மாமி செய்தால் இவ்வளவு சீக்கிரம் ஓடி வருவாளா?" என்றாள் சிரித்துக் கொண்டு.

"அப்படியா?" என்று கூறிவிட்டு, கௌரி கையில் தட்டுடன் முன் பக்கம் சென்றாள்.

லலிதா முகத்தில் வான வில்லின் அத்தனை நிறங்களும் தோன்றி மறைந்தன. தன் உணர்ச்சிப் பெருக்கை யாராவது கண்டு கொள்ளப் போகிறார்களே என்று நினைத்தவளாய் அவள் தலை கவிழ்ந்தாள்.

"இந்த மைசூர்ப்பாகு ருசியைப் பாருங்கள்" என்றாள் கௌரி.

லலிதா அதைக் கேட்டு ஆவலே உருவென ஜன்னல் பக்கம் நின்று தையல் வேலை செய்யும் பாவனையில் ஒட்டுக் கேட்டாள். ஆனால் சிவா அளித்த பதிலின் ஏமாற்றம் அவள் முக அழகையே பறித்துக் கொண்டு போய்விட்டது.

"என்னை, 'நீங்கள்' என்று அழைக்க வேண்டாமே. அதுவே மைசூர்ப்பாகின் ருசியைக் குறைத்து விடுகிறது."

கௌரி சிரித்து விட்டு, "அதெப்படி முடியும்? என்ன இருந்தாலும் நீங்கள் என்னைவிடப் பெரியவர் அல்லவா?" என்றாள்.

பேச்சு இப்படிக் கிளையெடுத்து ஓடிவிட வேண்டுமா?

சிவா வந்தால் லலிதா ஏதாவது ஒரு வேலை ஏற்படுத்திக் கொண்டு எதிர் வீட்டுக்குப் போகும் வழியில் அவன் இருக்கும் முன் ஹாலை நான்கு தடவையாவது தாண்டிச் செல்வாள்.

ஒருநாள் அவன் ஏதோ பேச்சில் தனக்கு ஆனந்த பைரவி ராகம் மிகவும் பிடித்தம் என்று கூறிவிட்டான். அவ்வளவுதான், அவன் வரும்போதெல்லாம் ஆனந்த பைரவிப் பிரவாகம் கொப்பளித்து, சுழலமிட்டுத் தன் சிருங்கார அலைகளால் அவனைத் தாக்கிற்று. அப்பொழுதும் அவன் அதில் தோய்ந்திருக்கும் அன்பு ஆஹ்வானத்தைச் சிறிதேனும் அறிந்தானில்லை.

மற்றுமொரு நாள். அன்று வீட்டில் யாருமில்லை. பாலுவுக்குத் துணை லலிதாதான் இருந்தாள். மறுபடியும் பாலுவுக்குக்

குணமாகி வந்தது. கௌரி எதிர் வீட்டிலிருந்தாள். பெரியவர்கள் நான்கு பேரும் சகஸ்ரநாம அர்ச்சனை செய்வதற்காகக் கோவிலுக்குச் சென்றிருந்தனர்.

சிவா வந்தான்.

லலிதாவுக்கு இன்னது பேசுவது, இன்னது சொல்லுவது என்று தெரியவில்லை. லஜ்ஜை என்னும் மாயப் போர்வை அவள் மனத்தை மயக்கியது.

சிவா அவளைப் பார்த்துச் சிரித்தான்—அதாவது ஒரு பெரியவன் சிறு குழந்தையைப் பார்த்துச் சிரிக்கும் சிரிப்பு. லலிதா ஒன்றும் பதில் சொல்லாமல் விம்மி விம்மி எழும் மார்பை மறைக்க, எழுந்து அந்த அறையிலிருந்த புத்தகமொன்றை எடுத்து உள்ளே வைக்கச் சென்றாள். அது ஓர் அநாவசிய வேலைதான் என்று சொல்லவும் வேண்டுமோ?

சிவா அவளிடம் பேச்சுக் கொடுத்தான். "நீ ரொம்பவும் அழகாகப் பாடுகிறாயே?"

"உம், ஏதோ கொஞ்சம்."

"ஏது, ஏது? மிகவும் தணிந்து பேசுகிறாளே உன் அக்கா, என்ன பாலு!" என்றான் சிவா.

லலிதாவுக்குச் சங்கோஜம் மிஞ்சியது. அதை மறைக்க, அவள் தன் விளையாட்டுச் சுபாவத்தை வெளியிட்டாள்.

"பின்னே பெரியவாள் சங்கீதத்தைப் பற்றி அபிப்பிராயம் கூறும்போது, நான் அசட்டையாக அதை ஏற்றுக் கொள்ளலாமோ?" என்றாள்.

பாலு கைதட்டிச் சிரித்தான். "மாமா, உன்னால் அவளுக்குச் சரியாகப் பேச முடியாது. வீட்டில் அவளுக்கு என்ன பெயர் தெரியுமோ?"

"அடே, பாலு..." என்றாள் லலிதா.

"என்ன பெயர்?" என்று பாலுவைத் தூண்டி விட்டான் சிவா.

"வாயாடி வெங்கடசுப்பு."

"பேஷாக இருக்கிறதே!" என்றான் சிவா.

லலிதா தம்பியைப் பார்த்து, "சீ, வாயை மூடு" என்று வேடிக்கையாகக் கடிந்து விட்டு ஓடிப் போய் விட்டாள்.

மறுபடியும் அவள் சிவாவின் எதிரில் வரவே இல்லை. அவள் மனசு மிகவும் வருந்தியது. தான் பெரியவள் என்று அவனிடம்

காட்டிக்கொள்ள வேண்டுமென்பது அவளுடைய அவா. அவன் தன்னைச் சிறு குழந்தையைப் போல் நடத்துவது அவளுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

★

கல்கத்தாவில் அகதிகளுக்கும் அடிபட்டவர்களுக்கும் உதவி புரிவதற்காக ஏற்படுத்தப்பட்ட கூடாரங்களில் ஒன்று. முதல் சிகிச்சை செய்யும் இடம்.

திரையை விலக்கிக் கொண்டு உமா உள்ளே நுழைந்தாள். ஒரு மூலையில், வெங்கடேசன் குனிந்து, அடிபட்டவன் ஒருவனுக்குக் கட்டுக் கட்டிக் கொண்டிருந்தான். உமா அவனருகில் சென்று நின்றாள். அவன் கைக்குக் கை வேண்டிய சாமான்களை மௌனமாக எடுத்துக் கொடுத்தாள். வெங்கடேசனும் உமா வந்ததையோ தன் பக்கத்தில் நிற்பதையோ தனியாகக் கவனியாமல், தான் கை நீட்டும் பொழுதெல்லாம் அவள் கொடுத்ததை வாங்கித் தன் வேலையை மும்முரமாகச் செய்தானே ஒழிய இப்படியோ அப்படியோ திரும்பவில்லை. அந்த மனிதனின் கட்டு முடிந்ததும், கையெலும்பு முறிந்த மற்றொருவனிடம் சென்றான் அவன்.

அவன் கண்கள் குழி விழுந்து, ரத்த ரேகைகள் ஓடின. தூக்கமின்மையும், ஒழிவில்லாமல் வேலை செய்வதும் அவனைக் கள் குடித்தவன் போல் மயக்கமுற்றுத் தள்ளாடச்செய்தன. ஆனால் வேலை செய்யும் பொழுது அவன் கைகளில் ஒரு தடுமாற்றத்தையும் காணோம்.

அவன் நிலைமையைக் கண்ட உமா, அவனைத் தடுத்து, "போதும், போய்ப் படுத்துக் கொள்ளுங்கள். இனிமேல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இரண்டு நாளாகத் தூங்கவே இல்லையே?" என்றாள்.

"பரவாயில்லை, உமா. நீ போய் இன்னும் கொஞ்ச நேரம் இளைப்பாறிக் கொள். நான் இன்னும் சற்று நேரம் வேலை செய்ய முடியும். மேலும், அதோ பார், எத்தனை பேர் காயம் பட்டவர்கள். நேற்றைய தினத்தைவிட இன்று இரட்டை மடங்கு அதிகம். எப்படி அவர்களை விட்டு விட்டுப் போவது? எல்லோருக்கும் வேலை நிறையக் கிடக்கிறது. ஆட்கள் போதாது. உனக்கு அதிக அசதி இல்லாவிட்டால், நீயும் போய் அந்தக் குழந்தைகள் விடுதியில் கொஞ்சம் உதவி செய்யேன்" என்று உரைத்து விட்டு

மற்றொரு ஆளைக் கவனிக்கச் சென்று விட்டான் வெங்க டேசன்.

உமா ஒன்றும் கூறுமல் அவள் கணவன் கூறிய இடத்துக் குச் செல்லும்போது அவள் மனம் பலவித எண்ணங்களின் சுழலில் சிக்கிக் கொண்டது. வெங்கடேசனுடன் அவள் இந்த இரண்டு மாதங்கள் பழகியதில் அவன் சுபாவம் அவளை ஆச் சரியத்தின் மேல் ஆச்சரியத்தில் மூழ்கடித்தது.

அவன் இராப் பகலாகச் சேவை செய்வதில் லவலேசங்கூட (ஏன், கனவில் கூட என்று சொல்லலாம்) சிரமம் பாராட்டாமல் எப்பொழுதும் சிரித்த முகத்துடன் விளங்கி வந்தான். தான் ஏதோ அவர்களுக்குக் கடமைப் பட்டவன்போல், பயபக்தியுட னும், அநுசரணையுடனும் 'கேஸ்'களைக் கவனித்தானே தவிர, தான் உதவிபுரிவதாக இம்மியளவும் கருதவில்லை.

'நாமும் தான் இந்த சேவையில் முழு ஊக்கத்துடன் ஈடுபடு கிறோம். ஆயினும் இந்தக் கூட்டத்துக்குள்ளேயே இவரைப்போல் அதிலேயே லயித்திருப்பவரைக் காண்பதரிது. ஏன்? நமக்கெல்லாம் 'சேவை செய்கிறோம்' என்ற உணர்ச்சி இருக்கிறதே, இதுவே மட்டமன்றோ? அவர் இதைத் தம் கடமை என்றல்லவோ பாவிக் கிறார். அல்ல, அதுகூடத் தவறு. அவரே சேவை, சேவையே அவர். ஆமாம்!'

இவ்வாறு யோசித்துக் கொண்டே உமா குழந்தைகள் கூடா ரத்தை நோக்கி நடந்தாள். அவள் கண்களின் முன், இரண்டு மூன்று நாட்களாகக் கத்தியைப் பார்க்காத தாடி மீசையும், எண்ணெய் வழியும் முகமும், மயக்கமுற்ற கண்களும், பரட்டைத் தலையும் அடிக்கடி காட்சியளித்தன. இப்படியும் ஒரு மனிதர் இருக்க முடியுமோ என்று வியந்தவாறே அவள் உள்ளே நுழைந்தாள்.

இதுவரை வெங்கடேசன் தன் கோஷ்டியில் வந்த மற்றொரு தொண்டன் என்று மாத்திரம் தான் உமா கருதி இருந்தாள். இப்பொழுது அவனுடன் பழகியதில் அவன் ஒரு நெருங்கிய நண்பனும் ஆனன். ஆனால் அவளது மனம் எந்தச் சமயத்திலும் அவனைப் பற்றிச் சிந்தித்ததே கிடையாது. இந்த இரண்டு, மூன்று நாட்களில், அவள் கண்கள் கொரடா விட்டு நீக்கப்பட்டாற்போல் திறந்தன. வெங்கடேசனின் தன்னலமற்ற, அன்பு சொட்டும்

செய்கைகள் அவள் மதிப்பை அபகரித்து விட்டன. புதிய திருஷ்டி பெற்ற கண்களுடன் அவள் அவனை நோக்கலானாள்.

'வெங்கடேசன்', 'நீ' என்பதெல்லாம் போய் அவளையும் அறியாமல் 'அவர்', 'நீங்கள்' வந்து விட்டன.

'இப்படியும் ஒரு மனிதர் இருக்க முடியுமா? அன்பு செலுத்துபவரைக் காணலாம். அன்பை ஒருவரிடம் உண்டாக்குவதைக் காணலாம். இவரைப் போல் அன்பே வடிவமென இருக்க முடியுமோ!'

வெங்கடேசனை இன்னும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும் என்று தாபம் கொண்டாள் உமா. தன் சௌகரியத்துக்காக அவனைத் தன்னை மணக்கும்படி கேட்டதைப் பற்றி அவள் வெட்கினாள். 'கணவன் என்னும் உரிமையைக் கூட அவர் உபயோகித்துக் கொள்ள முயலவில்லையே. அவர் தன்னலமின்மைதான் என்னே!' கணவனிடம் அளவிலா மரியாதையும், பக்தியும் கொண்டாள் உமா.

## 51

# பரஸ்பர அன்பு

வெங்கடேசன் தனக்கும் உமாவுக்கும் என்று விடப்பட்டிருந்த கூடாரத்துக்குள் நுழைந்தான். உமா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். அவன் தன் அழுக்கு உடைகளைக் களைந்து விட்டு, வேறு சுத்தமான ஆடைகளை அணிவதற்கு முன் குளிக்க வேண்டு மென்று, பக்கத்திலிருந்த ஸ்நான அறைக்குள் சென்றான். அங்கே வெந்நீர் காய்ந்து விளாவப் பட்டு, ஸோப் துண்டு எல்லாம் தயாராக இருந்ததைக் கண்டு அவன் வியந்தான். பிறகு குளித்து விட்டு, தன் படுக்கையில் வந்து படுத்துக் கொண்டான். சுடச் சுட வெந்நீர் அவன் உடல் வலியை யெல்லாம் போக்கி விட்டது. வெளியிலிருந்து குளிர்ந்த காற்றடித்தது.

இவ்வளவிலும் அவனுக்கு அப்பொழுது தூக்கம் வரவில்லை, அப்படியே தன் சிந்தனைச் சக்கரத்தைச் சுற்றி விட்டான்.

இப்பொழுது அவர்களது முகாமில் அதிக வேலையில்லை. ஊரிலும் கலாட்டா குறைந்து விட்டது. ஆதலால் நிம்மதியாகத் தூங்க நேரம் கிடைத்தது. ஆனால் நித்திரை வரமாட்டேனென்கிறதே?

தான் செய்த காரியம் சரிதானா என்று அவனுக்குச் சந்தேகம் கிளம்பி விட்டது. நண்பன் என்னும் முறை தவிர உமாவுக்குத் தன் மீது கிஞ்சிற்றேனும் வேறு அபிப்பிராயம் கிடையாது என்று அவன் எண்ணினான். ஆனால் தனக்கோ, நாளுக்கு நாள் அவள் வேலை செய்யும் திறமையையும், பொறுமையையும், அவள் புத்தி தீட்சண்யத்தையும் பார்க்கப் பார்க்க அவள் மீதிருந்த காதல் அதிகமாகிக் கொண்டே இருந்தது. அவள்தான் முன் வந்து கேட்டாளாயினும், தானே அவளை இஷ்டம் இல்லாத விவாகத்துக்கு இணங்கச் செய்ததாக அவன் மனம் இருண்டது. 'பெற்றோர் சம்மதம் இன்றி இங்கு வருவது சரியல்ல' என்று எடுத்துக் கூறினோமே, அவள் முன் பின் யோசனை இல்லாமல் கல்யாணத்தைப் பிரஸ்தாபித்த போது, அதன் நலன், பலனை எடுத்துச் சொல்லி இருக்க வேண்டாமா? 'அவசரப் பட வேண்டாம்' என்று புத்தி கூறி, அவளை நன்றாக யோசிக்கும்படி கேட்டிருக்க வேண்டியது நம் கடமை யல்லவா?' என்றெல்லாம் அவன் நினைத்தான். 'அவள் சிறு பெண் தானே? தீவிரத்தில் முன் யோசனை இன்றி ஒரு காரியத்தில் இறங்கிவிடக் கூடிய வயது தானே?' என்று தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டான். ஆயினும், இப்போது அவன் மனத்தில் உமாவின் அன்பைப் பெற்று, அவளை வாஸ்தவத்திலேயே வாழ்க்கைத் துணைவியாகக் கொள்ள வேண்டும் என்னும் அவா கொப்பளித்து எழும்பியது. அதனுடனேயே அது சாத்தியமாகுமா என்ற சந்தேகமும் கூட அவன் மனத்தில் உதித்தது.

எழுந்து சென்று நிஸ்சிந்தையாகத் தூங்கும் உமாவின் படுக்கையினருகில் சென்று உட்கார்ந்தான் வெங்கடேசன். அவளுடைய கூர்மையான மூக்கும், நீண்ட முகமும் மிகவும் தெய்வீக ஒளி பெற்றனவாகத் தென் பட்டன. அவன் அப்படியே உட்கார்ந்து அவள் முகத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

இப்படி அவன் உட்கார்ந்திருப்பது தினசரி வழக்கமாகி விட்டது. உமாவும் தினந்தோறும் அவனுக்கு வேண்டிய பணிவிடைகளைத் தனக்குத் தெரிந்த மட்டும் செய்து கொண்டே வந்தாள். அதில் தனக்கு உற்சாகமும், விருப்பமும் தோன்றியது அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. அவள் எவ்வளவு களைத்திருந்தாலும் அவன் வருவதற்குள் அவனுக்கு வேண்டிய பணிவிடைகளை

முடித்து வைத்தாள். நாளடைவில் தன்னையுமறியாமல் அன்புக் கொடி தன் தளிர்க் கரங்களை நீட்டித் தன் இருதயத்தில் படர ஆரம்பித்து விட்டதை அவள் அறிய ஆரம்பித்து விட்டாள். அதைத் தொடர்ந்தே வெங்கடேசனைக் கண்டதும் ஒரு நாணம், பக்தி, சுவாதீனம் எல்லாம் வந்து குவிந்தன.

ஒரு நாள் அவள் நல்ல உறக்கம் கொள்ளவில்லை. ஆதலால் கண்ணை மூடியவாறு படுத்திருந்தாள். அப்பொழுது வெங்கடேசன் மெதுவாக எழுந்து வந்து தன் படுக்கையண்டை அமருவதை அவள் உணர்ந்தாள். அவளுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தும் அவள் பேசாமலிருந்தாள். அவன் அவள் கையை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டான். உமா அப்பொழுதும் பேசாமல் இருக்க முடியவில்லை. கண்ணைத் திறந்து புன்முறுவல் பூத்தாள். வெங்கடேசன் என்ன செய்வதென்று புரியாமல் திகிலடைந்து விட்டான். ஆயினும் உமாவின் வதனத்தில் அரும்பிய மந்தகாசம் அவனைத் தைரியமடையச் செய்தது.

"உமா!" என்றான் அவன், தேனொழுகும் குரலில்.



உமா தான் புதிதாகக் கண்ட சந்தோஷத்தில், அடையாளம் தெரியாமல் மாறி விட்டாள். உடலில் எப்பொழுதும் தெம்புடன் அவள் சிரித்துச் சிரித்து விளையாடினாள். கணவனைப் பராமரிப்பதில் வெறி கொண்டாள். பணிவு, அடக்கம், நகைச்சுவை முதலியவை தாமாகவே அவளிடம் வந்து அடைக்கலம் புகுந்தன.

அந்த ஆனந்தத்தில் ஊர், உறவினர் ஒன்றும் ஞாபகம் இல்லாமல் சந்தோஷமாக இல்லறம் நடத்த ஆரம்பித்தாள் உமா, அந்த அமைதியற்ற பிராந்தியத்தில்.



"கௌரி, உன் தொல்லையே எனக்குப் பெருந் தொல்லையாகப் போய் விட்டது" என்றாள் காமாக்ஷி அம்மாள்.

"நான் என்னம்மா செய்கிறேன்?"

"அது தான் சொல்லுகிறேன். இப்பொழுதெல்லாம் நீ வீட்டு வேலைகளைக் கூடக் கவனிப்பதில்லை. பாலு படுக்கையில் இருந்தது கூடத் தேவலை போலிருக்கிறது, இப்பொழுது நீ இருக்கும் நிலைமை. ஒரு வேலை செய்யவும் தோன்றாமல்,

எப்பொழுது பார்த்தாலும் இப்படி முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாயே?"

"இல்லையே அம்மா, நான் சாதாரணமாகத்தானே இருக்கிறேன்."

"நீ சாதாரணமாக இருந்து......அது இருக்கட்டும், ஏதாவது கிளாஸிலாவது சேர்ந்து படிக்கிறாயா?"

"எந்த வகுப்பிலே போய்ச் சேரச் சொல்லுகிறாய்? அவர் இன்னும் ஒரு மாதத்தில் வந்து விடுவாரே?"

ஏதும் பதில் சொல்லத் தெரியாதவளாய்ச் சமையலறைக்குச் சென்றாள் காமாக்ஷி அம்மாள். அவள் சென்ற பிறகு சுவாரஸ்ய மில்லாமல் தன் இடத்திலேயே உட்கார்ந்திருந்தாள் கௌரி. அவள் தனது அன்னையின் வார்த்தைகளைப் பற்றி நினைக்கவும் இல்லை, யோசிக்கவும் இல்லை. கொஞ்ச நாழிகைக் கெல்லாம் வீடு அமளி துமளியாகப் போகிறதென்று அவள் எவ்வாறு அறிவாள்?

அப்படியே உட்கார்ந்திருந்தவள் நாகலக்ஷ்மி அம்மாளின் உரத்த கூவுதல்களைக் கேட்டு ஓடோடியும் கீழே இறங்கி வந்தாள். காமாக்ஷி அம்மாளைச் சுற்றி வீட்டிலிருந்த எல்லோரும் சூழ்ந்து கொண்டிருந்தனர்.

யார் யாரோ டாக்டர் வீட்டிற்கு ஓடினார்கள். ஒன்றுக்கு இரண்டு டாக்டர்கள் ஐந்து நிமிஷத்துக்குள் ஆஜரானார்கள். எல்லோரையும் ஒதுங்கி நிற்கும்படிக் கூறிவிட்டு, கீழே கிடந்த காமாட்சி அம்மாளைப் பரீட்சித்துப் பார்த்தார்கள் டாக்டர்கள். எல்லோரும் ஆவலுடன் அவர்கள் முகத்தையே நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

டாக்டர்கள் எழுந்து வந்தார்கள். விஷயத்தைக் கூறினார்கள். கமாக்ஷி அம்மாளுக்குப் பாரிச வாய்வு அடித்து விட்டது. ஒரு பக்கம் பூராவும், முக்கியமாக வாயை இழுத்துக் கொண்டு போய் விட்டது. பேச்சில்லை. மிரண்டு மிரண்டு விழித்தாள் காமாக்ஷி அம்மாள். படுக்கையைத் தயாரித்து அதில் அவளைத் தூக்கி விட்டார்கள்.

*

உறவினர்களும், தெரிந்தவர்களும் வந்து பார்த்துவிட்டுச் சென்றார்கள். எல்லோரும் முதல் தடவையும் மூன்றாவது

தடவையும் பயம்தான் என்று கூறினார்கள். கௌரி மனம் கலங்கிக் கதறிவிட்டாள்.

"அம்மா, என்ன வார்த்தை சொன்னாய்! மறுபடியும் என்னுடன் பேசமாட்டாயோ?" என்று எந்தச் சமயமும் அலறலானாள் கௌரி.

எல்லோரும் அவள் தாய் சொன்ன வார்த்தைகள் தான் என்னவோ என்று அறிய ஆவல்கொண்டனரே தவிர, அவளைக் கேட்க அஞ்சினர். அப்படிக் கேட்டவர்களுக்கும் அவள் சரியாகப் பதில் சொல்லவில்லை.

எதிர்பார்க்காத இப் பேரிடி எல்லோரையும் நிலை தடுமாறச் செய்து விட்டது. நாகலக்ஷ்மி அம்மாளுக்கு, பெரியவள் என்பதனாலும், இத்தனை வருஷப் பழக்கத்தினாலும், கௌரிக்காகவும், இவர்கள் குடும்பத்தைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பும் சேர்ந்து கொண்டது. கௌரிக்குக் கேட்பானேன்!

இச் சந்தர்ப்பத்தில் கௌரி உமாவுக்குக் கடிதம் எழுதினாள். அம்மாவுக்கு வந்துவிட்ட துர்க்கதியைப் பற்றி விவரமாக எழுதினாள். அவளுக்கு மனத்தில் இருந்த பலவீனத்தில், உடம்பிலும் தெம்பு குன்றியிருந்தாற்போல் தோன்றிற்று. தானும் லலிதாவுமே வீட்டைக் கவனிப்பதற்குக் கஷ்டமாக இருப்பதுபோல் தென்பட்டது. ஆதலால் உமாவுக்குத் தாயின் அசௌக்கியத்தைப் பற்றித் தெரிவித்துவிட்டு, அவள் திரும்பி வந்துவிட்டால் நலமென்று குறிப்பிட்டிருந்தாள்.

உமா வந்து வீட்டுப் பாரத்தை ஏற்றுக்கொண்டு விடுவாளென்று கௌரி நம்பவில்லை. வீட்டில் இனி ஒருவர் இருந்தால், இன்னும் சிறிது சௌகரியமாக இருக்குமே என்று நினைத்து அவள் கடிதம் எழுதினாள். ஆனால், தினமும் உமாவிடமிருந்து, 'வர முடியாது' என்ற பதிலைத்தான் அவள் எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள்.

★

சிவா வந்து வழக்கம்போல் ஹாலில் உட்கார்ந்தான். கௌரியும் ராமையரும் அவனிடம் பேசச் சென்றார்கள். அவர்கள் பேச்சைக் கவனித்தாள் லலிதா. சிவா சொல்லிக்கொண்டிருந்தான்.

"நீங்கள் இப்படி உடம்பைக் கவனிக்காமல் இருக்கக் கூடாது. நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டே வருகிறதே. சுந்தரம் வந்தால் எங்களைப்பற்றி என்ன நினைப்பான்?"

கௌரி லேசாகச் சிரித்தாள்.

ராமையர் அதற்குள் பதில் சொல்ல முன்வந்தார். "ஆமாம். என்னப்பா செய்வது? வீடு நிம்மதியாக இருக்கும்படியாக இல்லையே. இன்றைக்குத்தான் கொஞ்சம் ஸ்திமிதப்பட்டது. அதிலும் நல்லதுவந்தாலும் கெட்டது வந்தாலும் கௌரிக்குத்தான் சிரமம்."

இதைக் கேட்கும்போது லலிதாவின் கண்களில் நீர் நிரம்பி விட்டது. 'ஆம், உண்மைதானே' என்று அவள் நினைத்துக் கொண்டாள். பிறகு, மனம் தளர்ந்த சமயங்களில் கௌரி, தன்னையும் உமாவையும் பாடச் சொல்லுவது ஞாபகம் வரவே, மாடிக்குச் சென்று, தம்பூரை எடுத்து வைத்துக்கொண்டு பாட ஆரம்பித்தாள்.

'ஓ ஜகதம்பா' என்னும் பாட்டு, சுகந்தப் புகைபோல் எழும்பி, மேக மண்டலமாகி மாறி மேலே செல்லும்போது எல்லோர் கவனத்தையும் கூடக் கவர்ந்துசென்றது. அடுத்தபடி 'நகுமோமு.'

கௌரிக்காகத்தான் பாட ஆரம்பித்தாளாயினும், பாடி முடிந்த பிறகு சிவா அதைக் கேட்டானா என்று லலிதாவுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவள் தன் ஆவலை அடக்கிக்கொண்டு, வெகு நாஸூக்காகப் பேச்சைத் துவக்கித் தன் கேள்வியைக் கேட்டாள். முதல் பாட்டின் நடுவிலேயே அவன் தன் வீட்டிற்குப் போய் விட்டான் என்று தெரிந்து அவள் ஏமாற்றமடைந்தாள்.

## 52

## ஜீவ கலை

உமா கடிதத்தைப் பார்த்துவிட்டுத் தன் கணவனிடம் காண்பித்தாள். வெங்கடேசன் அதைப் படித்துவிட்டு, "நாம் உடனே புறப்பட்டுப் போவோம்" என்று கூறி, கிளம்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் செய்ய ஆரம்பித்தான்.

ஊருக்குத் திரும்பிப் போகிறோம் என்றதிலிருந்து உமாவுக்கு அழுகையும், சிரிப்பும், வேடிக்கையும், விசனமும் மாறி மாறித் தோன்றிக்கொண்டே இருந்தன.

தான் தன் கணவனுடன்போய் இறங்குவதில் ஒரு குதூகலம். வீட்டு நிலைமையைப் பற்றின விசனம். வீட்டின் நிர்வாகத்துக்குத் தன் உதவியை நாடினளே கௌரி என்று ஒரு பெருமை. அக் கௌரவத்தை எவ்வளவு திறமையாக வகிக்கமுடியும் என்று காண் பிக்க வேண்டும் என்ற ஆசை. அதைத் தொடர்ந்தே தன் தாய் இதைப்பார்க்க முடியுமோ, என்ன நிலைமையில் இருக்கிருளோ என்ற துக்கம். தன் வீட்டினர் எல்லோர் எதிரிலும் கணவனுடன் எப்படிப் பழகவேண்டும் என்று நினைக்கும்போது ஒரு வேடிக்கை. குடும்பம் நடத்துவதில், தான் கௌரிக்கு நிகர் என்று நாகு மாமிக் குக் காட்டவேண்டும், மாமாவுக்கு இவரைப் பார்த்தால் எவ்வளவு பெருமையாக இருக்கும் என்ற ஆனந்த நினைவுகள். இவ்வாறு உமாவின் மனம் ஏரி கரையில் மோதும் சிறு சிறு சிருங்கார அலைகளைப் போல் தாவித் தாவி விளையாடின.

"என்ன, ஊருக்குப் போவதென்ருல் உங்களுக்கு மிகவும் வேடிக்கையாக இல்லை?" என்று கேட்டாள் உமா, சிரித்த முகத் துடன்.

"வேடிக்கை என்ன? ஒரு பக்கம் சந்தோஷம். ஒரு பக்கம் விசாரம்" என்ருன் வெங்கடேசன்.

உடனே உமாவின் முகம் தொங்கிவிட்டது. "ஆமாம், அம்மா எப்படி இருக்கிருளோ? என்னைப் பற்றி அவளுக்கு மிக வும் கவலை. நான் எங்கு உருப்படாமல் போய்விடுவேனே என்று உள்ளூறப் பயம். அப்படி ஆட்டி வைத்தேன் நான் அவளை. அவள் என்னை இப்பொழுது பார்த்தால் அவளுக்குச் சந்தோஷம் எல்லை காணுது. அதற்கு நான் கொடுத்து வைத்திருக்கிறேனே இல் லையோ?" என்று சொல்லும்போது அவளுக்கு 'கோ' வென்று அழுகை வந்துவிட்டது. அவளைச் சமாதானப்படுத்தினன் வெங்க டேசன்.



வெங்கடேசன் காமாக்ஷி அம்மாள் அருகிலிருந்து எழுந் தான். உமாவைப் பார்த்து, "நான் வெளியே போய்விட்டு வருகிறேன். இன்னும் யாரையும் பார்க்கவே இல்லையே" என் ருன்.

"இதோ வந்துவிட்டேன்" என்று எழுந்த உமா, அவ னுக்கு வெளியே செல்ல உடைகள் கொண்டு கொடுத்ததோடு நில்

லாமல், அவன் செருப்புப் போட்டுக்கொண்டானு என்று கவ னித்து, அவன் கண்மறையும்வரை அவனையே பார்த்துக்கொண்டு நின்ருள்.

இதைக் கண்ட கௌரி, ஆச்சரியம் மிகத் தன் மாமியாரை நோக்கிக் கண்ஜாடை காட்டினுள். நாகலக்ஷ்மி அம்மாளும் குறும் பாக உதட்டை மடித்தாள்.

உமா அடக்கமாகக் கணவனுக்குப் பணிந்து நடப்பதும், சுசு ருஷை செய்வதும், திரும்பி வந்திருப்பது உமாதானு என்று எல் லோரையும் பிரமிக்கச் செய்தன. 'அவள் கோபமெல்லாம் எங்கு போயிற்று, அவள் திடமான செய்கைகள் எங்கே? கண்டிப் பெல்லாம் என்னவாயிற்று?' என்று வியந்தார்கள் அனைவரும்.

உமாவோ, தன் வீட்டில் ஏற்பட்டிருக்கும் மாறுதல்களைக் கவனித்து அதிசயப்பட்டாள். லலிதா, தன் குறும்புத் தனமும், சிரிப்பும் போய்ப் பெட்டிப் பாம்பாக அடங்கிவிட்டாள். பொறு மையே உருவெனத் திகழ்ந்தாள். எப்பொழுதும் முகத்தில் ஒரு மந்தகாசம்.

"என்ன லலிதா, ஒரு 'சின்ன கௌரி' ஆகிவிட்டாயே?" என்ருள் உமா.

வெடுக்கென்று பதில் கூருமல் குறுநகை பூத்தாள் லலிதா.

சிவா வந்தான் வாசலில். உமா தான் அவனை வரவேற்ருள். அவளை யாரென்று தெரிந்தாலும், பழக்கம் இல்லாததன் காரண மாக அவன் உள்ளே நுழையச் சங்கோஜப் பட்டான். வாசலில் தயங்கியபடி, "அப்பா இருக்காரா? பாலு எங்கே?" என்று கேட்டான். உமா, "இரண்டு பேரும் வெளியே போயிருக்கிருர்கள்" என்று கூறியவுடன் அவன், "கௌரி...?" என்று இழுத்தான்.

"கௌரி எதிரகத்தில் இருக்கிருள்."

உடனே அவன் சரேலென்று எதிர் வீட்டை நோக்கி நடந்தான்.



"என்ன, கௌரி, முன்பெல்லாம் என்னைப் பிடித்து என்னெல்லாமோ கண்டிப்பாயே, இப்பொழுது என்ன சொல்லு கிருய்? சிவா உன்னைத்தான் கேட்டான்" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தாள் உமா.

இந்தக் கேலி கௌரிக்கு மிகவும் பிடித்தது போலும். அவள் தன்னையும் மறந்து விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தாள். அப்போது அவள் கழுத்து மெலிந்து நீண்டு விளங்கியது, அவள் பலவீன ஸ்திதியை எடுத்துக் காட்டியது.

இதைக் கவனித்த உமா, தன் தமக்கையின் உடம்பைப் பற்றி மிகவும் கலவரமடைந்தாள். ஆயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அவள் மூளை மட்டும் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. கௌரியின் மெலிவுக்குக் காரணம் என்ன என்று அவள் யோசிக்கலானாள். வேலை அதிகமா, தாயைப் பற்றிய கவலையா, சுந்தரத்தின் பிரிவா?

உமா ஒன்றும் கூறாமல், தானே அந்த வீட்டு நிர்வாகம் பூராவையும் ஏற்றுக் கொண்டாள். கௌரி எதிர் வீட்டிலேயே இருந்து ஓய்வெடுத்துக் கொள்ளுவதற்கு அடிக்கடி சந்தர்ப்பங்கள் ஏற்படுத்தினாள். உமா திரும்பி வந்த பிறகு, வீட்டிற்கே ஒரு ஜீவகளை வந்து விட்டது போல் இருந்தது. லலிதா முன்போல் சிரித்து விளையாட ஆரம்பித்தாள். கௌரியும் அவ்வப்பொழுது தன் மனக் குறைகளை மறந்து, முக மலர்ச்சியுடன் இருக்க எத்தனித்தாள்.

வீட்டில் வெங்கடேசனும் உமாவும் குடித்தனம் நடத்த, மற்றவர்கள் அவர்கள் குடையின் கீழ் இருந்தார்கள் என்றே சொல்லலாம்.

இந்த எழில் மிகுந்த சித்திரத்தில் மாசு படிந்தாற் போல் இருந்தது காமாக்ஷி அம்மாளின் படுக்கை ஒன்றுதான். அவள் உள்ளத்தில் என்ன என்ன எண்ணங்கள் எழும்பினவோ— ஒன்றும் வெளிக்குத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இது ஒன்று தான் மிகவும் பரிதாபமாக இருந்தது. அந்தக் குறை ஒன்று இல்லாவிட்டால் அவ்வகமே ஓர் ஆனந்த சாகரமாக விளங்கி இருக்கும்.

ராமையர் கூடக் கவனிக்கும்படி இருந்தன உமாவின் மாறுபட்ட குணதிசயங்கள். அவர் மகாலிங்கையரைக் கூப்பிட்டு, "மகாலிங்கம், எல்லோரும் என்ன என்னவோ சொல்லிக் கொண்டிருந்தார்களே, குழந்தை எப்படி குடும்பத்தை நடத்துகிறாள் பார்த்தாயா! பையனும் தங்கம். அவளே தேர்ந்தெடுத்துக் கொண்டதில் என்ன தப்பு? ஆனால், திருமாங்கல்யம் என்றும்

அக்கினி சாட்சியாக மணமென்றும் இல்லாமல் இருப்பது என் மனசுக்கு என்னவோ போல் இருக்கிறது" என்றார்.

அதற்கு மகாலிங்கையர், "அதற்கென்ன பிரமாதம்? நாம் எதிர் பார்த்ததற்கு எவ்வளவோ சௌக்கியமாகத் தான் முடிந் திருக்கிறது. பாவம், மன்னியைத்தான் பகவான் காலை ஒடித்துவிட் டார். ஏதோ நம்மாலானதைச் செய்கிறது" என்று கூறினார்.

"அது தான் எனக்கும் கவலையாக இருக்கிறது. இந்த ஒரு வருஷம் தாண்டினால் பயம் இல்லை என்கிறார்கள். என்னவோ, பசங்கள் அதிருஷ்டம் எப்படி இருக்குமோ! இந்தக் குறை என்னத்துக்கு அவளுக்கு?"

"ஆகா, அதற்கு என்ன கஷ்டம்—பிறக்கப் போவது தை மாதம் தானே? சுந்தரமும் வந்து விடுகிறான். கிரமமாகக் கல்யாணத்தை முடித்து விட்டால் போகிறது."

ராமையரும் மகாலிங்கையரும் சேர்ந்து, உமாவின் கல்யாணத்தை அக்கினி சாட்சியாக நடத்துவதாகத் தீர்மானித் தனர். வெங்கடேசனிடமும் இதைப் பிரஸ்தாபித்தார்கள். அவன் ஊருக்குச் சென்று தன் அக்காவையும் தம்பியையும் பார்த்துச் சொல்லி விட்டு வருவதாகக் கூறினான்.

## 53
## தங்கையின் தனிமை

வெங்கடேசன் கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டு, சந்தோஷமாகப் பாடிக் கொண்டே உமாவைக் கூப்பிட்டுக் கொண்டு வந்தான். உமாவும் ஆவலுடன் விசாரித்தாள். அவன் கையிலிருக்கும் கடிதத்தைக் காற்றில் வீசிக் கொண்டே, "என் தங்கை எழுதி இருக்கிறாள். அக்கா, மாமாவாத்துக்குப் போய்ச் சமாசாரத்தைத் சொன்னாளாம். மாமா, மாமிக்கு மிகவும் சந்தோ ஷமாம். மாமாவுக்கு உன் அப்பாவைத் தெரியுமாம். ஆதலால், எல்லாம் பேஷாகப் போய்விட்டது அல்லவா?" என்றான்.

உமாவும் ஒரு பளு நீங்கினாற் போல் பெரிதாக ஒரு மூச்சு விட்டாள். வெங்கடேசன் மேலும் கூறினான்.

"அவர்களுக்கு உன்னைப் பார்க்க வேண்டும் என்று மிகவும் ஆவலாக இருக்கிறதாம். உன் தாயின் உடல் நிலை காரணமாக அவர்களே நாளைக்கு இங்கு வருகிறார்களாம்."

"நாளைக்கா?" என்றாள் உமா பீதியுடன்.

கணவனின் முகம் ஒரு கணம் மாறியது. பிறகு தெளிந்த வனாய், அவளைச் சமாதானப் படுத்தினான். "ஏன் பயப்படுகிறாய் உமா? நீ அவர்களைப் பார்த்தாலல்லவோ தெரியும்? உன்னைக் கண்டவுடன் அவர்கள் மகிழ்ச்சியில் மூழ்கி விடுவார்கள். இல்லா விட்டால், பெற்றோர் இல்லாததற்கு அவர்களையே பெற்றோர் என்று இருக்கும் நாங்கள் அவர்கள் இஷ்டத்துக்கு விரோதமாய் ஏதும் செய்வோமா?"

"உங்கள் இஷ்டத்தையே நான் கேட்கவில்லை போல் இருக் கிறதே? என் சௌகரியத்திற்காக..." அதற்கு மேல் அவளால் கூறமுடியவில்லை. குரல் கம்மி, ஒன்றும் இல்லாத ஓசையாக ஆகிவிட்டது.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. எனக்கென்ன பைத்தியமா? நீ எது சொன்னாலும் கேட்டுவிட? இதோ பார்......"

வெங்கடேசன் தன் பெட்டியைத் திறந்து தன் டயரியை எடுத்து அவளிடம் கொடுத்தான். "உன்னை முதலில் சந்தித்ததைப் பற்றி என்ன எழுதியிருக்கிறேன் பார்...இதோ நாம் சினிமாவில் பேசினோமே...இதோ அன்று கல்கத்தாவில்..."

வெங்கடேசன் ஒவ்வொன்றையும் திருப்பிக் காட்டி னான், அவளுக்கு. அவள் வேகமாகப் படித்துக் கொண்டு வந்தாள்.

அவன் தன்னைக் கண்டதிலிருந்தே தன் மீது அன்பு கொண் டான் என்று அறிந்த போது அவள் பெருமிதம் கொண்டாள். மனமும் சாந்தி அடைந்தது.

இது சிறிதுநேரந்தான். பிறகு பழைய உமா, தன் கொள்கை கள், நம்பிக்கைகளுக்காகத் தீவிரமாக வாதாடும் உமா, மீண்டும் தோன்றி விட்டாள்.

"என்னவோ, என்னை அவர்களுக்குப் பிடிக்கவேண்டுமே!" என்றாள். வெங்கடேசன் லேசாகச் சிரித்தான்.

வெங்கடேசன் வெளியே கிளம்பினான். உமாவும் அத்துடன் அவ்விஷயத்தை மறந்து விட்டு, தன் தாயிடம் சென்றாள். டாக்டர் வந்திருந்தார். அவருக்கு வேண்டிய சுசுருஷைகள் செய்வதில் அவள் முனைந்தாள்.



கௌரியும் லலிதாவும் கூடத்தில் பல்லாங் குழி ஆடிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன தப்பாட்டம் ஆடுகிறாய் லலி, கவனம் வேண்டாமா?"

லலிதா தன் தவறைத் திருத்திக் கொண்டாள். ஆனால் மறுபடியும் அவள் கண்களை நீர் மறைத்தது. இரண்டு சோழிகள் மீண்டும் தவறி விழுந்தன. இரண்டு சொட்டுக் கண்ணீரும் விழுந்து அவைகளுடன் கலந்து கொண்டன.

"உனக்கு என்னடி வந்து விட்டது?" என்று கேட்டாள் தமக்கை.

லலிதா குனிந்த தலை நிமிரவில்லை. கௌரி தன் விரல்களால் தங்கையின் நெற்றியை நிமிர்த்தி, அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். ஆனால் லலிதா தன் இரு உதடுகளையும் இறுகக் கடித்துக் கொண்டு, தன் விழிகளைத் தாழ்த்திக் கொண்டாள். ஆயினும், முத்துத் தொடுத்தாற் போல் கண்ணீர் கன்னத்தின் மேல் உருண்டு செல்வதை அவளால் நிறுத்த முடியவில்லை. கௌரிக்கு ஒன்றும் புரியவில்லை. திகைப்படைந்தவளாய், சற்று நேரம் அப்படியே சமைந்து விட்டாள். பிறகு மெல்ல, "ஏனம்மா அழுகிறாய்? என்ன சமாசாரம்? என்னிடம் சொல்லேன்" என்றாள் பரிவாக.

"அ...க்...கா" என்று ஆரம்பித்த லலிதா, மேலே பேச முடியாமல், துக்கத்திற்கு இடங் கொடுத்தாள். அழுகை அவள் தோள்களை உலுக்கியது. கௌரி, பல்லாங்குழியைத் தூரத் தள்ளி விட்டு, தங்கையைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். அவள் தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விசும்பினாள் லலிதா.

ஒருவாறாக அவள் சமாளித்துக் கொள்ளும் வரை, கௌரியும் ஒன்றும் பேசவில்லை. பிறகு மெல்லப் பேச்சைத் துவக்கினாள்.

"ஏனம்மா, உனக்கு உடம்பு சரியாக இல்லையா?"

"ஒன்றுமில்லை, அக்கா."

"பரவாயில்லை, சொல்."

"என்னவோ எனக்கு மிகவும் தனியாக இருந்தது. நீயும் முன்போல் சந்தோஷமாக இல்லைபோல் எனக்குத் தோன்றுகிறது.

அம்மாவும் படுத்துக் கொண்டு விட்டாள். வாய்ப் பேச்சுக்கூட இல்லை. என்னவோ சொல்லத் தெரியாமல் எனக்குத் தூக்கம் துக்க மாக வருகிறது. தன்னந் தனியாக இருப்பதுபோல் இருக்கிறது."

"நான் என்ன மாறி விட்டேன்? அம்மா படுத்து விட்டா லென்ன, குணமாகி விடுகிறது."

"குணமான அன்றைக்குப் பார்த்துக் கொள்வோம். உமா அம்மாவை எதிர்த்துப் பேசி, எவ்வளவோ நோகச் சொன்னாள். ஆனாலும் அவளைக் கவனித்துக் கொள்ள அம்மா இருந்தாள். எனக்கு...?" துக்கம் அவள் பேச்சைத் தடுத்தது. அவள் அதை அடக்க முயன்றாள்.

"சீ அசடே! இப்படி யெல்லாம் பேசாதே. அப்பா இல்லையா? பாவம் அவர் இப்பொழுதெல்லாம் எவ்வளவு செய்கிறார்! மாமா இல்லையா, மாமிதான் இருக்கிறாளே?"

"உன்னோடு நான் என்ன அக்கா சொல்லுவது? யார் இருந் தாலும் நம்ம அம்மாவாகுமா? உனக்கு பாலுதான் செல்லம். நான் என்ன இருந்தாலும் தனி..." மறுபடியும் விக்க ஆரம்பித்து விட்டாள் லலிதா.

"எப்படித் தனி, சொல். கோபு அண்ணாவும் மன்னியும் வந்திருக்கிறார்கள். சாரதா வேறு அடிக்கடி வந்து விட்டுப் போகி றாள். வீட்டில் தனியாக இருக்கவே பொழுது அகப்பட மாட்டே னென்கிறது. நீ ஐந்து பெயர் நடுவில் பிறந்தும் தனியாக இருக்கி றாயா? பேஷ்! இன்னும் எத்தனை அக்காமார்கள் வேண்டும் உனக்கு?" என்று வேடிக்கையாகப் பேச எத்தனித்தாள் கௌரி.

லலிதா பதிலுக்குச் சிரிக்கவே இல்லை. தலை கவிழ்ந்தவள் அவ்வப்போது தலைப்பினால் முகத்தைத் துடைத்துக் கொண்டும், மூக்கைச் சிந்தியவாறும் உட்கார்ந்திருந்தாள். கௌரி அவளுக்கு எவ்விதம் தேறுதல் கூறுவது என்று தெரியாமல் தத்தளித்தாள்.

"உமா தான் இருக்கிறாளே, அவள் முன்போலில்லாமல் எவ் வளவு அழகாக வீட்டைக் கவனிக்கிறாள், பார். உனக்குப் பாதி வேலை குறைந்து விட்டது அல்லவா?"

"அதெல்லாம் வாஸ்தவந்தான், அக்கா. எனக்குத் தான் விவரிக்கத் தெரியவில்லையே? முன்னே என்றால் உன்னிடம் நான் இன்னும் நெருங்கிப் பழகுவேன். உமாவுக்கு, வீட்டு வேலை விட்டால், அத்திம்பேரைக் கவனிக்கச் சரியாகி விடுகிறது. இன்னும்.

கொஞ்ச நேரம் மிகுந்தால் அவர்கள் இருவரும் அவர்களுடைய சங்கங்களுக்கும் மீட்டிங்குகளுக்கும் ஓடி விடுகிறார்கள். என்னைக் கவனிக்கிறதுதான் வேலையாக்கும்!"

ஏக்கமும் துக்கமும் அவள் நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளி வந்தன. கௌரிக்கு லலிதாவின் மனக்குறை என்ன என்று புரியாததனால், அவள் செய்கையும் தோற்றமும் அவளுக்கு வேடிக்கையாகக் கூடத் தென்பட்டன. சின்னக் குழந்தைகளின் விளையாட்டைப் பரிகசிக்கும் பாவனையில் அவள் தங்கையின் முதுகைத் தடவிக் கொடுத்தாள். அவள் முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. "நீ மிகவும் பெரியவளாகப் போய் விட்டிருக்கிறாய், ஹூம்!" என்றாள் கௌரி, விளையாடும் தோரணையில்.

"இல்லை, இன்னும் பச்சைக் குழந்தை! இடுப்பில் எடுத்துக் கொண்டு 'ஜூ' காண்பித்துச் சாதம் ஊட்டேன்" என்றாள் லலிதா வெடுக்கென்று. அவள் குரலில் சலிப்புத் தோன்றியது. கௌரிக்குச் சிரிப்புத்தான் அதிகரித்தது. "அது இருக்கட்டும், நான் எப்படி மாறி விட்டேன், சொல், பார்ப்போம்?" என்று கேட்டாள்.

"நீ........." என்று வாயெடுத்தாள், லலிதா. அதற்குள் ஒரு குரல், "கறுத்து, இளைத்து, கண் குழிந்து, பதினைந்து நாள் பட்டினி கிடந்தாற் போல் மாறி விட்டீர்கள்" என்றது. இரு சகோதரிகளும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள்.



## 54

# ஹேமாவின் மறுமலர்ச்சி

சிவா வாசற்படியில் நின்று கொண்டிருந்தான். அவன் முகம் சிரிப்பினால் மலர்ந்து காணப்பட்டது.

"இப்படித்தான் பேச்சு ஒட்டுக் கேட்பதோ?" என்று சுவாதீனமாகக் கடிந்தாள் கௌரி.

சிவா வாய் விட்டுச் சிரித்தான். பிறகு, "என்ன, நீங்கள் மிகவும் மாறி விட்டீர்களா? லலிதா என்ன சொல்லுகிறாள்?" என்று கேட்டான்.

"அவள் சொல்லுகிறாள்—நான் மிகவும் மாறி விட்டேனாம். அவளை யாரும் கவனிப்பதில்லையாம். அவள் தனியாம். மிகவும் தனிமையில் இருப்பதுபோல் இருக்கிறதாம். ஏன், லலி, அப்படித் தானே?"

"போதும், எல்லாவற்றையும் எல்லோரிடமும் ஒப்பிக்கச் சொன்னேனா?" என்று சினந்து கூறிவிட்டு முகத்தைத் தூக்கிக் கொண்டு மாடி ஏறினாள் லலிதா. ஆனால் அவள் வெகுதூரம் சென்று விடவில்லை. கௌரி, சிவா இருவர் கண்ணிலும் படாமல் ஓரிடத்தில் அமர்ந்து அவர்கள் பேச்சைக் கவனிக்கலானாள்.

"அவள் என்னவோ பெரிய மனுஷிபோல் மேலே படிப்பு வேண்டாம் என்று சொல்லி விட்டாற்போல் இருக்கிறதே?" என்றான் சிவா.

"ஆமாம், வீடு அப்பொழுது திமிலோகப் பட்டதில் அப்படிச் சொல்லி விட்டாள் போலிருக்கிறது. அந்தக் கலவரத்தில் பள்ளிக்கூடம் போவதைக்கூட நிறுத்தி விட்டாள்."

"இப்பொழுதுதான் உமா வந்து விட்டாளே, பள்ளிக்கூடம் போகச் சொல்லுங்களேன். பொழுது போகவில்லையாக்கும்...... ஹிந்தி வகுப்பிலாவது சேர்த்து விடுங்கள்."

"ஆமாம், அப்படித்தான் செய்ய வேண்டும். சின்னவள் தானே, பாவம்."

"இவள் ரொம்பப் பெரியவள்!" என்று முணுமுணுத்துக் கொண்டாள் லலிதா.

அதற்கப்புறம் பேச்சு மாறிற்று.

"நீங்கள் கேசவ ராவ் விஷயம் கேட்டீர்களா?" என்று ஆரம்பித்தான் சிவா.

'என்ன?"

"அவன் மனைவி வீட்டுக்கு வந்து விட்டாள். நன்றாகக் குணமாகி விட்டதாம். இன்னும் கொஞ்ச நாள் அதிக சிரமப் படுத்திக் கொள்ளாமலிருந்தால் பூரண குணமே அடையலா மாம்."

"அப்படியா, நான் போய்ப் பார்த்துவிட்டு வரவேண்டுமே?" என்றாள் கௌரி.

"வாருங்களேன். இப்பொழுதேவேண்டுமானாலும் போகலாம்."

"சரி, இதோ வருகிறேன்" என்றாள். லலிதாவை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுக் கௌரி அவனுடன் கிளம்பினாள். எதிர் வீட்டில் நாகலக்ஷ்மி அம்மாள் தன் தாயுடன் இருக்கவே அவளிடம் சொல்லி விட்டு வரச் சென்றாள். காமாக்ஷி அம்மாளைப் பார்த்து விட்டுப் போகலாமென்று சிவாவும் கூட உள்ளே நுழைந்தான்.

கௌரி சமாசாரத்தைச் சொன்னவுடன், காமாக்ஷி அம்மாளுக்குப் பாலுவைத் துணை வைத்து விட்டு, நாகலக்ஷ்மி அம்மாளும் அவர்களுடன் புறப்பட்டு விட்டாள்.

*

ஹேமா சோபாவில் உட்கார்ந்திருந்தாள். அருகில் அமர்ந்திருந்தான் கேசவராவ். இருவரும் ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்து விட்டு நகைத்துக் கொண்டிருந்தனர்.

உள்ளே நுழைந்த மூவரும் இந்தக் காட்சியைக் கண்டு, அந்தச் சிரிப்பு தங்களையும் தொத்திக் கொண்டாற்போல், ஒன்றாக இளித்தார்கள். கேசவராவ் எழுந்து அவர்களை வரவேற்றான்.

தன் சிநேகிதியைக் கண்டதும் கௌரிக்கு என்ன சொல்லுவதென்று தெரியவில்லை. முன்பு ஒரு நாள் கேசவராவ் சொன்ன வார்த்தைகள் அவளுக்கு ஞாபகம் வந்தன. ஹேமா அப்படி மாறிப் போயிருந்தாள். மெலிந்து, எலும்புக் கூட்டின்மேல் இழுத்து மூடிய வெள்ளைத் தோலும், அதன்மேல் குறுக்கும் நெடுக்கும் ஓடிய பச்சை நரம்புகளும் மறைந்து, இப்பொழுது பசுமை பெற்ற சருமமும், இளம் ரோஜா நிறம் படர்ந்த முகமும், முத்துப் பற்களும், அவள் பெயருக்கேற்ப, பூத்துத் தொங்கும்

பொற்கொடியென விளங்கினாள் ஹேமலதா. கௌரி அப்படியே ஸ்தம்பித்து விட்டாள். ஹேமாவின் கண்கள் ஆரோக்கியம் பெற்றதனால் கருகுமணிகள் போல் பளபளத்தன.

நாகலக்ஷ்மி அம்மாள் கேசவராவிடம் அவன் தாய் எங்கே என்று விசாரித்தாள்.

"அம்மாவும் அப்பாவும் ஊரில் ஏதோ வேலையாம், அதற்குப் போயிருக்கிறார்கள். அது வெகு நாளாயிற்று. ஹேமுவின் பெற்றோர்களைச் சகாயத்துக்கு வரும்படி எழுதினேன். அவர்களுக்கும் சௌகரியமில்லையாம். நாங்கள் இருவரும் தான் இருக்கிறோம். இப்பொழுது நீங்கள் வந்தீர்கள்" என்று கூறிச் சிரித்தான் கேசவ ராவ்.

இதைக் கேட்கவும் நாகலக்ஷ்மி அம்மாளுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அவள் இருதயத்தை யாரோ பிழிவது போலிருந்தது.

"ஏண்டாப்பா, சகாயத்துக்கு?"

"சமையல்காரன், ஒரு வேலைக்காரி."

தன் வீட்டு விஷயங்கள் இன்னும் பிரஸ்தாபப்படுவதில் ஹேமா இஷ்டப்படவில்லை போலும். சிவா இருந்ததனாலேயோ? அவள் கௌரி பக்கம் திரும்பி, "கௌரி, நீ என்ன இப்படியாகி விட்டாயே?" என்று கேட்டாள்.

உடனே மத்தாப் போட்டாற்போல் பேச்சு கௌரியைப் பற்றியும், அவள் வீட்டைப்பற்றியும் திரும்பியது. சிவா, கேசவராவிடம் சொல்லுவதுபோல், ஹேமாவிடம் பேசினான்.

"சுந்தரம் வந்தால் என்ன சொல்லமாட்டான்? எப்படித்தான் உடம்பை அசட்டையாக வைத்துக்கொண்டிருக்கிறாள், பார்."

"அவள் என்ன செய்வாள்? வீட்டில் அப்படிப்பட்ட சமயம். இப்பொழுதுதான் சற்று ஓய்வு" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"அதெல்லாம் என்ன? சுந்தரம் வந்தால் அவனுக்கு எவ்வளவு பெருமையாக இருக்கும் தெரியுமா, தனக்காக ஒருவர் இங்கே இப்படி ஏங்கி இளைத்தார்கள் என்றால்?" என்று கேலி செய்தான் கேசவராவ்.

இந்தப் பரிகாசம் யாவும் கௌரிக்கு இதமாகவோ, ரசமாகவோ படவில்லை. அவை அவள் எங்கேயோ அடைத்து வைத்திருந்த உணர்ச்சிகளை மீண்டும் கிளறிவிட்டன.

ஹேமா இதைக் கவனித்தாள். கௌரியின் முகபாவத்திலிருந்து அவள் கௌரியின் மனச் சஞ்சலத்தை ஒருவாறு ஊகித்தாள். மறுபடியும் பேச்சை மாற்றினாள்.

வெகுநேரம் இப்படியே பேசிக்கொண்டிருந்தனர். பலவித விஷயங்கள் அவர்களிடம் சிக்கி, சீர்பட்டு, ஒதுக்கப்பட்டு, பண்படைந்தன. அப்படி விளாசிவிட்டார்கள் எல்லோரும். நாகலக்ஷ்மி அம்மாளும் அவர்களுடன் கலந்துகொண்டு, மருந்து, சிகிச்சை என்பவற்றிலிருந்து, சினிமா, பாட்டு, நாகரிகம் என்பன வரை சகலமுமாகப் பேசினாள். இத்தனை நாட்களாக எதிலும் மனம் போகாமல் காலங்கழித்த கௌரியும், இன்று அவர்களுடன் உற்சாகத்துடன் பேசுவதைக் காணும்போது நாகலக்ஷ்மி அம்மாளுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. நாழிகையானாலும் பேச்சை நிறுத்த வில்லை.

மாலைக் கதிரவன் தன் செம்பு விரல்களை அவ் வறைக்குள் நுழைத்தான். நாழிகையாகிவிட்டது என்று எல்லோரும் எழுந்தார்கள்.

"எப்படி இருக்கிறாள், நம்ம ஹேமு, இப்பொழுது?" என்று கேசவராவ் கௌரியைக் கேட்டான்.

"அவளுக்குக் குணமாகும் மருந்து நீங்கள்தாம். உங்கள் சிரித்த தன்மை எந்தக் கொடிய ரோகத்தையும் விரட்டி அடித்து விடும்" என்று பதிலளித்தாள் கௌரி.

அன்புடனும், பெருமையுடனும் கணவனை நோக்கினாள் ஹேமலதா.

## 55

## சந்தோஷச் செய்திகள்

காலையில் எழுந்ததும் யாரோ வீட்டுக் கதவைத் தட தட வென்று தட்டியதைக் கேட்டு மகாலிங்கையர் ஒன்றும் புரியாதவராய்க் கதவைத் திறந்தார். அங்கு வெங்கடேசன் நின்றிருப்பதைப் பார்த்தவுடன் அவர் சற்று நிம்மதி அடைந்தார். சிரித்து

வரவேற்று அவனை உள்ளே அழைத்துச் சென்று உட்காரச் சொன்னார்.

"வா அப்பா, வெங்கடேசா, உட்கார். நீ எப்பொழுது ஊரிலிருந்து வந்தாய்?"

"நேற்று ராத்திரியே வந்துவிட்டேன். நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கவே, எழுப்பவில்லை. உங்களுக்கு ஒரு சந்தோஷ சமாசாரம் கொண்டுவந்திருக்கிறேன்."

"என்ன? உங்கள் மாமா கல்யாணத்துக்கு நாள் வைத்து விட்டாரா?"

"ஆமாம், தைமாதம் 25 - ஆம் தேதி."

"அப்பாடா!" என்றார் மகாலிங்கையர்.

அவருக்கு ராமையரிடம் வாக்குக் கொடுத்தபடி உமா—வெங்கடேசன் விவாகத்தைச் சாஸ்திரப்படி நடத்திவிடவேண்டுமே என்ற கவலை மிகவும் இருந்தது. வெங்கடேசனின் வீட்டினர் என்ன சொல்லுவார்களோ என்று அவர் திகிலடைந்திருந்தார். வெங்கடேசன் எவ்வளவு சொல்லியும் அவர் கேட்கவில்லை. அவன் மாமாவிடம் சென்று நாள் பார்த்துக் குறித்துக்கொண்டு, அவர் சம்மதத்தைச் சந்தேகமில்லாமல், தெரிந்துகொண்டாலொழிய அவர் ஒத்துக்கொள்ள மாட்டேனென்று கூறி, ஒரே பிடியாக அவனை ஊருக்கு அனுப்பிவிட்டார். இப்பொழுது அவன் சொன்னதைக் கேட்டு அவர் மிகவும் திருப்தி அடைந்தார்.

"மிகவும் சந்தோஷம். மாமி இனிக் கல்யாணத்துக்குச் சாமான்கள் சேகரிக்க ஆரம்பித்துவிடுவாள்."

"நான் சொல்லவந்த விஷயம் வேறு மாமா."

"என்ன?"

"இதோ பாருங்கள், சுந்தரத்தினிடமிருந்து 'கேபில்.' அவன் இன்னும் நான்கு நாட்களில் வருகிறானாம்."

மகாலிங்கையர் ஒரு கணம் நம்பவில்லை. பிறகு அவர், "உன்னிடம் எப்படிக் கிடைத்தது? யார் பேருக்கு வந்திருக்கிறது?" என்று கேட்டார்.

"உங்கள் பேருக்குத்தான், மாமா. இப்பொழுதுதான் வந்தது. நான் வாசலில் வந்ததற்கும் தந்திச் சேவகன் வருவதற்கும் சரியாக இருக்கவே, கை யெழுத்துப் போட்டு வாங்கிக்கொண்டேன். 'கேபில்' என்று தெரியவே, சுந்தரத்தி

னிடமிருந்துதான் இருக்கும் என்று எண்ணி நானே பிரித்தேன்."

"நல்ல காலம். நானே வாங்கிக் கொண்டிருந்தால், பிரிக்கக் கூடத் தெரிந்திருக்காது. எனக்கும் ஒன்றும்......" அவர் குரல் தழுதழுத்தது. பிறகு சுயப் பிரஞ்ஞை பெற்றவராய், "கௌரி, மாமியைக் கூப்பிடு" என்று உரக்கக் கூவினர்.

நாகலக்ஷ்மி அம்மாள் வேகமாக வந்து விஷயத்தை விசாரித்தாள். பிறகு தன் மருமகளை அழைக்கலானாள்.

"கௌரீ, அடி கௌரீ!" என்ற, ஆனந்தத்தினால் நடுங்கும் அவள் குரல், வீடெல்லாம் ரீங்காரம் செய்தது.

"என்ன மாமி?" என்று ஓடிவந்த கௌரி சமாசாரத்தைக் கேட்டதும், சிரிக்கவும் இல்லை, ஒரு வார்த்தை கூறவும் இல்லை. கெட்டியாகப் பக்கத்திலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டாள். மறு கணம் மரம் வெட்டிச் சாய்த்தாற் போல் கீழே விழுந்து விட்டாள்.

"திடு திப்பென்று நீ அப்படிச் சொல்லி இருக்கக் கூடாது" என்று மகாலிங்கையர் தம் மனைவியைக் கடிந்தார்.

நாகலக்ஷ்மி அம்மாள் ஒன்றும் பதில் கூறுமல் சென்று, கௌரியின் தலையைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டாள்.

இதற்குள் எதிர் வீட்டிலிருந்து லலிதா, உமா, கோபு, பாலு, சுசீலா, ராமையர் யாவரும் அங்கே வந்து விட்டனர். பாலு, அக்காள் விழுந்து கிடப்பதைப் பார்த்து அழ ஆரம்பித்து விட்டான். லலிதா அவனைச் சமாதானப் படுத்தினள். மகாலிங்கையர் எல்லோருக்கும் சமாசாரத்தைச் சொன்னர்.

உமாவும் வெங்கடேசனும் கௌரிக்கு வேண்டிய சுசுருஷைகளைச் செய்ய ஆரம்பித்தனர்.



உமாவின் கல்யாணத்திற்கான ஏற்பாடுகள் துரிதமாக ஆரம்பிக்கப்பட்டன. கௌரியும் லலிதாவும் இந்த அலுவல்களில் தங்கள் தங்கள் மன உணர்ச்சிகளுக்கு இடங் கொடாமல் இருக்க வசதி கண்டனர். சுந்தரம் வரப் போகிறான் என்று தெரிந்ததிலிருந்து சிவாவும் கேசவராவும் அடிக்கடி இவர்கள் வீட்டிற்கு வரத் தலைப் பட்டனர். சிவா அடிக்கடி வருவதில் லலிதா ஒரு விதச் சந்தோஷம் கொண்டாள்.

சுந்தரத்தின் வரவுக்காக மற்றவர்கள் இவ்வளவு குதூகலத்துடன் காத்துக் கொண்டிருக்கும் போது, தான் மட்டும் தெம்பின்றிக் காணப் பட்டால் நன்றாக இராது என்று, கௌரியும் முகத்தில் போலிச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டாள். உள்ளூற அவளுக்குச் சுந்தரத்தின் வருகையைக் கேட்டுச் சந்தோஷந்தான். அவளது காதல் நிறைந்த குருதி யோட்டம், அச் செய்தியைக் கேட்டு, சுழலமிட்டு ஆனந்தக் கூத்தாடத்தான் செய்தது. ஆயினும் அதனூடேயே, 'நம் பிற்கால வாழ்க்கை எப்படி இருக்கப் போகிறது? உமா, முன்பெல்லாம் கூறுவாளே, அது போல் அவர் என்னோடு இருக்கச் சகியாமல் ஓடித்தான் போனாரோ? அப்படிப் பட்டவர் இனி எவ்வாறிருப்பார்? அவர் மனப்பான்மையே மாறி விட்டிருக்குமோ? இனி எப்படி இருப்பது? சுவாமி, எனக்கு வழி காண்பிப்பாயாக!' என்றெல்லாம் எண்ணங்கள் தோன்றி அவள் திகைத்து நின்றாள்.

சாரதாவும் கல்யாணத்தை முன்னிட்டு வந்திருந்தாள். கோபு சொல்வதற்கெல்லாம் சுசீலா கேள்விகள் கேட்க, பஞ்சுவின் 'நான்' என்ற முதல் அத்தியாயத்திற்குச் சாரதா தலைப்புக் கட்ட, மணமகன் மணமகளான வெங்கடேசனும் உமாவுமே தங்கள் விவாகத்திற்கு வேண்டிய வேலைகளைச் செய்ய, வெகு விநோதமாக இருந்தது அவ் வீட்டுக் காட்சி.

நான்கு நாட்கள் பறந்தோடின.

அன்று காலை இரண்டு வீடுகளும் அலங்காரத்துடன் காணப் பட்டன. கோபு, சிவா, கேசவராவ், வெங்கடேசன் யாவரும் விமான நிலையத்திற்கு டாக்ஸி எடுத்துக் கொண்டு போயிருந்தனர். நாகலக்ஷ்மி அம்மாளும் சிறு குழந்தை போல் துள்ளி விளையாடினாள் என்றே சொல்லலாம். லலிதாவும் உமாவும் அத்திம்பேரை எவ்விதம் வரவேற்பது என்ற தீவிர ஆலோசனையில் ஆழ்ந்து விட்டார்கள். இதில், அமைதியாக இருந்தது நான்கு ஆத்மாக்களே. காமாக்ஷி அம்மாள்— விதியின் கொடூரத்தினால், ராமையர்— சுபாவத்தினால். மகாலிங்கையர்—தாங்க மாட்டாத திருப்தியினால். கௌரி—குழப்பத்தினால். மற்றவர்கள் வெளியே தெரியுமாறு இன்பத்தில் மிதக்க, இந்த நால்வரும் ஒன்றும் கூறாது இருந்தனர். ஆனால் இடையிடையே ராமையரும் மகாலிங்கையரும் கௌரியைப் பெருமிதத்துடன் நோக்காமலிருக்க முடியவில்லை. 'இவர்கள்

பமும் பாட்டைப் பார்த்தால் நான் தான் கல்யாணப் பெண் போலிருக்கிறதே' என்று எண்ணிக் கௌரி புன் முறுவல் பூத்தாள். மௌனமே உருவாக அவள் தன் தாயினருகில் அமைதியாக உட்கார்ந்திருந்தாள்.

வாசலில் கார் வந்து நின்றது. நாகலக்ஷ்மி அம்மாள் தட்டில் ஆலத்தியுடன் வாசலுக்கு வந்து, சுந்தரத்திற்குச் சுற்றிக் கொட்டினாள்.

உள்ளே நுழைந்ததும் சுந்தரம் நேரே காமாக்ஷி அம்மாளின் படுக்கையருகே சென்றான். மாமியாரின் அருகில் சென்று உட்கார்ந்ததும், அவனையறியாமலேயே அவன் கண்களில் ஜலம் வந்து விட்டது. அவன் மாமியார் கண்களிலும் நீர் தேங்கியது. இதைக் கண்டவுடன் அங்கு கூடியிருந்தவர் அனைவர் மனமும் கலைந்து விட்டது. லலிதா விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள். கௌரி அவளை அணைத்துக் கொண்டாள்.



"அத்திம்பேர் தான் விளக்கு, நாங்களெல்லாம் விட்டிற் பூச்சிகள்" என்றான் கோபு.

"ச, எனக்குப் பிடிக்கவில்லை, உன் உபமானம். சுந்தரம் தான் ரோஜா, நாமெல்லாம் வண்டுகள்" என்றாள் லலிதா.

அப்படி இருந்தது விஷயம். சுந்தரம் எங்கு உட்கார்ந்தாலும் அங்கு எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டனர். அமெரிக்காவைப் பற்றி, அவன் படிப்பைப் பற்றி, அவன் கண்ட காட்சிகளைப் பற்றிக் கேட்டுக் கொண்டே இருந்தனர். அவனும் இயன்ற வரை பதில் கூறினான். பிறகு இங்கு நடந்த வைபவங்கள், உமாவின் அதிசய சம்பவங்கள் எல்லாம் அவனுக்கு இவர்கள் சொன்னார்கள்.

"வாய் தான் நோகாதோ!" என்று நாகலக்ஷ்மி அம்மாள் கூறினாளே தவிர, அவளும் அங்கே உட்கார்ந்து எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதா னிருந்தாள்.

இப்படியே அவர்கள் எல்லோரும் ஒன்றாகக் கூடிப் பேசுவதும், நடுநடுவில் எழுந்து சாப்பிடச் செல்வதும், தூங்கப் போவதுமாகக் காலங்கழித்தார்கள். சுந்தரம் வந்து ஒரு வாரமாகி விட்டது.

## 56

# லலிதாவின் கண்கள்

சுந்தரம் உமாவுடன் பேசிக் கொண்டிருந்தான். உடனே லலிதாவும் சாரதாவும் அங்கே வந்து உட்கார்ந்தார்கள்.

"உமா, பார்த்தாயா? என்ன இருந்தாலும் லலிதாதான் சமத்து. நான் வந்த பிறகுதான் கல்யாணம் பண்ணிக் கொள்வாள், இல்லையோ, லலி?"

"ஏன், அமெரிக்காவிலிருந்து வந்த அத்திம்பேர் ஆயிற்றே; அதிசயமாக அகமுடையான் பார்த்துத் தருவீர்கள் என்றோ?" என்றாள் லலிதா துடுக்காக. எல்லோரும் 'கொல்' என்று சிரித்தார்கள்.

"ஏது, ஏது, ஒரே எதுகை மோனையாகவே இருக்கிறதே!" என்று நகைத்தான் சுந்தரம். பிறகு மைத்துனியின் வாயைக் கிண்ட வேண்டுமென்று, "நீ பள்ளிக்கூடம் போகாமல் நின்று விட்டாயாமே, ஏன்?" என்று அவளை நோக்கிக் கேட்டான்.

"என்னவோ, உங்கள் மனைவியே எல்லோரையும் விட மிக்க படிப்பாளியாக இருக்கட்டுமே என்றுதான்!"

'ஹோ' வென்று மறுபடியும் எல்லோரும் சிரித்தார்கள். சாரதா சுந்தரத்தைப் பார்த்து, "சுந்தர், லலிதா ரொம்ப வளர்ந்து விட்டாள் இல்லையா? ஆனால் வாய் மட்டும் குறையவில்லை" என்றாள்.

"அவள் ஒன்றும் வாயாடவில்லை. பாவம், எவ்வளவு பொறுமையாக வீட்டை யெல்லாம் பார்த்துக் கொண்டாள் தெரியுமா? நான் கல்கத்தாவிலிருந்து வந்தபோது பார்க்க வேண்டுமே. அசல் கௌரிதான் போயேன். கேட்டால் தவிர பதில் கிடையாது. சோம்பல் கிடையாது. மெதுவான பேச்சு. மறுபடியும் லலிதாவும் பழையபடி விளையாடிச் சிரிக்கப் போகிறாளா என்று எனக்கு ஆசையாகக்கூட இருந்தது" என்று உமா தங்கைக்குப் பரிந்தாள்.

"பார் சுந்தர். உமாகூட எவ்வளவு மாறி விட்டாள் பார்த்தாயா?" என்றாள் சாரதா.

"உனக்கென்ன வேலை? உங்கள் இரண்டு பேருக்கும் உங்களைத் தவிர மற்ற எல்லோருமே வேறு விதமாகத் தோற்றமளிக்

கிறார்களாக்கும்!" என்று உரைத்துவிட்டு ஏதோ வேலை செய்ய உள்ளே சென்று விட்டாள் உமா.

பஞ்சநதத்தின் குரல் கேட்டது. கல்யாணத்திற்காகச் சாரதாவுடன் அவனும் வந்திருந்தான். சாரதா ஓடி விட்டாள் கணவனைக் கவனிக்க. சுந்தரமும் எழுந்து, லலிதாவிடம் சொல்லி விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றான். தன் பழைய அறைக்குப் போய்ச் சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டான்.

அவன் மனம் எங்கெங்கோ அலைந்தது. திரும்பி வந்ததிலிருந்து அவன் எவ்வளவு முயன்றும் அவனால் கௌரியிடம் நெருங்காமல் இருக்க முடியவில்லை. இத்தனை நாட்களின் பிரிவு அவன் அவளை மறக்கும்படி செய்யாமல், அவனுக்கு அவள் மேலிருந்த பிரீதியை அதிகரிக்கத்தான் செய்தது போலும். கௌரியோ பொதுவில் எல்லோர் எதிரிலும் சிரித்துப் பேசினாளே தவிர, தனிமையில் சுந்தரம் இருக்கும் திக்கில் கூடக் காலெடுத்து வைக்கவில்லை. 'இனி எப்படித்தான் காலந் தள்ளுவது? பெற்றோருக்குத் தெரியாமல் எத்தனை நாட்கள் தாம் பொய் வேஷம் பூண்டு நடிக்கலாம்? ஒரு நாள் தெரிந்து விட்டால் என்ன நினைப்பார்கள்? கௌரி இளைத்து உருமாறிப் போய்விட்டாளே? அதற்கு இந்த இஷ்டமில்லாக் கல்யாணந்தான் காரணமோ?' என்றெல்லாம் யோசிக்கும்போது சுந்தரத்தின் உள்ளம் வெடித்துவிடும் போல் இருந்தது.

மனக் கஷ்டங்களை மறக்கும் பொருட்டுச் சுந்தரம் தன் சிந்தனைகளை வேறு திக்கில் செலுத்தினான். மற்றவர்களைப் பற்றி யோசிக்கலானான்.

'உமா!' அவளைப் பற்றி நினைக்கும் போதே அவனுக்கு ஆச்சரியமும் சிரிப்பும் கலந்து வந்தன. 'அவள் குடும்பத்தில் பற்றற்றவள். எப்படித் தான் சமூகத்தைத் தைரியமாக எதிர்த்து எந்த விதமான வாழ்க்கை நடத்தப் போகிறாளோ? வீட்டுக்கு என்ன அவமானம் வந்து விடுமோ?' என்று எல்லோரும் நினைத்த நாட்களெல்லாம் பொய்யாகி விட்டன. உமா என்ன அழகாகத் தன் கொள்கைகளையும் விடாமல், இல்வாழ்க்கையிலும் பொருந்தி இருக்கிறாள்!'

லலிதா, குழந்தைத் தனம் மாறி வளர்ந்திருந்தாள். உமா சொல்வது போல் லலிதாவுக்குக் கௌரியின் ஜாடை மிகவும்

இருந்தது, அவள் நடை உடை பாவனையில். ஆயின், சிரித்து விளையாடிக் கொண்டிருக்கும் போதே இடை இடையே தனிமையை ஏன் நாடுகிறாள்? சுந்தரம் இந்த ஒரு வாரத்திற்குள்ளேயே இதைப் பன் முறை கவனித்து விட்டான். யாரும் பார்க்காமல் இருக்கும் சமயங்களில் அவள் மாடி வராந்தாவில் தனிமையாக உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்திருப்பாள். அப்பொழுது அவள் உடலிலே சாந்தமும் அடக்கமும் பரவி யிருந்தன. சாக்ஷாத் கௌரியோ எனும்படி இருந்தது அக் காட்சி. 'பகவானே, லலிதாவுக்காவது நல்ல சந்தோஷமான வாழ்க்கையைக் கொடு. கௌரியினுடையதைப் போல் ரசமற்றுப் போகவேண்டாம். முன் பின் தெரியாதவனை அவள் கல்யாணம் செய்து கொள்ளட்டும். அப்படிச் செய்து கொண்டவர்கள் தாம் சந்தோஷமாக இருக்கிறார்கள்—சாரதா, கோபு, உமா......கேசவ் எப்படி இருக்கிறானோ? அவன் மனைவி...'

"சுந்தரம்!" என்று அந்தக் கேசவராவின் குரலே வாசலில் கேட்டது.

"அட பழி! உனக்கு நூறு ஆயுசடா!" என்று கூறிக் கொண்டே நண்பனை வரவேற்றான் சுந்தரம். சிவாவும் அவனுடன் கூட வந்திருந்தான்.

"வருகிறாயாடா பீச்சுக்குப் போவோம்?" என்று கேட்டார்கள் கேசவராவும் சிவாவும்.

சுந்தரம் அவர்களுடன் கிளம்பினான். உள்ளே சென்று மாடியில் துணிகளை உலர்த்திக் கொண்டிருந்தவளிடம், "கௌரி, நான் பீச்சுக்குப் போய் விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு வந்தான். குனிந்த தலை நிமிராமல் கௌரி, "உம்" என்று பதிலளித்தாள்.

சுந்தரமும் அவன் நண்பர்களும் படி இறங்கித் தெருவில் காலை வைத்தார்கள். அகஸ்மாத்தாக நிமிர்ந்து நோக்கிய சுந்தரத்தின் கண்களில் எதிர் வீட்டு மாடியிலிருந்து ஏக்கத்துடன் லலிதா பார்ப்பது தென்பட்டது. மறந்து விட்ட கைக் கடிகாரத்தை எடுத்து வர மறுபடியும் வீட்டிற்குள் சென்ற அவன் லலிதாவைப் பற்றியே யோசித்தவாறு இருந்தான். 'பாவம், குழந்தைக்கு என்ன வேண்டுமோ?' என்று நினைத்தவன் மறுபடியும் ஜன்னல் வழியாக ஒரு முறை அவளைப் பார்த்தான். அவள் கண்

கொட்டாமல் தெருவையே நோக்கிக் கொண்டிருந்தாள். சுந்தரத்திற்குச் சந்தேகம் பிறந்து விட்டது. அவன் தன் அநுமானத்தை ஊர்ஜிதப் படுத்திக் கொள்வதற்காக, "சிவா!" என்று உரக்கக் கூப்பிட்டான். "என்னடா!" என்று கேட்டுக் கொண்டே சிவா உள்ளே வந்தான். சுந்தரம் நினைத்தபடியே லலிதாவின் கண்களும் சிவாவையே பின்பற்றிச் சுந்தரத்தின் அறையை நாடின.

சுந்தரம் மனம் தெளிவடைந்தவனாய், அங்கே வந்த சிவாவிடம் "ஒன்றும் இல்லையடா. என்னவோ கூப்பிட்டேன். அதற்குள் மறந்து விட்டது" என்று மழுப்பி விட்டு, அவனுடன் வெளிக் கிளம்பினான்.

போகும் போது அவன் மீண்டும் ஒரு முறை எதிர் வீட்டு மாடியை நோக்கினான். அப்பொழுது அவன் என்ன கண்டான் என்பதைக் கூறுவானேன்? அவன் எதிர பார்த்தது தான்.

## 57

## உமாவின் ஊகம்

எல்லோரும் கலகலவென்று சிரித்துக் கொண்டே வெளியே வந்தார்கள். மணி பத்தாகி விட்டது. இன்னும் தூங்காமல் பேசிக் கொண்டிருந்தனர்.

நாகலக்ஷ்மி அம்மாள் அங்கே வந்து, "ஏ, குழந்தைகளா, நீங்களெல்லாம் போய்ப் படுக்கப் போகிறீர்களா, அல்லது......" என்பதற்குள், லலிதா, "இரட்டைக் கண்ணனைக் கூப்பிடட்டுமா?" என்று முடித்தாள்.

அவர்கள் சின்ன வயதில் அவர்களை நாகலக்ஷ்மி அம்மாள் அப்படித் தான் தூங்குவதற்கு விரட்டுவது வழக்கம். இதைக் கேட்டு எல்லோரும் சிரித்து விட்டு, அவரவர்கள் உறங்குவதற்குச் சென்றனர். கௌரியும் சுந்தரமும் மட்டுமே மிஞ்சி நின்றனர்.

உமா நான்கு அடி நடந்திருப்பாள். அதற்குள் தன் பர்ஸை அந்த அறையிலேயே வைத்து விட்டு வந்தது அவளுக்கு ஞாபகம் வந்தது. கௌரியும் சுந்தரமும் அந்த அறையில் தனியாக இருப்பதால் உள்ளே நுழைவதா வேண்டாமா என்று அவள் சங்கோஜப் பட்டுக் கொண்டு சற்றுத் தயங்கினாள். மெல்ல ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். கௌரி ஒரு புத்தகத்தை

வைத்துக் கொண்டு தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள். சற்று தூரத்தில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்த சுந்தரம் அவளையே நோக்கிக் கொண்டிருந்தான். அவர்களைச் சுற்றி ஒரு விபரீத நிசப்தம் சூடி கொண்டிருந்தது போல் பட்டது உமாவுக்கு. இரண்டு ஆன்மாக்களைப் பிணைக்கும் மௌனம் அல்லாது, அவர்களைப் பிளந்து அகற்றும் இந்த நிசப்தம் அவளுக்கு வேதனையை உண்டாக்கியது. அவள் தைரியமாக உள்ளே நுழைந்து பர்ஸை எடுத்துக் கொண்டாள். அவளைப் பார்த்த கௌரி, "உமா, நீ இன்றைக்கு மிகவும் அலைந்திருக்கிறாய். இன்று அம்மாவுக்குத் துணை நான் படுத்துக் கொள்கிறேன்" என்று கூறினாள்.

உமாவுக்கு என்ன பதில் கூறுவது என்று தெரியவில்லை. அவள் கடைக் கண்ணால் சுந்தரத்தை நோக்கினாள். அவன் முகத் தோற்றம் அவள் வேதனையை அதிகரித்தது. இன்னது சொல்கிறோம் என்ற நினைவு இல்லாமலேயே, "சரி" என்று சொல்லி விட்டு அகன்றாள்.

உமா தன்னறைக்குச் சென்ற போது, அங்கே படுத்திருந்த வெங்கடேசன், அவளைப் பார்த்துத் திடுக்கிட்டான். "என்ன, உமா, அம்மாவுக்கு ஏதாவது......இன்றைக்கு நீதானே அங்கே படுத்துக் கொள்ள வேண்டிய முறை ?" என்று கேட்டான்.

"அம்மாவுக்கு ஒன்றும் இல்லை. கௌரி படுத்துக் கொள்கிறாள்."

"பின் ஏன் இந்த முகவாட்டம்?"

"என்னவோ எனக்கு மனசே சரியாக இல்லை."

"என்ன விஷயம்? என்னிடம் சொல்லேன்."

"இந்தக் கௌரியைப் பற்றித்தான்..." என்று ஆரம்பித்த உமா, தான் கண்டதைத் தன் கணவனிடம் சொன்னாள்.

லட்சிய மண வாழ்க்கையின் ருசியை நன்கு கண்டு விட்ட உமாவின் தீட்சண்ய புத்தி கௌரி-சுந்தரத்தின் உறவில் திருப்தி கொள்ளவில்லை. ஏதோ ஒரு பக்கம் பூனியாக இருப்பது போல் அவள் கூர்ந்த கண்கள் கண்டன. இரு காதலர்கள்—அதுவும் வெகு நாட்களாகப் பிரிந்திருந்து, இப்பொழுதே மறுபடியும் கூடியவர்கள்—இயற்கையாக எப்படி இருக்க வேண்டுமோ அவ்வாறு அவர்கள் இல்லை என்பதை மாத்திரம் அவள் ஊகித்து-

விட்டாள். அதைப் பற்றி நினைக்க, நினைக்க அவளுக்கு வேதனையே மிஞ்சியது. தூக்கமின்றி விழித்துக் கிடந்தாள்.



"சிவா" என்று அழைத்தான், சுந்தரம் தன் தோழனை.

'என்ன?' என்னும் பாவனையில் திரும்பிப் பார்த்தான் சிவா.

"சிவா, உன் கல்யாண விஷயம் என்ன?" என்று மெல்ல ஆரம்பித்தான் சுந்தரம்.

"என் கல்யாண விஷயம் என்ன..........அதற்கென்ன அவ்வளவு அவசரம் இப்பொழுது?"

"அவசரம் இருக்கவே தான் சொல்லுகிறேன். கௌரி தங்கை லலிதாவை நீ மணக்க இஷ்டப் படுவாயா?"

"ஏன், சாரதா பெண் சின்னியை வேண்டுமானாலும் பண்ணிக் கொண்டால் போகிறது" என்று சிரித்தான் சிவா.

"லலிதாவுக்கு வயது பதினைந்து ஆகப் போகிறது. உனக்கு இஷ்டமா சொல்லேன். ஏனென்றால்......"

"'இஷ்டமா சொல்' என்கிறாயா, 'இஷ்டமென்று சொல்' என்கிறாயா?"

"போடா! விளையாட்டு இருக்கட்டும். சொல்லேன். ஏனென்றால்......"

"நீ உன் 'ஏனென்றாலை'ச் சொல்லி முடித்து விடு. பிறகு நான் சொல்லுகிறேன்."

"சரி, அதையும் சொல்லுகிறேன். உமாவுக்குச் சாஸ்திர ரீதியாக விவாகம் செய்ய வேண்டும் என்று ஏற்பாடு நடக்கிறது. லலிதாவுக்கும் விவாகம் நிச்சயமாகி விட்டால் அதே முகூர்த்தத்தில் நடத்தி விடலாம். மேலும் அப்பொழுது லலிதாவின் கல்யாணம் முக்கியத்துவம் பெற்று விடும். உமா - வெங்கடேசனுக்கு அவ்வளவாகச் சங்கோஜம் இராது."

"நான் வேண்டுமானால் உமாவுக்காக, லலிதாவை மணக்கிறேன். ஆனால் இதில் லலிதா இஷ்டம் தெரிய வேண்டாமா? அவளுக்கு என்ன அவசரம் இப்பொழுது கல்யாணத்துக்கு? இன்னும் குழந்தையாகவே இருக்கிறாள்."

"அவளா குழந்தை!...அவளுக்கு இஷ்டம் என்று நான் உறுதி கூறினால்?"

"ஓஹோ, தாங்கள் தரகர் வியாபாரம் வேறு எடுத்துக் கொண்டீர்களா! உனக்கு இதில் என்னடா வரும்படி? அதில் எனக்குப் பாதி" என்று கேலி செய்தான் சிவா.

பேச்சு நீண்டு கொண்டே போயிற்று. கடற்கரையே காலி யாகும் வரையில், வீட்டிலுள்ளோர் அனைவரும் அவர்கள் திரும் பாததைக் கண்டு கவலையுறும் வரையில், அவர்கள் ஏதோ பேசிக் கொண்டே இருந்தனர்.

கடைசியில் சிவா, "நிஜமாகவா, சுந்தரம்?" என்று ஆவலுடன் கேட்டான். "அப்படியானால் நாளைக்குக் கிருஷ்ணன் கோவிலுக்கு அழைத்து வருகிறாயா அவளையும் கௌரியையும்? எதற்கு என்று மட்டும் யாருக்கும் இப்பொழுது பிரஸ்தாபிக்க வேண்டாம். நானும் என் மன்னியையும் தங்கையையும் அழைத்து வருகிறேன். பிறகு பார்த்துக் கொள்வோம்" என்று சொல்லிவிட்டுப் பிரிந்தான் சிவா.

சுந்தரம் வெற்றி முறுவல் தன் முகத்தை அலங்கரிக்கத் திருப்தியுடன் வீடு திரும்பினான். சென்றவுடன் முதல் முதலில் அவன் லலிதாவைத் தேடிச் சென்றான். அவள் ஓடி வந்தாள்.

"லலி, அன்று நீ என்ன சொன்னாய்?" என்று அவளைக் கேட்டான் சுந்தரம்.

"என்ன சொன்னேன்?"

"எதற்காக நீ இத்தனை நாள் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருந்தாய்?"

"ஓ, அதுவா?" என்று சிரித்தாள் லலிதா.

"அது தான். ஒரு வரன் பார்த்துக் கொண்டு வந்திருக் கிறேன். அப்பாவிடம் சொல்லப் போகிறேன் இப்பொழுது."

"எனக்கு ஒன்றும் கல்யாணம் வேண்டாம் இப்பொழுது. கௌரி பதினாறும் வயதில் தானே பண்ணிக் கொண்டாள்?"

"கௌரி விஷயம் வேறு. நீ காலேஜில் சேருகிறாயா?"

"எனக்குக் காலேஜூம் வேண்டாம்."

"சரி, பார்ப்போமே—அந்தப் பிள்ளையைப் பார்த்ததும் நீ, 'கல்யாணம் வேண்டாம்' என்கிறாயா என்று."

"யார் அந்த மன்மத ஸ்வரூபம்?"

"இரு, இரு. யாராக இருந்தால் உனக்கு என்ன? நீ தான் விவாகமே வேண்டாம் என்கிறாயே?"

"சொல்லா விட்டால் போயேன். எனக்குப் பிடித்தால் தானே கல்யாணம்? உமாவைப் போல் செய்து விட்டால் போகிறது."

"உமா என்ன செய்தாள்?"

இந்தக் கேள்வி லலிதாவின் குஷியைக் கிளப்பி விட்டது. உமாவைப் 'பெண்' பார்க்க வந்த சம்பவங்களை அவள் சுந்தரத்திற்கு விவரமாகச் சொன்னாள். அவர்கள் இருவரும் சிரித்துச் சிரித்துக் கண்களில் ஜலம் வந்து விட்டது.

## 58

# நேருக்கு நேர்

உமாவும், வெங்கடேசனும் வெளியே போய் விட்டு அப்பொழுது தான் உள்ளே நுழைந்தார்கள். வெங்கடேசன் காமாக்ஷி அம்மாளைப் பார்க்கச் சென்றான். அன்று அவன் முறை. அவனைக் கண்டதும் கௌரி தன் தாயின் படுக்கையை விட்டு எழுந்து, எதிர் வீட்டிற்குச் சென்றாள். உமா அவளைப் பின் தொடர்ந்தாள். கௌரி பின்னால் தங்கை வருவதைக் கவனியாமல், சாப்பிட்டுக் கொண்டிருந்த மாமியாருக்கு வேண்டிய சுசுரூஷை களைச் செய்யலானாள். நாகலக்ஷ்மி அம்மாள் அவளைத் தடுத்தாள்.

"இந்தா கௌரி, நேற்றே நீ தான் காமு பக்கத்தில் இருந்திருக்கிறாய். இன்று வேறு ஒரு நிமிஷம் நின்ற இடத்தில் நிற்காமல் வேலை செய்திருக்கிறாய். உடம்போ வெகு லட்சணமாக இருக்கிறது. பாலைக் குடித்து விட்டுப் போய்ப் படுத்துக் கொள்" என்றாள்.

கௌரி பதில் பேசவில்லை. மாமியார் சொன்னபடியே நேரே படுக்கைக்குச் சென்றாள். அந்த அறையில் சுந்தரம் இல்லாததைக் கண்டு திருப்தி அடைந்தாற் போல் ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டாள். பிறகு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ தையல் வேலை செய்ய ஆரம்பித்தாள். உமா அவளிடம் வந்து, அதை வாங்கித் தன் பின்னால் வைத்து விட்டு, தமக்கையை நோக்கினாள்.

"கௌரி, இதென்ன வெகு பெருமை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?"

"எது, உமா?"

"மாமி என்ன சொல்லி அனுப்பினுள், நீ என்ன செய்கிருய்? ராத்திரியில் தையல் என்ன? இதெல்லாம் உன் சுபாவத்துக்கு எதிரிடையாயிற்றே?"

'என்னை என்ன செய்யச் சொல்லுகிருய்? தூக்கம் வரவில்லையே?'

"சுந்தரம் எங்கே?"

"எனக்கு எப்படித் தெரியும்? இங்கு தான் எங்காவது இருப்பார்."

"இப்படித்தான் நீ பேசுவதா?"

"எப்படிப் பேசுவது?"

"கௌரி, உன் விஷயம் என்னை நேற்றிலிருந்து வாட்டுகிறது. உனக்கும் சுந்தரத்துக்கும் இடையே என்ன மனஸ்தாபம்? இரண்டு வருஷம் ஊருக்குப் போய் விட்டுத் திரும்பியவனுக்கு இது தான் வரவேற்புப் போலும்!"

கௌரி பதில் கூருது தலை கவிழ்ந்தாள். உமா அவளை விடவில்லை.

"கௌரி, என்னிடம் சொல்லேன். நீங்கள் இருவரும் இப்படி இருப்பதற்குக் காரணம் வேண்டுமோ இல்லையோ?"

"எனக்கு எப்படித் தெரியும், உமா?"

"என்ன பதில், கௌரி? எனக்குப் பிடிக்கவில்லையே! உன் லட்சியம் எல்லாம் என்னவாயிற்று?"

கௌரி பெரு மூச்செறிந்தாள். அவள் கண்களில் நீர் மல்கியது. ஆயின் அவள் தொண்டையில் பேச்சு வரவில்லை. உமா பொறுமையை இழந்தாள்.

"என்னிடம் சொல்ல மாட்டாயா? அப்படியானல், சுந்தரத்தை இங்கேயே அழைத்து வந்து கேட்கட்டுமா?"

"ஐயோ, வேண்டாம், உமா. நீ பேசாமல் போயேன்."

"நான் போகமாட்டேன். காரணம் சொன்னுல் தான் ஆயிற்று. எனக்கு நீ எவ்வளவோ புத்தி மதிகள் கூறுவாயே, இப்பொழுது நான் உனக்கு உதவி புரிய விடமாட்டாயா?"

"நான் என்ன சொல்லட்டும், உமா? எனக்குத் தெரிந்தால் தானே?—நானுந்தான் எவ்வளவோ மனக் கோட்டைகள் கட்டினேன். எல்லாம் தகர்ந்து பொடியாகி விட்டன. காரணம் நான் தானே, அவர் தானே?" என்று ஆரம்பித்த கௌரி, தனக்குத்

தெரிந்த வரை சுந்தரத்தின் குணதிசயங்களைப் பற்றியும், தங்கள் இருவரின் அநுபவங்களைப் பற்றியும் உமாவுக்குக் கூறினாள். தன் சந்தேகங்களுக்குச் சாட்சியாக, "இதோ பார், அவர் அமெரிக்காவிலிருந்து எழுதிய கடிதங்களில் ஒன்று" என்று தன் கணவனின் கடிதத்தை எடுத்துக் காண்பித்தாள்.

உமா அக்கடிதத்தைப் படிக்கும் போது அதிசயம் தாங்க மாட்டாது விழித்தாள். சுந்தரம் தான் அந்த லிகிதத்தை வரைந்தான் என்று அவளால் நம்பவே முடியவில்லை.

ஆயினும் தமக்கையிடம் அவள், "கௌரி, அவன் உன் மேல் ப்ரியமாக இல்லை என்பது வீண் பொய். அவன் அன்பின் பெருக்கத்தை நான் கண்கூடாகப் பார்த்தேன்" என்று தான் முந்திய இரவு ஜன்னல் வழியாகப் பார்த்ததைக் கூறினாள்.

கௌரி அவளை நம்பவில்லை. "என்னவோ, உமா. நிஜமாகவே அவர் அன்பு வைத்திருக்கிறார் என்றால், தப்பித் தவறிக் கூட.........."

உமா அவளைச் சமாதானப் படுத்தி விட்டு, "கௌரி, நீ படுத்துக் கொண்டு தூங்கு, எல்லாம் சரியாகி விடும்" என்று கூறி விட்டு வெளியே சென்றாள்.

உமா சுந்தரத்தைத் தேடலானாள். எல்லா இடமும் தேடி, கடைசியில் அவன் மொட்டை மாடியில் ஒரு மூலையில் தனியாக ஆகாயத்தை நோக்கி ஏதோ யோசித்தவாறே படுத்திருப்பதைக் கண்டாள்.

"சுந்தர்!"

சுந்தரம் திடுக்கிட்டான். உமாவின் குரல் கௌரியின் குரலைப் போலவே இருந்தது அவனுக்கு. கௌரி, தானே தன்னைத் தேடிக் கொண்டு வந்தாள் என்று நினைக்கும் போதே அவன் உள்ளம் துள்ளிற்று.

"கௌ......"

"இல்லை, நான் தான் உமா" என்று சொல்லிக் கொண்டே உமா அவன் அருகில் அமர்ந்தாள். அவனும் எழுந்து உட்கார்ந்தான். உமாவுக்குக் கொஞ்சம் நஞ்சம் இருந்த சம்சயமும் பறந்து விட்டது.

"சுந்தர், உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும் என்று வந்தேன்."

"என்ன ?...வெங்கடேசன் எங்கே ?"

"அவர் அம்மாவுக்குத் துணை."

"எனக்கு அவனை மிகவும் பிடித்திருக்கிறது."

"நான் சொல்ல வந்தது..." என்று ஆரம்பித்தாள் உமா. "எனக்குக் கேட்கக்கூடப் பயமாக இருக்கிறது. ஆனாலும் நம் பழைய சுந்தர் தானே என்று கேட்கிறேன்."

"என்ன, சொல்லேன், உமா. என்னிடம் என்ன சங்கோஜம் ?"

"உனக்கும் கௌரிக்கும் இடையே என்ன ? எனக்கு உங்கள் இருவரையும் பார்த்தால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது."

சுந்தரம் உடனே பதில் சொல்லவில்லை. பிறகு தலை கவிழ்ந்த வாறே, "என்ன செய்வது, உமா ? அவ்வளவு தான் நாங்கள் கொடுத்து வைத்தது. நான் என் சௌக்கியத்தை நினைத்து, அவள் சந்தோஷத்தையும் கெடுத்து விட்டேன். இப்பொழுது இரண்டு பேரும் தவிக்கிறோம்" என்று கூறினான்.

"என்ன, அப்படிப் பட்ட பெரிய தவறு செய்து விட்டாய்?"

சுந்தரம் ஆதி நாள் அவனுக்குத் தோன்றிய சந்தேகத்தில் தொடங்கி, பிறகு கௌரி அவனுடன் தனிமையில் இருக்க விரும் பாது ஓடிய விஷயம், அதை ஒட்டித் தனக்குத் தோன்றிய எண்ணங்கள் எல்லாவற்றையும் ஒளிக்காமல் நிதானமாகச் சொல்லி முடித்தான். உமா சிறிது நேரம் மௌனமாக இருந் தாள். பிறகு நிமிர்ந்து சுந்தரத்தை நோக்கினாள்.

"கௌரி உன்னிடம் அன்பாகவே இருக்கிறாள் என்று தெரிந்தால் ?"

"அப்படிப்பட்ட பாக்கியம் எனக்குக் கிட்டுமானால், நான் வெகு அதிருஷ்டசாலிதான்."

"இப்பொழுது ஒன்றும் நஷ்டமாகி விடவில்லை. அமெரிக்கா வுக்குப் போய், மேல் படிப்புப் படித்து, பிற்காலத்துக்குச் சௌகரியம் தேடிக் கொண்டதைத் தவிர, வேறு ஒன்றும் ஆகி விடவில்லை."

சுந்தரம் உமாவை நோக்கினான். அவன் மனம் யோசனையில் ஆழ்ந்தது.

உமா மறுபடியும் பேசினாள். "சுந்தர், நீ எழுந்து போ. கௌரி உன் அறையில் இருக்கிறாள்."

"நான் போனால் அவள் எழுந்து போய் விடுவாள்."

"போய்த்தான் பாரேன். அநாவசியமாக மனத்தைக் கலவரப் படுத்திக் கொண்டு வாழ்க்கையையே பாழடித்துக் கொள்ளப் பார்க்கிறீர்களே!" என்று கூறிவிட்டு உமா போய் விட்டாள்.

சுந்தரம் மறுபடியும் அங்கேயே படுத்துக் கொண்டான். உமாவிடம் சொல்லி விட்டதில் அவனுக்கு ஒரு விதப் பளு அகன்றாற் போல் இருந்தது. திரும்பத் திரும்ப அவன் யோசனைகள் சுழன்று சுழன்று அவனுக்கு மயக்கத்தை உண்டாக்கின.

உமா சூறாவளி போல் வீசி, கௌரியின் மனத்தையும், சுந்தரத்தின் உள்ளத்தையும் கலக்கி, எண்ணங்களை இழுத்தெறிந்து, சிந்தனைகளைச் சிதற அடித்து விட்டுச் சென்றாள். பிய்ந்து நுனி பறந்து கொண்டிருந்த யோசனைகளைச் சரிவரச் சீர் படுத்தச் சுந்தரம் பட்ட பாட்டுக்கு மேல் கௌரி பட்டாள்.

உமா சென்ற பிறகு அவள் படுக்கையில் படுத்துக் கொண்டு புரண்டாள். உடல் சோர்வு நித்திரையைக் கோரிற்று. மன வேதனை அதை வெறுத்தது. 'உமா கூறியது போல் நாம் ஒரு நாளாவது அவரை நேரே கேட்டிருக்கிறோமா? அப்படிக் கேட்டிருந்தால் எல்லாமே தெளிந்து விட்டிருக்குமே? இப்பொழுது கூடக் கேட்கலாம். ஆனால் எப்படிக் கேட்பது?' கல் சுவரில் மோதிக் கொண்டன அவள் சிந்தனை அலைகள்.

கதவு திறந்தது. கௌரி தன் உடல் பதற்றத்திலிருந்து உள்ளே நுழைந்தது சுந்தரம் தான் என்று அறிந்து கொண்டாள். ஆயினும் அவள் அசையக்கூட இல்லை. அவளுடைய மூளையே உறைந்து கல்லாய்ச் சமைந்து விட்டது போலும். அப்படியே கண்ணை இறுக மூடிக் கொண்டு அசையாமல் படுத்திருந்தாள்.

கட்டிலருகே வந்த சுந்தரம் ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவன் போல் சிலையாக நின்றான். வீதி விளக்கிலிருந்து வந்த மங்கிய வெளிச்சத்தில் கௌரியின் முகம் தெள்ளெனப் பட்டது. அவளது வாடிய வதனம் தன்னை நிந்திப்பது போல் பட்டது அவன் மனத்திற்கு. உணர்ச்சி அவன் நாக்கை எழவொட்டாமல் தடுத்தது. கட்டிலில் உட்கார்ந்து அவன் மெல்ல அவளை அழைத்தான்.

"கௌரி!"

கௌரி கண்களைத் திறந்தாள்.

## 59

## கோவில் நாடகம்

கிருஷ்ணன் கோவிலில் மாலைத் தீபாராதனை நடந்துகொண்டிருந்தது. லலிதா பகவானையே நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் வாய் சுலோகங்களை முணு முணுத்தது. கௌரியும் அடுக்காகத் தீபச் சுடர்கள் காட்சி அளிப்பதையே கவனித்துக் கொண்டிருந்தாள். சுந்தரம் மாத்திரம் இப்படியும் அப்படியும் பார்வையைப் பாவவிட்டுக் கொண்டு நின்றான்.

அவன் எதிர் பார்த்த மனிதர்களும் வந்தார்கள். கௌரியை ஒத்த ஒரு யுவதி, உமா வயதில் ஒரு பெண் இருவரும் சிவாவைத் தொடர்ந்து வந்தார்கள். கூட இனி ஒருவரும் இருந்தார். முகஜாடையிலிருந்து அவர் சிவாவின் அண்ணாவாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான் சுந்தரம். சுந்தரம் கோஷ்டியாரைக் கண்டதும் சிவா நேரே அங்கு வந்தான். தன் தமையனைச் சுந்தரத்திற்கு அறிமுகப் படுத்தினான். கௌரியிடம் தன் தங்கையையும் மன்னியையும் காண்பித்தான்.

"எங்கள் சிவா உங்களைப்பற்றி அடிக்கடி சொல்லுவான்" என்றாள் சிவாவின் தங்கை விஜயா.

"அவர் உங்கள் வீட்டு மனிதராகவே ஆகி விட்டார், இப்பொழுது" என்றாள் அவன் மன்னி.

"ஆமாம், அவர் உதவி இல்லாவிட்டால், எங்கள் பாலு படுத்திருந்த போது நாங்கள் திண்டாடிப் போயிருப்போம்."

சகஜமாக எல்லோரும் பேச ஆரம்பித்தார்கள். லலிதாவிடம் அவர்கள் விசேஷ சிரத்தை காட்டியதை, கௌரியோ, லலிதாவோ கவனிக்கவில்லை. அவர்கள் சாதாரணமாகப் பேசினார்கள். லலிதாவும் சிவாவின் தங்கையிடம் நெடு நாள் பழகியவள் போல் சம்பாஷித்தாள். இடை இடையே அவள் நயனங்கள் சிவா இருக்கும் திசையில் மின்வெட்டுகள் செலுத்துவதைக் கௌரியைத் தவிர மற்றெல்லோரும் கவனித்தனர். மனத்திற்குள் நகைத்துக்கொண்டனர்.

பெண்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே சிவா சுந்தரத்தினிடம் விடைபெற்றுக்கொண்டு கிளம்பிவிட்டான். லலிதாவுக்கு அதற்குப் பிறகு அங்கு இருப்புக்கொள்ளவில்லை. மற்றவர்கள்

பேச்சிலும் அவளுக்குக் கவனம் செல்லவில்லை. மரியாதைக்கு ஏதோ பதில் சொல்லிக்கொண்டே வந்தாளே தவிர, அதில் அவளுக்கு உற்சாகம் இல்லை.

"எங்கள் சிவாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகிக் கொண்டிருக்கிறது" என்றாள் விஜயா. யாரும் பாராத சமயத்தில் தன் மன்னியைப் பார்த்துக் கண் சிமிட்டினாள்!

லலிதா விழிப்படைந்தாள். ஆயினும் தன் உணர்ச்சிகளை முகத்திற்கு எட்டவிடாமல் பார்த்துக்கொள்ளும் பிரயாசையில், அவள் காதுகளில் பல்லாயிரம் மத்தளங்கள் முழங்கின. கௌரி எதார்த்தமாக அவர்களை, "யார் பெண், எப்பொழுது கல்யாணம்?" என்றெல்லாம் விசாரிக்க ஆரம்பித்தாள். தன் தங்கைக்கு எவ்வித வேதனை அளிக்கிறோம் என்று அவள் எப்படி அறிவாள்?

லலிதாவுக்குக் கேட்கவும் சங்கடமாக இருந்தது, தெரிந்து கொள்ளவும் ஆவலாக இருந்தது. தன் உடம்பு ஜீவனற்றுப் போவதை அவள் உணர்ந்தாள். சிவாவின் மன்னிதான் பதில் சொல்லிக்கொண்டே போனாள்.

"பெண் எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் படிக்கிறாளாம். நன்றாகப் பாடுவாளாம். நாங்கள் பார்த்தோம். மிகவும் பிடித்திருக்கிறது........." என்றாள்.

லலிதாவுக்கு அதைக் கேட்க என்னவோ செய்தது. ஆசை நிராசையாகிவிட்டதன் கைப்புச் சுவை அவள் நாக்கில் திகட்டியது.

★

கோவிலிலிருந்து வீடு திரும்பிய கௌரி, பிரசாதத்துடன் அன்னையின் படுக்கையை நாடினாள். உமா அவளுக்காகக் காத்திருந்தவள் போல் எழுந்தாள்.

"கௌரி, நாங்கள் வெளியே சென்றுவிட்டு வரும வரையில் நீ கொஞ்சம் பார்த்துக்கொள்ளுகிறாயா? இன்று ராத்திரி என் முறை."

"அதற்கென்ன, போய்விட்டு வாருங்கள். வேண்டுமானால் நானே ராத்திரியும் பார்த்துக்கொள்ளுகிறேன்."

"வேண்டாம்." உமாவின் குரல் மிகவும் கண்டிப்பாக இருந்தது. அவளும் அவள் கணவனும் வெளியே கிளம்பிவிட்டார்கள்.

கௌரி அங்கு உட்கார்ந்திருந்த அத்தனை நேரமும் சுந்தரம் அங்கு வரவில்லை. கௌரி குனிந்த தலை நிமிராமல் வீற்றிருந்தாள். காமாக்ஷி அம்மாளின் கண்கள் பெண்ணை நோக்கின. அவளது தாயுள்ளத்தில் தோன்றிய வேதனையை அக்கொடூர வியாதி வெளியிட ஒட்டாமல் மறைத்தது.

காலையிலிருந்து எத்தனை முறை சுந்தரத்தைச் சந்தித்தோம், இன்னும் எத்தனை முறை அதைத் தடுக்க முயன்றோம் என்று பழங்கணக்குப் பார்த்தாள் கௌரி. தன் கணவனைக் கண்டு உறவாட வேண்டும் என்னும் பசி அவளை அரித்தது.



சுந்தரத்தின் அன்பொழுகும் குரலுக்கிணங்கிக் கண்களைத் திறந்தாள் கௌரி. காலையிலிருந்து நடந்த சம்பவங்கள் யாவும் அர்த்தமற்று அவள் கண்முன் தோன்றின.

கோவிலுக்குச் சென்றுவந்ததன் கைமேல் பலனோ என்று அவள் நினைத்தாள். எல்லாம் மனத்திற்குள் சிந்தித்தாளே தவிர, கணவனுக்கு என்ன பதில் கூறுவது என்று அவளுக்குப் புரியவில்லை. கண்களை அகல விரித்தாள்.

சுந்தரம் அவள் கழுத்துக்கு இருபுறமும் கைகளை ஊன்றிக் கொண்டு, அவள் முகத்தையே உற்று நோக்கினன். பிறகு இரு கைகளையும் கட்டிக்கொண்டு, நகர்ந்து உட்கார்ந்துவிட்டான்.

கௌரியின் நாக்கு வறண்டது. கண்கள் விழித்தன. கை துவண்டு கீழே விழுந்துகிடந்தது. மெல்லத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, எழுந்து உட்கார்ந்தாள். சுந்தரம் திரும்பினன். அவள் எழுந்து சென்றுவிடப் போகிருள் என்று அவன் மனத்தில் படவே, வழிவிடும் பாவனையில் எழுந்து நின்றான். கௌரி சில்லிட்டுவிட்ட தன் கால்களைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு எழுந்து அவனருகில் நின்றாள். அவன் முகத்தைப் பார்க்கும் பொருட்டுத் தலை நிமிர்ந்தாள். ஆனால் கண்கள் தாழ்ந்தன. இமைகள் மூடின. சிப்பியிலிருந்து வெளி வருவதுபோல் இரண்டு முத்துக் கண்ணீர் அவள நாடையில் வந்து நின்றது.

சுந்தரம் அதைத் தன் மேல் துண்டினால் துடைத்தான். கௌரி அவன் கைத் தாங்கலில் துவண்டாள். முகத்தை அவன் மார்பில் புதைத்துக்கொண்டாள்.

சுந்தரத்தின் இருதயத்திலிருந்து ஒன்றையொன்று துரத்திக் கொண்டு பெருமூச்சுகள் வெளிப்பட்டன. அவன் கைகள் உணர்ச்சி வேகத்தால் நடுங்கின. தன் தாடையைக் கௌரியின் மெல்லிய கன்னங்களுடன் பதித்துக்கொண்டான். அவள் கண்ணீர் அவன் முகத்தை நனைத்தது. அவனுடைய தலை மயிர் அவள் கண்களைக் குத்திற்று. அவன் அவள் கண்களைத் துடைத்தான். அவள் அவன் தலையை வருடினாள்.

இதுவரை பாதரசம்போல் கையில் சிக்காமல் நழுவிய நித்திரா தேவி இப்பொழுது இந்த இரு குழந்தைகளைத் தன் ஆலிங்கனத்தில் பிணைத்து உச்சி முகர்ந்தாள்.

★

கௌரிக்கு உதயம் பொன்னிறமாகக் காட்சியளித்தது. அயர்ந்து தூங்கும் கணவன் முகத்தில் வெயில் விழாமலிருக்க, ஜன்னல் கதவைச் சாத்தினாள். காலை வெயில் சுரீரென்று கையில் பட்டதும், அவளுக்கு அது சுந்தரத்தின் உஷ்ணமான ஸ்பரிசம் போலிருந்தது.

லலிதாவுக்கு அப்படி இல்லை. வெயில் அவள் உடலில் காய்ச்சிய இரும்புபோல் பாய்ந்து, அவள் உள்ளத்தைக் கருக்கியது. அவள் ரத்தத்தை வற்ற அடித்தது. வேண்டா வெறுப்பாக அவள் கீழே இறங்கினாள். தன்னைக் கண்டதும் சாரதாவின் பெண்ணும், கோபுவின் பிள்ளையும் தன் கால்களைக் கட்டிக் கொண்டு விளையாடியதைக் கூட அவள் கவனிக்கவில்லை.

எல்லோரும் அவளது உற்சாகமின்மையைக் கவனித்து அவளை விசாரித்தது அவள் எரிச்சலை அதிகரித்தது. அவள் வழக்கத்துக்கு விரோதமாக, சுறு சுறுப்பின்றி வாசல் பக்கத்து அறையில் போய் உட்கார்ந்து தெருவை நோக்கிக் கொண்டிருந்தாள். பாலு அங்கு வந்து ரேடியோவைத் திருப்பினான். நிலைய வாத்திய கோஷ்டியார், 'நீமதிசல்லக' என்று ஆரம்பித்தனர். ஆனந்த பைரவி ராகத்தைக் கேட்கும்போதே லலிதா இரு செவிகளையும் மூடிக்கொண்டு, சோபாவில் சாய்ந்தாள்.

யாரால் இவ் வேதனைகளை அவள் அநுபவித்தாளோ அவனே எதிர்வீட்டில் நுழைவது அவள் கண்ணில் பட்டது. சிவாவைக் கண்ணுற்ற மாத்திரத்தில் அவள் மனம் துள்ளிற்று. எதிர்

வீட்டை நாடும்படி இச்சை தோன்றியது. சிரமத்துடன் அவள் தன் ஆசையை அடக்கிக் கொண்டாள்.

'அவருக்குத்தான் கல்யாணமாமே? இனிமேல் முன்போல் மனத்தைப் போன போக்கெல்லாம் விடக்கூடாது' என்று அவள் தனக்குத்தானே கண்டித்துக்கொண்டாள்.

சற்றுநேரம் கழித்துச் சிவா வெளிவருவதை அவள் பார்த்தாள். சுந்தரம் அவனிடம் ஏதோ சொன்னான். அவன் 'இல்லை' என்ற பாவனையாகத் தலையை அசைத்துவிட்டுப் போய்விட்டான்.

'இல்லாவிட்டால் போகட்டுமே?' என்று அவள் சொல்லிக் கொண்டாள், இங்கே இருந்துகொண்டே. பிறகு தனக்குத்தானே சிரித்துக்கொண்டு, 'நன்றாக இருக்கிறது உன் பைத்தியம், இனி அவர் எது செய்தாலும் தப்பாகிவிடும்போலிருக்கிறது!' என்று கூறிக்கொண்டாள்.

# 60

## ஆனந்த பைரவி

"லலிதா! நான் சொன்னேனே அன்று, அந்த வீட்டினர் உன்னைப் பார்க்க வருகிறார்கள்" என்று தெரிவித்தான் சுந்தரம்.

"வரட்டுமே!"

"அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? அழகாக அலங்காரம் செய்துகொண்டு............"

"உனக்கு வேலைதான் வேண்டுமே!" என்றாள் லலிதா எரிச்சலுடன்.

சுந்தரம் அவள் பின்னாலேயே சென்று, "இதோ பார். பிறகு நீ அந்தப் பையனைப் பார்த்துவிட்டு, அவனேதான் வேண்டுமென்று......"

"ஒருகாலும் நடக்காது."

"பார்ப்போமே!"

"பார்ப்போம்."

★

லலிதா மாடியிலிருந்து நோக்கினாள். ஒரு பெரியவரும் ஓர் அம்மாளும் உள்ளே நுழைந்தார்கள். அவர்கள் முகத்தைப் பார்த்தால் எங்கோ பார்த்தாற்போலிருந்தது. ஆயினும் புலப்படவில்லை.

'வந்துவிட்டார்களா !' என்று தன்னையுமறியாமல் வெளிவந்த குரலின் சோகம் அவளுக்கே திகைப்பாக இருந்தது. அவள் நீர் துளித்த கண்களுடன் உள்ளே சென்றுவிட்டாள்.

கீழேயிருந்து கௌரி கூப்பிடும் குரலைக்கேட்டு மெள்ளக் கீழே இறங்கலானாள் லலிதா. கௌரியும் சுந்தரமும் மாடிப்படி அடியில் நின்றுகொண்டிருந்தனர். கௌரி முன்னால் பேசினாள்.

" லலிதா, கூடத்தில் அம்மாவிடம் ஒரு மாமி உட்கார்ந்திருக்கிறாள். போனதுமே நமஸ்காரம் செய்."

லலிதாவின் முகத்தைப் பார்த்த சுந்தரம், இன்னும் அவளை ஏமாற்றக் கூடாதென்று எண்ணியவனாய், " லலிதா, அதற்கு முன், நான் சொல்லுவதைச் செய். பிள்ளையை நீ பார்க்க வேண்டாமா? என்னுடன் வா" என்றான்.

கௌரி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால் அவளை அடக்கிவிட்டான் சுந்தரம். லலிதாவின் கையைப் பிடித்து மாடிக்கு அழைத்துச் சென்றான். உமாவின் அறை ஜன்னல் வழியாக எதிர் வீட்டைக் காண்பித்தான். அங்கே ஒரு சாய்வு நாற்காலியில் சிவா வீற்றிருந்தான். அவன் கண்கள் இவர்கள் வீட்டின் வாசலை நோக்கின, லலிதா பிரமித்துவிட்டாள்.

" உனக்கு எப்படித் தெரியும் ?" அவளுக்கே தெரியாமல் அந்த வார்த்தைகள் அவள் வாயிலிருந்து வெளிக் கிளம்பிவிட்டன.

" இந்தப் பிள்ளை வேண்டாமே ?" என்றான் சுந்தரம் புருவத்தை நெளித்து.

லலிதாவின் முகம் குபீரென்று சிவந்து விட்டது. பிறகு அவள் எவ்வளவு அடக்க ஒடுக்கத்துடன் பெரியவர்களை நமஸ்கரித்து நின்றாள் என்று கூறுவானேன்? அதன் பிறகு அழகாக ஆலாபனை செய்து ஆனந்த பைரவியில் ஒரு பாட்டுப் பாடினாள். அது காற்றில் மிதந்து சென்று எதிர்வீட்டு மாடிக்கும் எட்டிற்று. சிவா தட்டி எழுப்பப் பட்டவன்போல் எழுந்து உட்கார்ந்தான். இதுவரை எத்தனையோ முறை பார்த்திருந்த லலிதாவை இப்பொழுது புதிய கருத்துடன் பார்க்க ஏங்கின அவன் நயனங்கள். கைகள் தாமாகவே தாளம் போட்டன. உதடுகள் அழகிய குறுநகையில் தங்களைச் சிங்காரித்துக் கொண்டன.

எதிர் வீட்டு மாடிப் படியண்டை கௌரி, சுந்தரம் சொன்னதை முழுவதும் கேட்டு ஆச்சரியம் தாங்காமல் விழித்தாள்.

"தேவலையே! லலிதாவின் வாழ்க்கையையே சீர்திருத்தி விட்டீர்களே!"

"ஆமாம், என்னைச் சீர்திருத்த உமா வேண்டி இருந்தது."

★

நிச்சயதார்த்தத்திற்குத் தயாராக மாலையணிந்து நின்று கொண்டிருந்தாள் லலிதா. விஜயா ஓடி வந்தாள். அவளுடன் அவள் அத்தை பெண் ஜானகியும் வந்தாள்.

"ஜானகி, அன்றைக்கு நாங்கள் கோவிலில் சிவாவின் கல்யாணத்தைப் பற்றிச் சொன்னோமே, அப்பொழுது பார்த்திருக்க வேண்டுமே இவள் முகத்தை!" என்று லலிதாவைக் கேலி செய்தாள்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை" என்றாள் லலிதா, மெதுவாக. இரண்டு பெண்களும் கலகலவென்று சிரித்தனர். லலிதாவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவர்கள் செய்யும் கேலி தன் கழுத்தில் இருந்த ரோஜா மாலையைவிட இதமாக இருந்தது அவளுக்கு.

★

நலங்கின்போது லலிதா உமாவுடன் சேர்ந்து பாடினாள். உமாவும் வெங்கடேசனும் காலை வைதிக விஷயங்கள் தவிர இந்தச் சடங்குகளில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை யாதலால் எல்லோரும் லலிதாவையும் சிவாவையுமே சூழ்ந்து கொண்டனர்.

"பந்துவராளி பாடு" என்றாள் சிவாவின் மன்னி. உமா தொடங்க, லலிதா கணீரென்ற குரலில், "சிவ, சிவ, சிவ என ராதா" என்று ஆரம்பித்தாள். அதற்குள் விஜயா அவளை நோக்கி, "நீ வேண்டுமானால் 'சிவா, சிவா' என்று ஜபம் செய்யேன். நாங்கள் ஏன் சொல்ல வேண்டும்?" என்றாள்.

ஒரே சிரிப்பின் ஆரவாரம்.

நாணத்தின் இளம் ரோஜா நிறம் படர்ந்த லலிதாவின் வதனத்தைச் சிவா சிரித்தவாறு நோக்கினான். இத்தனை நாள்—சுந்தரம் வழி காண்பிக்கும் வரை—இவள் அழகு நமக்குத் தெரியவில்லையே என்று நினைத்தான் அவன். அவள் சாதுரியத்தை என்றுமே மெச்சினனே தவிர......

★

மறுநாள் கிருகப் பிரவேசம். எல்லாம் காலையிலேயே முடிந்து விட்டது. சம்பந்திகளில் முக்கியமான இரண்டு, மூன்று பேர்கள் தவிர, எல்லோரும் அவரவர்கள் வீட்டிற்குச் சென்று விட்டனர்.

சிவா, விஜயா, ஜானகி, சிவாவின் அண்ணு, மன்னி, சுந்தரம், சாரதா, உமா கோஷ்டியுடன் மத்தியான்னம் சினிமாப் பார்த்து விட்டு, பிறகு வீட்டுக்குப் போவதாக ஏற்பாடு.

நாகலக்ஷ்மி அம்மாள், கையில் லலிதாவின் கல்யாணப் புடைவைகளை அடுக்காக எடுத்துக் கொண்டு காமாக்ஷி அம்மாள் இருக்கும் இடத்திற்கு வந்தாள். மகாலிங்கையர், ராமையர் மற்றும் சிவாவின் அண்ணு, சாரதா, வெங்கடேசனின் மாமி ஆகியோர் அங்கு கூடி இருந்தனர்.

"நான் என்ன செய்வது? எங்கு போனாலும் சிறிசுகள் ஜதை ஜதையாகக் கூடிப் பேசுகிறதுகள். சற்று உட்காரக்கூட இடம் இல்லை" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள் குறும்புச் சிரிப்புடன்.

"ஆமாம், உனக்கு அங்கெல்லாம் என்ன வேலை, நான் இங்கிருக்கும்போது?" என்றார் மகாலிங்கையர். எல்லோரும் சிரித்தனர்.

"எல்லாம் அழகாகத்தான் இருக்கிறது. காமு மாத்திரம் உடம்பு ஒன்று மில்லாதிருந்தால் எவ்வளவு பெருமையாக இருக்கும்!" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"உஷ்..." என்று சிலர் அவளை அடக்கினார்கள்.

பேச்சை மாற்றுவதற்காக மகாலிங்கையர் சட்டென்று பேச ஆரம்பித்தார்.

"நம்ம வீட்டில் இப்பொழுது தினுசில் ஒரு கல்யாணம் போலிருக்கிறது, என்ன?"

"ஆமாம், வரன் தேடி, ஜாதகம் பார்த்து, பெண் பார்த்து, கிரமப்படி செய்த கல்யாணம் சாரதாவினுடையது" என்றார் ராமையர்.

"பிள்ளை வீட்டுச் சம்பந்தியாக இருந்து வந்தோம் கோபு கல்யாணத்தில்" என்றாள் நாகலக்ஷ்மி அம்மாள்.

"சின்ன வயசிலிருந்து ஒன்றாக வளர்ந்து பழகிய பிறகு நடந்தது கௌரி—சுந்தரம் விவாகம்."

வியாஜமாகக் கௌரி அவர்கள் வீட்டு மாடி வராந்தாவில் நின்று எதிர்வீட்டு வாசலை நோக்கிக் கொண்டிருந்தாள்.

"கௌரி, இங்கே வாயேன், ஒரு வேடிக்கை" என்று அழைத்துக் கொண்டே அங்கு வந்தான் சுந்தரம். புதிதாக அவளிடம் கொண்ட மோகத்தில் அவன் அவள் பின்னாலேயே சுற்றினான்.

"என்ன வேடிக்கை?"

"வாயேன், காண்பிக்கிறேன்."

கௌரி அவனுடன் சென்றாள். அவன் மாடிப் படியில் பாதி தூரம் இறங்கிவிட்டு, கீழே தன் அறையைச் சுட்டிக் காட்டினான். கதவு பாதி திறந்திருந்தது. தன்னை இருவர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ளாமல் லலிதா அவ்வறைக்குள் நுழைந்தாள். சுற்று முற்றும் நோக்கி விட்டுச் சந்தடி செய்யாமல் அடிமேல் அடி வைத்து வந்து, மெல்லப் பின்னாலிருந்து, அங்கே உட்கார்ந்திருந்த சிவாவின் கண்களைப் பொத்தினாள். சிவாவின் கரங்கள் அவளது வளையலிட்ட கரங்களை அகற்றி அவளைத் தன் அருகில் இழுத்துக் கொண்டன.

சுந்தரம் கௌரியின் முதுகில் தட்டினான். "லலிதாவுக்கு என்றைக்குக் கல்யாணமாயிற்று?" என்று கேட்டான்.

"ஏன், இன்றைக்கு... நேற்று, ஆமாம், நேற்றுத்தான்."

"பார்த்துக் கொள்!" என்றான் சுந்தரம். "இனிமேல் இங்கே நமக்கென்ன வேலை, வா" என்று அவளை அழைத்தான்.

"பின்னே எங்கேயாம்?" என்று கேட்டுக் கொண்டே அவள் விடுவிடென்று மாடி ஏறினாள். சுந்தரமும் பின்னால் ஓடினான்.

"இதோ பார், இன்னும் முடியவில்லை தமாஷ். நேரே அந்த ஜன்னலைப் பார்."

உமாவின் தலையில் பூச் சூட்டிக் கொண்டிருந்தான் வெங்கடேசன். உமா திரும்பி அவனைப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

"இங்கே கீழே பார்."

பஞ்சு தோளில் அவன் பெண் உட்கார்ந்திருந்தது. சாரதா அதனிடம் கொஞ்சினாள்.

சுந்தரம் கௌரியின் தலையை வேறு ஒரு திசையில் திருப்பினான். சிவாவின் மன்னி ஜன்னலில் அமர்ந்து தெருவை நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் கணவன் அவள் முகத்தைத் திருப்பி அவள் கன்னத்தில் கிள்ளினார்.

"பேஷ்" என்று சிரித்தாள் கௌரி. "நல்ல வேடிக்கை."

"இன்னும் சிலரைப் பார்க்க வேண்டுமா?"

"ஒன்றும் வேண்டாம். நாம் இருவரும் என்னவாம்!" என்றாள் கௌரி. பிறகு, "வெளியே கிளம்ப நேரமாகவில்லை?" என்று கேட்டாள்.

"ஆமாம், கிளம்பு."

"நான் கிளம்புகிறேன். அவர்களெல்லாம் இருக்கும் 'விதத்தைப் பார்த்தால் இப்பொழுது எங்கே கிளம்பப் போகிறார்கள்?"

கௌரி தன் அறைக்குள் நுழைந்தாள். புடைவை முதலியவைகளை யெல்லாம் எடுத்து வைத்து விட்டு அவள் முகம் கழுவச் சென்றாள். சுந்தரம் அதற்குள் வெளியே செல்லும் ஆடைகளை அணிந்து கொண்டு கௌரிக்காக அவ்வறையில் காத்திருந்தான்.

கௌரி புடைவை உடுத்துக் கொண்டு, பொட்டு இட்டுக் கொள்ளக் கண்ணாடி முன் நின்றாள். தலையை இன்னும் பின்னிக் கொள்ளவில்லை. அவளது ஒவ்வொரு செய்கையையும் கண் கொட்டாது பார்த்துக்-கொண்டிருந்தான் சுந்தரம். கௌரியின் அண்மையில் அவன் கொண்ட ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

"கௌரி, நீ என்னை என்றைக்காவது மன்னிப்பாயா?"

"ஊஹூம். ஒரு நாளும் மாட்டேன். ஆனால் எதற்காக என்று மட்டும் சொல்லுங்கள்."

"விளையாடவில்லை, கௌரி. நிஜமாகத் தான் கேட்கிறேன்."

"நானும் உங்களைக் கேட்கவேண்டுமென்று தான் இருந்தேன், முதலில் உங்களுக்கு எப்படி - ஏன் - என்ன சந்தேகம் தோன்றிற்று? நான் ஏதாவது சொல்லி விட்டேனா? எப்பொழுது ஆரம்பித்தது?"

"மெள்ள ஒவ்வொன்றாய்க் கேள்."

"சரி, சொல்லுங்கள்."

சுந்தரம் சவிஸ்தாரமாய் எல்லாவற்றையும் கூறினான். கௌரியும் இடையில் தடுக்காமல் கேட்டுக் கொண்டிருந்தாள். இன்றுதான் அவளுக்குச் சுந்தரத்தின் விசித்திர சுபாவத்தின் அர்த்தம் வெளிச்சமாயிற்று.

"அப்பாடா—பாலு பூணலிலிருந்தேவா இந்தச் சனியன் பிடித்த சந்தேகம்?"

“அன்று நான் இப்படித்தான் உட்கார்ந்து கொண்டு எதிர் வீட்டு வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.”

மேளகாரன் மங்களம் வாசித்து விட்டு, மூட்டையைக் கட்டிக் கொண்டு எழுந்தான். நாயனக்காரர்கள் செல்லுவதைக் கண்ட கௌரி கணவனை நோக்கி, “இதோ பாருங்கள், மேள தாளத்துடன் ஆரம்பித்த உங்கள் அற்புத சந்தேகத்தை மேள தாளத்துடனேயே மூட்டை கட்டி அனுப்பி விடுங்கள்” என்று கூறிச் சிரித்தாள்.

“என்ன ‘ங்கள்’?”

“பின்னே ‘நீ’ என்று சொல்வேனா?”

“கூடாதோ?”

“அது இருக்கட்டும், எனக்கு இதுதான் இத்தனை நாளாக வாட்டிற்று. முன் பின் தெரியாமல் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்கள், வீட்டில் பலவித அசௌகரியங்கள் உடையவர்கள், பொருள் குறைந்தவர்கள்—எல்லோரும் சந்தோஷமாக இருக்க, லட்சிய வாழ்க்கை நடத்தப் போவதாக இறுமாப்புக் கொண்டிருந்த நம்முடைய பிழைப்பு எப்படியாயிற்று என்று.”

“நானும் அதேதான் எண்ணுவேன். கோபுவைத் தன்னலக்காரன் என்று வைதோம், சுசீலா பின் பாட்டுப்போல் கேள்விகள் போடுகிறாள் என்று கேலி செய்தோம். அவர்கள் வாழ்க்கை அமைதியாகவும் சந்தோஷமாகவும் நடக்கிறது.”

“ஏன், பஞ்சு அத்திம்பேரைப் பற்றி நமக்கு ஒரு நாளும் மதிப்பு, மரியாதையே கிடையாது. சாரதா வெகு திருப்தியுடன் அவருடன் குடித்தனம் செய்கிறாள்.”

“கேசவைத்தான் எடுத்துக் கொள்ளேன். ஹேமாவின் வியாதியை அறிந்தும் அவன் எவ்வளவு ஆனந்தமாகக் காலம் கழிக்கிறான்!”

“நீங்கள் அவன் படுத்துக் கொண்டிருந்த சமயம் பார்த்திருக்க வேண்டும். ஹேமாவோ நோயினாலும், பலஹீனத்தின் காரணமாகவும் எப்பொழுதும் முகவாட்டத்துடனும் சலிப்புடனுந்தான் பேசுவாள். அவர் பெற்றோர் ஹேமாவையும் அவளுடைய தாய் தந்தையரையும் கண்டபடி திட்டுவார்கள். கேசவராவையும் நொந்து கொண்டனர். மருமகள் பேரில் இருந்த கோபத்தில் நெருக்கடியான சமயத்தில் பிள்ளையைக் கைவிட்டுச் சென்றனர்.

ஹேமாவின் வீட்டினரோ அவளைத் திரும்பிக் கூடப் பார்க்க வில்லை. இவ்வளவுக்கும் அவர், சிரித்துப் பேசிக் கொண்டே, மனைவியைத் தாம்பரத்தில் கொண்டு விட்டு விட்டு, அரும்பாடு பட்டார்."

"எனக்கு அது வேறு மனத்தை உறுத்திக் கொண்டே இருந்தது. நாம் போய் அவரிடம் சொல்லி வைத்தோமே. ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் கெடுத்த பாவம் வந்து சேர்ந்ததே என்று நினைத்தேன்."

"நல்ல காலமாக அது ஒன்றும் பிரமாதமாக ஆகவில்லை. அதைப் பற்றி விவரமாகப் பிறகு சொல்லுகிறேன். திடமான அன்பின் முன் எந்த இன்னல்தான் நீடித்து நிற்கும்?...உமாவைப் பாருங்கள், அவளைப் பற்றி நாம் என்னவெல்லாம் நினைத்தோம்? கடைசியில அவள்தான் நாம் கனவுகண்ட லட்சிய வாழ்க்கையை நடத்துகிறாள்" என்று சிரித்தாள் கௌரி.

சுந்தரம் அவளையே நோக்கினான். அவள் தன் தலையில் அவிழ்ந்து விட்ட ரிப்பனை முடிந்து விட்டுத் திரும்பினாள். சுந்தரம் தன் இரு கைகளையும் விரித்து அழைத்தான்.

"ஐயோ, என் புடவை கலங்கி விடும்" என்று பிகு செய்து கொண்டாள் கௌரி.

"கௌரி, நீ என்னை மன்னிப்பாயா?" என்று மறுபடியும் கேட்டான் சுந்தரம்.

"என்ன சுந்தர், யார் யாரை மன்னிப்பது?"

"நான் அசட்டுப் பிசட்டென்று சந்தேகித்திருக்கா விட்டால்......"

"நானுந்தான் அதில் பங்கெடுத்துக் கொண்டேன்."

"நீ என்ன செய்தாய் பாவம்?"

"இப்பொழுது லலிதாவைக் காண்பித்தீர்களே, அப்படி நானும் செய்திருந்தால்..." என்று மந்தஹாஸித்தாள் கௌரி.

"நாழிகையாகி விட்டது. அவர்களை யெல்லாம் கிளப்புவோம்" என்று கூறியவாறு எழுந்தான் சுந்தரம்.

இருவரும் எதிர் வீட்டை நோக்கிச் சென்றனர். வழியில் சுந்தரம் குறும்புத்தனமாகத் தன் அறையின் கதவைத் தட்டி விட்டுக் கிளம்பினான்.

"சிவா உள்ளேயிருந்து, "என்னடா?" என்றான்.

